# உடையார்

(முதல் பாகம்)

பாலகுமாரன்

மின்னூலாக்கம் : செல்லா

விசா பப்ளிகேஷன்ஸ்
புதிய எண்: 16. பழைய எண் 55
வெங்கட்நாராயணா ரோடு,
தி. நகர், சென்னை - 600 017
Phone : 434 2899 - 432 7696
Fax - 91-44-4341559

முதற் பதிப்பு மே – 2002
இரண்டாம் பதிப்பு செப்டம்பர் 2004
நான்காம் பதிப்பு : ஏப்ரல் 2009
ஐந்தாம் பதிப்பு : ஏப்ரல் 2010


மாமன்னன் இராஜராஜ சோழரின் வரலாறு

விசா பப்ளிகேஷன்ஸ் வெளியீடு

- UDAIYAAR - PART I (HISTORY OF CHOLAS)
- By BALAKUMARAN
- Fifth Edition April 2010
- Total No Pages 448
- Size Demy
- Paper used N.S. Maplitho.
- Price 225.00
- Available at

THIRUMAGAL NILAYAM
New No. 16, Old No. 55,
Venkatnarayana Road,
T.Nagar, Chennai - 600 017
Phone 24342899, 24327696
Fax 91-44-24341559

கிடைக்குமிடம்

திருமகள் நிலையம்
புதிய எண். 16, பழைய எண். 55,
வெங்கட்நாராயணா ரோடு,
தி.நகர், சென்னை – 600 017.
Phone 24342899, 24327696

Printed at Udayam Offsets, Chennai-2 ✆ 2845 4808.

# உடையார் முன்னோட்டம்...

அமரர் கல்கி தன்னுடைய 'பொன்னியின் செல்வன்' மூலம் பிற்காலச் சோழர் வரலாற்றை வெகு அழகாய்த் தமிழர்கள் நெஞ்சில் பதிய வைத்தார். அவர் போட்டுக் கொடுத்த மேடையில், அடுத்த எழுத்தாளன் தன் நாடகத்தை அரங்கேற்றுவது எளிதாகிறது.

இந்த நாவலில் இராஜராஜேஸ்வரம் என்கிற தஞ்சை பெரிய கோவிலைக் கட்டும் விஷயத்தை நான் மையமாக எடுத்துக் கொள்கிறேன். சோழர் கால வாழ்க்கை எப்படி யிருக்கும் என்று கற்பனை செய்திருக்கிறேன். இதற்கு ஸ்ரீநீலகண்ட சாஸ்திரியாரும், ஸ்ரீசதாசிவ பண்டாரத்தாரும் எனக்குத் துணை. இவர்கள் தமிழர் நாகரீகத்தைத் தமிழருக்குக் காட்டிய தமிழர்கள்; சரித்திரப் பேராசிரியர்கள்.

இன்றைய தமிழ்நாட்டின் மையம் அன்றைய சோழ மண்டலம். அதைப்பற்றித் தெரிந்து கொள்ளாது தமிழர்கள் இருந்துவிடக்கூடாது. அன்றைய வாழ்க்கை இன்றுபோல் இல்லை. நாம் ஏற்றுக்கொள்ள முடியாத மாறுபாடான விஷயங்களை அவர்கள் கொண்டிருந்தார்கள். இப்போதையும் விட சாதாரண ஜனங்கள் அதிக நேர்மை, நாணயத்துடன் வாழ்ந்திருக்கிறார்கள்.

பலநூறு முறைகள் சோழ மண்ணில் அலைந்து, மனசில் வாங்கிய விஷயங்களெல்லாம் இதில் ஊடாடுகின்றன. தொல்பொருள் துறையில் உள்ள கல்வெட்டு ஆராய்ச்சி நண்பர்கள் பல்வேறு தகவல்கள் சொல்லியிருக்கிறார்கள்.

சனகாதி முனிவர்கள் இருவரை, இராஜராஜன், கருவூர் தேவர் என்று சொல்லி வருகிறோம். வலப்பக்கம் சரிந்த கொண்டையும், பெரிய மீசையும், இடுப்பில் துண்டும், கழுத்தில் மணி மாலையும், ஒரு காலை மடித்து உட்கார்ந்தபடியும், இருக்கும் இராஜராஜன் சில படங்களில், சிற்பங்களில் காட்சி யளிக்கிறான்.

பிரம்மராயராய் இருக்கலாம் என்ற எண்ணத்தோடு, அடையாளம் தெரியாத ஒரு அழகு ஐம்பொன் சிலை தஞ்சை அருங்காட்சியகத்தில் இருக்கிறது. அவன் பரம் பரையினர் வணங்கிய பெண் தெய்வங்கள் பட்டீஸ்வரத்

திலும், தஞ்சாவூரிலும் இன்றும் வழிபாட்டிற்குரியவைகளாய் இருக்கின்றன.

காவிரியின் நீர் வரத்து அன்றும் பிரச்சினை. நாகப்பட்டினத்துப் புயல் காலம் காலமான விஷயம். பெண்ணடிமைத்தனமும், மதச் சண்டையும், முதுகில் குத்துதலும் எல்லா காலங்களிலும் மனிதன் இயல்புகள்.

இவையெல்லாம் இருப்பினும், இத்தனை உயரம், இத்தனை அகலம், இத்தனை துல்லியமாய்க் கணக்கிட்டு எப்படிக் கட்டினான் அந்தக் கோயிலை? எது உந்துதல்? யார் துணை? எவர் உழைப்பு? ஏது காசு? எவர் நிர்வாகம்? எங்கிருந்த பாறை? எவை வாகனம்...? வியந்து வியந்து இவைகளை யோசித்தபோது கிடைத்த நாவல் இது.

தஞ்சை என் மண். இராஜராஜேஸ்வரம் என் கோயில். முன்னொரு காலத்தில் அங்கு நான் வாழ்ந்திருக்கிறேன். அந்த வளர்ச்சியில் பங்கு பெற்றிருக்கிறேன்.

அன்று அங்கு என்னோடு இருந்தவரே இன்றும் என்னோடு இருக்கிறார் என்பதாகவும் என் மனம் நினைப்பதுண்டு. இது பிரமை. அல்லது என் மனம் என்னிடம் சொல்லும் பொய். எது வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் சுகமாக இருக்கிறது. பிற்காலச் சோழர் நாகரீகத்தை உணர உணர, மனம் அந்த சரித்திரத்தோடு ஒட்டிக் கொள்கிறது.

இப்படி ஒட்டிக் கொண்டு சோழ தேசத்தைக் கொண்டாடும் ஒரு நண்பர்கள் கூட்டம் எனக்குண்டு. நாங்கள் அடிக்கடி பயணப்பட்டு, மறுபடி மறுபடி அந்த இடங்களை உணர்ந்துவிட்டு வருவோம்.

விழுப்புரம் தாண்டி இடப்பக்கம் திரும்ப, சோழத்தரம் என்கிற கிராமம். அதாவது சேத்தியாத்தோப்பு. உள்ளே நுழையும் போதே மனம் குதூகலிக்கத் துவங்கிவிடும்.

குடந்தைக்கு அருகே உள்ள பழையாறையில் நடக்கும் போது மனம் கதறும். அமண்குடியைப் பார்க்கும்போது ஒரு கணம் நெஞ்சை அடைக்கும். அது கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் கிராமம். வந்தியத் தேவனின் மாதேவியார் குந்தவைப் பிராட்டியார் என்று பொறிக்கப்பட்ட கல்வெட்டுக் களைப் பார்க்கும்போது கண்கள் சொருகும். தமிழர் நாகரிகம் எவ்வளவு பெரியது என்பதற்கு ஏகப்பட்ட சான்றுகள்

இருக்கின்றன. அவைகளை உங்களோடு பகிர்ந்து கொள்ள, இந்த நாவல் ஒரு முகாந்திரம்.

என்னை எழுத்தாளனாக்கிய தஞ்சை புன்னை நல்லூர் மாரியம்மன் பொற்பாதத்தில் இந்த நாவல் முயற்சியைச் சமர்ப்பிக்கிறேன். இராஜராஜன் காலத்து வாழ்க்கையை, இன்னும் நெருக்கமாக அவள் எனக்குக் காட்டுவாள். மிகப் பெரிய தொடராய் இதை எழுத எண்ணம் பூண்டிருக்கிறேன். என் சத்குரு நாதன் திருவண்ணாமலை மகான் யோகிராம்சுரத்குமார் துணை.

அன்புடன்,

**பாலகுமாரன்**

# சமர்ப்பணம்

சோழ தேசத்தின் காவல் தெய்வம் நிசும்ப சூதனிக்கு இந்நூல் என் காணிக்கையாய் சமர்ப்பணம்.

# உடையார்

## 1

அரச மரத்தின் உச்சிக்கிளையில் உட்கார்ந்து கொண்டிருந்த குயில், உடல் சிலிர்த்து முதற்குரல் கொடுத்தது. காவிரியில் உள்ள வாளை மீன்கள் துள்ளி, சிறிது தூரம் எதிர் நீச்சல் போட்டுவிட்டு, பிறகு மல்லாந்து புரண்டு ஆற்றோடு போயின. கரையோரத் தென்னைகளில் குறுகி அமர்ந்திருந்த நாரைகள் இந்தத் துள்ளலைக் கவனித்துக் கொண்டன. நீர்வரத்து அதிகரிப்பதை உணர்ந்து கொண்டன.

குயில் மறுமுறை கூவும் போது கிருஷ்ணன் ராமனான பிரம்ம ராயருக்கு விழிப்பு ஏற்பட்டது. மனம் விழித்துக் கொண்டாலும், கண் விழிக்காது அவர் வெறுமே படுத்திருந்தார். புத்தி இன்னும் தெளிவாகட்டும் என்று காத்திருந்தார். வெகு அமைதியாய் விழித்துக்கொண்ட மனதால் உலகை உணரத் துவங்கினார்.

அன்றைக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஒவ்வொன்றாய் அவருக்கு ஞாபகம் வந்தன. எழுந்து உட்கார்ந்தார். இரண்டு கைகளையும் 'பரபர'வென்று தேய்த்து முகத்திற்கு எதிரே விரித்தார். தலைக்குப் பின் இருந்த ஒற்றை அகல்விளக்கு வெளிச்சத்தில் உள்ளங்கை ரேகைகள் தெளிவாய்த் தெரிந்தன. ரேகையைப் பார்த்த நேரம் மனதில் சிலவை தோன்றும். எந்தக் காரணமுமின்றி சில விஷயங்கள் தோன்றும்.

அன்று, அப்போது கடும் மழை என்று தோன்றியது. காவிரியில் வெள்ளம் என்கிற எண்ணம் வந்தது. தடுப்புக்கு ஆயிரம் பேர் என்று சிந்தனை ஓடிற்று. 'பனந்துண்டங்கள் பதினாறாயிரம்' என்று ஓலை நறுக்கு எழுதுவதாய் ஓர் எண்ணம் வந்தது.

அவர் கைகளால் முகத்தைத் துடைத்துக் கொண்டார். வலப்பக்கம் திரும்பி வெள்ளிச் சொம்பில் நிறைந்திருந்த காவிரி ஜலத்தை வேகமாகக் குடித்தார். அவருடைய பெரிய வயிறு

சிறிதாய் சப்தமிட்டது. காற்று அவரை மீறி ஏப்பமாய் வெளியே வந்தது. நீர் குடித்த சில்லிப்பால் வீட்டின் பின்புறம் போக வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது.

அவர் எழுந்து நின்றார். வேட்டியை உதறி மார்புவரை கட்டிக்கொண்டார். மார்புவரை கட்டிய வேட்டி முழங்கால் வரை தொங்கியது. பின்குடுமி அவிழ்ந்து சிகை நடு முதுகை எட்டியது.

பிரம்மராயர் ஆஜானுபாகுவானவர். வெட்டிய வாழை மரம் போன்ற கனத்த கைகளை உடையவர். பெருத்த கால்களை உடையவர். வட்ட முகமும், கூரிய நாசியையும் கொண்டவர். முகவாயில் சின்னக் குழி இருக்கும். அவர் கை விரல்கள் மிக நளினமாய் அசையும். காது மடல்கள் எட்டி அவர் முகம் பார்க்கும். மெல்லிய புருவம், பரந்த நெற்றி, வழவழப்பான உடம்பு.

அவரைப் பார்த்தால் சொகுசான வணிகர் போலத் தோன்றும். ஆனால் பிரம்மராயர் சொகுசானவர் அல்ல. அவரைப்போல உழைப்பதற்கு அந்தச் சோழ மண்டலத்தில் ஆளே இல்லை. அவர் உழைப்பதால்தான் சோழ மன்னனும், மக்களும் நிம்மதியாய் உறங்குகிறார்கள்.

காவிரியில் வெள்ளம் பற்றி யாரும் யோசிக்காத நேரத்தில் அவர் யோசிக்கத் துவங்கினார். மீன்களுக்கும், நாரைகளுக்கும் கூட நீர் வரத்தின் அதிகரிப்புப் பற்றிப் புரியவில்லை. ஆனால் அவருக்குப் புரிந்தது.

வக்கிரமடைந்த சனி, புரட்டாசி மாதம், கிருஷ்ண பட்சம், சப்தமி அன்று உத்திர நட்சத்திரத்தை விட்டு இடம் பெயர்கிறார். உத்திரத்துக்குப் பிறகு ஹஸ்தம். ஹஸ்தம் நீரோடு சம்பந்தப்பட்ட நட்சத்திரம்.

ஹஸ்த நட்சத்திரம் அதிவிருஷ்டி, அனாவிருஷ்டி என்ற இரண்டு இடத்துக்குப் பாயும் தன்மை உடையது. இந்த மாதம் வளர்பிறை வடகோடு உயர்ந்திருந்தது. எனவே ஹஸ்தம் அதிவிருஷ்டியாகும். இதனால் பருவ மழை அதிகரிக்கும். மேற்கே கடும் மழை பெய்யக் கூடும். மேற்கே மழை பெய்தால் குடகு தேசத்து மலைகளில் விழுந்து, கொங்கு நாட்டிற்குள் நழைந்து, திரிசிரபுரத்தின் வழியாய் கல்லணையை நிரப்பி தஞ்சைக்குள் புகுந்து விடும்.

தஞ்சையில் மழை வந்தால் வெள்ளம் கட்டுப்படுத்த முடியாது போய்விடும். வெறுமே வேடிக்கை பார்க்கும்படி நேர்ந்து விடும். அப்படி பலமுறை நேர்ந்திருக்கிறது.

இம்முறை வெள்ளச்சேதம் ஏற்படாமல் தடுக்க வேண்டும். அவர் பின்பக்கம் போய் நின்று வானம் பார்த்தார். மெல்லிய மேகங்கள் வேகமாய் நகர்ந்து கொண்டிருந்தன. காற்றில் குளிர் தெரிந்தது. மேகத்தின் விரைவு அவருக்கு மழை வருகையைச் சொல்லியது.

கிழக்கே வெப்பம் அதிகமாகி, சூடு தாங்காமல் காற்று விலகி, பல மைல் பரப்பளவுள்ள பெரிய வளையம் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்த வளையத்திற்குள் மறுபடி காற்று நுழையும்போது சுற்றியுள்ள காற்றுகள் இடம் மாறுகின்றன. இந்த இடமாற்றத்திற்குப் பெயர்தான் புயல். வடகிழக்கே கடலுக்கு மேலே காற்று ஓட்டை விழுந்து தென்மேற்குப் பருவக் காற்று வேகமாய் நகர, இலங்கையைத் தாண்டிச் சென்ற பருவக்காற்று திசை திரும்பி மறுபடியும் சோழக்கரையைக் கடுமையாகத் தாக்கும். புகாரை இடித்து, தஞ்சையில் மோதும்.

மேற்கிலிருந்து வெள்ளம், கிழக்கிலிருந்து காற்று, நடுவே மழை. மறுபடியும் சோழ தேசம் நிமிர இரண்டு வருடங்களாகி விடும். சில சமயம் அரண்மனை மாடங்களையே உருட்டிப் போடுகின்ற இந்தக் காற்று, வேளாளர் வீடுகளையும், பரதவர் குடிசைகளையும் பந்தாடும். இயற்கை சீறினால் ஜனங்கள் அரசரிடம் தான் வந்து நிற்பார்கள்.

ஆனால் சோழ தேசத்து மக்கள் நாகரிகமானவர்கள். கும்பலாய் அரண்மனை நோக்கி வரும் போது அதிகம் பேச மாட்டார்கள்.

மகிழ்ச்சியான விஷயங்களை உரத்துக் கத்தி, தலைகால் புரியாமல் ஆடுகிற சோழ தேசத்து மக்கள், துன்பம் வரும்போது மௌனமாகி விடுவார்கள். உதவி கேட்க கூச்சப்படுவார்கள். என்ன உதவி, எவ்வளவு உதவி என்றால் கடைசி வரை வாய் திறக்கவே மாட்டார்கள். அதட்டினால் பதிலுக்கு அதட்டு வார்கள்.

“ஏற்கெனவே நாங்க வெக்கங்கெட்டு இடுப்புத் துணியோட, கட்டின பொண்டாட்டியோட கையேந்தி

நிக்கோம். வெந்த புண்ணுல எதுக்கு வேலை பாச்சுதீரு... என்ன குடுத்தாலும் சம்மதந்தான்...”

“அளவு சொல்லைய்யா... களஞ்சியத்திலிருந்து நெல்வாரி வர வேண்டாமா...”

‘அதிகாரிக்குத் தெரியாதா ‘என்ன? அளக்க வேண்டும் என்று தெரியவில்லையெனில் என்ன அதிகாரா...’ முணுமுணுப்பார்கள்.

கூட்டத்தோடு கூட்டமாக ஒற்றர்களை நிற்க வைத்து, வேறு ஊர் விவசாயிகளைப்போல் வேடமணியச் செய்து, என்ன பேசிக் கொள்கிறார்கள் சோழ மக்கள் என்று விசாரித்தால் அதுவும் வேடிக்கையாக இருக்கும்.

‘ராசாங்கத்துல எல்லாம் பெரிய கை. நீ உன் பாட்டுக்கு, பொசுக்குனு எதுனா கேட்டு வைக்காத... எத்தினி கொடுத்தாலும் மூஞ்சியிலே சந்தோஷம் காட்டாதே. இவ்வளவு தானான்னு கிட. வெளிய விலகி வந்து கொண்டாடிக்கலாம். உடனே கொண்டாடினா இதுக்கு மேலே கொடுக்க வேணாம்னு முடிவு பண்ணுவாங்க. கடைசி வரைக்கும் போதும்னு சொல்லக் கூடாது–’

பெரிய கிழவன் ஒருவன் கட்டளையிட்டானாம்.

‘எவ்வளவு கொடுத்தா போதும்...? நமக்குத் தெரிய வேணாமா...?’

இளைஞன் ஒருவன் சந்தேகத்தோடு கேட்டானாம்.

‘இந்த வருஷத்து வேளாண்மை தான் பாழாகி விட்டது. ஆனால் எல்லாரிடமும் விதைநெல் இருக்கிறது. இந்த வருடம் அரசர் வரி இல்லை என்று சொன்னால் போதும். வாழ்க்கை சௌகரியமாகவே இருக்கும். இந்த மழையில் நீர் நிலை நிரம்பி இருப்பதால் மூன்று போகம் செய்ய வாய்ப்பிருக்கிறது. அடுத்த வருடம் நிலவரியையும், புறத்தினை வரியையும் கூடுதலாக விதித்தாலும் கட்டிக் கொள்ளலாம்.’

அவர்கள் பேச்சு ஒவ்வொன்றும் பிரம்மராயருக்கு வந்து விடும். அதே சமயம் பேச்சு ஒட்டுக் கேட்கப்பட்டது என்றும் காட்டிக் கொள்ளக்கூடாது. அரசு கொட்டாரத்தில் கையிருப்பைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, நெல்லை வாரி வாரிக் கொடுத்துவிட வேண்டும். தெற்குப் பக்கம் தஞ்சை மாகாணத்திலிருந்து வடக்கே சிதம்பரம் வரை, மேற்கே

கரிகாலன் கட்டிய கல்லணை வரை ஒரு பரப்பளவு வைத்துக் கொண்டு தானிய விநியோகம் செய்து விடலாம்.

போனமுறை புயல் வந்தபோது அப்படித்தான் செய்யப் பட்டது.

இந்த முறை புயல் வந்தால் இதை விடவும் சிறப்பாகச் செய்ய வேண்டும். புயல் வருகிறது என்று தெரிந்துவிட்ட பிறகு, வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்க முடியாது. வெள்ளம் வருகிறதா என்று பார்க்க காவிரிக் கரைக்குப் போய்த்தான் ஆக வேண்டும்.

கமலக்கண்ணன் தூங்கி விட்டானா... அவனை எழுப்பி குதிரை தயார் செய்யச் சொல்லலாமா... தென்கரையை மட்டும் பார்த்து வந்தால் போதாது. வட கரையையும் பார்க்க வேண்டும்.

ஒரு வேளை ஆற்றில் இடுப்பளவு தண்ணீர் இருந்தால் நீந்துகிற குதிரை நல்லது. எந்த குதிரை' என்ற பிரம்மராயர் யோசித்தார்.

அவர் மாளிகையின் பின்பக்கமுள்ள ஓட்டு வீட்டிலிருந்து ஒரு குதிரை நடந்து வந்தது. அதற்குச் சேணங்கள் அணிவிக்கப் பட்டிருந்தன. சற்று தள்ளி தோளில் வளையமாகச் சுற்றப் பட்ட நீண்ட மணிக்கயிறோடும், உயரமான ஈட்டியோடும், முதுகில் மரத்தாலான மிதவையோடும் கமலக்கண்ணன் வந்து கொண்டிருந்தான். அருகே வந்த அவர் கால் தொட்டு தலையில் வைத்துக் கொண்டான்.

கமலக்கண்ணனின் புத்தி மிகக் கூர்மையானது. அவர் மனதில் நினைப்பதை முகம் பார்த்துச் சொல்லி விடுவான்.

'ஐயன் கோபமாக இருக்கிறார். அருகே போகாதீர்கள்' என்று எச்சரிப்பான்.

'ஐயன் போர் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார். பெண்கள் தங்கள் குறையைச் சொல்ல இதுதான் நேரம். இப்போது எது கேட்டாலும் கிடைக்கும் போ' என்று துரிதப் படுத்துவான்.

கிருஷ்ணன் ராமனான பிரம்மராயருக்கு கமலக்கண்ணன் வலது கை. மறவர் குடியில் பிறந்தவன். ஐயனிடம் வேலை செய்வது எளிதல்ல. ஆனால் ஐயன் ஜாதி தாண்டியவர். சைவ, வைஷ்ணவ பேதம் தாண்டியவர். காபாலிகர்களைப்

பார்க்கும்போது சற்று எரிச்சலடைவாரே தவிர, எவர் மீதும் எந்த துவேஷமும் இல்லாதவர்.

“ஐயன்” -கமலக்கண்ணன் உரக்கக் கூப்பிட்டு தொண்டையைச் செருமிக் கொண்டான்.

“இரவு நீங்கள் படுக்கப்போகும் போது வானத்தைப் பார்க்கவில்லை. திருமந்திர ஓலையாரிடம் கட்டளைகள் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். கல்லணை பகுதியில் நீர் அலைமோதி முட்டுகிறது என்று நேற்றிரவு செய்தியும் வந்தது.

திருக்காட்டுப்பள்ளி கிராம அதிகாரிகள் ஒன்றுகூடி பாசன வாய்க்காலில் தண்ணீர் திறந்துவிட, நேற்று காலையே உத்தரவிட்டு விட்டார்கள். மாலையில் பாசன வாய்க்கால் சுழித்துக் கொண்டு ஓடுகிறது. ‘பறையறிவிக்காமல் பாசன வாய்க்கலில் நீர் அனுப்பியது தவறு’ என்று தஞ்சைப்பக்கம் கிராம மக்கள் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள்.

எல்லாம் கூட்டிக் கழித்துப் பார்த்தால், காவிரியில் வெள்ளம் வரும் என்று நானும் முடிவு செய்தேன். இரவே குதிரைக்குச் சேணம் பூட்டி வைத்துவிட்டேன்.”

“நான் விழித்தது எப்படித் தெரிந்தது உனக்கு...?

“உங்கள் கொல்லைக்கதவில் பட்டுநூல் கட்டி, நாரத்தை மரம் வழியாக பவழமல்லிச் செடியின் ஊடே நூல் எடுத்து வந்து, என் வீட்டுக் கூரையில் கிளிக்கூண்டில் கட்டி விட்டேன். நீங்கள் கதவு திறந்ததும் கிளிக்கூண்டு ஆடி, கிளிகள் சலசலத்தன. விழித்துக் கொண்டு விட்டேன். நீங்கள் வெளியே வந்தீர்கள். நான் தயாராகி விட்டேன்.”

“கமலக்கண்ணா... உன்னைப்போல் ஒற்றன் தமிழ்நாட்டில் யாருமே இல்லை.. எனக்கே ஆள் வைத்து வேவு பார்த்தாலும் பார்ப்பாய்...” பிரம்மராயர் சிரித்தபடி சொன்னார்.

“சிலசமயம் அதையும் செய்ய வேண்டித்தான் வரும்.’ கமலக்கண்ணன் அடக்கமாகச் சொன்னான்.

பிரம்மராயர் முகத்தில் ஆச்சரியம் காட்டாமல் அந்தப் பேச்சைக் குறித்துக் கொண்டார்.

அவர் கண்கள் கூர்மையாகி அடங்கியதை கமலக் கண்ணனும் பார்த்தான். ஐயன் அந்த வார்த்தைக்குப் புள்ளி வைத்து விட்டார் என்று புரிந்து கொண்டான். அவனும் சலனம் காட்டாது அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"உன் குதிரை எங்கே கண்ணா" - பிரம்மராயர் பேச்சைத் திசை மாற்றினார்.

"அதைத் தொந்தரவு செய்ய விரும்பவில்லை. நேற்று பகலெல்லாம் அது வேண்டிய மட்டும் வேலை செய்திருக்கிறது. இப்பொழுதும் விரட்டினால் நாளை சுருண்டு விடும்."

"கொட்டடியில் குதிரைகளா இல்லை. வேறு எடுத்துக் கொள்ளேன்..."

"இரவு நேரம் நகரத்தின் வழியே இரண்டு குதிரைகள் போனால் ஜனங்கள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்திருப் பார்கள். ஒற்றைக் குதிரைச் சத்தமெனில் 'யாரோ வழிப் போக்கன்' என்று விட்டு விடுவார்கள். நீங்கள் சால்வை போர்த்திக் கொண்டு குதிரையேறிப் போங்கள். நான் குறுக்கு வழியே காவிரிப் படித்துறைக்கு வருகிறேன். காவிரியைப் பார்த்ததும் மற்றதை முடிவு செய்வோம்..."

கமலக்கண்ணன் நன்றாய் ஓட்டம் பழகியவன். ஒற்றர்கள் எல்லோருமே கையில் குத்தீட்டியுடன் வெகுதூரம் ஓடத் தெரிந் தவர்கள். சில சமயம் குதிரைகளைவிட துரிதமாய் செயல் படுபவர்கள்.

'இப்போதும்கூட நகரைச் சுற்றிப் போவதற்குள் இவன் வயல்வெளிகளினூடே ஓடிப்போய் காவிரியைச் சேர்ந்து விடலாம். அவன் ஓடியே வருவது நல்லது' என்று பிரம்மராயர் தீர்மானம் செய்தார். கொல்லைக் கதவை வெறுமே சார்த்தினார். குதிரையேறினார். கமலக்கண்ணன் கை தட்ட, ஒரு காவலாள் கொல்லைக் கதவின் பக்கம் வந்து நின்று கொண்டான்.

பிரம்மராயர் தன் மாளிகையைச் சுற்றிக் கொண்டு வெளியேறினார். தெருவில் மிருதுவாக தன் குதிரையை ஓட்டிக்கொண்டு போனார். தெரு முடிந்ததும் சற்று விரைவாக குதிரையை விரட்டினார். கல்லணைக்குப் போகும் நெடுஞ்சாலையைக் கடந்தார். மாஞ்சோலைக்குள் இறங்கினார். அந்தப் பாதை சரிந்துகொண்டே காவிரிக் கரைக்குப் போயிற்று. குதிரை ஆற்றுக்கு அருகே போய் நின்றது.

ஏரிக்கரையிலிருந்து மூன்று மாட்டு வண்டிகள் ஆற்றில் இறங்குவது தெரிந்தது. மாட்டு வண்டியைச் சுற்றிலும் ஆட்கள் இறங்கி வண்டியைத் தள்ளிக்கொண்டு வந்தார்கள்.

கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் உற்றுப் பார்த்தார்.

தள்ளுகிறவர்கள் வித்தியாசமாகத் தெரிந்தார்கள்.

"தேவரடியார்கள்..." பின்னே கமலக்கண்ணன் குரல் கேட்டது. அதில் சற்று மூச்சிரைப்பு இருந்தது.

அத்தனை பேருமா...?"

"ஆமாம். அத்தனை பேரும்..."

"போன பௌர்ணமிக்குக் குடி பெயரச் சொல்லி ஓலை அனுப்பினோமே... அவர்களா..." பிரம்மராயர் நினைவு வந்தவராய் கேட்டார்.

"இருக்கலாம்..."

இரண்டு உருவங்கள் காவிரியை வேகமாய் நீந்திக் கடந்தன. தரையில் அழுந்தி, கால் வைத்துக் கரையேறின. அங்கு ஆண்கள் இரண்டு பேர் இருப்பதை அறியாது, மேல் துணியை விலக்கி ஒட்டப் பிழிந்து, உதறி, பிழிந்ததை இடுப்பில் கட்டிக் கொண்டு, இடுப்பின் ஈரத் துணியை உருவி, அதையும் பிழிந்து உதறி நிதானமாய் மேலே போட்டுக் கொண்டார்கள்.

கரையேறிய இரண்டு பேரும் இளம் பெண்கள். திரட்சியான உடலமைப்பு உள்ளவர்கள். சபையில் ஆடி திமி ரேறியவர்கள். அவர்கள் அசைவுகளில் அலட்சியம் இருந்தது. அவர்கள் தலை அவிழ்ந்து உதறியபோது முகத்தில் நீர்த்துளிகள் பட்டன.

ஆண்கள் இருவரும் தலை திருப்பிக்கொள்ள, பிரம்ம ராயரின் குதிரை முகமசைத்துக் கனைத்தது.

பெண்கள் திடுக்கிட்டுத் திரும்பினார்கள்... அதில் ஒரு பெண் இடுப்பிலிருந்து குறுங்கத்தியை எடுத்து இறுகப் பிடித்துக் கொண்டாள்.

யாரது..." கமலக்கண்ணன் அதட்டினான்.

"நீங்கள் யார்–" பதிலுக்கு பெண்கள் சீறினார்கள்.

"தஞ்சை புறவெளி நகர்க்காவலன் கமலக்கண்ணன்."

"இவர் யார்..?" கத்தி வைத்திருந்த பெண் கேட்டாள்.

"இவர் ஒரு அதிகாரி. எதிர் கரைக்குப் போகப் போகிறார்..."

“நாங்கள் சிதம்பரத்தில் இருந்து வருகிறோம். என் பெயர் எச்சுமண்டை. இவள் கரிய மாணிக்கம். பழமர்நேரி என்கிற ஊர் எது...”

அந்தப் பெண் கேட்டாள்.

“இதுவே பழமர்நேரி. இங்கு உங்களுக்கு என்ன பணி...”

“எந்தப் பணியும் இல்லை. நாங்கள் குடிபெயர்கிறோம். இடைத் தங்கலுக்காக எங்களுக்கு பழமர்நேரியில் இடம் ஒதுக்கி ஓலை கொடுக்கப்பட்டிருக்கிறது...”

“ஓலை எங்கே...” கமலக்கண்ணன் கேட்டான்.

“முதல் வண்டியில் வருகிறது” – கரியமாணிக்கம் என்கிற பெண் திரும்பிக் கைகாட்டினாள்.

அவள் கைகாட்டிய நேரம் வண்டி இடப்பக்கம் மல்லாந்தது. வெள்ளத்தால் இழுக்கப்பட்டு தலைகீழாயிற்று. காவிரியின் நடுவிலிருந்து பெண்களின் அலறல்கள் கேட்டன.

கமலக்கண்ணன் ஆற்றில் பாய, பிரம்மராயர் குதிரையைக் காவிரியில் இறக்கினார். வெள்ளம் குதிரையை வேகமாக இழுத்தது. பிரம்மராயர் கவலையானார்.

## 2

காவிரி ஜீவநதி இல்லை. இவ்வளவு நீண்ட பரப்பு கொண்ட சமவெளி மிகுந்த சோழ நாட்டில், மூலை முடுக்குகளெல்லாம் இடையறாது பாயும்படியான ஒரு ஜீவநதி இல்லாதது பெரிய துக்கமே.

சித்திரை மாத மத்தியில் காவிரி வறண்டு போகிறது. அடுத்த மூன்று மாதங்களுக்கு வெறும் மணலாய்க் கிடக்கிறது. நடுநடுவே எப்போதேனும் மழை பெய்தால் குட்டை போல சிறிது நீர் தேங்கி நிற்கிறது.

மழை நாட்களில் காவிரியில் குளித்துக் குளித்துப் பழக்கப் பட்டவர்கள், காவிரியில் குளித்தே ஆக வேண்டும் என்ற சங்கல்பம் உடையவர்கள், வெயில் நாட்களில் ஊற்று பறித்து மொண்டு குளிப்பதால் மழை நாட்களில் பெரிய சிக்கலாகி விடுகிறது.

இடுப்பளவு ஜலம்தான் என்று நம்பி காவிரியில் இறங்கி தாண்ட முடிவதில்லை. நடந்து கொண்டே இருக்கும்பொழுதே நாலடி ஆழம் சரக்கென்று உள்ளே போய் விடுகிறது. பெண் களையோ, சிறுவர்களையோ அல்லது மாடு கன்றுகளையோ நடத்திப் போக முடியாமல் தவிப்பு ஏற்படுகிறது.

காவிரியை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிற எவரேனும் ஒருவர் ஒரு வழி சொல்லி கயிறு கட்டிவிட, அந்தக் கயிறைப் பிடித்துக்கொண்டுதான் மக்கள் தாண்ட வேண்டிய நிலைமை ஏற்பட்டு விடுகிறது.

அநேகமாய் எல்லா கிராமங்களிலும் எதிர்க்கரைக்கும் இக்கரைக்குமாய் கிராமத்துச் செலவிலேயே கயிறு கட்டியிருப் பார்கள்.

இந்தக் கயிறை நம்பித்தான் இந்தப் பெண்கள் கூட்டம் இறங்கியிருக்கும். ஆனால் கயிறு பிடுங்கிக் கொண்டு போய் மூன்று நான்கு நாழிகைகள் ஆகியிருக்கும். காவிரியின் வேகம் மெல்ல மெல்ல அதிகரித்துக் கொண்டே போவதை பிரம்மராயரின் உடம்பு உணர்ந்தது. ஏறி உட்கார்ந்திருந்த அவரின் குதிரை தவிப்பதிலிருந்து நன்கு தெரிந்தது.

மும்முடிச்சோழ பிரம்மராயர் குதிரை உட்காரும் பகுதியில் தடவிப்பார்த்தார். இருபது முழக்கயிறு சுருட்டி, உட்காரும் இடத்தோடு கோர்க்கப்பட்டிருந்தது.

பிரம்மராயர் ஆட்கள் எல்லோருமே இப்படி குதிரையில் கயிறு வைத்திருப்பார்கள். கால் வைக்கும் சேணத்திற்குள்ளே பெரிய கத்தி வைத்திருப்பார்கள். பிரம்மராயர் சட்டென்று அந்தக் கயிற்றுக் கட்டைக் கையில் எடுத்துப் பிரித்து உதறினார். சாட்டை போலச் சொடுக்கினார். அந்தக் கயிறின் மறுமுனை தொலைதூரம் போய் விழுந்தது.

பிரம்மராயர் கவிழ்ந்த வண்டியை உற்றுப் பார்த்தார். இருட்டில் ஏழு பெண்களும் ஒரு வண்டிக்காரனும் இருப்பது தெரிந்தது.

ஒரு மாடு விடுவித்துக் கொண்டு வேகமாகக் கரையை நோக்கி நீந்தியது. இன்னொரு மாட்டிற்கு அடிபட்டிருக்க வேண்டும். அது எந்தப் பக்கம் போவது என்று தெரியாமல் திகைத்து நாலா பக்கமும் அலைந்து கொண்டிருந்தது.

உருண்டுபோன வண்டியைப் பிடித்துக்கொண்டு பெண்கள் கத்திக் கொண்டிருந்தார்கள். வண்டியின் சக்கரத்தைப் பற்றியிருந்தவர்களின் கால்களை வெள்ளம் பிடித்து இழுக்க, அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

மிகவும் சிரமப்பட்டு குதிரையை உதைத்து உதைத்து, வண்டி நோக்கி பிரம்மராயர் திரும்பினார்.

“திணறாதே... கரையேற வேண்டும் என்று நினைக்காதே... எப்படியாவது அவர்களை நோக்கி நாம் போய்த்தான் ஆக வேண்டும்...”

குதிரையை விலாவில் மறுபடியும் உதைத்தார். எக்கி எக்கி மாட்டு வண்டி நோக்கி விரட்டினார். குதிரை ஒவ்வொரு அடிக்கும் மிகுந்த சிரமத்தோடு நகர்ந்து, மாட்டு வண்டிக்கு அருகே வந்தது.

மாட்டு வண்டிக்கு அருகே வந்ததும் கயிறை வீசி மாட்டு வண்டி மீது போட்டார். “உடம்பில் கயிறைச் சுற்றிக் கொள்ளுங்கள். குதிரை நம்மைக் கரைக்கு இழுத்துப் போய்விடும்...” என்று சொன்னார்.

மாட்டு வண்டியின் இருபுறமும் இருக்கிற பெண்கள் கயிறைச் சுற்றிக்கொள்ள ஆரம்பித்தார்கள். ஒரு பெண் தன் உடம்பில் கயிறைச் சுற்றிக்கொண்டு, பக்கத்திலிருந்த மற்ற பெண்ணுக்குக் கொடுத்தாள்.

அந்தப் பெண் கயிறை தன் உடம்பில் சுற்றிக்கொண்டு, இன்னொரு பெண்ணுக்குக் கொடுத்தாள். கடைசியில் ஒரு பெண்ணுக்கு கயிறின் நீளம் போதாமல் போய்விட்டது. குதிரையின் சேணத்தை மறுமுனையில கட்டி இறுக்கினார்.

அவர் இறுக்குகிறபொழுது இடது பக்கமாய் வண்டியைச் சுற்றிக்கொண்டு வந்த கமலக்கண்ணன் மெல்ல கால் ஊன்றி குதிரைக்கருகே வந்தான்.

“வண்டியை நிமிர்த்தப் போகிறீர்களா பிரம்மராயரே...” என்று கேட்டான்.

“இல்லை. அது நமது வேலை இல்லை. இவர்களைப் பத்திரமாக கரையேற்ற வேண்டும். ஆறு பெண்கள் கயிறைச் சுற்றிக் கொண்டார்கள். குதிரையை விரட்டி கரைக்கு ஓட்டிக் கொண்டு போய்விடலாம். வெள்ளத்தில் இறங்கப் பயப்படுகிற குதிரை கரைக்குப் போக வேண்டும் என்றால் தரதரவென்று

போய்விடும். ஆனால் ஒரு பிரச்சனை. ஒரு பெண்ணுக்குக் கயிறு போதவில்லை. வெள்ளம் ஏறிக்கொண்டிருக்கிறது. என்ன செய்வது என்று புரியவில்லை. நீ அந்தப் பெண்ணைப் பத்திர மாகக் கரைக்குக் கொண்டு வந்து விடுகிறாயா...”

பிரம்மராயர் கேட்க, ‘சரி’ என்று கமலக்கண்ணன் தலையசைத்தான். மறுபடியும் கால் ஊன்றி ஊன்றி நடந்து அந்தப் பெண் இருக்கும் இடத்திற்கு வந்தான்.

“என்னைப் பிடித்துக் கொள்ளுங்கள்...” என்று கை நீட்டினான். அவள் பிடித்துக்கொள்ள பயந்தாள். மரக்கட்டை யைப் பிடித்துக்கொண்டு ஊசலாடினாள்.

“ஏன் பயப்படுகிறீர்கள். நான் இந்த ஊர்க்காரன்தான் இந்தப் பக்கத்து நதியின் சுழல்கள் அனைத்தும் எங்களுக்கு அத்துப்படி. கவலை வேண்டாம். நான் உங்களைக் கரை சேர்த்து விடுவேன்...” என்று சொல்லி, கமலக் கண்ணன் மெல்ல அவள் புறங்கையைப் பற்றி இழுத்தான். அவள் பயந்துகொண்டே கை நீட்டினாள். அவன் தோளைப் பற்றிக் கொண்டாள்.

அவள் வண்டியை விட்டதும் பிரம்மராயர் குதிரையைச் செலுத்தினார். அந்தப் பெண்களை கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் சொன்னார். குதிரை வேகமாக கரை நோக்கிப் போயிற்று. அவர்கள் கிட்டத்தட்ட நீரின் ஓட்டமாய் கரை நோக்கிப் பயணமானார்கள்.

கமலக்கண்ணனைப் பிடித்துக் கொண்டிருந்த அந்தப் பெண், அவனை இறுகப் பிடித்துக்கொள்ள வெட்கப்பட்டாள். அதே சமயத்தில் எப்படியாவது கரையேறி விட வேண்டும் என்று அவஸ்தையும்பட்டாள்.

கமலக்கண்ணன் அவளை இழுத்துக்கொண்டு போக முடியாமல் திணறினான். சற்று ஆற்றோடு போனான். குதிரை யின் பாதையிலிருந்து அவன் பாதை லேசாக விலகியது.

இன்னும் நடக்க, சரக்கென்று காலின் கீழ் மண் சறுக்கியது. யாரோ பெரிதாய் குழி பறித்திருக்க வேண்டும். மனிதர்கள் பறித்த குழியை காவிரி வெள்ளம் இன்னும் பெரிதாக்கி விட்டது. விநாடி நேரத்தில் தலைக்குமேல் காவிரி ஓடிற்று. என்ன செய்வது என்று தெரியாமல் கமலக்கண்ணன் கையை உதறினான். அந்தப் பெண் ‘ஐயோ’ என்று அலறினாள்.

பிரம்மராயர் திரும்பிப் பார்த்தார். கமலக்கண்ணன் யதேச்சையாக கையை உதற, அந்தப் பெண் நீரில் அடித்துப் புரண்டு கொண்டு போனாள். கால் ஊன்றியபடி இருந்தாலும் அவளால் நிற்க முடியவில்லை.

காவிரி நீர் அவளை நெட்டி நெட்டித் தள்ளிக்கொண்டு போயிற்று. மூன்று நொடி நேரத்தில் அவள் கமலக்கண்ணனிட மிருந்து வெகு தூரத்திலிருந்தாள். குதிரையைக் கரையேற விட்டுவிட்டு, குதிரையிலிருந்து எகிறி, அந்தப் பெண்ணை நோக்கி பிரம்மராயர் தாவினார். வேகமாக நீந்தினார். நீரின் வேகத்தோடே போனார்.

அந்தப் பெண்ணை பிரம்மராயர் நெருங்க, அந்தப் பெண் விலக, அங்கு ஒரு கண்ணாமூச்சி ஆட்டம் நடந்தது. சட்டென்று எகிறி அந்தப் பெண்ணின் தலைமுடியைப் பிடித்தார்.

“உனக்கு நீச்சல் தெரியுமா...” என்று கேட்டார்.

“தெரியாது...” – அந்தப் பெண் பதில் சொல்லிற்று. இருட்டில் முகம் தெரியாமல் குரல் மட்டும் இனிமையாய் காதில் விழுந்தது.

“பிறகு என்ன தைரியத்தில் இருட்டில் நதியில் இறங்கினாய்? காலையில் பொறுத்து வரவேண்டியதுதானே... திரும்பு. என் முதுகைப் பற்றிக்கொள்...” என்று அவள் கையைப் பிடித்துக்கொண்டு முதுகைக் காட்டினார். அவள் முதுகை மெல்ல பற்றிக் கொண்டாள்.

“இப்படிப் பற்றிக்கொண்டால் உன்னால் எதுவும் செய்ய முடியாது. என்னையும் நடக்க விடமாட்டாய். இறுகப் பற்றிக் கொள். உன்னை நான் என்னோடு பிணைத்துக்கொள்கிறேன். இப்பொழுது வெட்கப்பட்டாயென்றால் வாழ்க்கை முழுவதும் வேதனைப்படும்படி நேரும்.

வெள்ளம் எங்கேனும் முள்புதரில் ஆளைச் சொருகிவிடும். சொருகிய முள்புதரிலிருந்து மனிதனை விடுவிப்பது மிகவும் கடினம். ஓநாய்கள் நீரில் இறங்கி கடிக்கத் துவங்கிவிடும். காவிரிக்கரை முழுக்க நீர் நாய்கள் உண்டு. நீர் நாய்கள் கடித்தால் நிச்சயம் மரணம். எனவே முட்டாள்தனமாக எதுவும் செய்யாமல் என்னை இறுகப் பிடித்துக்கொள்...” என்று முதுகு காட்டினார்.

அவள் எகிறி அவரை இறுகப் பின்னிக் கொண்டாள். பிரம்மராயர் மேல் துண்டால் அவளையும், தன்னையும் இறுக்கி முடிச்சுப் போட்டுக் கொண்டார். மணலில் கால் ஊன்றி, நீரைக் கிழித்து கரை நோக்கி நடந்தார். நெஞ்சு ஆழம் இருந்த நீர் சிறிது நேரத்தில் சட்டென்று இடுப்புக்கு வந்தது. தொடைவரையில் ஜலம் போயிற்று.

பிரம்மராயர் அவளையும் தன்னையும் பிணைத்திருந்த துண்டை உருவினார். அவள் இடக்கையைப் பிடித்துக்கொண்டு 'வா' என்று கரையேறினார். வண்டியை இழுத்து வரலாமா என்பதற்காகத் திரும்பிப் பார்த்தார். 'நீ கரையேறு' என்று சொன்னார்.

அவள் தொடையளவு ஜலத்தில் நடந்து போனாள். கரைக்கு அருகே போகும் நேரத்தில் சட்டென்று கரை ஆழமாகிவிட்டது போலும். அவள் கழுத்துவரை நீரில் மூழ்கினாள். புரண்டாள். நீர் அங்கு சுழன்றிருந்தது. உள்ளே இழுக்கப்பட்டாள்.

மறுபடியும் வெளியே தள்ளப் பட்டாள். புரண்டு காவிரிக்கரை ஓரமாகவே போய் ஒரு முள் செடியை இறுகப் பிடித்துக் கொண்டாள். 'உதவி உதவி' என்று பேயாய்க் கத்தினாள்.

பிரம்மராயர் கால் உதறி, தன் கனத்த சரீரத்தை தண்ணீரில் சப்தமெழப் போட்டு, அவள் சென்ற திசை நோக்கி வேகமாக நீந்தினார். நீர் அவரையும் புரட்டியது. இழுத்து ஓரம் தள்ளியது. ஓரத்தில் கரையேற கால் வைத்தார். கால் சறுக்கி அவரை நடுநதிக்கு இழுத்துப் போனது.

'நீ என்ன செய்தாலும் நான் அதற்கு எதிர்ப்பதமாய் செய்வேன்' என்பது போல எந்தவிதமாய்த் தப்பிக்க முயற்சித் தாலும் நதி அதைத் தடுத்தது. இம்மாதிரி செடிகள் நிரம்பிய கரையில் கால் வைத்து வழுக்கி, சறுக்கி அடிபடுவதைவிட படிகள் நிரம்பிய துறைகளில் கால் வைத்து ஏறிவிடலாம்.

பிரம்மராயர் கடினமாக முயன்று முள் செடிக்கு அருகே போனார். மிக கவனமாய் துணியோடு முள் செடியைப் பிடித்துக் கொண்டார். அந்தப் பெண்ணிடம், 'அதை விட்டு விடுங்கள், விட்டு விடுங்கள்' என்று கத்தினார்.

அந்தப் பெண்ணுக்கு முப்பது வயதிருக்கும். அவள் அந்த முள் செடியை விடுவதற்குப் பயந்தாள்.

“நாம் அதிக நேரம் இங்கு நிற்க முடியாது. உங்கள் உடம்பெல்லாம் முட்கள் கீறி காயப்படுத்தி விடும். முள்புதரில் தான் பாம்புகள் பதுங்கி இருக்கும். தயவுசெய்து கையை உதறி விடுங்கள். நடு ஆற்றிற்குப் போய் விடலாம். என் தோளைப் பிடித்துக் கொள்ளுங்கள். இங்கு படி எங்கிருக்கிறதென்று எனக்குத் தெரியும். சற்றும் பயப்படாதீர்கள்...” அவர் கெஞ்சலாய் சொன்னார்.

அப்பொழுதும் அந்தப் பெண்மணிக்கு விட மனமில்லை. அவர் இழுக்க, இன்னும் வேகமாய் முள் செடியைக் கட்டிக் கொண்டாள் ‘ஓ’வென்று அலறினாள்.

‘என்ன ஆயிற்று, என்ன ஆயிற்று’ – தொலைதூரத்திலிருந்து பல்வேறு குரல்கள் கேட்டன. பழமர்நேரி கிராமம் விழித்துக் கொண்டு தீப்பந்தங்களுடன் வருவது தெரிந்தது.

“தயவு செய்து கையை விடுங்கள்...” என்று பிரம்மராயர் அவள் தோளைப் பிடித்து இழுக்க, அவள் திரும்பி பயத்தோடு பிரம்மராயரை ஆரத்தழுவிக் கொண்டாள்.

பிரம்மராயர் அவள் இடுப்பை அணைத்தபடி காலுதைத்து நதியின் நடுப்பக்கம் நகர்ந்தார். அந்தப் பெண்மணியின் முழு உடம்பும் அவர் உடம்போடு இறுகப் பின்னிக் கொண்டது.

அவர் தன் கால்களை அசைப்பதுகூட கடினமாக இருந்தது. அசைக்கிறபோது அவளுடைய மெத்தென்ற உடம்பு மேலே பட்டது. அவர் இடதும் வலதும் கவனித்துக்கொண்டே ஒருக்களித்து நீந்தி, அவளை அணைத்தபடி மறுபடியும் கரை நோக்கி நகர்ந்தார். இந்த முறை காலடியில் பாறைகள் தென்பட்டன. இன்னும் நகர்ந்துபோக, செதுக்கப்பட்ட படித்தளம் தெரிந்தது.

நின்று கொண்டார்கள். அங்கேயும் நீர் இழுத்தது. பாசி வழுக்கியது. மிக நிதானமாய் ஒருவரை ஒருவர் அணைத்தபடி நடந்தார்கள். அடுத்தபடியில் கால் வைத்தார்கள். கால் வைக்கும் போது மிக கவனமாய் இரண்டு பேரும் ஒரேவிதத்தில் ஊன்றினார்கள். அடுத்த படியில் கால் வைத்தார்கள். இம்முறையும் மிக

கவனமாய் ஊன்றி நடந்தார்கள். இப்பொழுது முழங்காளலவு ஜலத்தில்தான் இருந்தார்கள்.

"நீங்கள் கரையேறுங்கள்..." பிரம்மராயர் அவளை மெல்ல நகர்ந்தினார். அவள் கரையேறினாள். பிரம்மராயரால் அடுத்த அடி அழுத்தி வைக்க முடியவில்லை. அந்தப் படியில் பாசி அதிகமிருந்தது.

'அந்தப் பெண்மணி எப்படி மேலே நடந்து போனாள்' என்ற ஆச்சரியம் எழுந்தது. பாசியில் கால் வைக்க, ஊன்றுகின்ற கால் வேகமாக வழுக்கியது. என்ன செய்வது என்று தெரியாமல் பிரம்மராயர் நிற்க, அவள் கீழிறங்கினாள். புடவையை விலக்கினாள். ஒரு முனையை பிரம்மராயரிடம் கொடுத்தாள்.

"இறுகப் பிடித்துக் கொள்ளுங்கள். அந்தப் படியில் அடர்த்தியாய் பாசி இருக்கிறது. ஒரு விரற்கடை அளவுக்குச் சேர்ந்து தேங்கி நிற்கிறது. இது உபயோகப்படுத்தப்படாத படித்துறை என்று நினைக்கிறேன். என் புடவையை இறுக்கிப் பிடித்துக்கொண்டு மேலே வந்து விடுங்கள்."

அவள் புடவையின் நுனியைத் தர, அவர் வாங்கிக் கொண்டு படியில் கால் வைத்தார். அவள் முழு பலத்தோடு தோளில் புடவையைப் போட்டுக் கொண்டு அவரை இழுக்க முயற்சித்தாள்.

அவர் மூன்றாவது படியையும், இரண்டாவது படியையும், முதல் படியையும் தாண்டி மண்ணில் கால் வைக்கும் போது, மரணத்திலிருந்து மீண்டு விட்டது போல ஒரு அயற்சி உடனே படர்ந்தது. உட்கார்ந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

சற்றுநேரம் மரத்தைப் பிடித்துக்கொண்டு சாய்ந்து கிடக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. அவர் இடுப்பில் கை வைத்து மற்றவர்கள் கரையேறி விட்டார்களா என்று பார்த்தார். இருட்டில் எதுவும் தெரியவில்லை. தீப்பந்தங்களின் வெளிச்சம் செடிகளுடே தெரிந்தது.

"வாருங்கள் நாம் போவோம்..." அவர் பாதை தேடி கரையோரம் போனார். எல்லா ஆற்றங்கரையோரமும் ஒரு ஒற்றையடிப்பாதை போகும். அந்த ஒற்றையடிப்பாதை எளிதில் கண்ணுக்குப் புலப்பட்டது. அவர் நடக்கத் துவங்கினார். அவள் தொடர்ந்து வந்தாள்.

"உங்கள் பெயரென்ன தாயே?"

"இராஜராஜீ..."

"சிதம்பரத்திலிருந்து வருகிறீர்களா?"

"இல்லை. என் ஊர் திருவக்கரை..."

"என்ன... திருவக்கரையா? அவ்வளவு தொலைவிலிருந்தா வருகிறீர்கள்."

"ஆமாம்..."

"உங்களையும் குடிபெயரச்சொல்லி ஓலை வந்ததா..."

"இல்லை. நான் குடிபெயர்வதற்காக வரவில்லை."

"பிறகு?"

"வரைபடங்கள் கொண்டு வந்திருக்கிறேன்..."

"எதற்கு?"

"கோவில் மண்டப வரைபடங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டது. அவைகளைக் கொண்டு போய் தஞ்சையில் தர வேண்டும் என்று கட்டளை இருந்தது..."

"இப்போது வரைபடங்கள் எங்கே..."

"அதோ... குப்புறக் கிடக்கும் அந்த மாட்டு வண்டியில் வரைபடங்கள் இருக்கின்றன..."

பிரம்மராயர் திகைத்தார். அந்த மாட்டு வண்டி, அங்குள்ள எல்லா உயிர்களையும்விட மிக முக்கியமான உயிராக அவருக்கு அந்த நேரம் தென்பட்டது.

## 3

பிரம்மராயர் கலவரத்துடன் புரண்டு கிடக்கும் மாட்டு வண்டியைப் பார்த்தார். மாட்டு வண்டி இன்னும் ஒரு நாழிகையில் நீருக்கடியில் போகும் என்று வெள்ளத்தின் வேகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ள முடிந்தது.

பயணம் செய்தவர்களைக் கரையேற்றுவதற்கே எல்லோரும் முக்கியமாக முயன்று கொண்டிருப்பதால் மாட்டு வண்டியைப் பற்றின அக்கறை எவருக்கும் வரவில்லை. ஒருவேளை நீரோடு அடித்துக்கொண்டு போனாலும்

போகட்டும். வேறு எங்கேனும் கரை ஒதுங்கும்போது எடுத்துக் கொள்ளலாம்' என்று சகலரும் சிந்தித்திருக்க வேண்டும்.

ஆனால் மாட்டு வண்டிக்குள் இப்படி கோயிலுக்கான வரைபடங்கள் இருக்கிறது என்று முன்னே தெரிந்திருந்தால், பிரம்மராயரும் கமலக்கண்ணனும் மனிதர்களை விட்டுவிட்டு மாட்டு வண்டியைக் கரை ஏற்றுவதற்கே அதிகம் முயற்சித் திருப்பார்கள். ஆனால் நிச்சயம் இரண்டு பேராவது இறந்து போயிருப்பார்கள்.

இதை நல்லவேளை என்று சொல்வதா? கெட்டவேளை என்று சொல்வதா?

மனிதர்கள் இருந்ததால் மாட்டு வண்டியைப் பற்றி அக்கறை அற்றுப் போயிற்று. மீட்க முடியுமா என்று இப்போது தெரியாமல் இருக்கிறது. மாட்டு வண்டியைப் பற்றி அக்கறைப் பட்டிருந்தால் மனிதர்களை நிச்சயமாக இழந்திருப்போம்.

இந்த மனிதர்கள் கோயிலுக்கென்று தஞ்சைக்கு வந்தவர்கள். மன்னரின் ஆணைப்படி குடிபெயர்ந்தவர்கள். பரம்பரை பரம்பரையாய் வசித்து வந்த தங்களுடைய சொந்த இருப்பிடத்தை விட்டுவிட்டு, இது வரை பார்த்தேயிராத ஒரு ஊருக்கு மன்னனின் ஆணை என்று பயணப்பட்டவர்கள். சொந்த ஊரிலிருந்து கிளம்பும்போது, விம்மி விம்மி அழுது எல்லோரையும் வணங்கி, இனி திரும்புவது சந்தேகம்தான் என்பதுபோல இங்கு வந்திருப்பவர்கள். அவர்களை இன்னமும் மரியாதையாக வரவேற்றிருக்க வேண்டும்.

ஆனால் காவிரித்தாய் கவிழ்த்து விட்டு வேடிக்கை பார்க்கிறாள். மனிதர்களைக் கவிழ்த்தது மட்டுமல்லாமல் கோவில் கட்டுவதற்கு வேண்டிய அடிப்படையான உதவி களையும் பிடுங்கிக்கொண்டு முரட்டுத்தனமாய் நிற்கிறாள்.

காவிரியின் நீர்வேகம் குறைந்தால் மாட்டு வண்டியை இழுப்பது எளிது. இல்லையெனில் மாட்டு வண்டி உடையக் கூடும். பெட்டி திறக்கக்கூடும். பெட்டி திறந்தால், உள்ளுக்குள்ளே இருக்கின்ற மெல்லிய மாட்டுத் தோல்களில் எழுதப்பட்ட வரைபடங்கள், மூலைக்கொன்றாய் சிதறக்கூடும். மறுபடியும் வரைபடங்கள் எழுதுவதுதென்பது சாதாரண விஷயமல்ல.

'வரைபடங்கள் தஞ்சை நோக்கி வந்தன. வழியில் காவிரி ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டன' என்று மன்னர்

கேள்விப்பட்டால் அதை அச்சான்யமாக நினைப்பார். கோவில் கட்டுவது அவசியமா என்ற கேள்வி பலர் மனதில் எழுந்துவிடும்.

வரைபடங்கள் கிடைத்து விட்டால் மாட்டு வண்டி கவிழ்ந்ததை மறைத்து விடலாம். பெண்களை இதைப்பற்றி அதிகம் பேச வேண்டாம் என்று சொல்லிவிடலாம். வரைபடங்கள் நன்கு வந்து சேர்ந்தன என்று மன்னருக்குச் செய்தி தெரிவிக்கலாம்.

பெண்கள் மட்டும் கரையேறி, வரைபடங்கள் ஆற்றோடு போய் விட்டன என்றால், மன்னர் என்ன செய்வார் என்று சொல்ல இயலாது.

'யார் அது – துணையின்றி பெண்களிடம் வரைபடங்கள் கொடுத்தனுப்பியது' என்று சீற ஆரம்பித்தாரென்றால் பல்வேறு அதிகாரிகளுக்கு மண்டகப்படி நிச்சயம் கிடைக்கும்.

சோழ மாமன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் கோபமான குணம் உடையவரல்லர். தவறுகளை கேலியாகக் கண்டிக்கக் கூடியவர்.

தான் கோபித்துக் கொண்டால் மக்கள் மனதில் அது வலுவாகப் பதிந்துவிடும். அது மற்றவர்களுக்கு முன்பாய் மிகப்பெரிய இழிவாய் அவர்களுக்குப் போய் விடும். நல்ல வேலைக்காரர்கள் இதனால் மனமுடைந்து போய் விடுவார்கள்.

பிற்பாடு பாராட்டினாலும், 'அன்று கோபித்துக் கொண்டீர்களே' என்று வருத்தப்படுவார்கள் என்பதால், எவரையும் கோபிக்காமல் தவறுகளை மெல்லியதாய்ச் சுட்டிக் காட்டி, 'வேறு விதமாய் செய்வதற்கு இயலுமா' என்று அன்பாகச் சொல்லி, 'உங்களால் முடியும்' என்று உற்சாகப் படுத்தி நகர்ந்து விடுவார்.

ஆனால் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் கோபித்துக் கொண்ட நேரங்களையும் பிரம்மராயர் பார்த்திருக்கிறார்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரின் தமையனார் ஆதித்த கரிகாலன் கொலை செய்யப்பட்டு, பத்தொன்பது வருடங் களுக்குப் பிறகு இன்னார்தான் கொலை செய்தார் என்று கண்டுபிடிக்கப்பட்டு, கண்டு பிடிக்கப்பட்டவர்கள் விதவிதமாய் விசாரிக்கப்பட்டு, குற்றம் ருசுப்படுத்தப்பட்டு, அதன் காரணங்கள் தெளிவான பிறகு, அது குறித்து வருந்தி சற்றுநேரம் அமைதியாக இருந்த உடையார் திடீரென்று உதறி எழுந்து,

“கொலையாளிகளின் சொத்து மட்டுமல்லாமல், அவர்கள் உறவினர்கள் சொத்து முழுவதும் உடனடியாகக் கைக்கொள்ளப்பட வேண்டும். கொலையாளியின் தாய், தந்தை, சிற்றப்பன், சிற்றன்னை, பெரியப்பன், பெரியன்னை, அத்தை, மாமன் அத்தனை வகையினரும், இவர்கள் மகன்களுக்குப் பெண் கொடுத்தவர்களும், இவர்கள் பேரன், பேத்திகளுக்குப் பெண் கொடுத்தவர்களும், பிள்ளை கொடுத்தவர்களும், இவர்கள் வீட்டில் சம்பந்தம் செய்த அத்தனை பேரும், அத்தனை தூரத்து உறவினர்களுடைய சொத்துக்களும் இந்தக் கணம்முதல் பறிமுதல் செய்யப்பட்டு, அவர்கள் அத்தனை பேரும் சோழ தேசத்திலிருந்து இன்று பொழுது சாய்வதற்குள் வெளியேற்றப் பட வேண்டும் என்று விரும்புகின்றேன்.

எதிர்த்து எவரேனும் பேசினால் அவர்கள் தலை துண்டிக்கப்படலாம். பெண்கள் முரட்டுத்தனம் செய்தால் நாக்கு அறுக்கலாம். மீறி ஆயுதம் தாங்கினால் மூக்கும், முலையும் அறுத்துத் துரத்தலாம்...”என்று சீறலாய்க் கட்டளையிட, உடனே கொலையாளிகளின் உறவினர்கள் வேகமாகத் திரட்டப்பட்டு, நடுச்சபையில் நிறுத்தி வைக்கப்பட்டார்கள். உடையார் இராஜராஜத்தேவர் முன்பு இன்னார், இன்னின்ன உறவினர்கள் என்று அறிமுகப்படுத்தப்பட்டார்கள்.

தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று அந்த உறவினர்கள் கதறினார்கள். ‘எந்த பாவமும் செய்யாத எங்களைத் தண்டிக்கிறீர்களே, என்று பெண்கள் புலம்பினர். ‘பொறுமையற்ற அரசனாய் இருக்கிறீர்களே... விசாரிக்காமல் தீர்ப்பு சொல்கிறீர்களே...’ என்று அந்தக் கூட்டத்தில் முதியவர்கள் உரக்கக் கத்திய போது, கண்கள் சிவக்க, உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் ஆசனத்திலிருந்து எழுந்து, வாளை உருவி அந்தப் பெரியவர் முகத்திற்கெதிரே நீட்டிப் பேசியது இன்னும் நினைவில் இருக்கிறது.

“நீங்கள்தான் என்று தெரியும். உங்கள் ஊரிலிருந்துதான் கிளம்பினார்கள் என்று தெரியும். உங்கள் கிராமத்தில்தான் ரகசியக்கூட்டங்கள் போடப்பட்டன என்று தெரியும். உங்கள் கிராமத்திலிருந்து சோழ தேசத்திற்கு எதிராக ஆட்கள் கிளம்புகிறார்கள் என்று தெரியும். உங்கள் கூட்டத்தின் திமிர் தெரியும். அகம்பாவம் தெரியும். ஆத்திரம் தெரியும். சூழ்ச்சி தெரியும். உங்களைப் பல வருடங்களுக்கு முன்பே அடித்து

நொறுக்கியிருக்க வேண்டும் கிராமம் முழுவதும் அழித்து, ஒரு வீடுகூட இல்லாமல் தரைமட்டமாக்கியிருக்க வேண்டும். நான் பத்தொன்பது வருடங்கள் பொறுமை காத்தேன்.

மெல்ல மெல்ல உங்களைப் பேச வைப்பதற்காகவே, நீங்களாகவே உளறி உங்கள் தவறை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே நான் காத்திருந்தேன்.

ஐந்து வருடங்கள்தான் உங்கள் கூட்டத்தால் இறுக்கமாக இருக்க முடிந்தது. பின் 'நாங்கள்தான் கொன்றோம்' என்று தம்பட்டமடிக்க ஆரம்பித்து விட்டீர்கள். எப்படி, எதற்காக, ஏன் என்றெல்லாம் நான் தீர விசாரித்து விட்டேன்.

இங்குள்ள ஒவ்வொரு குழந்தைக்கும்கூட இந்தக் கொலையில் பங்கிருக்கிறது என்பதை நான் அறிந்தேன். உங்கள் வீரத்தை, உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் பெருமைபட கூற ஆரம்பித்து விட்டீர்கள். உங்கள் குழந்தைகள் அதை மற்றவர் களுக்குச் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

நீங்கள் தேக்கி வைத்திருந்த ரகசியம் உங்களாலேயே உடைபடும் வரை நான் காத்திருந்தேன். ஒன்றிரண்டு பேரைத் தண்டித்தால், மீண்டும் உங்களிலிருந்து ஆட்கள் கிளம்புவார்கள். உங்கள் கூட்டம் முழுவதையும் தண்டிக்க விரும்பியே நான் இத்தனை காலம் காத்திருந்தேன். இது எனக்கொரு நல்ல வாய்ப்பு.

தயவுசெய்து வாள் உருவி உங்களை வெட்டிப் போடுவதற்கு முன்பு, உங்கள் பெண்களை அவமானப்படுத்து வதற்கு முன்பு இந்த இடத்தை விட்டு விரைவாகப் போய்விடுங்கள். எவ்வளவு விரைவாகப் போகிறீர்களோ, அவ்வளவு நல்லது. என்னால் மக்களை வெகுநேரம் கட்டுப் படுத்தி வைத்திருக்க முடியாது…" என்று கூறினார்.

மக்கள் அப்பொழுதே ஆத்திரமானார்கள். உரக்கக் கத்தத் துவங்கினார்கள். உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் மக்களைக் கட்டவிழ்த்து விடலாமா என்று யோசித்து, பிரம்மராயரை நோக்கி உற்றுப் பார்த்தார்.

பிரம்மராயர் வேண்டாம் என்று தலையசைத்ததும், தனது தனிப்பட்ட காவல்படையை அவர்களைச் சுற்றி நிற்க வைத்து அப்பொழுதே- அங்கிருந்தபடியே ஒரு பொருளும் எடுத்துக்

கொள்ளப்படாமல் அவர்களை வெளியேற்றினார். மௌனமாய் அந்தக் கூட்டம் வெளியேறியது.

கிராமம் முழுவதையும் மக்கள் தீக்கிரையாக்கினார்கள். மக்களின் கோபத்தை, ஆவேசத்தைக் கண்டபோது மன்னர் கோபத்தோடு சிரித்தது இன்றும் ஞாபகமிருக்கிறது. முதன் முறையாய் வாழ்க்கையில் ஒரு மனிதன், சிரிப்பதில் கோபத்தைக் காட்டியதை பிரம்மராயர் கவனித்தார். ஆனால் அன்று இரவே சோழ மன்னர் ஸ்ரீ இராஜராஜத்தேவர் சகஜமாகிவிட்டார்.

அன்றுதான் காஞ்சி மாநகருக்கு ஓலை அனுப்பி, பல்வேறுவிதமான கோவில் படங்களை ஓவியமாக வரைந்து அனுப்பச் சொல்லியிருந்தார். அந்தப் படங்கள் தான் தேவரடியார் மூலம் இங்கு மாட்டு வண்டியில் வந்திருக்கிறது. வந்த வண்டி கவிழ்ந்து நீரில் ஒருக்களித்துக் கிடக்கிறது. பெட்டியின் கதி என்னவாயிற்றோ – தெரியவில்லை.

பிரம்மராயர், பழமர்நேரி படித்துறைக்குப் போனார். தீப்பந்தங்கள் அதற்குள் அரச மரத்தடியில் நட்டு வைக்கப் பட்டிருந்தன.

பெண்களை 'யார், என்னது' என்று அந்தணர்களும், வேளாளர்களும் விசாரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கமலக்கண்ணனைப் பார்த்துவிட்டு, 'வாருங்கள், வாருங்கள்' என்று கைகூப்பினார்கள்.

கமலக்கண்ணன், பின்னால் நடந்து வந்த பிரம்மராயரைச் சுட்டிக் காட்டவே, எல்லோரும் தீப்பந்தத்தைப் பிடுங்கி பிரம்மராயரின் முகத்தைக் காண வெளிச்சம் காட்டினார்கள்.

பிரம்மராயர் ஒற்றையடிப் பாதையிலிருந்து மேடு ஏறி கரைக்கு வந்ததும், கால் தொட்டு நமஸ்காரித்தார்கள். இடுப்பில் மேல் துணியை இறுகக் கட்டிக் கொண்டார்கள். 'வருக, வருக' என்று சொன்னார்கள்.

"ஒரு வார்த்தை எங்களிடம் சொல்லியிருக்கக்கூடாதா? ஒட்டு மொத்தமாய்த் திரண்டு வந்து எல்லோரையும் காப்பாற்றியிருப்போமே... நீங்கள் எதற்காக ஆற்றில் இறங்குகிறீர்கள்..." என்று கேட்டார்கள்.

பிரம்மராயர் கையமர்த்தினார்.

"வந்தவர்கள் அனைவரையும் காப்பாற்றி விட்டோம். கரையின் எதிர்ப்பக்கம் மூன்று வண்டிகள் இருக்கின்றன. அந்த

வண்டிகளில் ஒன்றில் ஒரு மரப்பெட்டி இருக்கிறது. அந்த மரப்பெட்டி வண்டிக்குக் கீழே கட்டப்பட்டிருக்கிறது. அந்த மரப்பெட்டி மிக முக்கியம். அது உடையார் ஸ்ரீஇராஜராஜத் தேவரின் சொத்து. எப்பாடு பட்டாவது நீங்கள் அதைக் காப்பாற்றியாக வேண்டும். நீச்சல் தெரிந்தவர்கள் அருகே வாருங்கள். மற்றவர்கள் சற்று விலகிக் கொள்ளுங்கள்…” என்று கட்டளையிட்டார்.

தீப்பந்தங்கள் மறுபடியும் மண்ணில் நடப்பட்டன. நீச்சல் தெரிந்த வீரர்கள் ஆறேழு பேர் வந்து நிற்க, ஐந்து வேளாளர்களையும், நல்ல திடகாத்திரமாயிருந்த ஒரு அந்தண இளைஞனையும் அவர் தேர்ந்தெடுத்தார்.

மிதவைப் பானைகளையும், மூங்கில் கட்டைகளையும் கொண்டு வரச் சொன்னார். மற்ற கூட்டத்தினர் ஊரை எழுப்பி சாமான்கள் கொண்டு வர ஓடினார்கள். தீப்பந்தங்கள் முன்னும் பின்னும் இருட்டில் அலைந்தன.

“இன்னமும் அதிக தீப்பந்தங்கள் வேண்டுமென்று நினைக்கிறேன். கரை முழுவதும் வெளிச்சம் இருப்பது நல்லது. ஊரை எழுப்புங்கள். அவசியமானால் அடுத்த ஊருக்கும் தகவல் தெரிவியுங்கள்.”

இரண்டு பேர் அடுத்த ஊருக்கு ஓடினார்கள்.

குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த தேவரடியார் பெண்களைப் பழமர்நேரி கிராமத்து அந்தணப்பெண்கள் கைப்பிடித்து வரவேற்றார்கள். போர்வை போர்த்தி கிராமத் திற்குள் கூட்டிக்கொண்டு போனார்கள். ‘மாற்றுடைக்கு ஏற்பாடு செய்கிறோம்… வாருங்கள்’ என்று அன்போடு அழைத்துக் கொண்டார்கள்.

வந்த தேவரடியார் பெண்களில் மிக இளமையாக இருந்த ஒரு பதினாறு வய்துப் பெண்ணை, அவள் நடக்க முடியாமல் திணறுவது கண்டு, ஒரு அந்தணப் பெண்மணி சட்டென்று தூக்கித்தோளில் போட்டுக் கொண்டாள். குலுங்கிக் குலுங்கி அக்ரஹாரம் நோக்கி விரைவாக நடந்தாள். தீப்பந்தங்கள் பிடித்துக் கொண்டு இரண்டு வாலிபர்கள் அந்தக் கூட்டத்தோடு ஓடினார்கள்.

“ஐயன், ஆற்றில் நட்டு வைக்கப்படும் கம்பை வெள்ளம் பறித்துக் கொண்டு போய்விடும் என்பதற்காகவும், ஆழமாக

கம்பை ஊன்றுவதற்காகவும், கம்பு அசையாமல் நிற்பதற்காகவும் அங்கு கற்குவியல் போடப்பட்டிருந்திருக்கிறது. அந்தக் கற்குவியலின் மீது மாட்டு வண்டி ஏறி கவிழ்ந்து விட்டிருக்கிறது. வண்டி புரண்டு போகாமல் அங்கேயே நிற்பதற்குக் காரணமும் கற்குவியல்தான். இதுவே மணலில் மாட்டு வண்டி கவிழ்ந் திருந்தால் மண் பறிக்கப்பட்டு நகர்ந்து போயிருக்கும். வண்டி பலமுறை உருட்டப்பட்டிருக்கும்.

நீங்கள் சொல்வதைப் பார்க்கும்போது, பெட்டியின் கனத்தால் மாட்டு வண்டி நிறுத்தப்பட்டிருக்கிறது. கற்குவியலால் புரளாமல் அப்படியே இருக்கிறது. எனவே மாட்டு வண்டியிலிருந்து பெட்டியை மட்டும் தனியே விடுவித்துக் கொண்டு வருவதே நல்லது என்று தோன்றுகிறது..." ஒரு வேளாளப் பெரியவர் கூர்ந்து கவனித்துப் பேசினார்.

"இல்லை வேளாளரே... அப்படிச் செய்வதற்கு இயலாது."

பிரம்மராயரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிராமண இளைஞன் சட்டென்று பேசினான். எல்லோரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள்.

"நீங்கள் பெட்டியை மாட்டு வண்டியிலிருந்து விடுவித்தால், மாட்டு வண்டியை நகர்த்துகிறபோது பெட்டி உடையக்கூடும். கிட்டத்தட்ட நான்கு நாழிகைகளாக தண்ணீரில் மூழ்கியிருக்கும் இந்த மரப்பெட்டி என்ன வலுவில் இருக்கும் என்பதை உங்களால் சொல்ல முடியாது.

அதுவும் தவிர, உள்ளே இருப்பது தோலால் செய்யப்பட்ட வரைபடங்கள். தோலும் தண்ணீரில் ஊறி கனமாகியிருக்கும். எனவே மாட்டு வண்டி, பெட்டி இரண்டுக்கும் மூங்கில் கழிகள் அண்டக் கொடுத்து தோளில் தூக்கிக் கரையேறுவதே நல்லது..."

"என்ன விளையாடுகிறாய் தம்பி? இத்தனை கனத்தை தோளில் வைத்துக் கொண்டு வரவேண்டுமென்றால், எவ்வளவு பேர் வேண்டுமென்று நினைக்கிறாய்...? நூறு பேர் இல்லாமல் இத்தனை பெரிய மாட்டு வண்டியைக் கரையேற்ற முடியுமா? மாட்டு வண்டியைவிட உள்ளே இருக்கிற பெட்டி முக்கியமென்றால் பெட்டியைத் தனியே பிரித்து விடலாம். மாட்டு வண்டியை உருட்டி ஆற்றோடு அனுப்பி விடலாம். என்ன செய்வதென்பதைப் பெரியவர்கள் தீர்மானிக்க

வேண்டும்." – வேறொரு வேளாள இளைஞன் முன் வந்து பதில் சொன்னான்.

எல்லோரும் கவலையோடு மாட்டு வண்டியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கோல் நட்டுக் காத்துக் கொண்டிருந்த படகோட்டி உரக்கக் கத்தினான்.

"வெள்ளம் அதிகமாகிப் போய்க் கொண்டே இருக்கிறது. ஒரு நாழிகைக்கு ஒரு முழம் ஏறுகிறது..." என்று கூச்சலிட்டான்.

அவன் பழமர்நேரி படகோட்டி. அவனுக்கு ஆற்றின் எல்லாப் பகுதியும் அத்துப்படி. வெள்ளத்தின் நெளிவு சுளிவுகள் அத்தனையும் தலைமுறை தலைமுறையாய் அறிந்தவன். அவன் பேச்சு எல்லோருக்கும் கலவரத்தைக் கொடுத்தது.

"மாட்டுவண்டி எனக்கு முக்கியமில்லை. பெட்டி முக்கியம். மாட்டு வண்டிக்குள் இவர்களுடைய உடைமைகள் ஏதேனும் இருக்கலாம். அதைப் பற்றியும் அவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அந்தப் பெண்கள் எங்கே?"

பிரம்மராயர் கேட்டார். 'அவர்கள் அக்ரஹாரத்துக்கு அழைத்துப் போகப்பட்டு விட்டார்கள்' என்று பதில் வந்தது.

"இல்லை. நான் போகவில்லை..." பிரம்மராயரால் காப்பாற்றப்பட்ட இராஜராஜீ மரத்தடியிலிருந்து வெளியே வந்தாள்.

மேலே யாரோ ஒருவர் கொடுத்திருந்த மெல்லிய வேட்டியை போர்த்தியிருந்தாள். தலையிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது. நெற்றியில் குங்குமம் கலைந்திருந்து. முகத்திலிருந்து இன்னும் பயம் விலகாமல் இருந்தது. வேட்டியின் மீது பொட்டுப் பொட்டாய் ரத்தக் கறைகள் தெரிந்தன.

"ஏனம்மா... இன்னும் ரத்தம் வருகிறதா..." பிரம்மராயர் கவலையோடு கேட்டார்.

"இல்லை ஐயா... ரத்தம் நின்று விட்டது. ஆனால் வலி அதிகமாக இருக்கிறது..."

"கடவுளே... இதோ... வைத்தியரை ஏற்பாடு செய்கிறேன். பெட்டியைத் தவிர, வரைபடங்கள் தவிர மாட்டு வண்டியில் இன்னும் வேறென்ன இருக்கிறது?"

"மாட்டு வண்டியின் மேற்கூரையில் மூன்று ஓலைக் குழல்கள் சொருகப்பட்டுள்ளன. மூன்று குழல்களில் ஒன்று

என்னுடையது. மற்ற இரண்டு குழல்கள் மற்ற இரண்டு தேவரடியார்களுடையது..."

"என்ன இருக்கிறது அந்தக் குழலில்?"

"ஒரு குழலில் எங்களைப் பற்றிய அறிமுக ஓலை இருக்கிறது. இன்னொரு குழலில் அரசர் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவருக்கு ஒரு ரகசியச் செய்தி இருக்கிறது..."

"மூன்றாம் குழலில் என்ன இருக்கிறது?"

'மயிலை வணிகர்களின் சங்கத்தலைவர் உங்களுக்குக் கொடுத்த ஒரு ஓலை இருக்கிறது..."

பிரம்மராயர் திகைத்துப் போனார். 'கடவுளே, இவ்வளவு பெரிய பொக்கிஷத்தையா ஆற்றில் விட்டெறிந்துவிட்டுக் கரை யேறி இருக்கிறீர்கள்?' என்று மனதில் நினைத்துக்கொண்டார்.

"இதைத் தவிரவும் ஒரு ஓலை என் இடுப்பில் தனிக் குழலில் ரகசியமாக வைத்திருக்கிறேன். அந்த ஓலையை இளவரசர் இராஜேந்திரர் உங்களைப் பார்த்து எவரும் அறியாத வண்ணம் கொடுக்கச் சொன்னார்..."

தாழ்ந்த குரலில் அவருக்கு மட்டும் கேட்கும் வண்ணம் இராஜராஜீ பேசினாள்.

ஓலை இருப்பதை எவரும் அறியா வண்ணம் அவருக்குச் சுட்டிக்காட்டினாள். பிரம்மராயர் முகத்தைச் சாதாரணமாக்கிக் கொண்டார்.

"நல்லது... வேறு சில முக்கியப் பொருள்களும் மாட்டு வண்டியில் இருப்பதால் பெட்டி அடிபடாமல் மாட்டு வண்டியோடு கரையேற வேண்டும். எத்தனை வீரர்கள் தேவைப்பட்டாலும் உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்.

அருகே இருக்கிற எல்லா கிராமத்திற்கும் போய் ஆட்களை அழைத்து வாருங்கள். கயிறுகளோடும். நீண்ட மூங்கில்களோடும் வாருங்கள். எது தேவையென்று உங்கள் மனத்திற்குப் படுகிறதோ... அத்தனையும் எடுத்துக் கொண்டு வாருங்கள். நல்ல கொக்கிகள், இரும்புக் கம்பிகள் நமக்குத் தேவைப்படும். மூங்கில் இணைப்பதற்கு சிறு சிறு கயிறுகளும் அவசியமாகும். எல்லாம் திரட்டிக் கொண்டு வாருங்கள்.

எவரும் எந்தக் கிராமத்திலும் தூங்கக்கூடாது என்று உத்தரவிடுங்கள். கிராமத்திலுள்ள அதிகாரியை எழுப்பி

பறையை அடிக்கச் சொல்லுங்கள். சங்கு முழக்கச் சொல்லுங்கள். அவசர எக்காளம் ஊதச்சொல்லுங்கள். இன்னும் தீப்பந்தங்கள் தேவை. அதற்கும் ஏற்பாடு செய்யுங்கள்...”

பிரம்மராயர் உரத்த குரலில் கட்டளையிட்டார்.

ஆட்கள் நாலாபக்கமும் பறந்தார்கள். தீப்பந்தங்கள் இன்னும் அதிகமாயின. கிராமம் ஜெகஜோதியாகியது. எக்காளம் முழங்கப்பட்டது. அவசரம் என்று சொல்லும் சிறுபறை அறிவிக்கப்பட்டது. மற்ற ஊர்களிலிருந்து தீப்பந்தங்கள் எடுத்து வரப்படுவது தெரிந்தது. திருக்காட்டுப்பள்ளிக்கு ஒருவர் குதிரையில் ஏறி படையோடு வருவதாகச் சொல்லிப் போனார்.

“ஐயா, முதலில் மாட்டு வண்டியைப் பெட்டியோடு பத்திரப்படுத்துவது முக்கியம்...” மறுபடியும் படகோட்டி உரக்கச் சொன்னான்.

“ஆட்கள் வந்து சேருவதற்குள் மாட்டு வண்டி நிச்சயம் மூழ்கிவிடும். மாட்டு வண்டி மூழ்கிவிட்டால், வெள்ள வேகத்தில் ஒருவேளை புரளக்கூடும். எனவே, மாட்டு வண்டி வெள்ளத்தால் அடித்துச் செல்லப்படாமல் இருப்பதற்கு, பனைகளால் வெள்ளத் தடுப்பு ஏற்படுத்தலாம்.

பனந்துண்டங்கள் எல்லா கிராமங்களிலும் இருக்கின்றன. பனந்துண்டங்கள் வரவேண்டுமென்று சொல்லுங்கள். பனந்துண்டங்களின் அடிப்பகுதியைக் கூராக்கி ஆற்றில் இறக்கி, சுத்தியால் அடித்து தடுப்புச் சுவர் ஏற்படுத்தலாம்...” என்று படகோட்டி உரக்கச் சொன்னான். அவனை நோக்கி ஆசீர்வதிப்பதுபோல் பிரம்மராயர் கையுயர்த்தினார்.

“நல்லது... அந்த இளைஞன் தெளிவாகப் பேசுகிறான். பனந்துண்டங்களைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மாட்டு வண்டியிலிருந்து ஒரு கோல் தூரத்தில் பனந்துண்டங்களை அடித்து இறக்குங்கள். மாட்டு வண்டி புரளாமல் காப்பாற்றுங்கள்...” என்று கட்டளையிட்டார்.

அந்தண இளைஞன் சட்டென்று திரும்பினான்.

“ஐயா... ஒரு குதிரை வீரனைக் கல்லணைப் பக்கம் அனுப்பி அங்குள்ள மதகுகளை மூடச்செய்தால் வெள்ளம் வருவது குறைந்து போகும் அல்லவா...? வெள்ளத்தை இங்கு தடுப்பதற்கு முன்பு கல்லணையிலேயே தடுத்து விடலாம் அல்லவா...”

"அதுவும் நல்ல யோசனைதான்... யாரங்கே... ஒரு ஓலை கொண்டு வா..."

ஓலையும், எழுத்தாணியும் கொண்டு வரப்பட்டன. வெகு வேகமாக ஓரே வரியில் பிரம்மராயர் உத்தரவு எழுதினார் கையொப்பமிட்டார். கிராமத்துத் தலையாரியிடம் கொடுத்து குதிரையேறி கல்லணைக்கு ஓடச் சொன்னார்.

ஊர்களிலிருந்து மக்கள் வரவும், கல்லணையிலிருந்து நீர் வரத்து நிற்கவும் இன்னும் நான்கு நாழிகையாவது ஆகிவிடும் என்று தோன்றியது. அதற்குள்ளாக வண்டி புரளாமல் இருக்க வேண்டும். பெட்டி உடையாமல் இருக்க வேண்டும். எப்படியாவது வண்டியைக் காப்பாற்றி விடவேண்டும்.

அந்த அந்தண இளைஞனை பிரம்மராயர் தோள் தொட்டுத் திருப்பினார்.

"நீ இடுப்பில் கயிற்றைக் கட்டிக்கொண்டு நீரில் இறங்கு... மூன்று, நான்கு கயிறுகளால் பெட்டியையும், மாட்டு வண்டியையும் இறுகப் பிணைத்து விடு. வண்டி நம் கைவசம் இருக்கட்டும். வெள்ளம் அதிகரித்து வண்டியை நழுவவிட்டோமானால் எங்கு போய் கண்டு பிடிப்பது...?" என்று கவலையோடு பேசினார்.

அந்த இளைஞன் கயிறை இடுப்பில் கட்டிக் கொண்டு நீரில் இறங்கினான். எதிர்நீச்சல் போட்டு வண்டியை நோக்கி நீந்தினான். வண்டியின் சக்கரத்தைப் 'பற்றி கொண்டான். வண்டி மீது ஏறி நின்றான். மற்றவர்கள் கவலையோடு அவனைப் பார்த்தார்கள்.

இடுப்பில் கட்டிக் கொண்டிருப்பது மெல்லிய கயிறு என்பதால் அதை மடமடவென்று இழுத்தான். மெல்லிய கயிறின் முனையில் தடித்த கயிறைக் கட்டி அனுப்பினார்கள். தடித்த கயிறு அவனை நோக்கிப் போயிற்று.

அவன் அந்தக் கயிறறால் மாட்டு வண்டியின் சக்கரத்தை இறுகக் கட்டினான். இன்னொரு ஆளை வரும்படி சைகை செய்தான்.

காலை உந்தி மாட்டு வண்டியிலிருந்து நீரில் குதித்தான். அவன் குதித்தபோது அவனின் உந்துதல் வேகத்தால் மாட்டு வண்டி இப்போது மல்லாக்கச் சாய்ந்தது. இரண்டு சக்கரங்களும் மேலே இருந்தன. மாட்டு வண்டியின் கூரைப் பகுதி நீரின்

அடிப்பக்கம் போயிற்று. மாட்டு வண்டி வெள்ளத்தில் ஆடத் துவங்கியது. கரையிலுள்ளோர்கள் 'ஐயோ' என்று ஓரே குரலாய்க் கத்தினார்கள். பிரம்மராயர் கவலையானார்.

கரையோரச் சாலையில் குதிரைப்படை ஒன்று வருகின்ற சப்தம் கேட்டது. மூன்று தீப்பந்தங்கள் வந்தன. 'திருக்காட்டுப் பள்ளிபடைகள் வந்துவிட்டன' என்று யாரோ உரக்கச் சொன்னார்கள்.

திடீரென்று எக்காளம் ஊதப்பட்டது. எக்காளச் சப்தம் கேட்டதும் எல்லோரும் சுறுசுறுப்பானார்கள். அது உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வருகிறார் என்கிற எக்காளம்.

## 4

உலர்ந்த வைக்கோல் போரில் திடீரென்று நெருப்பு பிடித்ததுபோல் அந்த இடம் பரபரப்பாகியது. பழமர்நேரி மக்கள் விரைந்து, நாலா பக்கமும் நகர்ந்து வளையமாகி, மன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் வருவதையே வியப்போடு பார்த்தார்கள்.

மன்னரின் கவசப்படையைச் சேர்ந்த ஒருவன், நிலைமையை சகஜமாக்கக் கருதி, 'மன்னர் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர்' என்று உரக்கக் குரல் கொடுக்க, 'வாழ்க வாழ்க' என்று கிராமவாசிகள் சேர்ந்து குரலெழுப்பினார்கள்.

கிராம அதிகாரி ஒருவன் சட்டென்று முன் வந்து.

"திருமகள்போல பெருநிலச் செல்வியும் தனக்கே உரிமை பூண்டமை மனக்கொள காந்தளூர் சாலை கலமறுத் தருளி...

என்று உடையாரின் மெய் கீர்த்தி பாட, சட்டென்று இடது கையை உயர்த்தி, அந்தக் கிராம அதிகாரியைப் பார்த்து, மெய்கீர்த்தி வேண்டாம்' என்பது போல் இராஜராஜன் சைகை செய்தார்.

மெய்கீர்த்தி நிறுத்தப்பட்டது. மெய்க்கீர்த்தி சொன்ன வனை எல்லோரும் சற்று கேலியாகப் பார்தார்கள். இது என்ன அரச சபையா... இல்லை வேறு ஏதேனும் சபை மண்டபமா,... ஆற்றங்கரைதானே... இரவு நேரத்தில் இங்கெல்லாமா மெய்கீர்த்தி பாடுவது' என்பது போல் மக்கள் மெய்கீர்த்தி

கூறியவனை வியப்பாகப் பார்த்துக் கேலி செய்தார்கள். முணுமுணுத்தார்கள்.

மீண்டும் அங்கு ஏற்பட்ட நிலைமையைத் தளர்வு செய்யக் கருதி, கவசப்படையைச் சேர்ந்தவன் 'உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர்' என்று உரக்கக் கத்த, 'வாழ்க, வாழ்க' என்ற கோஷம் உரக்க எழுந்தது, எல்லாரிடமும் எல்லா சிந்தனைகளும் கலைந்து, மறுபடியும் மன்னர், மீது ஒருமுகப்பட்டன.

மன்னர் குதிரையிலிருந்து இறங்க முயற்சித்தபோது, ஒருவன் சட்டென்று கீழே குனிந்து தோள் கொடுக்க முன் வந்தான். மன்னர் அவனை 'நகர்ந்து போ' என்று சைகை செய்து, குதிரையைச் சற்று அப்பால் நகர்ந்த, அவன் எழுந்து கொண்டான்.

இடக்காலை சேணத்தில் ஊன்றி, வலக்காலை வீசிப் போட்டு மன்னர் கீழிறங்கினார். இறங்கி, இடுப்பை இடதும் வலதும் அசைத்து தளர்வாக்கிக் கொண்டார். குதிரையைத் தட்டி அப்புறப்படுத்தினார். மக்களை நோக்கி நடந்தார்.

மக்கள் கூட்டம் சலசலத்தது. காற்றில் ஆடும் நெற்கதிரைப் போல நெளிந்தது.

அவர்களை அருகே வரும்படி மன்னர் சைகை செய்ய, அவர்கள் வேகமாய் மன்னரை நோக்கி நகர்ந்தார்கள். மன்னர் அந்தக் கூட்டத்தில் 'தனக்கு யாரையெல்லாம் தெரியும்' என்பதுபோல் உற்றுப் பார்த்தார்.

மன்னர் மேலிருந்து சந்தன வாசனை வீசிக் கொண்டிருந்தது. மத்திம வயதைத் தாண்டிய மன்னர், மேல்முதுகுவரை முடி வளர்த்தார். தலையைச் சுற்றி தலைப்பாகை கட்டி இறுக்கியிருந்தார். கழுத்தில் கம்பியாய் ஒரு வடமும், வடத்தினடியில் ஒரு உருத்திராட்சமும் கோர்த்திருந்தார்.

அதைத்தவிர நீண்ட சங்கிலியும், சங்கிலியில் பொற் பதக்கமும் நெஞ்சைத் தழுவிக் கொண்டிருந்தன. பொற் பதக்கத்தில் பாயும் புலியின் உருவம் செதுக்கப்பட்டிருந்தது. காதில் உருளைக் குண்டலங்கள் போட்டிருந்தார். புஜங்களில் பொன்னாலான கேயூரங்கள் அணிந்திருந்தார்.

மணிக்கட்டில் வெள்ளிப் பட்டயத்தை இறுக்கிக் கட்டியிருந்தார். இடுப்பில் தார் பாய்ச்சி வேட்டி கட்டி, அதன்

மீது சிகப்புத் துண்டு போட்டு இறுக்கி, தோளில் ரத்தினச் சால்வை போர்த்தியிருந்தார்.

மெல்லிய மீசையும், கூரான மூக்கும், அழகிய கண்களும் செழுமையான கன்னங்களும், உறுதியான முகவாயும் மன்னரைப் பேரழகனாகக் காட்டின.

மன்னர் அங்கு தெரிந்த முகங்களைப் பார்த்து 'நலமா' என்று விசாரித்தார். மன்னருக்கு அவர்களின் பெயர் தெரியாது. ஆனால் அடையாளம் தெரியும். கிராம அதிகாரிகளை எளிதில் இனங்கண்டு கொள்வார். 'இந்த கிராமம்தானே...' என்று சரியாக கிராமத்தின் பெயரும் சொல்வார்.

மன்னர் அம்மாதிரி மூன்று நான்கு அதிகாரிகளை விசாரித்தார். ஒரு வாலிபனைச் சுட்டிக்காட்டி, 'உன்னை நினைவிருக்கிறது' என்றார். மன்னர் இனங்கண்டு கொண்டவர்கள் முகத்தில் பெருமிதம் வழிந்தது. மற்றவர்கள் தாபத்துடன் மன்னரைப் பார்த்தார்கள். கூட்டம் மீண்டும் சலசலத்தது.

பிரம்மராயர் கவலையோடு திரும்பி காவிரியைப் பார்த்தார். அந்தப் படகோட்டி முழங்காலளவு ஜலத்தில் நின்று கொண்டிருந்தான். நீரை அளவெடுப்பதுபோல் கைக்கோலை காவிரியில் ஊன்றியிருந்தான். பிரம்மராயர் பார்த்ததும் தண்ணீர் மேலேறுகிறது என்று சைகை செய்தான். பிரம்மராயர் அவனைப் பார்த்துத் தலையாட்டினார். திரும்பி கவலையோடு மன்னரைப் பார்த்தார்.

'இந்த வேளையில் எந்த முன்னறிவிப்புமின்றி மன்னர் இங்கு வந்திருக்கிறார் என்றால் என்ன அர்த்தம்? இந்த வண்டிகள் இங்கு வரப்போவது மன்னருக்குத் தெரியுமா?

வண்டிகளில் வருபவர்களை எதிர்கொள்வதற்காக மன்னர் இங்கு வந்திருக்கிறாரா... அல்லது வண்டியில் வருகின்ற பொருளைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆவலில் வந்திருக்கிறாரா... அப்படி அந்த வண்டியில் என்ன வருகிறது? அந்த வரைபடங்கள் உள்ள பெட்டி முக்கியமா... இல்லை ஓலைச் சுருளா? அந்த ஓலைச்சுருளில் என்ன இருக்கிறது... யாருடைய செய்தி... எவருக்கு அந்தச் செய்தி...'

பிரம்மராயர் கவலையானார். தான் அறியாமல் இந்த சோழ தேசத்தில் ஒரு கல்லும் உருளக்கூடாது என்று நினைத்துக் கொண்டிருக்கிற வேளையில், மன்னரே எந்தவித முன்னறி

விப்புமின்றி கிராமம் கிராமமாக நகர்கிறார் என்பது மிக மிக கவலைக்குரிய விஷயம்.

சோழ தேசத்தின் அரசாட்சி தளர்வாக இருக்கிறது என்று அர்த்தம். கட்டுக்கோப்பு குறைந்து வருகிறது என்று பொருள்.

பிரம்மராயர் ஆழ்ந்த சிந்தனையில் இறங்கினார். மன்னரை மக்களிடமிருந்து நகர்த்தி, திரும்பி காவிரியைப் பார்க்க வைக்கவேண்டும் என்று திட்டமிட்டார். தொண்டையைக் கனைத்தார்.

"யாரது... பிரம்மராயரா..." - மன்னர் சட்டென்று கனைப்பு வந்த திசையை நோக்கித் திரும்பி உற்றுப் பார்த்துக் கேட்டார்.

தீப்பந்தங்கள் சட்டென்று பிரம்மராயரைச் சூழ்ந்து கொண்டன. பிரம்மராயர் மன்னருக்கு வணக்கம் சொன்னார். மன்னர் ஆவலாக பிரம்மராயரை நோக்கி வந்தார்.

"என்ன சொட்டச் சொட்ட நனைந்திருக்கிறீர்கள்... ஆற்றில் இறங்கினீர்களா?'' மன்னர் அருகே வந்து, பிரம்மராயரின் கரங்களைப் பிடித்தவாறு சற்றுக் கவலையாகக் கேட்டார்.

"ஆமாம். வண்டி ஒன்று ஆற்றில் கவிழ்ந்து விட்டது. கூச்சல் கேட்டதும் இறங்கி, வண்டியிலிருந்தவர்களைக் காப்பாற்றி விட்டோம். வண்டி அங்கேயே கவிழ்ந்து கிடக்கிறது. எதிர்க் கரையில் மூன்று வண்டிகளும் ஆட்களும் இருக்கிறார்கள்."

"இதைச் சொல்லத்தான் நான் உங்கள் வீட்டிற்கு வந்தேன். எனக்கு அப்பொழுதுதான் தகவல் வந்தது.

'காஞ்சி மாநகரிலிருந்து தஞ்சைக்காக தேவரடியார் களிடம் கோவில் பற்றிய வரைப்படங்களும் வருகின்றன. இதைத் தவிர வேறொரு முக்கியச் செய்தியும் நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கிறது' என்று ஒரு குதிரை வீரன் சொன்னான். வழியில் வெள்ளத்தில் சிக்கி குதிரை ஓடி விட்டதாம். இவன் நீந்திக் கரையேறி, கால்நடையாக தஞ்சை வந்திருக்கிறான்.

இதைத் தெரிவிக்க உங்கள் வீட்டிற்கு ஆள் அனுப்பிய போது, நீங்கள் அப்போதுதான் அவசரமாகக் கிளம்பியிருக் கிறீர்கள் என்று தகவல் வந்தது. உடனே என்ன என்ற பதற்றத்தில் நானும் கிளம்பி விட்டேன். வெண்ணாற்றங்கரையைத் தாண்டி நீங்கள் திருக்காட்டுப்பள்ளிப் பக்கம் போனதாகச் சொன்

னார்கள். எனவே, இந்தப் பக்கம் திரும்பி விட்டேன். மாட்டு வண்டி எங்கே?"

காவிரியை மன்னர் கூர்ந்து பார்த்தார். வாட்டமாய் தீப்பந்தங்கள் உயர்த்தப்பட்டன. மிக மெல்லியதான வெளிச்சத்தில், மாட்டு வண்டியின் மேல் பகுதி சிறிதளவே தெரிந்தது.

"வரைபடங்கள்..." மன்னர் பதற்றத்தோடு கேட்டார்.

"பெட்டியில் வைக்கப்பட்டு, வண்டியோடு பிணைக்கப் பட்டிருக்கிறது..."

"வெள்ளம் அதிகரித்துக் கொண்டிருக்கிறதே..."

"ஆமாம். அங்கு கல் போட்டு கம்பு நட்டு வைத்திருக்கிறார்கள். கல் மீது ஏறி வண்டி புரண்டு விட்டது. ஏழு பெண்கள். ஏழு பெண்களையும் அக்ரஹாரத்துக்கு அழைத்துப் போய் விட்டார்கள். வண்டியை எப்படியாவது மீட்டாக வேண்டும். இல்லையெனில் பெட்டி பிளந்து, வரைபடங்கள் மூலைக்கொன்றாய் பறந்துவிடும்..."

"கயிறு போட்டு வண்டியை இழுக்க முடியாதா..."

"இழுத்தால் வண்டி உடைந்து விடலாம். தூக்கிக் கொண்டு வர வேண்டும். தலைக்கு மேல் வெள்ளம் போய்க் கொண்டிருக்கிறபோது, வண்டியை எப்படித் தூக்கிக் கொண்டு வருவது என்று புரியவில்லை..."

மன்னர் சரசரவென்று ஆற்றில் இறங்கினார். முழங்கால் நீரில் நின்று, தீப்பந்தத்தை வாங்கி, இடதும் வலதும் அசைத்துப் பார்த்தார். வண்டி எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பதைத் துல்லியமாகப் புரிந்து கொண்டார்.

"பிரம்மராயரே... ஏற்றம் கட்டுங்கள்..." என்று உத்தர விட்டார்.

"மன்னரே..." என்று பிரம்மராயர் கைகூப்பினார்.

"இங்கிருந்து பத்தடி தொலைவில் பனந்துண்டம் நட்டு, அதன் மீது ஏற்றத்தைக் கட்டி, அந்த ஏற்றத்தின் நுனியில் கயிறு கட்டி, வண்டியோடு பிணைத்து, இந்தப் பக்கம் அழுத்தி, வண்டியைத் தண்ணீரிலிருந்து மேலே தூக்கி, அப்படியே திருப்பி கரையில் ஏற்றி விடலாம். ஏற்றம் கட்டினால் தான் முடியும்..." மன்னர் வேகமாகவும் உறுதியாகவும் சொன்னார்.

"பனந்துண்டங்களுக்கு ஆள் போயிருக்கிறது. பனந்துண்டங் களைத் தடுப்பாகப் போடலாம் என்று திட்டமிட்டோம்..."

"இல்லை. தடுப்பெல்லாம் தாங்காது. வெள்ளம் வருகின்ற வேகத்தில் தடுப்பு எப்படிப் போடுவது? இப்போது ஆற்றில் பனந்துண்டங்களை இறக்க முடியாது. இந்த இடத்தில் எப்பாடுபட்டேனும் மூன்று, நான்கு துண்டுகளை இறக்கி, அதற்கு மேல் ஏற்றம் கட்ட வேண்டும். இரண்டு ஆள் உயர பனந்துண்டங்களை உடனே கொண்டு வரச் சொல்லுங்கள்..."

கிராம மக்கள் நாலாபுறமும் ஓடினார்கள். 'இங்கு இருக்கிறது, அங்கே இருக்கிறது, அவரிடம் இருக்கிறது, இவரிடம் இருக்கிறது' என்று கத்தினார்கள்.

'எவர் வீட்டிலிருந்தும் பனந்துண்டங்கள் எடுத்து வரவேண்டாம். கரையோரம் பனைமரம் இருந்தால் உடனே வெட்டி வீழ்த்துங்கள். நுனியைச் சீவுங்கள். புரட்டி பூமியில் நடுங்கள்..." என்று உரக்கக் கட்டளையிடுவதுபோல மன்னர் பேசினார்.

ஆட்கள் பிசாசாய்ப் பறந்தார்கள். கோடாலிக்கும், அரிவாளுக்கும் ஓடினார்கள். சில நொடிகளில், பனை மரத்தை பட்பட்டென்று அரிவாளால், கோடாலியால் வெட்டும் சத்தம் அந்தப் பிரதேசம் முழுவதும் கேட்டது. ஒரே நேரத்தில் நாலைந்து பேர்கள் சுற்றி நின்று வெட்டுகிறார்கள் என்று தெரிந்தது. பனைமரம் படபடவென்று சாய்ந்தது. தொடர்ந்து இலைகள் கழிப்பதை உணர முடிந்தது.

"வண்டியில் வந்தவர்கள் எங்கிருக்கிறார்கள்?" மன்னர் மீண்டும் வினவினார்.

"ஏழு பெண்கள், ஏழு பேரும் தேவரடியார்கள். ஒரு பெண் மிகவும் சிறியவள். மயங்கி விழுந்து விட்டாள். அக்ரஹாரத்து அந்தணப் பெண்மணிகள் அவர்களை அழைத்துப் போயிருக் கிறார்கள். ஒரு பெண் இங்கே இருக்கிறாள். பெயர் இராஜராஜீ..."

மன்னர் தீப்பந்தத்துக்குச் சைகை செய்தார். தீப்பந்தம் அருகே வந்தது. எங்கே என்று அந்தப் பெண்ணைத் தேடினார். மரத்தின் பின்னிலிருந்து அந்தப் பெண் தன்னை முற்றிலும் வேட்டியால் போர்த்தியபடி வெளிவந்து, மன்னரை நிலம்பட வணங்கினாள். எழுந்து நின்றாள்.

“அட, இராஜராஜீ...” என்று மன்னர் வியப்போடு குரல் கொடுக்க, அவள் ஆமென்று தலையசைத்தாள்.

“மாமன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் வாழ்க..., வாழ்க. சோழதேசம் வாழ்க வாழ்க...” என்று உரக்கச் சொல்லி மறுபடியும் முதுகுவளைத்து குனிந்து வணங்கினாள்.

“ஏதேனும் முக்கியச் செய்தி உண்டா இராஜராஜீ...”

“ஆமாம் மன்னா... வண்டிக்குள் மூன்று ஓலைக்குழல்கள் இருக்கின்றன. ஒன்று பிரம்மராயருக்கு... ஒன்று உங்களுக்கு... ஒன்று எங்கள் அறிமுகக் கடிதம்...”

“இதைத் தவிரவும் வேறு ஏதேனும் செய்தி உண்டா இராஜராஜீ...” மன்னர் பிரியமாகக் கேட்டார்.

“இல்லை மன்னா... நாங்கள் அனைவரும் தஞ்சைக்குக் குடிபெயர்ந்திருக்கிறோம். எங்களுக்கு ஓலை வந்ததுபோல இன்னும் பல பேருக்கு ஓலை வந்திருக்கிறது. அவர்களும் பயணத்துக்குச் சித்தமாக இருக்கிறார்கள்...”

“நல்லது... அதிகம் காயம்பட்டு விட்டாயா... பயந்து விட்டாயா?” -மன்னர் ஆறுதலாக அவளுக்கு அருகே போய் பார்த்தார். அவள் முகத்தை உற்று கவனித்தார்.

தன் மேல் வேட்டியை மெல்ல விலக்கி, தோளில் பட்டிருந்த முள் காயங்களை இராஜராஜீ காட்டினாள்.

“ஏன் இன்னும் வைத்தியர் வரவில்லை...”

“சொல்லி அனுப்பியாயிற்று மன்னா...” – என்று மன்னரின் கேள்விக்குப் பிரம்மராயர் பதில் சொன்னார்.

“மன்னிக்க வேண்டும் இராஜராஜீ. உங்களையெல்லாம் நான் சரியானபடி வரவேற்கவே இல்லை. இப்படி வெள்ளம் வருமென்பது எனக்குத் தெரியவில்லை. நீங்கள் பழமர்நேரி பக்கம் எதற்காக வந்தீர்கள்...”

“திசை தப்பிவிட்டோம். திருவையாறு அருகே ஆறு தாண்ட வேண்டியவர்கள், இங்கு தாண்டிக் கொள்ளலாம்... அங்கு தாண்டிக் கொள்ளலாம் என்று இருட்டில் திசை மாறிப் போய் விட்டோம்...”

“அப்படியா... பகலில் பயணம் செய்திருக்கலாமே...” என்று மன்னர் சொல்லிவிட்டு, மீண்டும் காவிரி ஆற்றைப் பார்த்தார்.

பெரிய பனை மரம் ஒன்று, இருபது பேர் தோளில் சவாரி செய்தபடி மன்னரை நோக்கி வந்து கொண்டிருந்தது. மன்னர் விலகி வழி விட்டார். தீப்பந்தத்தை கரை மீது காட்டச் சொன்னார்.

வந்தவர்கள் களிமண் கரையில் இறங்கினார்கள். ஆற்றுக்கு நகர்ந்தார்கள்... மார்பளவு ஆழத்துக்குப் போய், கூரான முனையை தரையில் நட்டு, கயிறுபோட்டு அழுத்தினார்கள். வேறு சில மரங்களை அண்டக்கொடுத்தார்கள். உறுதியாய் நிற்க வைத்தார்கள். நீண்ட மூங்கிலை மேலே வைத்தார்கள். வளைய மடித்துப் பிணைத்தார்கள். இரண்டு பக்கமும் கயிறு கட்டி கயிற்றின் நுனியில் கொக்கி கட்டி, இரண்டு கயிறுகளையும் மாட்டு வண்டியோடு பிணைத்தார்கள். மூங்கில் நுனியில் தொங்கும் கயிறும் மாட்டு வண்டியோடு பிணைக்கப்பட்டது.

மூங்கிலின் அடிப்பாகத்தை அழுத்த, கயிறு விறைப் பாகியது. இன்னும் அழுத்த, மாட்டு வண்டி மெல்ல நீர் விட்டு மேலெழும்பியது. வண்டி நீர் விட்டு மேலெழும்பியதும், நடு ஆற்றில் நின்ற வேளாளர்கள், மாட்டு வண்டியின் கீழே அவசர அவசரமாக மூங்கில் கொடுத்துத் தூக்கினார்கள்.

ஏற்றத்தை மேலே இழுப்பதற்கு வாட்டமாய், மாட்டு வண்டியை இன்னும் அசைத்து மேலேற்றினார்கள். மீண்டும் மூங்கிலின் அடிப்பாகம் அழுத்தப்பட, மாட்டு வண்டி நீரை விட்டு வெளியே வந்தது. மேலே வந்து மெல்ல ஊசலாடியது.

ஊசலாடிய மாட்டு வண்டியைக் கை கொடுத்து தூக்கினார்கள். வளையத்தில் மாட்டப்பட்ட மூங்கில் மெல்ல திரும்பி கரை நோக்கி வர, ஆட்கள் இடப்பக்கம் நகர, மூங்கில் நுனி வலப்பக்கம் நகர்ந்து மாட்டு வண்டியை முழங்கால் ஆழ நீரருகே இறங்கியது.

இறக்கப்பட்ட மாட்டு வண்டியை நாற்பது ஐம்பது பேராய் அப்படியே வாங்கிக் கொண்டார்கள். தலைக்கு மேல் தூக்கினார்கள். அழுத்தி மெல்ல நகர்ந்து, கரையின் மீது கொண்டு போய் மாட்டு வண்டியை இறக்கினார்கள். மாட்டு வண்டியின் மேல் பகுதி நசுங்கியிருந்தது. சக்கரம் பழுதடைந் திருந்தது, ஏர்க்கால் திரும்பியிருந்தது. அடிப்பக்கப் பெட்டி மட்டும் அப்படியே அசையாமல் இருந்தது.

மன்னர் மாட்டு வண்டியின் அருகே போய்ப் பார்க்க, மற்றவர்கள் விலகிக் கொண்டார்கள். பெட்டியை மன்னர்

விடுவிக்கச் சொல்ல, இரண்டு பேர் உள்ளே போய் கயிற்றை அறுத்து, பெட்டியை வெளியில் கொண்டு வந்தார்கள். பெட்டியை நெட்டுக்குத்தலாய் நிற்க வைக்க, உள்ளிருந்து நீர் பொங்கி வந்து தரையை நனைத்தது.

"இராஜராஜீ, குழல்கள் எங்கே?" என்று மன்னர் கேட்க, இராஜராஜீ மாட்டு வண்டியின் அருகில் தீப்பந்தத்தை வைத்துப் பார்த்தாள்.

துணியால் மூடப்பட்டிருந்த மேற்கூரைக்குள் கைவிட்டு மூன்று ஓலைக் குழல்களை 'வெளியே' இழுத்தாள். தீப்பந்த வெளிச்சத்தில் அடையாளம் பார்த்து, 'இது அறிமுகக்கடிதம்; 'இது உங்களுக்கு'; 'இது பிரம்மராயருக்கு' என்றும் பிரித்துக் காட்டினாள்.

"பிரம்மராயருக்கான ஓலையை அவரிடமே கொடுத்து விடு..." என்று மன்னர் அதைத் தொடக்கூட செய்யாமல், மற்ற இரண்டு ஓலைகளை மட்டும் வாங்கிக் கொண்டு, தனியே நடந்து போனார்.

## 5

இராஜராஜீயின் கையிலிருந்த ஓலைக்குழலை, கமலக்கண்ணன் வாங்கி பிரம்மராயரிடம் கொடுத்தான். பிரம்மராயர் அதை இடுப்பில் சொருகிக் கொண்டார்.

மன்னர் தனியே போய் ஓலை படித்தது அவருக்குக் கவலையாக இருந்தது. தன்னை மீறி, தன்னுடைய பார்வைக்கு வராமல் இந்தச் சோழ தேசத்தில் என்னமோ நடக்கிறது என்பது பிரம்மராயருக்கு வருத்தத்தைத் தரும் விஷயமாக இருந்தது.

மன்னர் சட்டென்று திரும்பினார். பிரம்மராயரைப் பார்த்தார். 'இங்கு வாருங்கள்' என்று குரல் கொடுத்தார். பிரம்மராயர் அருகே வர, அந்த இரண்டு ஓலைகளையும் பிரம்மராயரிடம் நீட்டினார்.

"என் மகன், இளவரசன் இராஜேந்திரன் ஓலை அனுப்பி யிருக்கிறான். திருவொற்றியூர் எல்லையில் ஆறாயிரம் ஆட்களை வளைத்து வைத்திருக்கிறான். அவர்கள் அனைவரும் கங்கபாடி நாட்டைச் சேர்ந்தவர்களாம். வலுவான வீரர்களாம்.

இன்னும் இரண்டு தினங்களில் அவர்கள் அத்தனை பேரும் தஞ்சையை நோக்கி நடக்கத் துவங்கி விடுவார்கள். ஆனால் ஆறாயிரம் பேரும் மிகவும் முரட்டுத்தனமாக இருப்பதாகவும், அவர்களைத் தஞ்சை வரை கொண்டு வந்து சேர்ப்பது மிகக் கடினம் என்றும், அதற்குப் பிறகு தஞ்சையின் நிலைமை என்ன... எப்படி இருக்கும் என்று சொல்ல முடியாது என்றும் எழுதியிருக்கிறான்.

கடிதத்தை முடிக்கும் முன் கடைசியில் ஒரு கேள்வி கேட்டிருக்கிறான். 'இது அவசியமா' என்று வினவியிருக்கிறான். அவன் கேள்வி எனக்குக் கவலையைக் கொடுக்கிறது..." மன்னர் கவலையானார்.

கிட்டத்தட்ட நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு விஜயாலய சோழனால் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்தப் புதிய சோழ பரம்பரையின் உன்னதமான காலம் மன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் காலம்தான்.

சோழ தேசத்தை வலுவானதாகவும், பெருமை மிக்கதாகவும் அவர் மாற்றிக்காட்டி, அந்தத் திறமையைப் போர்களில் திருப்பி, எல்லைகளைப் பலப்படுத்தி, விஸ்தீரப் படுத்தி 'இது தான் சோழ தேசம்' என்று தெளிவாக வரையறுத்து, மற்ற தேசங்களுக்குச் சுய உரிமை கொடுத்து, சோழ தேசத்தின் கட்டிப்பாட்டில் வைத்திருக்கிறார்.

தெற்கே ஈழமும், மேற்கே சேர தேசமும், வடக்கே கங்கபாடியும், நுளம்பபாடியும் கைப்பற்றப்பட்டுவிட்டது. கிழக்குப் பக்கம் உள்ள கடல் பகுதியில் கடற்கொள்ளையர்கள் அடக்கப் பட்டு, வணிகர்களுக்குப் பாதுகாப்பும் நல்ல வசதிகளும் செய்து தரப்பட்டு விட்டன.

சோழ தேசத்தில் மழை தவறாது பெய்து நல்ல விளைச்சல் பெருகிக்கொண்டிருக்க, வரி வசூலிப்பதில் தெளிவிருக்க வேண்டும் என்பதற்காக நிலம் மொத்தமும் அளக்கப்பட்டு, இவை விளைநிலங்கள்; இவை வெறும் நிலங்கள் என்று பிரிக்கப் பட்டு, விளைநிலங்களுக்கு மட்டுமே வரி வசூல் செய்யப்பட்டு வருகிறது.

அங்கங்கே கிராம சபைகளை நிறுவி, சட்டதிட்டங்களை அவர்களுக்குத் தெளிவாகச் சொல்லி, மக்கள் நலமாக வாழ பல ஏற்பாடுகளை மன்னர் செய்திருக்கிறார்.

கிராம சபையாரின் தீர்ப்பு சரியில்லை என்று சொன்னால், கிராம மக்கள் மேல் முறையீடு செய்யவும் முடியுமென்று வசதிகள் செய்திருக்கிறார்.

எவர் மனமும் தன்னால் நோகக்கூடாது என்று சிந்தித்துச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். மக்கள் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக மட்டுமல்லாமல், சோழ தேசத்தின் பெருமை காலகாலமாக நின்று நிலைத்திருக்க வேண்டுமென்று தீர்மானித்து, இதுவரை எவருமே செய்திராத ஒரு சாதனையைத் தான் செய்ய வேண்டுமென்று ஆசைப்பட்டிருக்கிறார்.

நான்கு பனை உயரமுள்ள ஒரு கற்றளியை, பாறைக் கற்களினால் ஆன கோவிலை நிறுவ வேண்டும் என்று ஆசையாக இருக்கிறார். எந்தச் சிற்பியைப் பார்த்தாலும் அதைப் பற்றித்தான் பேசுகிறார். எந்த வணிகரைப் பார்த்தாலும் இதைப்பற்றித் தான் கேள்வி கேட்கிறார்.

'இப்படி ஒரு கோவில் எழுப்பினால் அதில் உம்முடைய பங்கு என்ன' என்று மன்னர் வணிகரைப் பார்த்துக் கேட்க, 'எது வேண்டுமானாலும் தருகிறேன்' என்று வணிகர்கள் மன்னரிடம் சொன்னார்கள். மன்னர் அவர்கள் கைகளைக் கோர்த்துக் கொள்வார். சிற்பிகளை முதுகில் தட்டிப் பாராட்டுவார்.

பாணர்களையும், படகோட்டிகளையும், போர்க் கருவிகள் செய்யும் கம்மாளர்களையும் சுற்றி உட்கார வைத்து, தானும் உட்கார்ந்து கொண்டு, தன்னுடைய கனவு என்ன என்பதை விவரிப்பார்.

அவர்கள் முரட்டுக் கூச்சலோடு மன்னரை வாழ்த்து வார்கள். 'என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்' என்று குரல் கொடுப்பார்கள். 'உங்களின் வலுவான தோள்கள் வேண்டும்' என்று மன்னர் பதில் சொல்வார். 'புரியவில்லையே' என்று அவர்கள் சொல்ல, 'பெருங்கற்களை நீங்கள் தூக்கி வர வேண்டியிருக்கும். எனக்காக அல்ல. தென்னாடுடைய சிவனுக்காக' என்று சொல்வார். ஜனங்கள் மகிழ்ச்சியில் மறுபடியும் ஆரவாரிப்பார்கள்.

"ஆனால் மன்னரே, நான்கு பனை உயரமுள்ள கோவிலை மனிதர்களால் கட்ட முடியுமா...? அதுவும் கற்கோவில் என்று சொல்கிறீர்களே... செங்கல் மீது செங்கல் வைத்து அடுக்குவ

தென்றால் செய்து விடலாம். கருங்கல்லை நான்கு பனை உயரம் எப்படித் தூக்கிப் போவது..."

"நீங்கள்தான் யோசனை சொல்ல வேண்டும். என்ன செய்தால் நான்கு பனை உயரத்துக்கு ஒரு கோல் உயரமும், ஒரு கோல் அகலமும், ஒரு கோல் கனமும் உள்ள கல் மேலேறும்?" கேள்வி கேட்பார்.

"ஒரு கோல் கனமுள்ள கல்லா... மக்கள் வியப்பார்கள். சிலர் கை விரித்து மனசுக்குள் அளப்பார்கள்.

சிலர் பதினாறு தப்படிகள் நடந்து மண்ணில் கோடு போடுவார்கள். பதினாறு காலடிகள் கொண்டது ஒரு கோல். மண்ணில் வரைந்ததை நீள, அகலம் கணக்கிட்டு, இத்தனை கனத்தை எப்படித் தூக்குவது என்று பிரமித்துப் போய் நிற்பார்கள்.

"தூக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட ஒரு கோவில் கட்டத்தான் வேண்டும்..." என்று மன்னர் உரக்கச் சொல்வார். 'சரி' என்று மக்கள் தலையாட்டுவார்கள். எப்படி முடியும் என்று புரியாமல் விழிப்பார்கள்.

இப்படி ஒரு கோவில் கட்ட முடியுமா என்ற கேள்வி எல்லார் மனதிலும் இருந்தது. ஆனால் இளவரசர் இராஜேந்திரன் மட்டும் இந்தக் கேள்வியை வேறுவிதமாகக் கேட்கிறார்.

இது அவசியம்தானா?

இது மிகப்பெரிய கேள்வி. மன்னர் மட்டும்தான் இதற்குப் பதில் சொல்ல வேண்டும். ஆனால், தகப்பன் இந்தக் கோவில் கட்ட வேண்டும் என்று பிடிவாதமாக இருக்க, மகன் இது அவசியம்தானா என்று கேட்பது அரசியல் வட்டாரத்தில் நல்ல விஷயமில்லை.

"பிரம்மராயரே..." என்று மன்னர் அடிக்குரலில் அழைத்தார். பிரம்மராயர், "மன்னா..." என்று அவரை நோக்கிக் குனிந்தார்.

"உங்களுக்கு என்ன ஓலை வந்தது என்று நீங்கள் பார்க்கவே இல்லையா?" மன்னரின் கேள்வியில் லேசாய் ஒரு கேலி இருந்தது.

'எனக்கு வந்த ஓலையை நான் உங்களுக்குப் படிக்கக் கொடுத்துவிட்டேன். உங்களுக்கு வந்த ஓலை என்ன என்று

எனக்குச் சொல்லவில்லையே' என்பதுபோல் அந்தப் பேச்சு இருந்தது.

தன்னுடைய ஓலையை பிரம்மராயர் இப்போது மன்னருக்குக் காட்டியே ஆக வேண்டும். அதைவிட முக்கியம், யாருக்கும் தெரியாமல் இராஜராஜீ இடுப்பில் மறைத்து வைத்திருக்கிற இன்னொரு ஓலையின் விஷயம் என்னவென்று மன்னர் போவதற்குள் படித்துவிட வேண்டும்.

"நீங்களே படியுங்கள் மன்னா..." பிரம்மராயர் ஓலையை மன்னரிடம் நீட்டினார்.

"இல்லை. உங்களுக்கு வந்த ஓலையை நான் படிப்பது நாகரீகமல்ல. மன்னனாக இருந்தாலும் அதை நான் செய்தல் கூடாது. என்னவென்று நீங்கள் படித்துவிட்டு எனக்குச் சொல்லுங்கள்..." மன்னர் சொல்ல, பிரம்மராயர் ஓலையை விரித்துப் படித்தார்.

ஓரே ஒரு வரி அந்த ஓலையில் எழுதப்பட்டிருந்தது. எழுத்துக்கள் மங்கலாகத் தெரிந்தன. தீப்பந்தத்திற்கு அடியே இருக்கும் கறுப்பு எண்ணெயை விரலால் தொட்டு, சரக்கென்று ஓலை மீது தடவிய போது எழுத்துக்கள் பளிச்சென்று தெரிந்தன.

'எனக்கு இதில் விருப்பமில்லை இராஜேந்திரன்' என்று கையெழுதிடப்பட்டிருந்தது. படித்துவிட்டு பிரம்மராயர் ஓலையை மன்னரிடம் கொடுத்தார். மன்னர் வாங்கி வெளிச்சத்தில் அதைப் பார்த்தார்.

மக்கள் மாட்டு வண்டியைச் செப்பனிடுவதில் மும்முர மாக இருந்தார்கள்.

மன்னர் முகம் மாறிப் போயிற்று. படித்த ஓலையை பிரம்மராயரிடம் நீட்டினார். அமைதியாகத் தரை பார்த்துக் கொண்டிருந்தார்.

சட்டென்று தலையை உதறி, "என்ன... மாட்டு வண்டியைச் சரி பண்ண முடியுமா, முடியாதா..." என்று உரக்கக் கேட்டார். மக்களை நோக்கி நடந்தார்.

'மன்னரின் கவலை இப்போது மனதுக்குள் போய்விட்டது. முகம் கவலையை மறைத்துக்கொண்டு மக்களோடு சகஜமாகப் பேசத் துவங்கிவிட்டது' என்பதை பிரம்மராயர் புரிந்து கொண்டார்.

எதற்காக இளவரசர் இராஜேந்திரர், கோவில் கட்டுவதைப் பற்றி இத்தனை எதிர்ப்பு காட்ட வேண்டும் என்று மருகினார்.

மெல்ல மரத்தடிக்குப் போய் இராஜராஜீ எங்கே என்று தேடினார். இராஜராஜீ அவர் வருவதைப் பார்த்து அருகே வந்தாள். இடுப்பிலிருந்து மிகச் சிறிய குழலை எடுத்து அவரிடம் நீட்டினாள். அவர் அதை வாங்கிக் கொண்டார்.

மயிலை திருவல்லிக்கேணி வணிகர் எழுதியிருந்த ஓலை அது.

“திருவொற்றியூரில் ஆறாயிரம் கங்க வீரர்களைச் சவுக்கு நுனியில் இளவரசர் இராஜேந்திரர் வைத்திருக்கிறார். அவர்களைப் பாதி உணவு கொடுத்து அடித்து மிரட்டி ஒரு கட்டில் வைத்திருக்கிறார். அவர்களைத் தஞ்சைக்குக் கொண்டு போக எண்ணம் கொண்டிருக்கிறார். அவர்கள் தஞ்சைக்கு வந்தால் வெகு நிச்சயமாய் கலவரம் வரும். தஞ்சையில் கலவரம் செய்ய வேண்டுமென்று அவர்களில் பலர் திட்டமிட்டு இருக்கிறார்கள். ‘எப்பொழுது தஞ்சைக்குப் போகலாம்’ என்று கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆறாயிரம் வீரர்கள் தஞ்சைக்குள் நுழைந்தால் என்ன ஆகும் என்று சிந்திக்க வேண்டும்...” என்று அவர் எழுதியிருந்தார்.

பிரம்மராயர் கவலையானார். ஓலையை வேட்டி மடிப்பில் சொருகிக் கொண்டார். குழலை ஆற்றில் வீசினார்.

“இராஜராஜீ... இந்த ஓலை கொடுத்ததை எவருக்கும் சொல்லாதே... மறந்துவிடு...” என்று அவளுக்குக் கட்டளை யிட்டார்.

இவை அனைத்தையும் தொலைவிலிருந்து கவசப்படை வீரன் ஒருவன் இருட்டில் நின்றபடி பார்த்துக் கொண் டிருந்தான்.

அவன் பெயர் கடுவன்காரி. சோழ இளவரசர் இராஜேந்திரரின் ஒற்றர் படையில் முக்கியமான ஆள்.

உடையார் ஸ்ரீ இராஜ ராஜத்தேவரின் ஒரே மகனான இராஜேந்திரர் சோழ எல்லைகளைப் பலப்படுத்தும் எண்ணத்தோடு காஞ்சியில் குடியிருந்தார்.

திருவெவ்வளூருக்கு அருகே உள்ள திருவாலங்காடு அவருக்குப் பிடித்த இடமாக இருந்தது. சுந்தரர் சிறிது காலம்

வசித்து வந்த திருவொற்றியூர் அவருக்கு மயக்கமான இடமாக இருந்தது.

ஆலால சுந்தரர் எங்கே நின்றிருப்பார்? எங்கே நின்று பறவையாரைப் பார்த்திருப்பார்? இறைவன் இருப்பதாகச் சொன்ன மகிழ மரம் எங்கே என்று அவர் அங்கே தேடுவார்.

ஆலால சுந்தரரைப் பற்றி புலவர்களோடும், சிவனருட் செல்வர்களோடும் விவாதத்தில் இறங்குவார். படைத் தலைவர்களும் அதில் கலந்து கொள்வார்கள்.

"திருமணம் செய்து கொள்ளாதே" என்று இறைவன் தடுத்து இழுத்தான். திருமணக் கோலத்தில் இருந்தவரை அழைத்து வந்திருக்கிறான். ஆனால் பறவையார் என்கிற தேவரடியாரையும், சங்கிலியார் என்கிற வணிகப் பெண்ணை யும் இறைவன் முன்வந்து சேர்த்து வைத்திருக்கிறான். இதற்கு என்ன பொருள்?

சங்கிலியார் என்கிற பெண் வேண்டுமென்று சுந்தரர் இறைவனைக் கேட்க, இறைவன் மானுட உருவெடுத்துத் தூது போயிருக்கிறான். அப்படி என்ன சுந்தரர் உயர்வு? இறைவன் கொஞ்சிக் கொஞ்சிக் கொண்டாடும் அளவுக்கு சுந்தரரின் உயர்வென்ன?

தயவுசெய்து சபை சிந்திக்க வேண்டும். எனக்கு மிகச் சரியான பதிலை அடுத்தமுறை கூறும்போது சொல்ல வேண்டும்."

இளவரசர் இராஜேந்திரருடைய அந்தக் கூட்டத்தில் படைத்தளபதிகள் இருப்பார்கள். ஆனால் இலக்கிய சபையில் படைத் தளபதிகள் வாய் திறந்து பேசமாட்டார்கள்.

ஈட்டியை அல்லது உடைவாளை நெஞ்சில் போட்டு கைகட்டிய வண்ணம் சபையின் பேச்சுக்களை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருப்பார்கள்.

இலக்கிய சபை கலைந்ததும், புலவர்களும் சிவனருட் செல்வர்சளும் வெகுதூரம் போனதும், இளவரசர் இராம்ஜேந்திர ரோடு படைவீரர்கள் விவாதம் ஆரம்பிப்பார்கள்.

இளவரசர் இராஜேந்திரருக்கு நெருக்கமாய் உடம் பெல்லாம் நரைத்த எழுபது வயது கிழ தளபதியும், இருபது வயது மெய்க்காப்பாளனும் இருப்பார்கள்.

அவரோடு ஒரே பந்தியில் உட்கார்ந்து உண்பார்கள். காட்டு வழிகளில் அவரை நடுவே படுக்க வைத்து, இவர்கள் சுற்றிப் படுத்து உறங்குவார்கள். அவர் குளிக்கும் போது குளித்து, அவர் கோவிலுக்குப் போகும்போது கோவிலுக்குப் போய், அவர் ஆடும்போது ஆடி மிக நெருக்கமாய் இருந்தார்கள்.

இளைய மெய்க்காப்பாளன் தொடையில், தலைவைத்து இராஜேந்திரர் இளைப்பாற, எழுபது வயது கிழத் தளபதி கால் பிடித்து விடுவார். குளிக்கும்போது முப்பது வயது வாலிபர் முதுகு தேய்த்து விடுவார். ஐம்பது வயது குண்டோதரன் ஒருவன் உணவைப் பக்குவம் செய்து கொடுப்பான்.

இளவரசர் இராஜேந்திரரால் ஓய்வாய் இருக்க முடியாது. காஞ்சிபுரத்திலிருந்து திருவாலங்காடு. திருவாலங்காட்டிலிருந்து திருமழிசை, பிறகு திருநின்றவூர், பிறகு திருமுல்லைவாயில், பிறகு திருவலிதாயம், பிறகு திருவொற்றியூர், அதற்குப் பிறகு திரும்யிலை, திருவல்லிக்கேணி, பின்பு கடற்கரை ஓரமாய் பயணப்பட்டு திருவிடந்தை, திருஇடைச்சுரம், திருக்கடல் மல்லை, பிறகு மீண்டும் காஞ்சி மாநகரம் என்று பயணப்பட்டுக் கொண்டிருப்பார்.

அலுக்காது பயணப்படுபவர்களால் மட்டுமே இராஜேந்திரருடன் இருக்க முடியும், மனைவி, குடும்பம், குழந்தை, வீடு, வயல் எல்லாம் மறந்துவிட்டு எந்நேரமும் போர் நினைப்பாக இருக்கிற மறவர்களால்தான் இளவரசர் இராஜேந்திரரோடு தாக்குப்பிடிக்க முடியும்.

எப்பொழுதும் கேள்விகளோடே சுற்றும் அந்த இளைஞர், தகப்பனை விட்டு விலகியிருக்கவே விரும்பினார். அந்த இளைஞர் தன் படை வீரர்களை மகிழ்விப்பதைப் பெரிதும் விரும்பினார்.

"என் படை வெறும் குடிகாரக் கும்பல் அல்ல... கொள்ளைக்கூட்டமல்ல... அவர்கள் சிவனருட்செல்வர்கள். வாழ்வின் அனைத்தையும் புரிந்து திருநீறு பூசுபவர்கள். அதே சமயம் வாழ்வை அனுபவிப்பதில் எந்தக் குறையும் வைக்காத வர்கள்..." என்பார்.

சோழ தேசத்தில் படைகள் நடந்துதான் போகும். இராஜேந்திர சோழரின் படைகள் மட்டும் எப்போதும் ஓடிக் கொண்டிருப்பவை. நிற்காமல் மூன்று காதம், நான்கு காதம் 'ஓம்,

ஓம்' என்று மூச்சிரைத்துக் கொண்டே அவர்களால் ஓடமுடியும். கால் நாழிகை வேல் கம்பு ஊன்றி நின்றால் போதும். களைப்பு பறந்துவிடும்.

களைப்பு, மனம் சம்பந்தப்பட்ட விஷயம். தலைவனாக இருப்பவன், தன் கீழே உள்ள படைவீரர்கள் ஒவ்வொருவரையும் கவனிக்க, களைப்பும், கவலையும் அந்தப் படையை அண்டுவதே இல்லை.

படைவீரர்கள் களைப்பைப் போக்கத்தான் இலக்கிய உபந்நியாசம், கோவில் வழிபாடு, ஹோமம், வேத கோஷம் – சில சமயம் மிதமிஞ்சிய மதுபானம் அருந்துதலும், பிசாசுக் கூத்தும் நடைபெறும்.

இராஜேந்திரர் தன் மடியில் தலை வைத்து உறங்க மாட்டாரா என்று படைவீரர்கள் ஏங்குவார்கள். தன் தோளில் கால் வைத்துக் குதிரையேற மாட்டாரா என்று அலைவார்கள். அவரோடு விவாதத்தில் இறங்க விரும்புவார்கள்.

அவரிடம் பல ஆயிரக்கணக்கான சோழ வீரர்கள் அடிமைப்பட்டுக் கிடக்கிறார்கள். கடுவன்காரி, இளவரசர் இராஜேந்திரரின் அன்படிமை.

'சோழதேசம் மகோன்னதமான இராஜராஜரை ஈன்றுவிட்டது. அந்த மகோன்னதமான அரசருக்கு, மிக மிக மகோன்னதமான ஒரு இளவரசர் பிறந்திருக்கிறார். பரத கண்டத்திலேயே இப்படி ஒரு அரசர் வாழ்ந்ததில்லை என்ற பெயரை இளவரசர் இராஜேந்திரர் தட்டி போகப் போகிறார் சரித்திரத்தில் அழியாப் புகழைப் பெறப் போகிறார்' என்று கடுவன்காரி திடமாய் நம்பினான்.

கடுவன்காரி திருவொற்றியூர்காரன். பரதவர் இனத்தைச் சேர்ந்தவன். 'தஞ்சையைத் தெரிந்து கொண்டுவா' என்று அனுப்பியிருக்கிறார். வெகு நைச்சியமாக சில அதிகாரிகளின் உதவியுடன் கடுவன்காரியை இராஜராஜசோழரின் கவசப் படையில் சேர்த்துவிட்டார்.

கடுவன்காரியின் முக்கிய வேலை மாமன்னர் இராஜராஜரை வேவு பார்ப்பது. அவரைச் சுற்றி நடப்பவை கஃப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை இராஜேந்திரருக்கு ஆட்கள் மூலம் தகவல் அனுப்புவது. எல்லையில் குடியிருந் தாலும் இராஜேந்திரரின் கண்கள் குடந்தையிலும் தஞ்சையிலும்

பதிந்திருந்தன. தஞ்சையில் இராஜேந்திரரின் கண்ணாய் கடுவன்காரி இருந்தான்.

'அவருக்கு ஏதும் செய்தி இருக்கிறதா இராஜராஜரிடம்' என்று தெரிந்துகொள்ள ஆசைப்பட்டான். இளவரசரிடமிருந்து வந்திருந்த பெண் என்பதால் அவளையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். அவளிடம் தனியே எப்படிப் பேசுவது என்று யோசித்தான்.

'நாம் இன்று பழமர்நேரில் தங்குகிறோம்' என்று மன்னர் முணுமுணுக்க, கவசப் படையினர் இதை உரக்க முழங்கினார்கள். மன்னர் பழமர்நேரி சிவன்கோயில் நோக்கி நடக்கத் துவங்கினார்.

கடுவன்காரி ஊர் எல்லையிலேயே நின்றுவிட, பழமர்நேரி படகோட்டி கடுவன்காரியை அணுகினான். "அடுத்த கரைக்குப் போகப் போகிறேன். வருகிறீரா..." கடுவன்காரியை அழைத்தான். அவர்கள் இருவரும் இருளில் நடந்தார்கள். படகில் ஏறினார்கள்.

"ஆறு வேறு, கடல் வேறு... எனவே கவனமாய் உட்கார்ந்துகொள்ளுங்கள்."

படகோட்டி எச்சரிக்க, கடுவன்காரி உறுதியாய் உட்கார்ந்து கொண்டான்.

அவர்கள் போகும் விஷயம் கமலக்கண்ணால் பிரம்மராயருக்குச் சொல்லப்பட்டது.

## 6

இராஜராஜீ நெஞ்சுப் பக்கத்துத் துணியை விலக்கி உட்கார்ந்திருக்க, பழமர்நேரி அக்ரஹாரத்து அந்தணப் பெண்மணி, அவள் உடம்பில் பட்ட முன் காயங்களுக்கு மருந்துக் களிம்பு தடவினாள். மெல்ல தோளை அசைத்துத் திரும்பச் சொன்னாள். 'முதுகுப் பக்கம் காயம் இருக்கிறதா' என்று தேடினாள். தோளிலும், விலாவிலும் இருந்த இரண்டு காயங்களைக் கவனித்துப் பார்த்து மருந்து அப்பினாள். 'வேறு எங்கேனும் இருக்கிறதா' என்று இடுப்புப் பக்கம் பார்த்தாள். 'இல்லை' என்று இராஜாராஜீ தலையசைத்தாள்.

"வெட்கப்படாமல் சொல். இங்கு ஆண்கள் யாரும் இல்லை. தேவையில்லாமல் வெட்கப்பட்டு மறைத்து வைக்கதே... சில கருவேலஞ்செடிகளின் முட்கள் விஷமானவை. உடனடியாக மருந்து போடுவது நல்லது..." என்று அந்தணப் பெண்மணி சொன்னாள்.

"இருந்தால் சொல்லமாட்டேனா... கிட்டத்தட்ட பாதி களிம்பு தீர்ந்துவிட்டது போலிருக்கிறதே..." இராஜராஜீ.

"நன்றாக இருக்கிறது கதை. காயத்திற்குக் களிம்புகூடத் தராமல் போய் விடுவோமா? தஞ்சாவூர் பற்றி நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். அரசர் சம்பந்தமான ஜனங்களுக்கும், அரசாங்க சம்பந்தமான விஷயங் களுக்கும் தஞ்சாவூர் மக்கள் உடனடியாக உதவி செய்வார்கள்.

அதுவும் நீங்களெல்லாம் சொந்த ஊர் விட்டு வெகுதூரம் பயணம் செய்து எங்கள் ஊருக்கு எங்களுக்காக வந்திருக் கிறீர்கள். இதை நாங்கள் மறப்போமா? உங்களைப் புறக்கணிப் போமா? சிறிது நேரம் படுத்துத் தூங்குங்கள். நான் விடிந்த பிறகு எழுப்புகிறேன். காலையில் எழுந்து வெந்நீரில் குளித்து, நாளை முழுவதும் ஓய்வெடுத்துக் கொண்டு, பிறகு பயணப் படலாம்."

அந்த அந்தணப் பெண்மணி சொல்லிவிட்டு எழுந்து நடந்தாள்.

அவள் வீட்டின் முற்றம் பெரிதாக இருந்தது. முற்றத்தைச் சுற்றி நான்கு பக்கமும் அகலமான நடைகள் இருந்தன. நடைகளின் இருபக்கமும் பெரிய அறைகள் இருந்தன. அறைகளில் கிழக்கு மேற்காக மேடை கட்டியிருந்தார்கள். கட்டிலுக்குப் பதிலாய் அந்த மேடைகளில் படுத்துத் தூங்கினார்கள்.

வீட்டினுடைய உத்திரங்களெல்லாம் பலமான தேக்கினால் கட்டப்பட்டிருந்தன. மேலே வளைவான ஓடுகளும் போடப்பட்டிருந்தன. இதனால் கடும் வெயில் காலத்திலும் உஷ்ணம் உள்ளுக்குள் வராமல் தடுக்கப்பட்டு விடும்.

வீட்டைச் சுற்றிலும் மரங்கள் இருப்பதால், உச்சி வெயில் நேரம் தவிர மற்ற நேரங்கள் நிச்சயம் குளுமையாக இருக்கும். செங்கல் சுவர்கள் மீது கெட்டியான காரை பூசப்பட்டு, காரை மீது சுண்ணம் அடிக்கப்பட்டிருந்தது. தரையில் அகலமான செங்கற்கள் பதிக்கப்பட்டிருந்தன.

பல பேர் நடந்து வாசற்படி மரம் வழவழப்பாக இருந்தது. இடுப்பு உயரத்திற்கு வெள்ளைச் சுவரில் நீலம், பச்சை, சிவப்பு வர்ணங்களில் வர்ணக் கோலங்கள் போடப்பட்டிருந்தன. படங்கள் வரையப்பட்டிருந்தன.

அந்த வீட்டில் யாரோ கைதேர்ந்த ஓவியர் இருந்திருக்க வேண்டும். கண்ணப்ப நாயனார் சரித்திரக் காட்சி ஒன்றும், சுந்தர மூர்த்தி நாயனார் சங்கிலியாரோடு மரத்தடியில் பேசுவது போன்ற ஓவியம் ஒன்றும், நாகத்தின் மீது கூத்தாடும் குழந்தை கிருஷ்ணனும், ராமர் பட்டாபிஷேகமும், காமதேனுவும் வரையப்பட்டிருந்தன.

பூஜையறை வாசலில் வாழை மரம்போல் ஓவியம் வரையப்பட்டிருந்தது. மேலே மாவிலைத் தோரணம் சித்திரமாக எழுதப்பட்டிருந்தது. கந்தர்வர்கள், பூதகணங்கள், தேவ மாதர்கள், எக்காளம் ஊதுபவர்கள் என்று பலரும் வீடு சுற்றிப் பறந்து கொண்டிருந்தார்கள்.

ஒரு பக்கத்தில் இந்திரனும் வாயுவும் இருக்க, மறுபக்கத்தில் அக்னியும், எமனும் வாசற்படியின் மேலே வரையப் பட்டிருந்தார்கள். வருணனும், ஈசான்யனும் நெருக்கமாய் நின்றிருந்தார்கள்.

அந்த வீட்டில் இதுபோன்று பல்வேறு விஷயங்கள் நுணுக்கமாக வைக்கப்பட்டிருந்தன. வீட்டின் எதிரெதிர் மூலைகளில் பெரிய குத்து விளக்குகள் வைக்கப்பட்டு இருந்தன. அவைகள் ஏற்றப்பட்டு இருந்தன. அதனால் வீடு முழுவதும் வெளிச்சம் பரவியிருந்தது.

தூண்களில் தலைக்கு மேலே அகல் விளக்குகள் வைக்கும் மாடம் இருந்தது. அங்கும் அகல் விளக்குகள் ஏற்றப் பட்டிருந்ததால், கூரைப்பக்கமும் வெளிச்சமாக இருந்தது. உள்பக்க ஓடுகளுக்கு சுண்ணம் அடித்திருந்ததால், அந்த வெண்மையில் வெளிச்சம் பட்டு, தரை முழுவதும் பரவியிருந்தது.

இருட்டிலிருந்து அந்த வீட்டுக்குள் நுழையும்போது வீடு ஜக ஜோதியாய் இருப்பது போல் தோற்றமளித்தது. வீட்டின் உத்திரக் கட்டைகளில் காய்ந்த நெற்கதிர்கள் கற்றையாய்த் தொங்கின.

நடுமுற்றத்தில் – வெயில்படும் இடத்தில், மார்புயர மாடம் அமைத்து, அதில் அடர்த்தியாய் துளசி வளர்த்திருந்தார்கள். அருகே விளக்கு வைத்திருந்தார்கள். அந்த மாடத்திலும் படங்கள் வளர்த்திருந்தார்கள். நீர் ஓடும் வருண மூலையில் முல்லைக்கொடி வளர்த்திருந்தார்கள்.

வெளியிலிருந்து உள்ளே நுழையும்போது, அந்த முற்றத்தில் பெரிய பித்தளைப் பாத்திரம் வைத்து சொம்பு வைத்திருந் தார்கள். வந்தவர்கள் முற்றத்தில் இறங்கி கால் கழுவிக் கொண்டு, அப்படியே நடந்து எதிர்ப்பக்கம் படியேறலாம்.

படியேறினால் அங்கு கயிற்றுக் கொடிகள் தொங்கின. அதில் துணிகள் உலர்த்தப்பட்டிருந்தன.

வீட்டில் எல்லா விஷயமும் உபயோகமாகவும், வசதி யோடும் நிறுவப்பட்டிருந்தன. தூண்களுக்கு மெருகேற்றி ஒரு பளபளப்பு கொடுக்கப்பட்டிருந்தது.

உள்ளே நுழைந்ததும் வலப்பக்க இடத்தில் மணை போட்டு, அந்த மணையின் மீது ஓலைச் சுவடிகள் வைக்கப்பட்டிருந்தன. பெரிதாய் சூரிய, சந்திரர் படம் எழுதி, அதற்கு மேல் 'ஓம்' என்ற சமஸ்கிருத எழுத்து எழுதப்பட்டிருந்தது. அநேகமாய் அது வகுப்பறையாக இருக்கும்.

இடது பக்க நடையில் பெண்கள் அமர்வதற்கான இடம் போல இருக்கிறது. அங்கே பாதித் தூரத்துக்குத் திரைச்சீலை இழுத்துப் போடும் வண்ணம் ஒரு அமைப்பு செய்திருந்தார்கள். வேண்டாதபோது திரைச்சீலையை நெருக்கி, தூணோடு கட்டி விட்டார்கள். தேவரடியார்கள் வந்து தங்கியிருப்பதால், இப்போது திரைச்சீலை போடப்பட்டிருக்கிறது. திரைச் சீலைக்குப் பின், தலைக்கு மணைப்பலகை வைத்து பெண்கள் தூக்கிக் கொண்டு இருந்தார்கள்.

அதற்கு நேரெதிர் மூலையில் மணல் போட்டு, உயரமான பானைகள் வைக்கப்பட்டு, அவைகள் மூடி வைக்கப் பட்டிருந்தன. நீண்ட கைப்பிடியுள்ள நீர் மொள்ளும் பாத்திரம் ஒன்றும் மேலேயே வைக்கப்பட்டிருந்தது.

நிறைய மந்தாரை இலைகளும், வாழையிலைச் சருகுகளும் அங்கு கட்டுக்கட்டாய் வைக்கப்பட்டிருந்தன.

இன்னொரு மூலையில் சிறிய விறகுச் சுள்ளிகளும், ஈரமில்லாத நன்கு உலர்ந்த வரட்டிகளும் கூடையிலிடப்பட்டு, மேலே மூங்கில் தட்டுகளால் மூடப்பட்டிருந்தன.

வாசற்படிக்கு நேரெதிரே இன்னொரு படி. அந்தப் படியின் வழியாக சமையலறைக்கும், சமையலறை வழியாக கொல்லைப் புறத்துக்கும் போய்விட முடியும். இங்கிருந்து பார்த்தாலே கொல்லைப்புறத்தின் விளக்கொளி தெரிகிறது. கொல்லைப் புறத்தில் வேட்டிகளும், புடவைகளும், மேல் துண்டுகளும் உலர்த்தப்பட்டிருந்ததையும் இங்கிருந்தே பார்க்க முடிந்தது.

வீட்டு வாசலுக்கு அகலமான மரக்கதவும் நிலைப்படியில் கஜலக்ஷ்மி உருவமும், இரண்டு பக்கமும் கந்தர்வர்கள், அன்னப்பட்சி, குத்து விளக்கு என்று மங்கலச் சின்னங்களும் செதுக்கப்பட்டிருந்தன.

கதவு குமிழ்களில் தந்த உருளைகள் பொருத்தப் பட்டிருந்தன. கதவுக்கப்பால் இரண்டு பக்கமும், மூன்று மூன்று தூண்களோடு கூடிய அகலமான திண்ணைகள். திண்ணைத் தூண்களின் மேல்பக்கம் பித்தளையால் பட்டை போடப் பட்டிருந்தது. திண்ணையில் வழிப்போக்கர்கள் சிலர் உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன... ஏதோ காணாததைக் காண்பதுபோல் எங்கள் வீட்டைச் சுற்றிச் சுற்றிப் பார்க்கிறாயே..." அந்தணப் பெண்மணி கேட்டாள்.

"இல்லை... காஞ்சி மாநகரும் ஒரு நாகரிகமான இடம்தான். ஆனால் இவ்வளவு நறுவிசாக வீடு வைத்துக் கொள்வதை நான் பார்த்ததேயில்லை. வீடு முழுவதும் வெள்ளையடித்து, இடுப்பு உயரத்துக்குப் படங்கள் எழுத வேண்டுமென்று எப்படித் தோன்றியது என்று வியந்து கொண்டிருக்கிறேன்.

தூண்களுக்குப் பித்தளைப் பட்டைகள் போடுவதை இப்போதுதான் பார்க்கிறேன். எங்கள் பக்கமும் குருவிகளுக்காக கதிர் கட்டுவது உண்டு. ஆனால் நீங்கள் நாலாபக்கமும் கதிர் கட்டியிருக்கிறீர்கள். நாலாபக்கமும் குருவிகள் வந்து கொத்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள் போல இருக்கிறது. இதுவும் அழகாகத்தான் இருக்கிறது.

முற்றத்தில் முல்லைக்கொடி, துளசிமாடம், பின்னால் கொல்லைப்புறம், மேலே வெள்ளை ஓடு எல்லாமும் அற்புதமாக இருக்கின்றன. தஞ்சாவூர், நாகரிகத்தின் உச்சாணி இடத்திலிருப்பது நன்கு தெரிகிறது." இராஜராஜீ குரலில், வியப்பு குறையாமல் பேசினாள்.

“இது சாதாரண வீடு. வருமானம் அதிகமில்லாத வீடு. என் புருஷனுக்குச் சம்பாதிப்பதில் விருப்பமில்லை. ஊர் ஊராகப் பயணப்படுவதிலும் ஆசையில்லை. கோவில் பூஜைகளிலும் கலந்து கொள்ளமாட்டார். வெறுமே திண்ணையில் உட்கார்ந்து, ஊர் மக்கள் நலனுக்காக நாள் தவறாது வேதம் சொல்வதும், ஜபம் செய்வதும்தான் அவரது வேலை. அதற்காகத்தான் எங்களுக்கு மான்யம் தரப்படுகிறது.

என் மாமனார் வேதம்கூட சொல்வதில்லை. இடைவிடாது காயத்ரி மந்திர ஜபம் மட்டும் செய்துகொண்டு இருக்கிறார். அதற்காக அரசாங்கத்திடமிருந்து மான்யம் வாங்குகிறார். எவரோடும், எதுவும் பேசமாட்டார். ‘உணவு போடு’ என்றுகூட சொல்லமாட்டார். நாமாகக் கவனித்துத்தான் போட வேண்டும்.

சாப்பிடுகிற, தூங்குகிற நேரம் தவிர, மற்ற நேரமெல்லாம் காயத்ரி மந்திரம் ஜெபித்துக் கொண்டு இருப்பார். ஊரில் யாருக்காவது உடம்பு சரியில்லை என்றாலோ, வேறு ஏதேனும் பிரச்சினை என்றாலோ – அந்த வீட்டு வாசலில் போய் அமர்ந்து சிறிது நேரம் ஜபம் செய்துவிட்டு வருவார். சில சமயம் பிரச்சினைகள் தீர்ந்து போகும்.

அதனால் என் மாமனாருக்கும், புருஷனுக்கும் இந்த ஊரில் மிக மரியாதை உண்டு. பெரிய வசதிகள் இல்லை யெனினும் சாப்பாட்டிற்குக் குன்றவே இல்லை.”

அந்த அந்தணப் பெண்மணி நிறைவோடு பேசினாள். “உன் பெயரென்ன?” இராஜராஜீயை நோக்கிக் கேட்டாள். இராஜராஜீ தன் பெயர் சொன்னாள்.

“என் பெயர் குமுதினி. நான் பிறந்த ஊர், காவிரிக் கரைக்கு எதிரே இருக்கிற மருவூர் இங்கிருந்து இரண்டு காத தூரம். பழமர்நேரியை விட மருவூர் இன்னும் செழிப்பான கிராமம்.

பழமர்நேரியைப்போல எங்கள் ஊரும் பிரம்மதேயம், அதாவது அந்தணர்களுக்காகத் தானமாகக் கொடுக்கப்பட்ட கிராமம். மக்கள் வரி அதிகம் செலுத்த வேண்டியதில்லை. அரசுக்குக் கொடுக்க வேண்டிய வரியைக் கோவிலுக்குச் செலுத்தி, கோயிலை நன்கு பராமரித்து வந்தால் போதும்.

எங்கள் மருவூரில் மிக அழகான மஹாமாயா கோயில் உண்டு. ஆமாம், காஞ்சியில் உன் வீடு பெரிய மாளிகையா?"

"ஒரு காலத்தில் மாளிகையாக இருந்தது. இப்போது அப்படி இல்லை. என் பாட்டியார் காலத்தில் சம்பாதித்த சொத்து அந்த மாளிகை. ஆனால் இப்போது, அதை நிர்வகிக்கக் கூட முடியவில்லை. அம்மா அதிகமாக நடனமாடுவது இல்லை. இளம் வயதிலேயே வணிகர் ஒருவரைத் திருமணம் செய்து கொண்டார். அப்பாவுக்கு, அம்மா நடனமாடுவதில் விருப்பமில்லை. எனவே, அம்மா எனக்கு நடனம் கற்றுக் கொடுத்தாள். எனக்குக் காஞ்சிபுரத்தில் 'தலைக்கோலி' பட்டம் கொடுத்திருக்கிறார்கள்."

"அடடே... தலைக்கோலி... அப்படியானால் நாட்டியத்தில் மிகச் சிறந்தவள் என்று அர்த்தமல்லவா?"

"ஆமாம். பத்து பேருக்குப் பயிற்சி கொடுக்கும் அளவுக்குத் திறமையுள்ளவள் என்றுதான் பொருள். காஞ்சிபுரத்தில் பள்ளி நடத்திக் கொண்டிருந்தேன். அந்த நாட்டியப் பள்ளியை என் இளைய சகோதரியிடம் கொடுத்துவிட்டு, இளவரசர் இராஜேந்திரரின் கட்டளைப்படி தஞ்சாவூருக்கு வந்திருக் கிறேன்."

"ஆமாம்... பலநூறு தேவரடியார்களைத் தஞ்சைக்கு வரச் சொல்லி மன்னர் உத்தரவிட்டிருக்கிறாராம். நானும் கேள்விப் பட்டேன் மிகப் பெரிய கோவில் கட்டப் போகிறாராம். கோவில் கட்டுவதற்கு, தேவரடியார்களின் உதவி நிச்சயம் தேவையாம். உழைப்பவர்களுக்காக, மாலை வேளைகளில் நடனமாடுவதற்காகக் கூப்பிட்டிருக்கிறார்களா?"

"அதுவும் ஒரு வேலைதான். அதனால் காலை ஓய்வெடுக்கலாம் என்பதில்லை. காலையில் விதம் விதமான உடைகள் உடுத்திக் கொண்டு, சிற்பிகள் சொல்வதுபோல படம் வரைவதற்கு அசையாது நிற்க வேண்டும். நாங்கள் உடுத்திக் கொண்டிருப்பதை சிற்பிகள் அப்படியே படமாக வரைந்து, அதை ஆதாரமாக வைத்து சிலைகள் செய்வார்கள். சிலைகள் செய்கிற போதும் அவர்கள் அருகே போய், அவர்கள் சொல்படி நின்று சிலை செய்ய உதவி செய்ய வேண்டும். இவைகளை நான் காஞ்சிபுரத்திலும் செய்திருக்கிறேன்."

"இதற்கும் மானியம் உண்டா..." குமுதினி கேட்டாள்.

—

"ஆமாம். அது தவிர சிற்பிகள் விருப்பப்பட்டு காசுகள் தருவார்கள். காஞ்சியிலும் வாழ்க்கை கஷ்டமில்லை. எல்லோருக்குமே நல்ல வருமானம். செழிப்பான விவசாயம். ஆனால் அவ்வப்போது போர் வரும்போதுதான் வாழ்க்கையைப் பற்றி பயமாக இருக்கிறது."

இராஜராஜீ அடிக்குரலில் பேசினாள்.

"நன்றாகச் சொன்னாய் ராஜீ. போர் பற்றிய பேச்சு வந்துவிட்டால் மனதே இருண்டு போகிறது. அடிக்கடி போர் நடக்கக்கூடாது என்பதற்காகத்தான் என்னுடைய மாமனார் அதிகம் பேசாது, காயத்ரி ஜபம் செய்து கொண்டிருப்பதாகச் சொல்கிறார். ஆனாலும் இங்கொன்றும் அங்கொன்றுமாகப் போர் வரத்தான் செய்கிறது."

"இப்படி இருந்தால் பரவாயில்லையே... முன்புபோல லட்சோப லட்சம் வீரர்கள் ஊர் விட்டுப் போவதும், எங்கேயோ மலை நாடுகளில் போர் செய்து விட்டு குற்றுயிராய்த் திரும்புவதும் இல்லையேல் அங்கேயே செத்துப் போவதும், இங்குள்ள பெண்டு பிள்ளைகள் அநாதை யாவதும்... அடேயப்பா... எத்தனை வேதனைகள்... எத்தனை துன்பங்கள் இந்தச் சோழநாடு ஏற்றுக் கொண்டிருக்கிறது... இராஜராஜீ கவலையாகப் பேசினாள்.

"இனி அதிகம் யுத்தம் வர வாய்ப்பில்லை என்று என் புருஷன் சொன்னார். மன்னர் உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவருக்கு யுத்தத்தின் மீது பிடிப்பு குறைந்துவிட்டது. எல்லைகள் பலப்படுத்தப்பட்டு விட்டன. இராஜேந்திர சோழர் மேல்பாடியில் குடியிருக்க– வடக்கே, மேற்கே எவரும் வந்து நம் தேசத்தைத் தாக்கப் போவதில்லை.

பாண்டிய வளநாட்டில் நம் மந்திரிகள் அரசாட்சி செய்து கொண்டிருக்க, அங்கிருந்தும் தாக்குதல்கள் வராது. சேர தேசத்தவர்கள் அடங்கி வெகு நாட்களாகி விட்டது. அவர்கள் நட்பாகி விட்டார்கள். எனவே சேர தேசமும் பிரச்சினை யில்லை.

கடற்பகுதியில் மட்டும் அவ்வப்போது கொள்ளைகள் நடக்கிறதாம். அதற்காக இராஜேந்திரர் கடற்படை தயாரித்துக் கொண்டு இருக்கிறாராம். இது மட்டும்தான் இப்போதைக்கு

யுத்தம் பற்றிய செய்தி...'' அந்த அந்தணப் பெண்மணி மடமடவென்று ஊர் விஷயங்களைப் பேசினாள்.

இராஜராஜீ வியந்தாள்.

"பரவாயில்லையே... சோழ தேசத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்களே..."

"நானாகக் கேட்டுப் புரிந்து கொண்டேனா... காதுகளில் விழுந்த செய்தி. எங்களவர் கொஞ்சம் அரசியல் ஈடுபாடு உடையவர் என்பதால், இந்த வீட்டிற்கு வந்து பலபேர் பல தகவல்கள் சொல்வார்கள். எல்லாத் தகவல்களையும் நான் ஒரு ஓரமாய் நின்று கேட்டுக் கொண்டிருப்பேன். இதைத் தவிர எனக்கு ஞாபக சக்தி சற்று அதிகம். எந்த வருடம், என்ன நடந்தது... யார், என்ன செய்தார்கள் என்கிற விவரங்களை நான் மனதில் பதிய வைத்து விடுவதால், என் கணவரே என்னிடம் விஷயங்களைக் கேட்டு ஞாபகப்படுத்திக் கொள்வார்."

"ஆஹா... நீங்கள் பாராட்டப்பட வேண்டிய பெண்மணி, உங்களைப் பார்த்தபோதே நினைத்தேன். நீங்கள் மிகுந்த கெட்டிக்காரி என்று, அதேபோலவே இருக்கிறீர்கள்."

''நானும் உன்னைப் பார்த்ததும் அப்படித்தான் நினைத்தேன்..." அந்த அந்தணப் பெண்மணி இராஜராஜீயைக் கூர்ந்து கவனித்துப் பேசினாள்.

"நீ சாதாரண தேவரடியார் இல்லை. நிறைய விஷயம் தெரிந்தவள். மொழிப்பயிற்சி உள்ளவள். ஒரு வீட்டிற்குள் நுழையும்போதே நாலாபக்கமும் சுற்றிப் பார்த்து, எந்தப் பக்கம் வழி இருக்கிறது...? எந்தப் பக்கம் வழி இல்லை என்று தெரிந்து கொண்டு தான் அமைதியாகிறாய். எனவே நீயும் லேசுப்பட்டவள் இல்லை என்பது புரிந்துவிட்டது."

அவள் பேச்சுக்கு இராஜராஜீ வாய்விட்டுச் சிரித்தாள்.

"சரி, கோவில் எங்கே கட்டப் போகிறார்கள்?"

"தஞ்சையில்."

"தஞ்சை இங்கிருந்து எவ்வளவு தூரம்?"

''இங்கிருந்து அரை காதம் திருக்காட்டுப்பள்ளி. திருக்காட்டுப்பள்ளியிலிருந்து ஒரு காதம் திருவையாறு.

திருவையாறிலிருந்து ஒன்றரை காதம் தஞ்சாவூர். மொத்தத்தில் மூன்று காத தூரத்தில் தஞ்சாவூர் இருக்கிறது."

"வழி நன்றாக இருக்குமா?"

"என்ன இப்படிக் கேட்டு விட்டாய். நீ தஞ்சாவூர் எல்லையைத் தொட்டாகிவிட்டது என்பது உனக்குப் புரியவில்லையா?

வழி நெடுக ஆங்காங்கே செழிப்பான கிராமங்கள். வேளாளர் குடியிருப்புகள், வியாபார ஸ்தலங்கள், அக்ரஹாரங்கள், கோயிலைச் சுற்றியுள்ள சில குடியிருப்பு இடங்கள் என்று ஏதாவது வந்து கொண்டே இருக்கும்.

திருவையாறு கிட்டத்தட்ட ஒரு நகரம் போல... பெரிய கோவில். கோவிலைச் சுற்றி ராஜவீதி. ராஜ வீதியிலிருந்து கிளை கிளையாய்ப் பிரியும் பல தெருக்கள்.

ஒவ்வொரு வகுப்பினருக்கும் தனித்தனியே தெருக்கள் வைத்து, வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. திருவையாறில் கிடைக்காத பொருளே இல்லை. போகும்போது ஐயாரப்பனைத் தரிசித்து விட்டுப் போ."

"பிறகு என்ன ஊர் வரும்?"

"திருவையாறு தாண்டியவுடன் 'கருந்தட்டைக் குடி' என்ற ஊர் வரும். பிறகு தஞ்சையின் எல்லை ஆரம்பித்துவிடும். அகழியைத் தாண்டி கோட்டை. கோட்டையைத் தாண்டி உள்ளே போனால் மிகப் பெரிய மாளிகை தெரியும். மாளிகையைச் சுற்றி நகரம் இருக்கிறது. குதிரைகளும், யானைகளுமாய் ஊர் கலகலப்பாக இருக்கும்."

"கோவிலுக்கான வேலைகள் துவங்கி விட்டார்களா?"

"இல்லை. அதற்கு நாள் பார்த்து வைத்திருக்கிறார்கள். போன பௌர்ணமிகூட அரண்மனையில் பூஜைபோட்டு விட்டு, முதன் மந்திரி பிரம்மராயரைப் பார்த்து, என் புருஷன் மூன்று, நான்கு தேதிகள் சொல்லிவிட்டு வந்தார். ஏதேனும் ஒரு தேதியில் அஸ்திவாரம் தோண்டலாம். என்று குறித்துக் கொடுத்திருக்கிறார்."

"கோயில் கட்டாமல் போக ஏதும் வாய்ப்பிருக்கிறதா..." இராஜராஜீ கேட்டாள். குமுதினி, இராஜராஜீயின் கேள்விக்குத் திகைத்தாள்.

"கோயில் நிச்சயம் கட்டப்படும் இராஜராஜீ..." வெளியே ஆண் குரல் கேட்டது. மும்முடிச் சோழ பிரம்மராயர் உள்ளே நுழைந்தார்.

# 7

சோழ சாம்ராஜ்யத்தின் சேனாதிபதியும், சுந்தரசோழர், உத்தம சோழர், இராஜராஜர் என்று மூன்று சோழப் பேரரசர்களுக்குத் துணையாக நின்று 'மும்முடிச் சோழ பிரம்மராயர்' என்று பெயர் பெற்றவரும், மிகுந்த கெட்டிக் காரரும், அனுபவஸ்தரும், அமைதியானவரும், சோழ தேசத் திற்காக தன் வாழ்க்கையையே அர்ப்பணித்தவரும், எந்நேரமும் மக்கள் நலனிலேயே நாட்டமாக இருப்பவரும், எவரிடமும் பாரபட்சம் இல்லாமல் நடந்து கொள்பவரும், அளந்து நிதானமாகப் பேசுகிறவருமான கிருஷ்ணன்ராமன் என்ற பெயர்கொண்ட பிரம்மராயர், வாசற்படியில் நின்று நடுக்கூடத்தில் கைகட்டிப் பேசுகின்ற தேவரடியார் தளிச்சேரிப் பெண் இராஜராஜீயை உற்றுப் பார்த்தார்.

பெண்களில் பலவிதமுண்டு. ஆணொருவன் சற்றுத் தொலைவில் நின்று பார்க்கிறான் என்று தெரிந்ததுமே எங்கேனும் பதுங்கிக் கொள்கிற பெண்கள் சோழ தேசத்தில் உண்டு.

அப்படிப் பதுங்கிக் கொள்ளாது ஆண்கள் வரவைத் தெரிந்துகொண்டு சற்று முன்னேறி, 'வருக வருக' என்று அழைத்து உள்ளே வந்ததும், விலகி நின்று பேசுகிற பெண்களும் உண்டு. அச்சமின்றி எதிரே வந்து கைகூப்பி வணக்கம் சொல்லி, உள்ளே அழைத்துப்போய் ஆசனம் கொடுத்து, எதிரே சற்றுத் தொலைவில் நின்றபடி முகம் பார்த்துப் போகிற பெண் களும் உண்டு.

ஆண்களைப் பற்றி எந்த அச்சமும் இல்லாமல் உறுத்துப் பார்த்து, பார்க்கும்போதே அவர்களை எடைபோட்டு, அவர்கள் பதிலுக்கு உறுத்துப் பார்க்கும்போதும் அந்தப் பார்வையை மதிக்காது அலட்சியம் செய்து, அவர்கள் பேச்சுக்குப் பதில் பேச்சு கொடுத்து திக்கு முக்காட வைக்கும் பெண்களும் உண்டு.

இதில் இராஜராஜீ நான்காவது வகை என்று பார்த்தவுடனேயே பிரம்மராயர் புரிந்துகொண்டு விட்டார்.

சபையேறி நடனமாடுகிற தேவரடியார் பெண்களுக்கு, ஆண்களைப் பற்றிய அச்சம் அதிகம் இல்லையெனினும், அந்தக் கூட்டத்திலும் வெட்கப்பட்டுப் பதுங்குகிற பெண்கள் இருக்கிறார்கள்.

மெல்லிய குரலில் பேசும் பெண்கள் அவர்களிடத்திலும் உண்டு. ஆனால் இவளைப் போல கைகட்டி வாசல் பக்கம் நின்று குரல் கொடுத்தும் அதிர்ச்சியடையாது, 'நீ வருவாய் எனத் தெரியும்' என்பதுபோலவே நிற்கின்ற பெண்கள் தேவரடியார் வட்டத்தில் குறைவுதான்.

அரசியல் விஷயங்களை நன்கு தெரிந்த பெண்கள்தான், அரசியல்வாதிகளோடு ஒட்டிப் பழகிய பெண்கள்தான் இவ்விதம் தைரியத்தோடு இருப்பார்கள். இராஜராஜீ நிற்றலும், அவள் பார்வையும் அசைவும் அவளுக்குச் சோழ அரசியல் அத்துப்படி என்பதும், ஆண்களுடைய கோப தாபங்கள் அவளை மிரட்சியடையச் செய்யாத விஷயம் என்பதும் எளிதில் புரிந்தது.

எந்த விஷயத்தையும், எந்தச் சூழ்நிலையிலும் இராஜராஜீயால் சமாளிக்க முடியும்; மீண்டு வெளியே வரமுடியும்; என்பது அவள் உதட்டு அழுத்தத்தில் தெளிவாயிற்று.

"வணக்கம் பிரம்மராயரே..." அவள் சற்றுத் திரும்பி, வாசற்படி நோக்கிக் கைகூப்பினாள். சுற்றும் முற்றும் பார்த்து அங்கிருந்து உயரமான ஒரு ஆசனத்தை எடுத்து நடுக்கூடத்தில் போட்டாள். "அமருங்கள்..." என்று தன் வீடுபோல் கைகாட்டினாள்.

நடுக்கூடத்திற்கு வந்த பிரம்மராயர், திரும்பி அந்த அந்தணப் பெண்மணியைப் பார்க்க, அந்தணப் பெண்மணி சற்று விலகி, 'வாருங்கள்' என்று மெல்லிய குரலில் அழைத்தாள்.

"என்ன குமுதினி? இராஜராஜீ என்ன சொல்கிறாள்?"

விலகி நின்ற குமுதினியைப் பார்த்து பிரம்மராயர் கேட்டார்.

அகலமான, உயரமான அந்த ஆசனத்தில் அமர்ந்து கொண்டார். ஒரு காலை மடித்து, ஒரு காலைத் தொங்கவிட்டு

பிரம்மராயர் நிமிர்ந்து உட்கார்ந்ததைப் பார்த்தால், சில விஷயங்கள் பேசிவிட்டுத்தான் போவார் என்பதுபோல் இராஜராஜீக்குத் தோன்றியது.

"இராஜராஜீ அதிகம் பேசவில்லை. ஆனால் இந்த வீட்டை உன்னிப்பாகப் பார்க்கிறாள். எது எது எங்கெங்கே இருக்கிறது. யார் யார் இருக்கிறார்கள் என்று வேகமாக நோட்டமிடுகிறாள்..."

"அது பெண்களின் இயல்புதானே... ஒரு வீட்டிற்குள் நுழைந்தவுடன், அந்த வீடு எப்படி இருக்கிறது... பொருட்கள் எப்படி வைக்கப்பட்டிருக்கின்றன என்பதைப் புரிந்துகொண்டு அந்த வீட்டிலுள்ளவர்களை எடை போடலாம் என்று முயற்சிப்பார்கள். எடைபோட்டு, எந்த அளவு பழகலாம் என்றும் அவர்கள் தீர்மானம் செய்வார்கள்..."

சற்று சிரிப்போடு பிரம்மராயர் சொன்னார்.

"இருக்கலாம். என்னை என்ன விதமாக எடைபோட்டிருக்கிறார்கள் என்றுதான் தெரியவில்லை..." குமுதினியும் குறும்புச் சிரிப்போடு இராஜராஜீயைப் பார்த்துப் பேசினாள்.

சுற்றி... வளைத்துப் பேசுகின்ற இந்தப் பேச்சு, இராஜராஜீக்குச் சிரிப்பைக் கொடுத்தது, அவள் வாய் விட்டுச் சிரித்தாள்.

"காஞ்சிபுரத்திலிருந்து ஆறுநாள் பயணம் செய்து பழமர்நேரிக்கு நான் வந்தது குமுதினியை எடை போடவா? எனக்கு வேறு பல வேலைகள் கொடுத்திருக்கிறார்கள்.

தஞ்சைக்குப் போய் கோயில் கட்டுகிற இடத்தில் காலையும், மாலையும் நடனமாடச் சொல்லி, இறைவன் புகழைப் பாடச் சொல்லி உத்தரவிடிருக்கிறார்கள். நீங்கள், நான் ஏதோ வேவு பார்க்க வந்தவள் போல் பேசுகிறீர்களே..." இராஜராஜீ சிரித்தபடி பேசிவிட்டு, சட்டென்று சிரிப்பை நிறுத்திக் கொண்டாள்.

குமுதினியும், பிரம்மராயரும் லேசாய்த் துணுக்குற்று இராஜராஜீயை உற்றுப் பார்த்தார்கள்.

"இராஜராஜீ... உன்னை வேவுக்காரி என்றும், நீ ஏதோ அந்நிய தேசத்துப் பெண் போலவும் நான் நினைக்கவில்லை. சோழ தேசத்திறகாக நீ – உன் உடல், பொருள், ஆவி அனைத்தை யும் தருவாய் என்று எனக்குத் தெரியும்.

இந்த மண் மீதும், நம் மன்னர் மீதும் நீயும் உன் குழுவும் எத்தனை பிரியத்தோடு இருக்கிறீர்கள் என்பதை அறிந்தே இருக்கிறேன்.

ஆனாலும் திருவையாறு தாண்டி வரவேண்டிய நீங்கள் பழமர்நேரி பக்கம் வந்தது சற்றுக் கவலையாகிவிட்டது. அதைவிடப் பெரிய வியப்பு – உங்கள் வருகை தெரிந்து, மன்னர் அங்கே வந்திருக்கிறார். உங்களை எதிர்கொண்டிருக்கிறார். அப்படியானால் நீங்கள் திருவையாறு இல்லாமல் பழமர்நேரி பக்கம்தான் ஆறு தாண்டுவீர்கள் என்று அவருக்கும் சொல்லப் பட்டிருக்கிறது.

இராஜராஜீ... நான் இந்த தஞ்சை நகரத்தின் காவலன். சோழதேசத்தின் சேனாதிபதி. நான் அறியாமல் எதுவும் இங்கு அசைந்துவிட முடியாது. எனக்குத் தெரியாமல் இங்கு எதுவும் நடக்கக்கூடாது.

நீயும், நானும் சோழதேசத்தின் மீது அக்கறையுள்ளவர்கள் எனினும், எதிரெதிராக வேலை செய்கிறோமோ என்ற ஒரு பயம் எனக்குள் இருக்கிறது. ஏன் பழமர்நேரியில் ஆறு தாண்டினீர்கள்? அவ்வளவு தொலைவு எதற்காக வண்டி ஓட்டிக் கொண்டு வந்தீர்கள்? அரசருக்கு வேறென்ன செய்திகள் இன்னும் இருக்கின்றன...?'' இராஜராஜீயைப் பார்த்து பிரம்மராயர் கேட்டார்.

அங்கு மௌனம் நிலவியது. குமுதினி தொண்டையைக் கனைத்து, "நான் வேண்டுமானால் பின் கட்டுக்குப் போய் விடட்டுமா...,'' என்று மெல்லிய குரலில் கேட்க, 'இந்தக் கேள்விக்கு நீ பதில் சொல்' என்பது போல் இராஜராஜீயை பிரம்மராயர் பார்த்தார்.

"அவசியமில்லை, குமுதினி பிரம்மராயரின் உளவுப் படையைச் சேர்ந்தவள் என்பது எங்களுக்குத் தெரியும். பிரம்மராயரின் உளவுப் படையில் அந்தணப் பெண்களுக்குக் கூடப் பங்கு உண்டு என்பது புதிதல்ல.

சிறு குழந்தைகளையும், அப்பாவியாகத் தோற்றமளிக்கும் வேளாளர்களையும், போர் வீரர்களையும், வியாபாரிகளையும், தச்சர்களையும், கொல்லர்களையும் தனித்தனியே பயிற்றுவித்து, அவர்களுக்கு உளவாளிக்கான அடையாளம் கொடுத்துச் சோழ

தேசம் முழுவதும் அவர்களை பிரம்மராயர் பரப்பி வைத்திருக்கிறார் என்பதும் மற்ற உளவாளிகளுக்குத் தெரியும்.

எதற்கு இவ்விதம் ஒருவரையொருவர் உளவு பார்க்க வேண்டுமென்று அலுப்பு வந்தாலும் சோழ தேசத்தின் நன்மைக்காகத்தான் நீங்கள் இதைச் செய்கிறீர்கள் என்பதை அரசியல் தெரிந்த எல்லோரும் புரிந்து வைத்திருக்கிறோம்.

நீங்கள் இங்கு வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். ஒரு வேளை – நீங்களும், நானும் பேசுவதை இங்கு வேறு எவரேனும் கேட்பதற்கு வாய்ப்பிருக்கிறதோ என்று பயத்தில் இந்த வீட்டினுடைய எல்லாப் பக்கங்களையும் நான் உற்றுப் பார்த்தேன்.

இரண்டு பக்கமும், வாசல் வைத்து, நான்கு பக்கமும் ஜன்னல் வைத்து இந்த வீடு, ஒற்றர்களுக்கான பாதுகாப்பு இல்லாமல் இருக்கிறது.

ஆயினும் இங்கே உங்களின் ஒற்றர் ஒருவரைக் குடி வைத்திருக்கிறீர்கள். குமுதினி, குமுதினியின் கணவர், குமுதினி யின் அப்பா எல்லோருமே உங்களுடைய ஒற்றர் படையைச் சேர்ந்தவர்கள் என்பதும் இராஜேந்திர சோழருக்குத் தெரியும். இராஜேந்திர சோழர் இவர்களைப் பற்றிய விவரங்களை எனக்குக் கொடுத்தே அனுப்பியிருக்கிறார்.

'உன்னை இங்குதான் தங்க வைப்பார்கள். அந்தப் பெண்ணை விட்டுத்தான் பேச வைப்பார்கள்' என்றும் சொன்னார். அவ்விதமே இங்கு நிகழ்ந்திருக்கிறது.

பெயருக்கு மூன்று தேவரடியார்களை இங்கு கொண்டு வந்துவிட்டு, மற்றவர்களையெல்லாம் வேறு இடத்தில் உட்கார வைத்துவிட்டு, என் வருகைக்காக குமுதினி காத்துக் கொண் டிருக்கிறாள். வந்தவுடன் உள்ளே இழுத்துக் கொண்டு போய் விட்டாள். எனவே, இங்கு நான் சோதிக்கப்பட்ட பிறகுதான் தஞ்சை மாநகருக்குள் அனுமதிக்கப்படுவேன் என்பதும் நான் அறிந்த ஒன்றுதான்."

இராஜராஜீ நிதானமாகப் பேசிக்கொண்டு போனாள். குமுதினியும் பிரம்மராயரும் அசையாது கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"உங்களுக்குச் சொல்ல மூன்று செய்திகள் இருக்கின்றன. இந்தக் கோயில் கட்டும் விஷயங்கள் இளவரசர் இராஜேந்திர ருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

எல்லைகள் பாதுகாப்பற்று இருக்கின்றன. ஈழத்திலிருந்தும், கங்க தேசத்திலிருந்தும், ஏன் பாண்டிய தேசத்திலிருந்தும்கூட நம்மைத் தாக்குவதற்குப் படைகள் வரக்கூடும் என்று இராஜேந்திரர் சந்தேகிக்கிறார்.

எல்லைகள் பலமில்லாத இந்த நேரத்தில், எதற்காக மன்னர் கோவில் கட்ட வேண்டும் என்று யோசிக்கிறார். செங்கல் கட்டடங்களைக் கருங்கல் கட்டடங்களாக மாற்றுவது பற்றி அவருக்கு எந்த விதமான ஆட்சேபணையும் இல்லை.

ஆனால் வரைபடத்தில் கண்டது போல நான்கு பனை உயரமுள்ள ஒரு தனி விமானத்தை எழுப்புவதென்றால் எவ்வளவு வருடங்கள் பிடிக்குமென்று கேட்கிறார். எத்தனை ஆட்கள் வேண்டும்? எங்கிருந்து கல் எடுத்து வரப்படும் என்றெல்லாம் யோசித்து, 'இது தேவைதானா' என்று கேள்வி கேட்கிறார்.

இதைத்தவிர இன்னொரு செய்தியும் உண்டு. செம்பியன் மாதேவியின் உடல்நிலை கவலைக்கிடமாக இருக்கிறது. நாங்கள் வருகிறபோது திருவக்கரையில் மூன்று நாட்கள் தங்கினோம். செம்பியன் மாதேவி அங்குதான் காளிகோயில் கட்டிக் கொண்டிருக்கிறார்.

அவர்கள் உடம்பு இளைத்திருக்கிறது. எழுந்து நின்றால் தலை சுற்றுகிறது. கண்கள் வீங்கியிருக்கின்றன. சற்று நேரம் உட்கார்ந்திருந்தாலும் கூட காலில் நீர் கோர்த்து விடுகிறது. கால் நாழிகைக்கு ஒரு முறை எழுந்து சற்று நடந்துவிட்டு உட்காருகிறார். காளி கோயில் கட்டுமானப்பணி முடியும் தறுவாயில் இருக்கிறது."

"செம்பியன் மாதேவியின் மன நிலை எப்படி இருக்கிறது?"

"புலம்புகிறார். அதிகம் தனக்குத் தானே பேசிக் கொள்கிறார். அப்படிப் பேசுவதை யாரேனும் கேலி செய்து விடுவார்கள் என்று சிறிய ஆசனத்தை காளி சிலைக்கு எதிரே போட்டுக் கொண்டு, காளியிடம் பேசுவதுபோல உரக்கப் பேசுகிறார். மனநிலை லேசாகப் பாதித்திருப்பதை உணர முடிகிறது. பார்வையில் கூர்மை மழுங்கி வருகிறது. சோழிகள் உருட்டி பிரசன்னம் பார்த்த போது, இன்னும் மூன்று மாதங்களுக்குமேல் செம்பியன்மாதேவி உயிர்வாழ மாட்டாரென்று சோழிகள் சொல்லின."

"நல்லது... சோழ சாம்ராஜ்யத்தில் உயர்ந்த நிலையில் இருப்பவர்களையெல்லாம் சோழிகள்தான் உருண்டு உருண்டு தீர்மானிக்கின்றன. என்றைக்கு இந்தப் பைத்தியக்காரத் தனங்களையெல்லாம் விடப் போகிறீர்களோ தெரியவில்லை...' பிரம்மராயர் அலுத்துக் கொண்டார்.

"நீங்கள் நினைப்பது தவறு பிரம்மராயரே... அங்கே ஜோசியம் சொன்னது ஒரு இளம்பிள்ளை. பன்னிரண்டு வயது பாலகன். ஆனால் தமிழ்ப்பாட்டு அவனுக்கு அருவியாக ஓடுகிறது. செம்பியன் மாதேவியோடு இந்த மூன்று மாதமும் அந்தப் பையன்தான் இருந்திருக்கிறான். செம்பியன் மாதேவி யின் சொல்படிதான் பிரசன்னமும் பார்க்கப்பட்டது."

"மூன்று மாதங்கள்தான் உயிரோடு இருப்பீர்கள்' என்று அவரிடம் சொல்லப்பட்டதா?"

"ஆமாம். அவர்தான் கேட்டுத் தெரிந்து கொண்டார். 'மிகுந்த சந்தோஷம்' என்று வான் நோக்கிக் கைகூப்பினார். மரணத்திற்குத் தயாராகிவிட்டார் என்று அவர் முகம் எனக்குத் தெளிவாகக் காட்டியது. எனவே, சோழ தேசத்தில் எந்த நல்ல விஷயமும் ஆரம்பிக்கும் முன்னால், செம்பியன் மாதேவி அவர்களை மனதில் வைத்துக் கொள்வது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது..."

"நல்லது... செம்பியன் மாதேவியைப் பற்றிய செய்தியை இராஜேந்திரருக்குத் தெரிவித்துவிட்டாயா...?"

"அடுத்த இரண்டு நாட்களில் செய்தி அவருக்குப் போய்விட்டது..."

"செம்பியன் மாதேவி பற்றி இராஜேந்திரர் என்ன நினைக்கிறார்?"

"அவருக்கு செம்பியன் மாதேவி செய்கின்ற செலவுகள் பிடிக்கவில்லை. பண்டாரத்தில் கை வைதது பொன்னை அள்ளிக்கொண்டு போவதில் விருப்பமே இல்லை. சிற்பிகளுக்குத் தேவைக்கு அதிகமாகச் சம்பளம் கொடுத்து அவர்களை ஊதாரியாக்குகிறார்கள் என்று கோபப்படுகிறார். எனக்குப் புரியவில்லை.

'ஒரு காலாட்படை வீரருக்கு ஒரு நாளைக்கு ஒரு செப்புக் காசு சம்பளம். ஆனால் ஒரு சிற்பி அன்று வேலை செய்தாலும், செய்யாவிட்டாலும் இரண்டு அல்லது இரண்டரை செப்புக்

காசுகள் சம்பாதித்து விடுகிறார். ஒரு சிலை வடிக்க அவருக்குக் கொடுக்கப்படுகின்ற காசு மிக மிக அதிகம்' என்று இராஜேந்திரர் கோபமாகக் குறிப்பிடுகிறார்.

சிற்பிகளுக்கு இப்படிக் காசு அதிகம் கொடுத்துவிட்டால் படைவீரர்கள் நொந்து போகிறார்கள். 'வேலையும் கத்தியையும் வீசிவிட்டு சுத்தியலும், உளியும் எடுத்துக் கொண்டு பாறையில் கோடு போடலாமே' என்று சொல்கிறார்கள்.

குறிப்பாய் திருவக்கரைச் சிற்பிகளுக்கு அதிகமாகச் சம்பளம் கிடைக்கிறது. பூமியிலிருந்து கல் தோண்டி யானையை வைத்து இழுத்துக் கொண்டு வருகிறவர்களுக்கு, சிலை செய்பவர்களைவிட அதிகமாக காசு கிடைக்கிறது.

'பெரிய பாறையாக எடுத்துக் கொண்டு வந்துவிட்டால், அதைப் பார்த்து வியந்துபோய், 'என்ன தருகிறோம்' என்று தெரியாமல் செம்பியன் மாதேவி அள்ளிக் கொடுத்து விடுகிறார். இதனால் வணிகர்களை விட, விவசாயிகளைவிட, படை வீரர்களை விட, நெசவாளர்கள் கருமார்களைவிட சிற்பிகள் அதிக வசதியோடு இருக்கிறார்கள்.

அவர்களுக்கென்று தனி வீடுகள் கட்டி, கும்பலாக வாழ முயற்சிக்கிறார்கள். இது நல்லதல்ல... மக்களிடையே இது பிளவை உண்டாக்கும்' என்று இராஜேந்திரர் கவலைப் படுகிறார்..."

பிரம்மராயர் தலையசைத்தார். "புரிகிறது... இராஜேந் திரரின் கவலை நியாயமானது..."

"ஆனால் கிட்டத்தட்ட பதினோரு அடி உயரமுள்ள துர்க்கை சிலையை நீங்கள் பார்த்தால் திகைத்துப் போவீர்கள். திருவக்கரை காளி சிலை அவ்வளவு அழகு? அரை பத்மாசன நிலை. ஒரு காலைத் தொங்கவிட்டு, இன்னொரு காலை மடித்து, அதே நேரத்தில் 'வெட்டி விடுவேன்' என்று எழுந்திருக்கிற ஒரு வேகத்தோடு, பல கைகளோடு லேசான கண்டிப்பு நிறைந்த பார்வையோடு. விதவிதமான ஆயுதங்களோடு மிகப் பளபளப்பாய் கற்பூர ஜோதி – கண்களில், கன்னத்தில், உதட்டில் தெறிக்கும்படி வடிவழகோடு செய்யப்பட்டிருப்பதைப் பார்த்தால் எத்தனை கொடுத்தாலும் ஈடாகாது என்றுதான் தோன்றுகிறது" குமுதினி உரத்த குரலில் பரவசமாகப் பேசினாள்.

"நானும் கேள்விப்பட்டேன் வக்ர காளி மிக அழகாக வந்திருக்கிறதென்று... இப்போது அங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது?" பிரம்மராயர் இராஜராஜீயைக் கேட்டார்.

"காளி சிலையை நெல்லில் குவித்து வைத்திருக்கிறார்கள். சிலை பெரிதாக இருப்பதால், அரை பனை உயரத்திற்கு நெல் குவிக்க வேண்டியதாகிவிட்டது. சுற்று பற்றுமுள்ள எல்லா வேளாளர்களிடமிருந்தும் நெல் வாங்கி சிலை மீது போடப்பட்டிருக்கிறது.

எனவே, திருவக்கரை பக்கம் நெல் கிடைப்பது சற்று கடினமாக இருக்கிறது. காஞ்சிபுரத்திலிருந்தும், செய்யாரிலிருந்தும் நெல் வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. திருப்பாதிரிப் புலியூரிலிருந்தும், திருவதிகையிலிருந்தும் நெல் வண்டிகள் வரத் துவங்கி விட்டன.

ஆனால் செம்பியன் மாதேவி, ஒற்றைக்கு இரட்டை விலை கொடுத்து அந்த நெல் வண்டிகளை வரச் சொல்லியிருக்கிறார். ஊரில் எல்லாப் பண்டங்களின் விலைகளும் உயர்ந்திருக் கின்றன. மக்கள் முணுமுணுக்கத் துவங்கி விட்டார்கள். அதிகம் பாதிக்கப்படுவது விவசாயிகள்தான் என்று பேசிக் கொள்கிறார்கள்..." இராஜராஜீ சொன்னாள்.

"இதைவிட முக்கியமான செய்தி ஏதும் உண்டா?"

"உண்டு..."

"என்ன அது? பிரம்மராயர் கவலையோடு கேட்டார்.

"மாமன்னரின் மூத்த சகோதரர் ஆதித்த கரிகாலன் அவர்கள் கொலை செய்யப்பட்டதை, இராஜேந்திர சோழர் நாட்டிய நாடகமாகத் தயார் செய்யச் சொல்லியிருக்கிறார். போன பௌர்ணமி அன்று அது அரங்கேறியது.

நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த இராஜேந்திரர், திடீரென்று எழுந்து கதறி அழுதார். நாட்டிய நாடகத்தை நிறுத்தச் சொல்லிவிட்டு, சபையிலிருந்து வெளியேறி விட்டார்.

குதிரையேறி, ஆறு வீரர்கள் பின் தொடர, வீரநாராயண புரம் ஏரிக்குப் போனதாகவும், அங்கு போய் எந்த இடத்தில் ஆதித்த கரிகாலனுடைய உடம்பு மிதந்ததோ, அந்த இடத்தைப் பார்த்துக் கைகட்டி வெகு நேரம் நின்றதாகவும், தனக்குத்தானே பேசிக் கொண்டதாகவும் எனக்குத் தகவல் தரப்பட்டது.

'எவ்வளவு மோசமான, இழிவான ஒரு கொலை நடந்திருக்கிறது. இதைச் சமனப்படுத்தாமல், வெறுமே கோயில் கட்டிக் கொண்டிருப்பதில் என்ன புண்ணியம்' என்று இராஜேந்திரர் புலம்பியதாகவும், 'எந்த இடத்தில் ஆதித்த கரிகாலருடைய உடம்பு மிதந்ததோ அந்த இடத்தில் கங்கையால் ஒரு ஜலஸ்தம்பம் எழுப்புவேன்' என்று வாள் நுனியில் சத்தியம் செய்ததாகவும் எனக்குத் தகவல்கள் வந்தன.

வெகுவிரைவில் வடக்கு நோக்கி அவர் பயணப்படப் போகிறார். கங்கையிலிருந்து குடம் குடமாய் நீர் கொண்டு வந்து, வீரநாராயணபுரம் ஏரி முழுவதும் சாய்த்து, ஆதித்த கரிகாலனுடைய மனக்கேதம் தீர்ப்பதற்குப் பிரார்த்தனை செய்யப்போகிறார். 'சோழ சாம்ராஜ்யத்தின் கறுப்பு நாள்' என்று ஆதித்த கரிகாலனின் இறந்த நாளை அனுஷ்டிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்.

வருடா வருடம் அன்றைய தினம் ஏதேனும் படையெடுப்பு நடத்தி, எல்லைபுறத்தில் இருக்கின்ற நாடுகளைப் பயமுறுத்த வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார். வீரத்தை வளர்த்துக் கொள்வது அல்லாது வேறு எது செய்தாலும் சோழ சாம்ராஜ்யம் நிலைத்து நிற்காது என்று பேசியிருக்கிறார்.

சோழ சாம்ராஜ்யத்திற்கு எதிராக ஒரு சிறு அசைவு ஏற்பட்டாலும், அந்த அசைவை ஏற்படுத்துபவர்கள் மிகக் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள் என்று எச்சரித்திருக்கிறார். இராஜேந்திர சோழரின் கோபம் அங்குள்ள சேனாதிபதிகளுக்குக் கவலையைக் கொடுத்திருக்கிறது. இதை உங்களுக்கும், மன்னருக்கும் தெரிவிக்க எனக்குக் கட்டளையிருக்கிறது."

"உனக்குக் கட்டளையிட்டது யார்?" பிரம்மராயர் சற்று வேகமாகக் கேட்டார்.

"இளவரசர் இராஜேந்திர சோழரின் அனுக்கியார் பரவை நாச்சியார் இதை உங்களிடம் சொல்லச் சொன்னார்..."

இராஜராஜீ சொல்ல, பிரம்மராயர் கண் மூடி முகம் சுருக்கினார்.

"என்ன... எதற்காக முகம் சுருக்குகிறீர்கள்..." இராஜராஜீ கூர்மையாக அவரைப் பார்த்தபடி கேட்டாள்.

"சோழ தேச அரசியல் இப்போது படைவீரர்கள் கையிலோ அல்லது சேனாதிபதிகளின் கையிலோ இல்லை

முற்றிலுமாக தேவரடியார்கள் கைகளுக்குப் போய்விட்டது என்று தோன்றுகிறது...” பிரம்மராயர் அலுப்போடு சொன்னார்.

“இந்த வார்த்தையை நீங்கள் சொல்வீர்கள் என்று எனக்கும் தெரியும், எனக்குச் செய்தி சொல்லியனுப்பிய பரவை நாச்சியாருக்கும் தெரியும்... இதைச் சொன்னவுடன், உங்களுக்கு ஒரு பெயரைச் சொல்லச் சொல்லியும் எனக்கு உத்தர விருக்கிறது.”

“என்ன பெயரைச் சொல்லப் போகிறாய்?”

“மாமன்னர் இராஜராஜசோழரின் உற்ற துணைவியார், ‘தில்லையழகி’ என்று அவரால் பாராட்டப்பட்ட இராஜராஜசோழரின் நான்காவது துணைவியார், பழுவூர் நக்கன் பஞ்சவன்மாதேவியின் பெயரை உங்கள் காதுகளில், நன்றாகப் புத்தியில் உரைக்கும்படி உரக்கச் சொல்ல உத்தரவு கொடுக்கப்பட்டிருக்கிறது...”

இராஜராஜீ சொல்ல, பிரம்மராயர் திடுக்கிட்டார். மன்னரின் துணைவியான பஞ்சவன்மாதேவியும் தேவரடியார் குலத்தைச் சேர்ந்தவர். இன்றைக்கு நடக்கும் அரசியலில் அவர் பங்கு மிக முக்கியமானது.

மன்னர் கோயில் கட்டத் தீர்மானித்ததும், அவருக்கு பக்க பலமாக பஞ்சவன்மாதேவியார் முழு வேகத்தில் செயல் படுகிறார். பழமர்நேரியிலிருந்து அரைக்காத தூரத்திலிருக்கும் திருக்காட்டுப்பள்ளியில் தனி மாளிகையில் தற்காலிகமாக குடியிருந்து, தினமும் மன்னரோடு கோவில் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கிறார்.

உலகத்தில் உள்ள தேவரடியார்களைக் கேலி செய்யும் போது, அந்த தேவரடியார்களில் ஒருவரான பஞ்சவன்மா தேவியை நினைத்துக் கொண்டால் கேலி செய்ய மனம் வராது. அவர் செய்த தியாகத்தைப் புரிந்து கொண்டால் இகழ்ச்சியாய்ப் பேசத் தோன்றாது.

பிரம்மராயர் கைகூப்பினார்.

“மன்னித்து விடு... இராஜராஜீ, எனக்கு வயதாகிவிட்டது. அதனால் அடிக்கடி அலுப்பு ஏற்படுகிறது. அந்த அலுப்பு தாங்காமல்தான் நான் அடிக்கடி சற்று அவசரப்பட்டுப் போகிறேன்...”

வடப்பக்கத்திலிருந்து வீசும் பனிக்காற்றைத் தடுத்து நிறுத்தும் இமயம்போல, தமிழகத்தில் அந்நியர் தலையீடு இல்லாமல் உயர்ந்து நின்று காப்பாற்றி வரும் பிரம்மராயர் வருத்தப்பட்டுப் பேசியது இராஜராஜீக்கு வேதனையாக இருந்தது.

குமுதினி அதைவிட வேதனைப்பட்டாள். கவலையோடு பிரம்மராயரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

வாசலில் 'மன்னர் வருகிறார்' என்கிற சிறு பறை முழக்கம் கேட்டது. மூவரும் பரபரப்பானார்கள்.

# 8

பழமர்நேரியின் சிவன்கோவில் கதவுகள் 'தடேர், தடேர்' என்று திறந்து கொண்டன. கோவிலைச் சார்ந்த சிவப் பிராமணர், எண்ணெய்ச் சட்டியும் துணித் திரியுமாய் உள்ளுக்குள் ஓடினார்.

மெல்ல எரிந்து கொண்டிருந்த விளக்குகளைத் தூண்டினார். எண்ணெய் வார்த்தார். தீப்பந்தங்கள் மீது எண்ணெய் ஊற்றினார். பற்ற வைத்தார்.

கோவிலின் நடுப்பகுதியிலுள்ள எல்லா விளக்குகளையும் ஏற்றி, இரண்டு தீப்பந்தங்களையும் சாய்வாய்ச் சொருக, கோவில் பிரகாசமாகியது.

'மன்னர் வருகிறார்' என்று அறிவிக்கும் சிறுபறை உள்ளே நுழைந்தது. உள்ளே நுழைந்த மெய்க்காப்பாளன் ஒருவன், கோவில் மணியை அடிக்கத் துவங்கினான்.

பழமர்நேரி கிராமம் மொத்தமும் விழித்துக் கொண்டு விட்டது. கோயிலை நோக்கி வேகமாக வரத் துவங்கியது.

மன்னர், கோயில் படியைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டார். கவனமாய்த் தாண்டினார்.

உள்ளுக்குள் நுழைந்ததும் இரண்டு கைகளையும் கூப்பி, 'சிவாய நமஹ' என்று உரக்கச் சொன்னார். அவர் குரலை உள் வாங்கி, அங்கிருந்த பல பேரும் 'சிவாய நமஹ' என்று எதிரொலித்தார்கள்.

கர்ப்பகிரகத்தில் பஞ்சமுக விளக்கு ஏற்றிக் காட்டப் பட்டது. சாமி தரிசனம் முடிந்து, நெற்றி நிறைய விபூதி இட்டுக் கொண்டு வந்த மன்னரைப் பார்த்ததும், 'திருமகள்போல பெருநிலச் செல்வியும்' என்று மெய்க்கீர்த்தியை ஊர் ஜனங்கள் உரக்கச் சொன்னார்கள்.

மன்னர் அந்த மெய்க்கீர்த்தியைக் கைகூப்பி ஏற்றுக் கொண்டார். 'எங்கே அமரலாம்?' என்று புன்னகையோடு கேட்டார். மன்னரையே பார்த்துக் கொண்டிருந்த மக்கள், அவர் புன்னகைக்கு மயங்கி, நாலாபக்கமும் போய், 'இங்கே, அங்கே' என்று இடம் காட்டினார்கள்.

மன்னர் இடம் பார்த்து அமர்ந்ததும், 'உலகமெல்லாம் சாந்தி நிலவ வேண்டும்' என்ற பொருள் பொதிந்த ஸ்லோகத்தை ஒரு சிவப் பிராமணர் சொல்ல, எல்லோரும் கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்கள்.

மன்னர் அமர்ந்ததும், ஓசையெழ எல்லாரும் உட்கார்ந்தார்கள்.

"இந்த அகால நேரத்தில் உங்களையெல்லாம் தூக்கத்தி லிருந்து எழுப்பி இங்கே வரவழைத்ததற்காக முதலில் மன்னிப்பு கோருகிறேன்..." என்று மன்னர் சொல்ல, பல்வேறு வித ஒலிக் குறிப்புகளால் மக்கள் அதை மறுத்தார்கள்.

யாரோ ஒரு வயசாளி, 'நல்லா இருக்கு போங்க' என்று மன்னரைச் சற்று அன்போடு கடிந்து கொண்டார்.

மன்னர் அந்த அன்பான பேச்சுக்குச் சிரித்தார். மக்கள் மறுபடியும் அந்தச் சிரிப்புக்கு மயங்கி, அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"திருவையாறு நோக்கித்தான் போய்க் கொண்டிருந்தேன். ஆனால் தேவரடியார்கள் வந்த மாட்டு வண்டிகள் ஆற்றில் இறங்கச் சரியான இடம் கிடைக்காமல், இடம் மாறிப் போய்க் கொண்டே இருப்பதாய் எனக்குத் தகவல் வந்தது. எனவே உங்கள் ஊர்ப் பக்கம் விரைந்து வந்தேன். சிரமம் பாராமல் மிகச் சரியான நேரத்தில் ஒன்றுகூடி, ஏற்றம் அமைத்து, நம் விருந்தினராக வந்திருக்கின்ற தளிச்சேரிப் பெண்டுகளைக் காப்பாற்றி விட்டீர்கள், இதற்காக என் மனமார்ந்த நன்றி."

மன்னர் கைகூப்ப, மறுபடியும் 'அட என்ன... இதுக் கெல்லாம் போய்' என்பதாய் ஜனங்கள் ஓசைகள் எழுப்பினார்கள்.

"என்னை முந்திக்கொண்டு, தகவல்களைத் தெரிந்து கொண்டு – பிரம்மராயர் உங்கள் ஊருக்கு வந்து, உரிய நேரத்தில் உரிய நடவடிக்கை எடுத்து அவர்களைக் காப்பாற்றி விட்டார். எனவே, என் வருகை வெறுமே வேடிக்கை பார்ப்பதற்கு என்பதுபோல் ஆகிவிட்டது.

பிரம்மராயர் போன்றவர்கள் இருக்கும்வரையில் எனக்குக் கவலைகள் ஏதுமில்லை. அவருக்கு மனமார உதவி செய்ய உங்களைப் போன்ற அன்பான சோழ மக்கள் இருக்கும்போது, எனக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. மகேஸ்வரன் கிருபையால் என் எல்லா வேலைகளும் எளிதாகிக் கொண்டிருக்கின்றன."

மன்னர் சற்று இடைவெளி விட்டு, தீப்பந்த வெளிச்சத்தினூடே உட்கார்ந்திருக்கும் மக்களின் முகங்களை உற்றுப் பார்த்தார்.

எல்லோரும் வெகு ஆவலாக, 'மன்னர் என்ன சொல்லப் போகிறார்? எதற்கு இங்கே வந்திருக்கிறார்?' என்பது போன்ற கேள்விகளோடு உட்கார்ந்திருக்கிறார்கள்.

"இறையருளால் தஞ்சாவூரில் சற்றுப் பெரிய கற்றளி ஒன்று கட்டுவதற்கு முயற்சி செய்து கொண்டு இருக்கிறேன். என்னுடைய நெடுநாள் கனவு இது. தஞ்சாவூர் வெறும் கோட்டையாக இல்லாமல், கோட்டைக்குள் இருக்கிற ஊராக இல்லாமல், சோழர்கள் அரசாண்ட இடம் என்றில்லாமல், அரண்மனை நின்ற இடம் என்றில்லாமல், இறைவன் வாழ்ந்த இடம் என்பதாய் சந்திராதித்தர் உள்ளவரை பேசப்பட வேண்டும் என்பது என்று அவா.

நாம் வாழும் காலத்தில், நாம் எவ்வளவு சீரும் சிறப்புமாக வாழ்ந்தோம் என்று நம்முடைய சந்ததிகளுக்குத் தெரிய வேண்டுமென்று ஒரு ஆசை. நம்மை இறைவன் எவ்வளவு அழகாகப் பாதுகாத்தார். எத்தனை கருணையோடு நம்மீது அக்கறை காட்டினார் என்பதை நம் சந்ததிகள் தெளிவாய்த் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது என் விருப்பம்.

நம்முடைய கலை, வீரம், பண்பாடு அனைத்தையும் இறைவன் காலடியில் வைத்து, இறைவனுக்காகவே நாம் வாழ்ந்ததை, பிற்பாடு பலநூறு வருடங்களானாலும் வாழுகின்ற

மக்கள், நம்முடைய நாகரீகத்தைப் புரிந்துகொள்ள வேண்டு மென்று ஒரு எண்ணம்.

'காலத்தால் அழியாதது எதுவும் இல்லை' என்று அடிக்கடி பல பெரியவர்கள் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். 'இங்கு எல்லாமும் தற்காலிகம்தான்' என்று சித்தர்கள் சிரிப்பதைப் பார்த்திருக்கிறேன்.

'எத்தனை புத்திசாலிகள் இருக்கிறோம்; எத்தனை திறமையானவர்கள் இருக்கிறோம். நம்முடைய வாழ்க்கை தற்காலிகமாக இருக்கலாம்; நமது உடல் தற்காலிகமாக இருக்கலாம்; ஆனால் நம் புத்தி, புத்தியிலிருந்து கிளம்பிய சக்தி தற்காலிகமா? அது ஒரு தடம் விட்டுப் போகக்கூடாதா என்று நான் யோசிப்பதுண்டு.

'வெறும் மண்ணோடு மண்ணாகப் போவதற்கா நாம் பிறந்திருக்கிறோம்? அப்படியானால் பிறக்க வேண்டிய அவசியமே இல்லையே...' என்ற ஒரு நினைப்பு ஒரு துக்கம் அடிக்கடி எழுவதுண்டு. ஏதேனும் செய்ய வேண்டும் என்று இலக்கில்லாத ஒரு ஆசை என்னை எப்போதும் சுற்றித் தொந்தரவு செய்துகொண்டு இருக்கும்.

நேற்று கிழக்குவாசல் நிகம்ப சூதனியின் கோவிலுக்குப் போய், வெகுநேரம் நின்று காளியைப் பார்த்துக் கொண்டு இருந்தேன். எனக்கு நிகம்ப சூதனியின் நினைவே வரவில்லை. இடையறாது விஜயாலய சோழரின் நினைப்புதான் வந்தது. விஜயாலய சோழரை நாம் எப்படி நினைவில் கொள்கிறோம்? எதனால் நினைவு கொள்கிறோம்?

தஞ்சாவூரை பாண்டியர்களிடமிருந்து கைப்பற்றி பல்லவர்களுக்காகப் போரிட்டு, பல்லவர்கள் அன்போடு கொடுத்த தஞ்சையில் அரண்மனை கட்டி, அகழி ஏற்படுத்தி கோட்டையை வளைத்துக் கட்டி எட்டு எல்லைகளிலும் எட்டு காளிகளை நிறுவி, ஒரு மகத்தான பணியைத் தன் வாழ்நாள் முழுவதும் செலவழித்துச் செய்திருப்பதால்தான் இன்றுவரை விஜயாலயரை நாம் நினைத்துக் கொள்கிறோம்.

பராந்தகரையும், அரிஞ்சயரையும், என் தகப்பனார் மாமன்னர் சுந்தர சோழரையும் அவ்விதமே கோவில்கள் மூலமாகவே நினைக்கக் கொள்கிறோம்.

கோவில்கள் என்பது வெறும் கட்டடங்கள் அல்ல. நம் சந்தோஷத்தின் வெளிப்பாடு. நமது அன்பின் சின்னம். இறைவன் மீது நாம் கொண்ட பக்தியின் காணிக்கை.

சிறிய நகரமாக இருந்த தஞ்சாவூர், வளர்ந்து பெரிய நகரமாகி விட்டது. தஞ்சாவூர் மட்டுமே சோழ தேசமாக இருந்தது. மாறி விரிவடைந்து, விஜயாலயருக்குப் பின் வந்த ஆதித்த சோழரால், பராந்தகரால், அரிஞ்சயரால், கண்டராதித்த ரால், என் தகப்பனார் சுந்தர சோழரால் பிரம்மாண்டமாக விஸ்தரிக்கப்பட்டு, கோதாவரிக் கரையிலிருந்து குமரி முனை வரை பரந்து விரித்து பலமாய்த் திகழ்கிறது. இதற்குக் காரணம் நமது படை வீரர்களின் மாண்பு.”

இதை மன்னர் சொல்லி முடித்ததும், மன்னரைச் சுற்றி வந்த படை வீரர்கள் வேகமாக எழுந்தார்கள். இடுப்பிலிருந்து வாளை உருவினார்கள். கேடயத்தில் அந்த வாளால் பளீர் பளீரென்று அடித்தார்கள். ஒரேவிதமான தாளக்கட்டில் அப்படி ஒலி எழுப்பி, ‘சோழம், சோழம், சோழம்’ என்று கத்தினார்கள்.

எப்பொழுதெல்லாம் படை வீரர்கள் பாராட்டப்படு கிறார்களோ, அப்பொழுதெல்லாம் படை வீரர்கள் உணர்ச்சிவசப்பட்டு எழுந்து, பதிலுக்கு நன்றி சொல்லும் விதமாய்; ‘உங்களுக்காக எப்பொழுதும் உயிரைச் சிந்தத் தயார்’ என்கிற விதமாய்; ‘எந்த நேரமும் எதிரியோடு போரிடுவதற்குத் தயார்’ என்கிற முறையில் வாள் உருவி, கேடயத்தில் அடித்து ஒலியெழுப்பி, ‘சோழம், சோழம்’ என்று கூவுவார்கள்.

சோழ மண்ணின் மீது அவர்கள் வைத்திருக்கும் அன்பை இவ்விதம் வெளிப்படுத்துவார்கள். இப்படி அவர்கள் ஒலியெழுப்புவது, மற்ற வகையினரையும் புளகாங்கிதப்படுத்தும். வீரமுட்டும்.

துள்ளி எழுந்து பாராட்டுக்கு நன்றி சொல்கின்ற இந்தப் பாங்கினை மக்கள் வட்டம் ரசித்துப் பார்க்கும். நன்றியும் வியப்புமாய் மக்கள் பார்க்கும் பார்வையை, சோழவீரர்கள் பார்த்து இறுமாந்து போவார்கள். ‘உங்கள் மீது தூசு படாமல் காப்பதைவிட வேறு என்ன வேலை’ என்பதுபோல் நடந்து கொள்வார்கள்.

மன்னர் போதுமென்று கைஉயர்த்த, சட்டென்று வீரர்கள் வாட்களை உறையிலிட்டு உட்கார்ந்தார்கள். சற்றுநேரம் அங்கு அமைதி படர்ந்தது.

"எனவே, என் முன்னோர்கள் சோழ தேசத்தை விரிவு செய்து, அவர்கள் நினைவாக, அவர்களின் ஆட்சியின் நினைவாக, அவர்களின் வளமான வாழ்க்கையின் நினைவாக, அவர்களின் போரின் நினைவாக, வீரத்தின் நினைவாக எழுப்பப்பட்ட கோவில்களைப் போல் நானும் ஒரு கோவில் எழுப்ப விருப்பம் கொண்டிருக்கிறேன். காவிரிக் கரையோரம் பல கோவில்களை கற்றளியாய் மாற்றக் கட்டளை யிட்டிருக்கிறேன்.

என் பாட்டியார் கண்டராதித்தன் தேவியார் செம்பியன் மாதேவியார் அவர்கள், இந்தத் தள்ளாத வயதிலும் சிவத்தொண்டு புரிவதாக உறுதி பூண்டு, எங்கெல்லாம் செங்கற் களால் கட்டப்பட்ட கோவில்கள் இருக்கிறதோ, அவற்றை யெல்லாம் கற்றளியாக, கருங்கல்லால் கட்டப்பட்ட கோயிலாக பெரும் காசு செலவு செய்து மாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

'வேண்டாம். தள்ளாத வயதில் அரண்மனையில் ஓய்வெடுங்கள்' என்று சொன்னாலும் மறுத்துவிட்டு, கடைசி மூச்சு வரை சிவத்தொண்டு செய்வதாய் உறுதி பூண்டிருக்கிறார். அவர்கள் காட்டிய வழியில் நானும் சிலவைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது.

இந்தச் சோழதேசம் இப்போதும் வெறும் தஞ்சாவூராக இல்லை. காவிரியை வடக்கு எல்லையாக வைத்து, செம்மண் கலந்த தஞ்சை பூமியைத் தெற்கு எல்லையாக வைத்திருந்த ஆதித்த சோழர் காலத்துத் தஞ்சாவூராக இல்லை. குறும்பர் நாடும், நடுநாடும், நுளம்பபாடியும், சுங்கபாடியும் நமக்கு அந்நியமாக இல்லை.

நம்மோடு கலந்து, நம் வீரத்திற்கு அடிபணிந்து, நம்மை ஏற்றுக் கொண்டு அவைகளும் சோழதேசமாக மாறிவிட்டன. முன்னைக் காட்டிலும் இப்போது செழிப்பாக இருக்கின்றன. இந்தச் சோழ தேச விஸ்தரிப்பைக் கொண்டாடும் வகையிலே இந்தச் சோழ தேசத்தின் நீளம், அகலம் மிகப் பெரியதாகிப் போயிருப்பதுபோல நாமும் ஒரு பெரிய கோவில் கட்ட வேண்டுமென்று விரும்புகிறேன்.

இந்தக் கோவில் தஞ்சை தளிக்குளத்தார் கோவிலுக்கருகே கட்டப்படும். இதற்கான வரைபடங்களை காஞ்சியிலுள்ள ஓவியர்களும், சிற்பிகளும் சேர்ந்து கலந்து பேசி வரைந்து எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். அந்த வரைபடம் வைக்கப்

பட்டுள்ள பெட்டிதான் கருவறையில் ஈஸ்வரன் காலடியில் வைக்கப்பட்டிருக்கிறது.

சோழ மக்களே... என் மீது நீங்கள் கொண்டுள்ள அன்பு எவ்விதம் என்பதை நான் நன்கு அறிவேன். நான் போருக்குப் போனால் வீட்டை உதாசினப்படுத்தி விட்டு, கையில் கிடைத்த ஆயுதத்தோடு என் பின்னால் தொடர்ந்து ஓடி வருகிறீர்கள்.

நான் நள்ளிரவில் நகர்வலம் வந்தாலும் தூக்கத்தை உதறி, என் எதிரே வந்து கைகட்டி நின்று கொள்கிறீர்கள். நான் நெல் கேட்டாலும் கொடுக்கிறீர்கள். பொன் கேட்டாலும் கொடுக்கிறீர்கள். ஏன்...? உங்கள் உயிரைக் கேட்டாலும் கொடுக்கிறீர்கள். இப்படிப்பட்ட உங்களுக்கு நான் ஏதேனும் செய்ய வேண்டாமா?

நாகரீகம்மிக்க, அன்புமிக்க, அறிவுமிக்க, திறன்மிக்க சோழ மக்களுக்கு நான் தலைவனாக இருக்கிறேன். என் மக்களின் குணங்களை வெளிப்படுத்தும் வகையில் உங்களுக்கு ஒரு கட்டடம் எழுப்ப வேண்டுமென்று நான் விரும்பினேன்.

இந்தக் கோவில் மிகப் பெரியதாக இருக்கும். இது என் பெருமையைச் சொல்வதற்கு மட்டும் உண்டாக்கப்படும் கோவிலல்ல. உங்கள் நாகரீகத்தை உலகுக்கு எடுத்துரைக்கும் கோயிலாக இது திகழப் போகிறது. இப்படி ஒரு கட்டடம், இந்த உலகத்தில் கட்ட முடியாது என்பது போன்ற ஒரு உயரத்தில், அகலத்தில், கலை நுணுக்கத்தில் இந்தக் கோயில் விளங்கப் போகிறது.

சோழ மக்களே... இது என் இருபதாண்டு... கனவு. என்னுடைய கனவு மட்டுமல்ல; என் அன்புத் தமக்கையார் குந்தவைப் பிராட்டியாரின் வழிகாட்டலும் இதில் அடங்கி இருக்கிறது. இப்படி ஒரு கோவில் கட்ட வேண்டுமென்ற எண்ணத்தை அவர்களிடம் பரிமாறியதுமே அன்று இரவே அவர்கள் காஞ்சியை நோக்கிப் பயணப்பட்டு விட்டார்கள்.

போவதற்குமுன் திரைச்சீலையில், தான் தன் மனதில் எந்தவித வடிவத்தில் இந்தக் கோவில் இருக்க வேண்டுமென்று விரும்புவதாய் வரைந்து காட்டினார்கள். திருக்கடல் மல்லையில் பல்லவர்களால் கட்டப்பட்ட குடைவரைக் கோயிலின் சாயலை ஒட்டி அவர்களின் வரைபடம் அமைந்திருந்தது.

ஆனாலும், கிட்டதட்ட கடல்மல்லை கோவிலின் உயரம் போலவே ஒரு பனை உயரத்தில்தான் என் அக்காள் குந்தவைப் பிராட்டியார் வரைந்த கோயில் இருந்தது. என் எண்ணம் அதை விடச் சற்று மேலானது. கிட்டத்தட்ட நான்கு அல்லது ஐந்து பனை உயரத்தில் ஒரு கோயில் கட்ட வேண்டுமென்று நான் விரும்புகிறேன்...”

கூட்டம் ‘ஆஹா’வென்று திகைத்துக் குரல் எழுப்பியது. மன்னர் திகைப்புகள் அடங்கட்டும் என்று காத்திருந்தார்.

“வாஸ்து சாஸ்திரப்படி ஐந்து பனை உயரத்திற்கு ஒரு கோயில் எழுப்ப வேண்டுமென்றால், மூன்று பனை ஆழத்திற்கு பூமியை நோண்ட வேண்டும். ஐந்து பனை உயரத்துக்குக் கற்களை அடுக்கிக் கோயில் எழுப்பிவிடலாம். ஆனால் மூன்று பனை ஆழத்திற்குப் பூமியை நோண்ட முடியுமா? எங்கு நோண்டினாலும் நீர் ஊறுமே...? விஷவாயு கிளம்புமே...? எப்படிச் செய்யப்போகிறீர்கள்?” வட்டத்தின் வடக்கு மூலையிலிருந்து, சற்று இருட்டான இடத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது. அந்தக் குரலின் தொனியிலிருந்து கேட்டவர் ஒரு அந்தணர் என்பது புரிந்தது.

“இந்தக் கணக்கு இந்தக் கோயிலுக்குச் சரி வராது. இதைத் தீர விசாரித்து விட்டேன். அரைபனை ஆழத்துக்கு அஸ்திவாரம் போட்டால் போதும். ஐந்து பனை உயரத்துக்கு விமானம் எழுப்பலாம் என்று ஸ்தபதிகள் சொல்லியிருக்கிறார்கள்.”

“விமானமா? கோபுரமா?” இப்போது கேள்வி இடப்புற மிருந்து வந்தது.

“விமானம்...” மன்னர் பணிவோடே பதில் சொன்னார்.

“மேற்கொண்டு பேசுங்கள் ஐயா... கேட்கக் காத்திருக் கிறோம்...” கூட்டத்தின் நடுவிலிருந்து ஒருவர் குரல் கொடுத்தார்.

மன்னர் மீண்டும் கை உயர்த்த, கேள்விகள் நிறுத்தப் பட்டன. மக்கள் அமைதியாகக் காத்திருந்தார்கள்.

“இப்படிப்பட்ட கோயில் கட்ட பாறைகள் வேண்டும். ஆட்கள் வேண்டும். ஸ்தபதிகள் வேண்டும். எல்லாவற்றையும் கண்காணிக்க போர் வீரர்கள் வேண்டும். நம்மிடையே செல்வம் இருக்கிறது. இருப்பினும் விளைச்சல் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும்.

இந்தக் கோயில் கட்ட என் எண்ணப்படி ஏழு வருடங்களாகும். அந்த ஏழு வருடங்களும் விவசாயம் செவ்வனே நடந்தால்தான் வேலை செய்கிறவர்களுக்கு நம்மால் சோறு போட முடியும்.

மனிதர்களால் மட்டுமே இந்தக் கோயிலைக் கட்டிவிட முடியாது. மாடுகளும், குதிரைகளும், யானைகளும் மிகப் பெரிய பங்கை இந்தக் கோயிலுக்கு அளிக்கப் போகின்றன. எனவே, அவைகளை வெகுசீராகப் பராமரிக்கவும் நம்முடைய விளை நிலங்கள் செழிப்பாக இருக்க வேண்டும்.

இந்தக் காரியத்தை நான் என்னை மட்டுமே நம்பி நடத்தவில்லை. உங்களை நம்பி, நம் வண்டல் பூமியை நம்பி, காவிரித்தாயை நம்பி ஆரம்பித்திருக்கிறேன். காவிரித்தாய் பொய்த்துப் போனால் சகலமும் ஆட்டம் காணும். பயிர் பச்சைகளில் பூச்சி விழுந்தால் வேலை தாமதமாகும். நீங்கள் முகம் சுருக்கினால் என்னால் ஒரு கல்கூட எடுத்து வைக்க இயலாது. இவையெல்லாம் நடக்காதிருக்க இறைவன் திருவுள்ளம் காட்ட வேண்டும்."

மன்னரின் இனிமையான, அவையடக்கமான பேச்சு அந்த ஜனங்கள் மனதைக் கரைத்தது.

"நான் இறை பணியாய் மட்டும் கோயில் செய்ய வேண்டுமென்று ஆசைப்படவில்லை. நான் கோயில் கட்டுவதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது.

நம்முடைய எல்லைகளைப் பலப்படுத்துவதற்காக, எல்லைகளுக்கு அப்பாலும் உள்ள தேசங்களை வெற்றிகொள்ள வேண்டியிருந்தது. அவர்களின் திமிரை அடக்குவதற்காகப் படையெடுத்து, அவர்களின் செல்வங்களை எடுத்து, வீடுகளைப் பறித்து, சற்று கடுமையாகத் தண்டித்து அவர்களின் அகம்பாவத்தைக் குறைக்க வேண்டியிருந்தது.

இந்த முயற்சியில் பல ஆயிரக்கணக்கான வீரர்களைக் கைது செய்து, நாம் சோழ தேசத்தின் எல்லையில் வைத்திருக்கிறோம். அவர்களை விடுதலை செய்தால், இன்னும் ஓரிரு வருடங்களில் மறுபடியும் படை திரட்டி, எல்லையிலே இடையறாது தொந்தரவு கொடுப்பார்கள்.

அவர்களை ஊருக்கு அனுப்பாமல், 'என்னால் கைது செய்யப்பட்டவன் நீ' என்று இடித்துக் காட்டி, வெறுமே

மெல்லிய சங்கிலியால் பிணைத்துச் சோறு போட்டு வைத்திருக் கிறோம்.

கிட்டத்தட்ட ஒரு லட்சம் அந்நிய தேசத்துப் போர் வீரர்கள் நம்மிடம் கைதிகளாக இருக்கிறார்கள். அவர்களைப் பார்க்கும் போதெல்லாம், 'வெறுமே உண்டு உறங்கி ஓய் வெடுத்துக் கொண்டிருக்கிறார்களே... இவர்களை வைத்து எதுவுமே செய்ய முடியாதா...' என்று நான் கவலைப்பட்டிருக் கிறேன்.

அவர்களைப் பார்க்கும் போதுதான் கோவில் கட்டுகிற எண்ணம் எனக்குப் பலமாக எழுந்தது. அப்படிக் கட்டுகிற கோயிலை மிகப் பெரிதாகக் கட்ட வேண்டும் என்ற எண்ணத்தை அவர்கள்தான் எனக்குத் தோற்றுவித்தார்கள். எனவே, அந்த அந்நிய சேதத்தைச் சார்ந்த, நம்மால் சிறை பிடிக்கப்பட்ட வீரர்களுக்கு வேலை தருவதற்காகவும் இந்த மகத்தான பணியை நான் துவக்கியிருக்கிறேன்."

மன்னர் சற்று நேரம் அமைதியாக இருக்க, கூட்டம் மொத்தமும் மன்னரையே பார்த்துக் கொண்டிருந்தது.

பிரம்மராயரும், குமுதினியும், இராஜராஜீயும் கோவில் வாசல் வழியே நுழைந்து, வெளிச்சம் அதிகம் படாத இடத்தில் வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். மன்னர் அவர்களைக் கவனித்துவிட்டு பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

"இன்னும் சில தினங்களில், கோவிலின் எல்லைகளை பெண் யானை ஓட்டி நிர்ணயிக்கப் போகிறோம். அந்த விழாவுக்குப் பழமர்நேரி மக்கள் யாவரும் வந்திருந்து சிறப்பிக்க வேண்டும்.

கோவிலைப் பற்றிய விவரங்களெல்லாம் இப்போதைக்கு என்னால் சொல்ல முடியாது. வரை படங்கள் வந்திருக்கின்றன. அவற்றைப் பார்த்து, சிற்பிகளோடு பேசிவிட்டு, பிறகுதான் இதைப்பற்றிய எல்லா விவரமும் சொல்லமுடியும். ஆனாலும் மகத்தான பணி ஒன்றை இறைவன் கட்டளையாய் நான் ஆரம்பித்திருக்கிறேன். நீங்கள் பெரிய மனது வைத்து எனக்குத் துணை நிற்க வேண்டும்."

மன்னர் கை கூப்பினார். எல்லா மக்களும் துள்ளி எழுந்தார்கள்.

*'திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்*
*தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொள'*

என்று மறுபடியும் மெய்க்கீர்த்தி சொன்னார்கள். 'சோழ மன்னர் இராஜராஜர் வாழ்க' என்று உரக்கக் கூவினார்கள்.

கல்லணைக்குப் போயிருந்த குதிரை வீரன், வியர்வை ஒழுக குதிரை விட்டிறங்கி கோயிலுக்குள் நுழைந்தான். எல்லோரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள்.

"அணை மூடப்பட்டு விட்டது. தண்ணீர் வரத்து குறைந்துவிட்டது. இன்னும் சிறிது நேரத்தில் தண்ணீர் முற்றிலும் வற்றிவிடும். முழங்கால் சேறுதான் இருக்கும்..." என்று தகவல் தெரிவித்தான்.

எல்லோரும் ஆறு பார்க்க ஆவல் கொண்டார்கள். 'ஆற்றுக்கு அடுத்த பக்கம் இருக்கின்ற மாட்டு வண்டிகளைக் கொண்டுவர வேண்டுமே' என்று பேசிக் கொண்டார்கள்.

மன்னர் திரும்பி பிரம்மராயரைப் பார்த்தார். 'அவர்களும் வரட்டும்' என்று ஒரு வார்த்தை சொன்னார். பிரம்மராயர் கை கூப்பி, தலை குனிந்து வணங்கிவிட்டு காவிரிப் பக்கம் போனார்.

பிரம்மராயர் போனதும், மன்னர் இராஜராஜீயை உற்றுப் பார்த்தார். 'வா' என்று தலையசைத்துக் கூப்பிட்டார். கோவில் விட்டு வெளியேறி, குதிரையில் ஏறிக் கொண்டார். திருக்காட்டுப் பள்ளியை நோக்கி குதிரையை நடத்தினார்.

மன்னர் போனதும் இராஜராஜீக்குச் சற்று நேரம் கழித்து ஒரு குதிரை தரப்பட்டது. இராஜராஜீ அந்தக் குதிரையில் தாவி ஏறிக்கொண்டு, பழமர்நேரியின் வேறு வாயில் வழியாக மன்னரைப் பின் தொடர்ந்தாள்.

குமுதினி கூட்டத்தில் தன் கணவனைத் தேடினாள். ஒரு பையன் குமுதினிக்கு அருகே வந்து, தான் தொடர்ந்து போயிருப்பதாய்ச் சொல்லுமாறு குமுதினியின் கணவன் தெரிவித்திருப்பதாய்ச் சொன்னான்.

'தன் கணவர் யாரைத் தொடர்ந்து எங்கே போயிருப்பார்?' என்று குமுதினிக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது.

# 9

மூன்று உள்ளங்கை அகலமுள்ள, ஒரு உள்ளங்கை உயரமுள்ள செங்கற்கள் வைத்துக் கட்டப்பட்ட மூன்றடுக்கு மாளிகை அது. மாளிகையின் நடுவே பிரம்மஸ்தானத்தில் திறந்த முற்றம் அமைத்து, முற்றத்துக்கு நடுவே பீடம் எழுப்பி, அந்தப் பீடத்தின் மேல் ஆவுடையாருடன் கூடிய சிவலிங்கம் அமைத்து, சிவலிங்கத்துக்கு எதிரே சற்றுத் திரும்பிய வண்ணம் இருக்கின்ற நந்தியும் வைத்து, மாளிகையையே கோயிலாகச் செய்திருந்த அழகான இடம் அது.

முற்றத்தைச் சுற்றி தளம் எழுப்பி, தளத்திற்கு அருகே இருக்கின்ற சுவரில் சுண்ணம் அடித்து, சித்திரங்கள் எழுதி, தரை முழுவதும் காரை பூசி மெழுகி, அதன் மீது கருங்கல் போட்டுப் பதித்து மிக நேர்த்தியாகக் கட்டிய மாளிகை அது.

பரம்பரை பரம்பரையாக அரசுக்குச் சொந்தமான இடமது. அரசர்கள் திருவையாறுக்கு வந்து, மேற்கே திரும்பி, கல்லணையை பார்க்கப் போக வேண்டுமென்றால் இங்கே வந்து ஒரு நாள் தங்கி, கல்லணைப் பயணத்தை மேற்கொள்வார்கள். கல்லணையைப் பார்த்துவிட்டு, இரவோடு இரவாகத் திரும்பவும் இந்த இடத்துக்கு வந்து விடுவார்கள்.

கல்லணையிலிருந்து திருகாட்டுப்பள்ளி வரை உள்ள கிராமங்களில் வரி வசூலிக்கவும். நீதி வழங்கவும், அரசாங்கக் காரியங்களைக் கவனிக்கவும் இந்த மாளிகை வசதியாக இருந்தது.

மாளிகை கீழ்தட்டில் அதிகாரிகளும், சேவகர்களும், சமையல் ஆட்களும், வேலையாட்களும் தங்க, மேலே முதல் தளத்தில், பெரிய பெரிய அறைகளில் கட்டில்கள் போட்டு, ஆசனங்கள் அமைத்து அங்கே மன்னரும், மந்திரிகளும் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒரு சில வேலையாட்களைத் தவிர, வேறு எவரும் நிரந்தரமாக அங்கு தங்குவது இல்லை. அதே சமயம் அடிக்கடி வந்து போகும் விருந்தினர்களுக்காக அந்த மாளிகை மிகச் சீராகப் பராமரிக்கப்பட்டு வந்தது.

அந்த மாளிகையின் முதல் தளத்தில், முன்பக்கம் உப்பரிகை போன்று நீண்டிருந்த இடத்தில், பெரிய போர்வை யால் உடம்பு முழுவதும் மூடிக்கொண்டு பஞ்சவன்மாதேவி

சுவர் சாய்ந்து அமர்ந்திருந்தார். அவருக்கு அருகே தரையில் இலவம்பஞ்சு மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. அதன் மீது உருளையான திண்டுகள் கிடந்தன.

ஒரு திண்டை, தனது இடது தொடைக்கு அருகே வைத்துக் கொண்டு, போர்வையை முகம் வரை போர்த்தியபடி, கண்கள் மட்டும் தெரிய அவர் வாசலையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அவருக்கு அருகே திருவாரூரைச் சேர்ந்த தேவரடியார் சித்திரவல்லியும், திருவையாறு கோவிலைச் சேர்ந்த தேவரடியார் சீருடையாளும் அமர்ந்திருந்தார்கள். இராஜராஜ ருடைய மனைவியான பஞ்சவன்மாதேவியை அவர்கள் அன்றுதான் முதன் முதலில் சந்தித்திருந்தார்கள்.

அன்று காலைதான் பஞ்சவன்மாதேவியாருக்கு ஆரத்தி எடுத்து, திலகமிட்டு, வீட்டுக்குள் நுழைந்ததும் சூடான பானகம் கொடுத்து உபசரித்திருந்தார்கள். தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டு பஞ்சவன்மாதேவியோடு மரியாதையுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

பஞ்சவன்மாதேவியார், உடையார் ஸ்ரீஇராஜராஜத் தேவருக்கு மனைவியாக இருப்பினும், சிறு வயதில் அவர் தேவரடியாராக இருந்தவர்தான். கோவிலில் மிக அழகாக நாட்டியமாடியவர்தான். இறைவனிடமே தன்னை முழுமையாக ஒப்படைத்து, இறையடியாராக வாழ்ந்தவர்தான்.

பழுவூரில் உள்ள மகாதேவருக்குத் தன்னை அர்ப்பணித்து, இரவும் பகலும் அங்கு இறைவனுக்குச் சேவை செய்து, அங்கு இருக்கும்போது உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரால் பார்க்கப்பட்டு, அரசரின் கவனத்தை ஈர்த்து, அவர் நெருங்கி வந்து விசாரிக்க தன்னைப் பற்றி விவரங்கள் சொல்லி நட்பு கொண்டு, அவருக்குத் துணையாய் பல ஊர்களுக்குப் பயணப்பட்டு, பின் இராஜராஜரை காந்தர்வ விவாகம் செய்து கொண்டார்.

அரச குலத்தில் என்றுமில்லாதபடி; அந்தக் காந்தர்வ விவாகத்தை விளக்கி – ஒரு ஓலையில் எழுதி, 'பஞ்சவன்மாதேவி எனது துணைவியார்' என்று வெகு தெளிவாக உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் ஊருக்கு அறிவித்தார். சோழ மண்டலம் முழுவதும் ஸ்ரீமுகங்கள் அனுப்பி, தனக்கு இப்படி ஒரு மனைவி இருக்கிறாள் என்று அந்த திருமணத்தை உறுதி செய்தார்.

கையில் வளை பூட்டி, தலைக்குப் பூ வைத்து, நெற்றியில் திலகமிட்டு இறைவன் சந்நிதி முன் வலக்கை கோர்த்து, இவள் என் பிரிய மனைவி என்று அறிமுகப்படுத்தினார். பஞ்சவன்மா தேவியைக் கௌரவப்படுத்தினார்.

அது மட்டுமல்லாது, சோழ அரண்மனைக்குப் போய் அப்போது அரசராக இருந்த உத்தம சோழனிடமும், பாட்டியார் கண்டராதித்தன் மாதேவியார் செம்பியன் மாதேவியிடமும் தன் மனைவியான பஞ்சவன்மாதேவியை அறிமுகப்படுந்தினார். முதல் மனைவி தந்தி சக்தி விடங்கி என்கிற உலகமகாதேவியிடம் ஒரு மாதம் தங்க வைத்து, அவர்களுக்கும் பழக். .ப்படுத்தினார்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரின் திருமகனார் ஸ்ரீஇராஜேந்திரத்தேவர், வெகு சீக்கிரம் பஞ்சவன்மாதேவியோடு ஒட்டிக் கொண்டு விட்டார். பத்து வயது மகனும், இருபது வயது சிற்றன்னையும் தஞ்சை முழுவதும் நகர்வலம் வந்தார்கள். எங்கு போனாலும் ஒன்றாகப் போனார்கள். நிறைய கதை பேசினார்கள். பரஸ்பரம் ஒருவரைப் பற்றி ஒருவர் அதிகம் தெரிந்து கொண்டார்கள். பஞ்சவன்மாதேவியின் வருகையை கண்டு பயந்திருந்த உலகமகா தேவியைக் கூட பஞ்சவன்மாதேவி சமாதானம் செய்து விட்டார்கள்.

“உங்களுக்கு நான் போட்டியே அல்ல, எனது வேலை அரசருக்குச் சேவை செய்வது. சோழ மண்டலத்துக்குச் சேவை செய்வது, அரசரைக் கவனித்துக் கொள்வதன் மூலம் நான் சோழ தேசத்தின் வளமைக்குச் சிறிதளவாவது உதவுகிறேன் என்று எண்ணுகிறேன். இதற்குத்தான் நான் பிறந்திருக்கிறேன். இதுதான் என் வேலை. மற்றபடி உங்கள் வாழ்க்கையில் தலை யிடுவதில் எனக்கு விருப்பமில்லை...” என்று பஞ்சவன்மாதேவி, தெள்ளத்தெளிவாக உலகமகாதேவியிடம் சொல்ல, உலகமகா தேவியும் அதைப் புரிந்து கொண்டு பஞ்சவன்மாதேவியைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

சோழ அரண்மனைக்குள் நுழைந்த மூன்றாம் நாள் பஞ்சவன்மாதேவி வேலையாட்களை அழைத்து வருடாந்தரச் சம்பளம் பற்றி விசாரித்தாராம்.

“என்ன இது... கண்டராதித்தர் காலத்துச் சம்பளத்தையா இன்னும் வாங்கிக் கொண்டிருக்கிறீர்கள்? நடுவே உங்களுக்குச் சம்பளம் உயர்த்தப்படவே இல்லையா? எப்படி உங்களால் குடித்தனம் நடத்த முடியும்?” என்று கவலைப்பட்டாராம்.

உடனே அர்த்த ராத்திரியில் போய் அரசரைச் சந்தித்து, தனியே அழைத்து 'நிச்சயம் சம்பளம் உயர்த்தப்பட வேண்டும்' என்று வாதாடினாராம்.

'நாளை பார்த்துக் கொள்ளலாம்' என்று அரசர் சொல்ல, 'முடியாது. இப்பொழுதே உத்தரவிடுங்கள்' என்று சீறினாராம். சம்பளப் பங்கில் பாதியளவு உயர்த்தி, ஒன்றரை பங்குச் சம்பளம் கொடுக்குமாறு அரசர் ஓலை எழுதிக் கொடுக்க, மறுநாளிலிருந்து எல்லோருக்கும் கூடுதலாய் வருமானம் வர ஆரம்பித்தது.

அரண்மனையில் உள்ளவர்களால் இதை நம்பவே முடியவில்லை. ஆச்சரியத்தில் திகைத்துப் போனார்கள். 'பஞ்சவன்மாதேவி மனுஷியா அல்லது தேவதையா' என்று வியந்தார்கள். எங்களுக்கு வருமானம் போதாது. உயர்த்தித் தர வேண்டும் என்று உங்களுக்கு எப்படித் தோன்றியது. எதனால் இந்த எண்ணம் ஏற்பட்டது...' என்று சுற்றிக் கொண்டு கேள்வி கேட்டார்கள்.

"நான் பழுவூரைச் சேர்ந்த தேவரடியார். அங்குள்ள வேலையாட்களை, 'தஞ்சைக்குப் போகிறாயா' என்று கேட்டால் எவருமே போவதற்கு விருப்பம் தெரிவிப்பதில்லை. கீழப்பழுவூரிலும், மேலப் பழுவூரிலும் வசிக்கின்ற வேளாளர்கள் தஞ்சையைவிட பழுவூர்தான் வசிப்பதற்கு மேலான இடம் என்று பேசிக் கொள்வார்கள். இந்தப் பேச்சு எனக்கு ஆச்சரியமாக இருக்கும். இது ஞாபகம் வந்துதான் உங்கள் வருமானம் என்ன என்று சோதித்துப் பார்த்தேன்..." என்று பஞ்சவன் மாதேவி அவர்களுக்குப் பதில் சொன்னாள்.

"இராஜராஜத்தேவரின் மாதேவியார் பஞ்சவன் மாதேவியார் வாழ்க வாழ்க..." என்று எல்லா வேலையாட்களும் ஒன்றாகக் குரல் கொடுத்தார்கள். பஞ்சவன்மாதேவி வேலையாட்களிடமும் நெருக்கமானார்.

"இவர்கள் நமது பரம்பரை வேலையாட்கள், வம்ச வம்சமாய் அரண்மனையில் வேலை செய்கிறவர்கள். நம்மிடம் வேலை செய்வதைப் பெருமையாக நினைக்கிறவர்கள். இவர்களுக்குச் சம்பளம் எதற்கு? அதில் உயர்வு எதற்கு?" என்று செம்பியன் மாதேவியார், பஞ்சவன் மாதேவியின் அந்தச் செயலுக்குக் குறைபட்டுக் கொண்டாராம்.

"பாலும், நெய்யும், தயிரும், கறி சோறும், கோரைப்பாய் படுக்கையும் வேறு எங்கே இவர்களுக்குக் கிடைக்கும்?" என்று கோபமாய் பேசினாராம்.

அதற்கு நான்கு நாட்கள் கழித்து பஞ்சவன்மாதேவி செம்பியன் மாதேவியைச் சந்தித்து வணங்கி, உணவுக்காக உழைப்பது மிருகங்கள் மட்டுமே. மனிதர்களை மிருகங்களாக, வெறும் உணவுக்காக உழைக்கச் சொல்லி வற்புறுத்தக் கூடாது. அவர்களை சந்தோஷப்படுத்த, அவர்கள் மனம் நிறைவடைய நாம் நிச்சயம் சன்மானம் கொடுத்தே ஆக வேண்டும்." என்று சொல்ல, சிறிது வாதத்திற்குப் பிறகு செம்பியன் மாதேவியும் புரிந்து கொண்டார்கள்.

மன்னர் எங்கு, போனாலும் இலை நிறைய உணவு போட்டு விட்டால் போதுமா...? எதற்காக வரி செலுத்துகிறோம்? எப்பொழுது நாம் மக்களிடம் அரசாங்கத்திற்காக வரி வசூலிக்கிறோமோ, அப்பொழுது நாம் வேலையாட்களுக்குச் சம்பளமும் அதிகம் தரவேண்டும்..." என்று பஞ்சவன்மாதேவி எடுத்துரைக்க, செம்பியன் மாதேவி திகைத்துப் போனார்கள்.

"அடியே... நீ பெரிய கள்ளியடி. உள்ளே நுழைந்ததும் நான்... செய்ய மறந்ததை நீ வெகு எளிதாகச் செய்துவிட்டாய். அத்தனை பேர் நன்மதிப்பையும் ஒரே நாளில் பெற்றுவிட்டாய்..." என்று பட்டத்தரசி உலகமகாதேவியார் மனம்விட்டு பஞ்சவன் மாதேவியைப் பாராட்டினார்.

பட்டத்தரசியார் உலக மகாதேவியார் பல்லக்கிலோ, அல்லது யானையிலோ தான் சவாரி செய்வது வழக்கம். இராஜேந்திரரும் தாயோடு பல்லக்கிலோ, யானையிலோ பவனி வருவார். பஞ்சவன்மாதேவி அவரை இழுத்து குதிரையேறச் செய்து அவருக்கு அருகே தானும் குதிரை ஓட்டிக் கொண்டு நகர்வலம் வந்தபோது, தஞ்சை மாநகரம் கைகொட்டி ஆர்ப்பரித்தது. 'சோழ இளவல் வாழ்க' என்று உரக்கக் கூவியது.

'இது அழகு, இது வீரம். இது காணக்கிடைக்காத சிறப்பு' என்று புலவர்களும், பெரியோர்களும் பாராட்டினார்கள். இராஜேந்திரரை வாழ்த்தினார்கள்.

'இளவரசர் இராஜேந்திரருக்கு உடனே புரிந்து போயிற்று. நான் அம்மாவின் மடியிலேயே அமர்ந்திருந்தால் எந்த

மரியாதையும் கிடைக்காது என்பதை மறைமுகமாக பஞ்சவன் மாதேவி உணர்த்தியதைத் தெளிவாகப் புரிந்து கொண்டார்.

ஒரு நாள் குதிரையேறிப் புறப்பட்ட போது துணைக்கு வந்த பஞ்சவன் மாதேவியையும் 'வரவேண்டாம்' என்று தடுத்துவிட்டார். "நகர்வலம் நானே போய்க் கொள்கிறேன். நீங்கள் எதற்கு? வீட்டில் இருங்கள்" என்று சொன்னார்.

பஞ்சவன்மாதேவிக்குள் சந்தோஷம் பொங்கியது.

# 10

பஞ்சவன்மாதேவிக்கு வியப்பு தாங்கவில்லை. ஓடி வந்து இராஜேந்திரர் நெற்றியில் முத்தமிட்டார்.

"இதைத்தான் நான் எதிர்பார்க்கிறேன் இராஜேந்திரா. இந்த வார்த்தைகள் உன்னிடமிருந்து வரவேண்டும் என்று நான் உள்ளுக்குள் ஏங்கிக் கிடந்தேன். எனக்கு மிகுந்த சந்தோஷம். தஞ்சை மட்டுமல்ல; பழையாறைக்கும் போய் அங்குள்ளோரை யும் பார்த்து விட்டு வா..." என்று வேண்டுகோள் விடுத்தார்.

நாற்பது வீரர்கள் துணையோடு பழையாறைக்குப் போய் நகர்வலம் வந்து, மீண்டும் தஞ்சைக்கு வந்த இராஜேந்திரரைப் பற்றி ஊர் முழுவதும் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தது. நடுநடுவே பஞ்சவன்மாதேவியையும் மனமார வாழ்த்தியது.

ஒருமுறை அந்தப்புரத்தில் நூறு பெண்களுக்கு நடுவே செம்பியன் மாதேவியார், பஞ்சவன்மாதேவியை அழைத்து, "எதைக்காட்டி என் பேரன் இராஜராஜனை மயக்கினாய்?" என்று உரத்துக் கேட்க, எல்லாப் பெண்களும் திடுக்கிட்டு பஞ்சவன்மாதேவியைப் பார்க்க, பஞ்சவன்மாதேவி எழுந்து செம்பியன் மாதேவியைப் பணிந்து, "உடம்பு காட்டி உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரை மயக்கினேன்." என்று சொன்னார்.

எல்லாப் பெண்களும் சலசலத்துப் பேச, செம்பியன் மாதேவியார், மெல்லியதாய்ச் சிரித்து, 'அதுதானே பார்த்தேன்' என்று எகத்தாளமாய்க் கேட்டார்.

"எப்படிக் காட்டினேன் என்று நீங்கள் பார்க்க வேண்டாமா?" என்று செம்பியன் மாதேவியை பஞ்சவன்

மாதேவி கேட்க, செம்பியன் மாதேவி திகைத்துப் போனாராம். "என்ன சொல்கிறாய்?" என்று சீறினாராம்.

"உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவருக்கு எப்படி உடம்பு காட்டினேன் என்பதை நீங்கள் அறிய வேண்டாமா?" என்று மறுபடியும் தெள்ளத் தெளிவாய் பஞ்சவன்மாதேவி கேட்க, கூட்டம் திகைத்துப் போயிற்றாம்.

பஞ்சவன்மாதேவி இடுப்புச் சேலையை இறுக்கிக் கட்டி, காலில் சலங்கைகள் மாட்டி, நடுக்கூடத்திற்கு வந்து, மறுபடியும் செம்பியன் மாதேவியை நமஸ்கரித்தாராம்.

'தத்தித்தோம் தத்தித்தோம் ததிகினத்தோம்' என்று ஜதி சொல்லி ப்ஞ்சவன்மாதேவி ஆட ஆரம்பித்தாராம். விநாயகப் பெருமானை வணங்கி, சுந்தரர் கதையைச் சொல்கிறேன்' என்று பாட ஆரம்பித்தாராம்.

சங்கிலி நாச்சியாரின் சத்தியத்தை மீறி சுந்தரர், திருவொற்றியூர் எல்லையைத் தாண்டி திருமுல்லை வாயிலுக்கு வர, அவருடைய கண் பழுதடைந்து விடுகிறது. பார்வை போய் விடுகிறது.

'சங்கிலியின் சத்தியத்திற்காக என்னுடைய கண்களைப் பறித்துக் கொள்கிற...யே... நீயே திரு. நீயே மெய்ப்பொருள். நீயே செல்வம். உன்னுடைய தாள்களையே எப்போதும் இறுகப் பற்றிக் கொண்டு இருக்கிறேனே – என்னை இப்படிச் சோதிப்பது நியாயமா...' என்று சுந்தரர் இறைவனோடு லேசாகச் சண்டை யிடுவதை அவருடைய பதிகம்பாடி பஞ்சவன்மாதேவி நடனமாடிக் காண்பித்தார்.

'சங்கிலியின் சத்தியத்தை மீறியதற்காக நீ என் கண்களைக் கொண்டது நியாயம்தான். ஆனாலும் என்னால் நடக்க முடியவில்லையே அப்பா' என்று வருத்தப்படுவதை இன்னும் அழகாக அபிநயித்துக் காட்டினார்.

*'மற்றுநான் பெற்றது ஆர்பெற வல்லார் வள்ளலே.*
*கள்ளமே பேசி குற்றமே செய்யினும் குணமெனக்*
*கொள்ளும் கொள்கையால் மிகைப்பலச் செய்தேன்'*

என்று பஞ்சவன்மாதேவி பாடி, அதற்கு விளக்கம் சொல்லி, மறுபடியும் நடனமாடத் துவங்கினார்.

'உன்னால் நான் பெற்ற நன்மைகளை வேறு யார் பெறக்கூடியவர்? அருள் செல்வத்தை அளவில்லாது அளிக்கும்

வள்ளலே... உன் அடியவர், வஞ்சனையுள்ள பேச்சுக்களைப் பேசி, குற்றமுள்ள செயல்களையே செய்யினும், நீ உன் கருணையினால் அவற்றைக் குணமாகவே கொள்கிறாய். நீ என் தவறுகளை மன்னித்துக் குணமாகக் கொள்வதால் நான் தீமைகளை மேன்மேலும் செய்து கொண்டிருக்கிறேன். இருப்பினும் நீ என்னை மன்னிப்பாயாக' என்று இறைஞ்சுவதை நடனமாடிக் கொண்டே ஒப்பித்துக் காண்பித்தார்.

நூறு பெண்களுக்கு மேல் இருந்த அந்த அந்தப்புரக் கூட்டம் விம்மி விம்மி அழுதது.

'தவறு செய்யாதவர் யார்? எப்போதும் நேர்மையாய் எவரால் வாழ முடியும்...? நாம் எல்லோரும் தவறுகள் செய்பவர்கள்தான். ஆனால் அந்தத் தவறுகள் செய்யினும், அதை மன்னித்து இறைவன் நமக்கு மேன்மையை இடையறாது வழங்கிக் கொண்டிருக்கிறான்' என்று ஜொலிக்கின்ற விஷயங்களை பஞ்சவன்மாதேவி சொல்ல, அங்குள்ள எல்லோரும் கைகூப்பி, கண்ணில் நீர்வழிய பஞ்சவன்மாதேவியை வணங்கினார்கள்.

"அம்மா, இந்தப் பாட்டைத்தான் பாடி, ஆடிக் காட்டினேன். அரசர் இந்தப் பாட்டிற்குத்தான் மயங்கினார். இந்த ஆட்டத்துக்குத்தான் கிறங்கிப் போனார். என்னோடு பேச வந்தார். பேசிப்பேசி ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு திருமணம் செய்து கொண்டோம். அம்மா, நான் தீர்க்க சுமங்கலியாய் இருக்க வேண்டும் என்று வாழ்த்துங்கள்..." என்று பஞ்சவன்மாதேவி வணங்கி நிற்க, செம்பியன் மாதேவியார் அடக்க முடியாமல் விம்மி விம்மி அழுததாகவும், வாரி அணைத்துக் கொண்டதாகவும் அந்தப்புரச் செய்திகள் தஞ்சை முழுவதும் சொல்லப்பட்டன.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு செம்பியன் மாதேவி, பஞ்சவன் மாதேவியைத் தினமும் அழைத்து 'சுந்தரரைப் பற்றிச் சொல், சுந்தரரைப் பற்றிச் சொல்' என்று பஞ்சவன்மாதேவியோடு காலம் நகர்வது தெரியாமல் பேசத் துவங்கி விட்டார்கள். அவர் தன் அருகிலேயே இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.

"நீ உலக மகாதேவிக்குப் பணிவிடை செய்ய வேண்டும். இராஜேந்திரனோடு நகர்வலம் வர வேண்டும். செம்பியன் மாதேவிக்கு சுந்தரரைப் பற்றிச் சொல்ல வேண்டும். இங்குள்ள வேலையாட்களுக்குச் சம்பளம் போக்குவரத்துகளைக் கவனிக்க

வேண்டும். எனக்கு நீ என்ன செய்வதாக இருக்கிறாய்?" என்று இராஜராஜர் ஒருமுறை சீற, "இவர்களெல்லாம் உங்களைத் தொந்தரவு செய்யாமல் இருக்கும்படி வைத்துக் கொள்கிறேனே... இந்தப் பணி போதாதா..." என்று பஞ்சவன்மாதேவி சொல்ல, இராஜராஜர் வாய்விட்டுச் சிரித்தாகவும் செய்தி பரவியதுண்டு.

மதர்த்த உடம்பும், கூரிய புத்தியும், ரசனைத் திறனும் கொண்ட பெண்ணாய் — இராஜராஜரின் உடைமையாய் சோழதேசத்துக்குள் நுழைந்த பஞ்சவன்மாதேவிக்கு இப்போது முப்பத்தி மூன்று அகவை ஆகிவிட்டது.

முன்புபோல் இப்போது துள்ளி நடனமாடுவதில்லை. ஆனாலும் பாடுவதுண்டு. நிறைய கதைகள் சொல்வதுண்டு. அரசருக்குத் துணையாய் எல்லா வேலைகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வதுண்டு. அரசர் எங்கு போகிறாரோ, அங்கெல்லாம் குதிரையேறி தானும் உடன் போவதுண்டு. உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவரைச் சந்திக்க சிற்றரசர்கள் வர, அந்தச் சிற்றரசர்களோடு வருகின்ற பெண்டிர்களை, வரவேற்றுக் கௌரவிக்கின்ற வேலையும் பஞ்சவன்மாதேவியுடையதே.

அழகும், அறிவும், செயல் திறனும், நல்ல குணமும் பெற்ற பஞ்சவன்மாதேவி, எப்போதும் போல இந்த முறையும் அரசருக்கு அருகே இருந்து திருக்காட்டுப்பள்ளி மனையில் தங்கி அரசருடைய வரவுக்காகக் காத்திருந்தார்.

இரவு உணவு முடிந்து படுக்கையில் வந்து படுத்த அரசர், திடீரென்று வாசலில் ஏதோ சத்தம் கேட்க, எழுந்து போய் விசாரித்து, உடனே உடைமாற்றிக் கொண்டு 'பழமர்நேரியை நோக்கிப் போகிறேன்' என்று மட்டும் சொல்லி குதிரையேறிப் போனது பஞ்சவன்மாதேவிக்கு லேசாய் ஒரு கவலையைக் கொடுத்தது.

மாளிகை காக்கும் வீரனை வேகமாகப் பின்னே அனுப்பி, அரசரைப் பின் தொடர்ந்து கொண்டிருந்த — செய்தி கொண்டு வந்த வீரனை மடக்கி அழைத்து வரச் செய்தார். 'என்ன விஷயம்' என்று கேட்டார். 'இளவரசர் இராஜேந்திரர் அனுப்பிய தூதுவர்கள் சில ஓலைகளோடு பழமர்நேரிக்கு அருகே ஒரு இடத்தில் ஆறு தாண்டுகிறார்கள்' என்ற செய்தி தெரிந்து கொண்டார்.

'இராஜேந்திரனிடமிருந்து ஓலை வருகிறதா' பஞ்சவன் மாதேவி கவலையானார். படுக்கை போட்டு உட்கார்ந்து

கொண்டு, அரசர் எப்போது வருவார் என்று அரசர் போன கால் நாழிகையில் எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டார்.

இதுதான் பஞ்சவன்மாதேவியின் குணம். தன்னைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காமல், தன் சுகம் பற்றி நெல் முனையளவும் நினைக்காமல் அரசருடைய போக்கையும், செயல்களையும், பேச்சையும் உற்றுக் கவனித்துக் கொண்டு இருப்பதுதான் பஞ்சவன்மாதேவியின் தலையாய கடமை. அங்கங்கே தலையிட்டு அரசருக்கு உதவி செய்வதுதான் அவருடைய முக்கியமான பணி.

அந்தப் பணியை வெகு திறமையாக பஞ்சவன்மாதேவி செய்து கொண்டிருப்பதை திருவாரூர் தேவரடியார் சித்திர வல்லியும், திருவையாறு தேவரடியாரான சீருடையாளும் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

அரசியார் தனியே உப்பரிகையில் அரசருக்காகக் காத்திருக்க, தான் போய் தூங்குவதா என்று அவருக்கு அருகே போய் உட்கார்ந்து கொண்டார்கள்.

அந்த மாளிகையில் பத்துக்கும் மேற்பட்ட தேவரடியார்கள் தங்கியிருந்து வரவேற்ற போதிலும், இந்த இரண்டு பெண்கள் தனக்கு அருகிலேயே இருந்து, காவல் காப்பதுபோல் தன்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பது பஞ்சவன்மாதேவிக்குப் பிடித்திருந்தது. இரண்டு பெண்களும் மிகவும் கெட்டிக்காரர்கள் என்பது தெளிவாகப் புரிந்தது.

ஒரு தேசத்தில் பெண்கள் பயமின்றியும் கெட்டிக்காரத்தன மாகவும் இருந்தால்தான் அந்த தேசம் சுபிட்சமடையும் என்பது அவருக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட பாடம். எனவே இந்தப் பெண்களை மேலும் உற்சாகப்படுத்த பஞ்சவன்மாதேவி தீர்மானித்தார். அதே சமயம் அவர்களாகவே பேச முன் வரட்டும் என்று காத்திருந்தார்.

சித்திரவல்லி மெல்ல தொண்டையைக் கனைத்து பஞ்சவன்மாதேவியை நோக்கிப் பேசத் துவங்கினாள். 'அம்மா' என்று பிரியத்துடன் விளித்தாள். பஞ்சன்மாதேவி திரும்பிச் சிரிக்க, சித்திரவல்லியும் சிரித்தாள்.

"அம்மா, எங்களுக்கும் சுந்தரர் பற்றிச் சொல்லுங்களேன். செம்பியன் மாதேவியை நீங்கள் சுந்தரர் கதை சொல்லி மயக்கியது தஞ்சை முழுவதற்கும் தெரியும். சுந்தரர் கதை நீங்கள்

சொல்வதுபோல வேறு யாராலும் சொல்ல இயலாதாம். எனவே, உங்கள் அருகே இருக்கின்ற இந்த நேரத்தை சுந்தரர் கதை கேட்கும் நேரமாக நாங்கள் மாற்றிக்கொள்ள விரும்புகிறோம். உங்களுக்கு ஆட்சேபணை இல்லையெனில், உங்கள் மனம் வேறு பிரச்சினைகளில் ஈடுபடவில்லையெனில் தயவுசெய்து எங்களுக்காக சுந்தரர் பெருமானார் கதையைச் சொல்கிறீர்களா?"

"சரி; உங்களுக்குச் சுந்தரர் பற்றிச் சொல்கிறேன். பதிலுக்கு நீங்கள் எனக்கு என்ன செய்வீர்கள்?" பஞ்சன்மாதேவி இரண்டு பேரையும் கூர்மையாகப் பார்த்துக் கேட்டார்.

"நீங்கள் என்ன சொன்னாலும் செய்கிறோம் அம்மா..." இரண்டு பேரும் ஒரே குரலில் கூவினார்கள்.

"எது வேண்டுமானாலும் செய்வீர்களா?"

"ஆமாம் அம்மா... உங்களுக்காக உயிரைக் கொடுக்கக்கூட நான் சித்தமாக இருக்கிறேன்..." சித்திரவல்லி வேகமாகப் பேசினாள்.

"அடிப் போடி... உன் உயிர் எனக்கெதற்கு? அதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது?"

"உடம்பால் ஏதேனும் செய்ய வேண்டுமா அம்மா?" எதிரே உட்கார்ந்து கொண்டிருந்த சீருடையாள் புரிந்து கொண்டு கேட்டாள்.

"ஆமாம் சீருடையாள், நடனமாட வேண்டும். இடையறாது மக்களுக்கு நடுவே போய் நடனமாட வேண்டும். வெறும் துள்ளல் நடனமாக இல்லாமல், உடல் இச்சையைப் பற்றிப் பேசுகின்ற பாடல்களாக இல்லாமல், நாட்டிய நாடகமாக ஆடுவதை நாம் கைக்கொள்ள வேண்டும்.

சித்திரவல்லி என்றால் ஒரு நாடகம். சீருடையாள் என்று சொன்னால் ஒரு நாடகம் என்று மக்களிடையே பிரபல்யமாக வேண்டும். நான் சொல்கிற இந்த சுந்தரமூர்த்தி நாயனார் கதையை நீங்கள் நடனமாக, நாட்டிய நாடகமாக மாற்றி எங்கெல்லாம் மக்கள் குழுமியிருக்கிறார்களோ அங்கெல்லாம் மறுபடி மறுபடி ஆடி அவருடைய வாழ்க்கையை, அவர் இறைவன் மீது பாடிய பாடல்களைப் பிராபல்யப்படுத்த வேண்டும். செய்வீர்களா?"

"நிச்சயம் செய்கிறோம் அம்மா..."

அவர்கள் தரை மீது மெல்ல அடித்துச் சத்தியம் செய்தார்கள்.

அந்த இடத்தில் ஒரு மௌனம் நிலவியது.

## 11

“அம்மா...”

சீருடையாள் பஞ்சவன் மாதேவியை அழைத்தாள். பஞ்சவன்மாதேவி ‘என்ன’ என்பது போல் திரும்பிப் பார்த்தாள்.

“பல நாயன்மார்கள் பிரபல்யமாக இருக்க, சுந்தரர் மட்டும் ஏன் உங்களுக்கு அவ்வளவு முக்கியமாகப் போயிற்று?”

சீருடையாள் கேள்வி கேட்டாள்.

பஞ்சவன்மாதேவிக்கு இந்தக் கேள்வி பிடித்திருந்தது. கெட்டிக்காரர்கள்தான் சரியான கேள்வி கேட்பார்கள். சரியான கேள்வி கேட்பவர்கள்தான் சரியாக தங்களைப் புரிந்து கொண்டவர்களாக இருப்பார்கள். கேள்வி கேட்கத் தெரியாதவர்களுக்குப் பதிலையும் புரிந்து கொள்ளத் தெரியாது. பதிலைப் புரிந்து கொள்ளத் தெரியாது போனால், கேள்வி எழவே எழாது. எனவே கேள்வி கேட்கிறவர்களை பஞ்சவன்மாதேவி அதிகம் விரும்பினார்.

“நல்ல கேள்வி கேட்டாய் சீருடையாள்... சொல்கிறேன் கேள்.

சுந்தரர் ஒரு கெட்டிக்கார அந்தணர். வாழ்க்கையை நன்கு அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணமுடையவர். பலர் போற்றப் படிக்க வேண்டும். நல்ல உத்தியோகத்தில் அமர வேண்டும். நிறைய பொற்காசுகள் சம்பாதிக்க வேண்டும். அழகனாக விளங்க வேண்டும். ‘அடடா... எவ்வளவு அழகு’ என்று பெண்கள் போற்ற வேண்டும். அப்படிப் போற்றிய பெண்களை இவர் ஓரக் கண்ணால் கவனித்து சந்தோஷப்பட வேண்டும். சபைக்கு நடுவே, அது வயதானவர்களின் சபையாக இருந்தாலும் இளையவர்கள் நிறைந்த சபையாக இருந்தாலும், தானே முன்னின்று பேச வேண்டும். தன் குரலே அங்கு எடுபடல் வேண்டும் என்ற சாதாரண உத்வேகங்கள் கொண்டவர்.

சுந்தரமூர்த்திக்கு அழகு இருந்தது. அறிவு இருந்தது. முன்னேறுகின்ற ஆசை இருந்தது. ஆனால் அதில் இறை நினைப்பு கலக்கவில்லை. நாலா பக்கங்களும், நாலா விஷயங்களிலும் மனம் பரவிற்றே தவிர எந்த விஷயங்களையும் இறைநோக்கி எடுத்துப் போகின்ற சிந்தனை ஏற்படவில்லை. தானே முக்கியம் என்கின்ற சிறிய கருத்து கொண்டு அவர் வளர்ந்து வந்தார்.

அந்தக் கருத்தை அழித்து, அந்த அறிவை, அந்த அழகை, அந்த முன்னேறுகின்ற வேகத்தை இறைவன் தன் பக்கம் திசை திருப்பினார். அழகும், அறிவும் திமிரும் கொண்ட எல்லா மக்களும் சுந்தரமூர்த்தி நாயனார் குணத்தைத்தான் கொண்டிருக்கிறார்கள். அந்தக் குணத்துக்கு நடுவே இறைஉணர்வு கலந்துவிட்டால் அந்த அறிவுக்கும், அழகுக்கும் அர்த்தம் ஏற்படுகிறது. இல்லையெனில், அவை நாசம் விளைவிப்பவையாக மாறி, மற்றவர்களுக்கும் சேதம் விளைவித்து, தாங்களும் மோசமாக அழிந்து போகிறார்கள்.

நான் இல்லாத இடத்தில் உன் அறிவும், அழகும், திமிரும் எதற்கும் பயன்படாது' என்பதை இறைவன் சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரத்தின் மூலம் நமக்குச் சொல்கிறார்.

உதாரணமாய், சித்திரவல்லி எவ்வளவு உயரம்? எத்தனை அமைப்பான உடம்பு. இவள் துள்ளித் துள்ளி ஆட, எத்தனை ஆண்கள் விழி மூடாமல் பார்த்து கொண்டிருப்பார்கள். இத்தனை ஆண்கள் பார்க்கும்படியான ஆட்டம் தெரிந்த அந்தப் பெண்மணி, ஆடுகிறபோது வெறுமே காம இச்சை தூண்டுகின்ற பாடல்களுக்கு மட்டும் ஆடுவதால் என்ன புண்ணியம்... இந்த ஆட்டத்தை இவள் எத்தனை நாள் ஆடுவாள்... ஐந்து வருடம் அல்லது பத்து வருடம்... பிறகு இவளை ஏறிட்டுப் பார்ப்பார் எவரும் இல்லை.

இதே ஆட்டத்தை, இறைவன் பக்கம் திசை திருப்பி, இறைவன் பெயரைச் சொல்லி, இறைவன் மகிமையைச் சொல்லி ஆடினால் இவளை சகலரும் ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பார்கள். இருபது வருடம் கழித்துப் பார்த்தாலும் கை கூப்பி வணங்குவார்கள். 'நீங்கள் அன்று இறைவன் பெயர் சொல்லிப் பாடி ஆடினீர்களே... அன்று நான் மனம் மாறினேன். அதற்காக உங்களுக்கு நன்றி' என்று நன்றி சொல்வார்கள்.

ஆக, உன் கலையும், உன் அழகும், உன் அறிவும், உன் திமிரும் நல்ல விஷயங்களுக்குப் பயன்படுவதுதான் முக்கியமே ஒழிய, வெறும் ஆட்டத்திற்கு அல்ல. வெறும் மனித இச்சைகளைத் தீர்ப்பதற்காக அல்ல. மனிதர்கள் இங்கு உண்மையாக எதைக் கற்றுக் கொள்ள வேண்டுமோ அதை நீ கற்றுக் கொண்டு, மற்றவருக்கும் கற்றுக் கொடுப்பதே உன்னுடைய அழகுக்கும் அறிவிற்கும் நீ செய்கிற மரியாதை..."

பஞ்சவன்மாதேவி உரத்துப் பேச, இரண்டு பெண்களும் திகைத்துப் போனார்கள்.

"வாழ்க்கை முழுவதும் சுந்தரமூர்த்தி நாயனார் சாதாரண மனிதராகவே இருந்தார். தனக்கு என்ன வேண்டுமோ, அதையெல்லாம் தயங்காமல் இறைவனிடம் கேட்டார். எதற்குக் கேட்டாரெனில், இறைவனைப் புகழ்ந்து பாடுவதற்கு எது உபயோகமோ, எது தனக்குத் தேவையோ அதைக் கேட்டார்.

திருமண நேரத்தில் அவரைப் பிரித்து வெளியே கூட்டி வந்த இறைவன், திருவாரூரில் பரவையார் என்கிற தேவரடியாரோடு சேர்த்து வைத்தான். பரவையார் தேவரடியார் தான். ஆனால் அரசரையோ, செல்வந்தரான வியாபாரியையோ அவள் விரும்பவில்லை. இறைமயமான ஒரு ஆணுக்காக அவள் காத்திருந்தாள். அப்படிக் காத்திருந்த பரவையாருக்கு சுந்தர மூர்த்தி நாயனார் கிடைத்தார்.

தானே வலியப் போய் அவளை நேசிப்பதாகச் சொன்னார் சுந்தரர்.

பரவையாருக்கு அவரை உடனே பிடித்து விட்டது. அறிவும் ஞானமும், இறைத் தன்மையும் கொண்ட ஒரு மனிதரைச் சந்தித்து விட்டோம் என்ற மகிழ்ச்சியில், உடனே அவர் பாதங்களில் விழுந்து தன்னை அவரிடம் அர்ப்பணித்துக் கொண்டாள். அவருடன் சேர்ந்து வாழ்ந்து, அவருடைய இறைத் தொண்டு மேம்பட மிகவும் உதவினாள். அவர்கள் இருவருடைய வாழ்க்கையும் இறைவாழ்க்கையாகப் போயிற்று..."

"அம்மா..." சித்திரவல்லி வாஞ்சையுடன் கூப்பிட்டாள். பஞ்சவன்மாதேவி அந்த விளிப்புக்கு நெகிழ்ந்து போய்த் திரும்பிப் பார்த்தார்.

"நீங்கள் சுந்தரமூர்த்தி நாயனாரையும், பரவையாரையும் பற்றிப் பேசுகிறீர்களா... அல்லது உங்களையும் இராஜராஜ சோழரையும் நினைத்துப் பேசுகிறீர்களா?"

பஞ்சவன்மாதேவி இந்தக் கேள்விக்கு திகைத்துப் போனாள். கை நீட்டி, சித்திரவல்லியின் கழுத்தை இழுத்து வளைத்து, அணைத்துக் கொண்டார்.

"நீ சொல்வது சரி. சுந்தரமூர்த்தி நாயனாரும், பரவையாரும் போலத் தான் நானும், ராஜராஜசோழரும் இருக்கிறோம். ராஜராஜசோழர் வெறும் அரசரல்ல. இறைப்பணி செய்யவே அவர் இங்கு வந்திருக்கிறார். இந்த தேசத்தின் மேன்மையை உயர்த்துவதற்காக வந்திருக்றொர். நமது நாகரீகத்தை எல்லாத் திசைகளிலும் பரப்புவதற்காக வந்திருக்கிறார். மக்களின் நலனுக்காக வந்திருக்கிறார். அவருக்கு என்னாலான உதவிகளைச் செய்யத்தான் நான் பிறந்திருப்பதாக நினைக்கிறேன். என் ஆட்டமும், பாட்டமும், அறிவும், அழகும் அதற்காகத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து வைத்திருக்கிறேன். உங்களுக்கும் எனக்குக் கிடைத்தது போல, இறைப்பணி செய்கின்ற புருஷர்கள் கிடைக்கட்டும்..."

"அம்மா... தொலைவில் குதிரை சத்தம் கேட்கிறது..." சித்திரவல்லி துள்ளி எழுந்து நின்றாள். அந்தச் சத்தத்தை சீருடையாளும் கவனித்துக் கேட்டாள்.

"ஆமாம் அம்மா. இரண்டு குதிரைகள் வரும் சத்தங்கள் கேட்கின்றன..."

"இரண்டு குதிரைகளின் சத்தங்களா... எனக்குக் கேட்கவே இல்லையே..." பஞ்சவன்மாதேவி காதைக் கூர்மையாக்கிக் கொண்டு கவனித்தார்.

"தெள்ளத் தெளிவாகக் கேட்கிறது அம்மா. பழமர்நேரிப் பக்கமிருந்துதான் சத்தம் வருகிறது..."

பஞ்சவன்மாதேவிக்குச் சட்டென்று வருத்தம் பற்றிக் கொண்டது.

'சற்று வயதானாலும் புலன்கள் மழுங்கத் துவங்கி விடுமோ... முப்பத்து மூன்று அகவைதான் ஆகிறது. ஆனாலும் உடம்பில் லேசாக ஒரு தொய்வு தெரிகிறது. விண்ணென்று திமிறிக் கிடந்த உடம்பு இப்போது இல்லை. நாண் இழுத்துக் கட்டிய வில்போல ஒரு வேகத்தோடு கூடிய செயல்கள் செய்ய முடியவில்லை. எல்லாவற்றிலும் ஒரு நிதானம். மென்மை வந்து விட்டது. எதுவும் லேசான சந்தேகத்திற்குப் பிறகே தெளி

வாகிறது. இது புலன்களின் அழிவா அல்லது மனதின் முதிர்ச்சியா...' யோசித்தார்.

எந்த முடிவுக்கும் வராமல் அவர்கள் சொன்னதை மட்டும் வாங்கிக் கொண்டு ஆவலுடன் எழுந்து நின்றார். குதிரைகள் சத்தம் வருகிறதா என்று கூர்மையுடன் கேட்டார்.

இல்லை. அவருக்கு குதிரைகளின் சத்தம் கேட்கவே இல்லை. மறுபடியும் ஒரு மெல்லிய சோர்வு பஞ்சவன்மாதேவியைப் பற்றிக் கொண்டது. அவர் உப்பரிகையைத் தாண்டி, உள்ளுக்குள் நடந்து, அறைகள் கடந்து, மாடிப்படியில் கீழிறங்கி, முற்றம் சுற்றிய அகலமான நடைகளில் நடந்து வாசலுக்கு வந்து நின்றார். குளிர் அதிகமானது போல் ஒரு எண்ணம் வந்தது. இன்னும் சற்று இறுக்கிப் போர்த்திக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

மெல்ல மெல்ல உன்னுடைய புலன்கள் அழிந்து வருகின்றன என்று உனக்குப் புரிகிறதா? உன்னுடைய சௌந்தர்யம் குறைந்து கொண்டே வருகிறது என்றும் இதற்கு அர்த்தம். எப்பொழுது உனக்குக் காது கேட்கவில்லையோ, இன்னும் சற்று நாளில் உனக்குக் கண் பார்வையும் மங்கத் தொடங்கிவிடுமல்லவா... கண்கள் தெரியாத போது நடையும் தளருமல்லவா. நடை தளர்ந்தால் மூச்சு வேகம் மாறுமல்லவா... மூச்சு வேகம் மாறினால் ஈளையும், இளைப்பும் ஏற்படுமல்லவா. ஈளையும், இளைப்பும் ஏற்பட்டால் உடம்பில் பித்தம் ஏற்படுமல்லவா. உடம்பில் பித்தம் ஏற்பட்டால் சட்டென்று நரை பெறுவோமல்லவா. பிறகு உடம்பில் சுருக்கங்கள் ஏற்படுமல்லவா. உணவு செரிமானமும், ரத்த ஓட்டமும் குறைந்து போகுமல்லவா. இப்படி வயதான பிறகு என்ன சாதிக்கப் போகிறாய்? நீ பெண்ணாய்ப் பிறந்ததற்கு என்ன அர்த்தம் சொல்லப் போகிறாய்?'

மனம் அவரைக் கேள்வி கேட்கத் துவங்கியது. அவர் எந்தப் பதிலுமில்லாமல், இருட்டை நோக்கி வெறுத்துப் பார்த்தார்.

"அந்த பஞ்சவன்மாதேவியை ஊர் முழுவதும் கொண்டாடுவது எனக்குப் புரிகிறது. அவள் தேவரடியார், அழகி, நல்ல பேச்சுக்காரி, அரசனைச் சரியாக இனங்கண்டு கொண்டு தன் கைக்குள்ளே போட்டுக் கொண்டவள். அவளால்

பல பேர், பல உதவிகள் பெற முடியும் என்று நினைத்து, அவளைச் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். எல்லாம் புரிகிறது. ஆனால் நீயும் கொண்டாடுகிறாயே. அதுதான் எனக்குப் புரியவில்லை..." என்று செம்பியன் மாதேவியார் ஒரு முறை உலக மகாதேவியிடம் கேட்க,

"வந்த இரவே அருண்மொழியிடம் சொல்லி, இங்குள்ள வேலைக்காரர்களுக்கு வருமானத்தை உயர்த்திக் கொடுக்க அவளால் முடிகிறதென்றால், வேறு என்னதான் செய்ய முடியாது?

என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும், எப்போது செய்ய வேண்டும் என்று தெள்ளத் தெளிவாகத் தெரிந்தவளைக் கொண்டாடுவதில் தவறொன்றும் கிடையாதே..." என்று உலக மகாதேவி கேலியாகப் பதில் சொன்னாள்.

"உனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் நீ முதல் தரமான மண்டூகம் என்பது எனக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து விட்டது. உனக்கு சோழ வாரிசாக இராஜேந்திரன் பிறந்திருக்கிறான். நாளை பஞ்சவன்மாதேவிக்கு குழந்தை பிறந்தால் அவனும் மன்னரின் வாரிசாகப் பட்டத்துக்குப் போட்டியாக வரமாட்டான் என்பது என்ன நிச்சயம்? மறைமுகமாவோ, நேர்முகமாவோ மீண்டும் ஒரு வாரிசுச் சண்டை சோழ தேசத்தில் நடக்காது என்று எவர் சொல்ல முடியும்? ஆதித்த கரிகாலனா, உத்தம சோழனா - யார் சோழ தேசத்தை ஆட்சி செய்வது என்ற கேள்வி ஒருமுறை எழுந்து விடவில்லையா? உத்தம சோழனா, இராஜராஜனா என்று மறுபடியும் இன்னொரு முறை கேள்வி எழவில்லையா.

ஒவ்வொரு தலைமுறையிலும் சோழதேசம் இந்தக் கேள்வியைச் சந்தித்துத்தான் ஆக வேண்டுமா? இன்னொரு ஆதித்த கரிகாலன் கொலையும், இன்னொரு உத்தம சோழன் மறைவும் இந்த தேசம் சந்திக்கத்தான் வேண்டுமா?" என்று செம்பியன் மாதேவி உரத்துப் புலம்ப, பட்டமகிஷி உலக மகாதேவி முகத்தைப் பொத்திக்கொண்டு ஓடிப்போய் அறைக்குள் உட்கார்ந்தவள்தான். எழுப்பிச் சோறு போட மூன்று நாட்கள் ஆயிற்று.

"பஞ்சவன்மாதேவி... தயவு செய்து யாருக்கும் வேண்டுமானாலும் பட்டம் கொடு. ஆனால் என் மகனைக் கொன்று விடாதே..." என்று பட்டமகிஷி பஞ்சவன்மாதேவியிடம் வந்து அழ, பஞ்சவன்மாதேவி திகைத்துப் போனார்.

# 12

உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவர் கோபமாகி, 'யாரால் இது ஏற்பட்டது' என்று பல் கடித்துக் கிளம்ப, பஞ்சவன்மாதேவி அவரை மெல்ல சமனப்படுத்தினார்.

"இந்தக் கேள்வி நியாயமானது. இதற்கு நான்தான் பதில் சொல்லியாக வேண்டும். இத்தனை கேள்விக்குப் பிறகும் உலகமாதேவியார் என்னிடம் பிரியமாகத்தான் இருக்கிறார்கள். மரியாதையோடுதான் பேசுகிறார்கள். இன்னொருவர் அவர் மனதைக் கலைத்த பிறகும் என்னை வெளியே போ என்று சொல்லாமல், தனக்கும், தன் மகனுக்கும் எந்தக் கேடும் உண்டாக்காது இருக்குமாறு வேண்டிக்கொள்கிறார்கள். அப்படியென்றால் அவர்கள் என்னை ஏற்றுக் கொண்டார்கள் என்றுதானே அர்த்தம். என்னை ஏற்றுக் கொண்ட பெண்மணிக்கு நான் எப்படி தீங்கு செய்வேன்?

அவர்களுக்கு நம்பிக்கை ஊட்ட வேண்டும். எப்படி நம்பிக்கை ஊட்டுவது என்பது எனக்குத் தெரியும். நாளை காலையில் நான் பழுவூர் கிளம்புகிறேன். உங்களை விட்டு ஒரு மூன்று மாதம் பிரிந்திருக்கப் போகிறேன். தயவு செய்து தாங்கள் அதற்கு அனுமதியளிக்க வேண்டும்..." என்று பஞ்சவன்மாதேவி, உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரைக் கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்.

"பழுவூர் போய் என்ன செய்யப் போகிறாய்?" ராஜராஜர் கேட்டார்.

"எனக்குச் சில வேலைகள் இருக்கின்றன..."

"என்ன வேலை?"

"இப்போதைக்குச் சொல்வதற்கில்லை. பழுவூர் சிவனை பரமேஸ்வரரைக் கைகூப்பி, மன்றாடி சில உத்தரவுகளைக் கேட்டு வர வேண்டும். சில நோன்புகள் இருக்க வேண்டும். நீங்கள் அருகிலிருந்தால் என்னால் எந்த விரதமும் இருக்க முடியாது. எனவே, உங்களை விட்டு ஒரு மூன்று மாத காலம் பிரிந்திருக்க எனக்கு உத்தரவிட வேண்டும்..." என்று பஞ்சவன்மாதேவி கேட்க, அரசர் நெகிழ்ந்து போனார். அருகே வந்து அணைத்துக் கொண்டார்.

“போய் வா… அற்புதமான பெண்ணாகிய உன்னையும் இந்த அரசியல் சிக்கலில் சிக்க வைத்ததற்கு நான் வெட்கப் படுகின்றேன்.

என்ன செய்வது?

இராஜராஜனைச் சுற்றி இப்படித் தான் வாழ்க்கை இருக்கிறது. இராஜராஜனைச் சுற்றி இப்படித்தான் மனிதர்கள் இருக்கிறார்கள். என்னுடைய சிக்கலில் நீயும் சிக்கிக்கொண்டாய் என்பது எனக்குப் புரிகிறது. ஆனாலும் வேறு வழியில்லை. இதிலிருந்து விடுபட உனக்கு என்ன உதவி வேண்டுமானாலும் கேள். செய்யத் தயாராக இருக்கிறேன். எனக்கு நீ வேண்டும். உன் அன்பு வேண்டும். உன் சிநேகம் வேண்டும். உன் பிரியம் வேண்டும். நீ இல்லாமல் என்னால் இருக்க இயலாது. எனவே என்னை விட்டுப் பிரியும் எண்ணத்தைத் தவிர்த்துவிடு. அப்படி ஏதேனும் எண்ணம் உள்ளுக்குள் இருந்தால், அந்த எண்ணத்தை முற்றிலுமாய்த் துடைத்துவிட்டு சரியாக மூன்று மாதம் இடைவெளி எடுத்துக் கொண்டு பழுவூர் போய்வா… அவ்வப் போது ஓலை எழுது…” என்று இராஜராஜர் பஞ்சவன் மாதேவிக்கு விடை கொடுத்தனுப்பினார்.

பழுவூர் திகைத்தது. ‘என்ன, ஏன் வந்து வீட்டீர்கள். எதனால் திரும்பி விட்டீர்கள்’ என்று விசாரித்தது.

‘உங்களைப் பார்ப்பதற்கு நாங்கள் வரலாமென்று நினைத் திருந்தோம். நீங்கள் வந்து வீட்டீர்களே… ஏதேனும் பிரச்சினையா…” என்று அங்குள்ள தேவரடியார்கள் ஆதுரமாக விசாரித்தார்கள்.

“எதுவும் இல்லை. அரசருக்கு வேறு சில வேலைகள் இருப்பதால் என்னை ஓய்வெடுக்கச் சொல்லி இங்கு அனுப்பினார்…” என்று மழுப்பலாய் பஞ்சவன்மாதேவி பதில் சொன்னார்.

பழுவூர் அரண்மனை வைத்தியருக்கு ஆள் அனுப்பினார். அவர் வந்ததும், அவரைத் தனியே அழைத்துப்போய் ரகசியமாய் தன் வேண்டுகோள் சொன்னார்.

“என்னம்மா நீங்கள்? பைத்தியமாக இருக்கிறீர்கள். யாரும் செய்யத் துணியாத விஷயத்தை எதற்கு நீங்கள் செய்ய வேண்டும்? பெண்களுக்கு இருக்கின்ற அற்புதமான ஒரு விஷயத்தை இப்படிப் பலியிடுவதற்கு நான் ஒருக்காலும்

சம்மதிக்கமாட்டேன். வைத்தியனுடைய வேலை இதுவல்ல. கேட்பது யாராக இருந்தாலும் ஒரு வைத்தியன் இப்படிச் செய்து விடக்கூடாது. எனவே, அந்த எண்ணத்தைக் கைவிட்டுவிட்டு... உடனடியாக அரசரை நோக்கிப் பயணப்படுங்கள்...” என்று வைத்தியர் சற்று கோபமாக சொன்னார்.

“இல்லை. நீங்கள் எனக்கு இந்த உதவி செய்துதான் ஆகவேண்டும்.”

“அம்மா. நான் இன்று உதவி செய்து விடலாம். ஆனால் உங்களுக்கு இந்த உதவியைச் செய்துவிட்டு, நாளைக்கு எந்த முகத்தோடு அரசரிடம் போய் நிற்பேன்? அரசர், ‘ஏன் இப்படிச் செய்தீர்கள்’ என்று கேள்வி கேட்டால் என்னால் பதில் சொல்ல முடியுமா? ஒரு வைத்தியன் இப்படிச் செய்யலாமா என்று எவரேனும் கேட்டால், அவர்களுக்கு என்னால் பதிலளிக்க முடியுமா? உங்கள் பெயரைச் சொன்னாலும் அது என் குற்றமாகத்தான் ஆகுமே ஒழிய, நீங்களே விரும்பிச் செய்ததாக ஆகாது...” என்று வைத்தியர் மீண்டும் வேகமாக மறுத்தார்.

பஞ்சவன்மாதேவி இடுப்பிலிருந்து ஒரு ஓலையை எடுத்து வைத்தியரிடம் நீட்டினார்.

“உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரின் மனைவியான பஞ்சவன்மாதேவி நான் விருப்பத்துடன் எழுதிக்கொள்ளும் ஓலை. பழுவூர் அரண்மனை வைத்தியர் மெய்ஞான சிவன் அவர்கள் என் விருப்பப்படியே எனக்கு மருந்துகள் கொடுத்து, என் கருப்பையை மலடாக்கினார். இதை அரசியல் காரணத்திற்காகவும், என் குடும்ப சூழ்நிலை காரணமாகவும், உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரின் சிறப்புகள் சிறிதும் குன்றாதிருப்பதற்காகவும் செய்து கொள்கிறேன். நான் இதை என் முழு மனதோடும், தெளிந்த எண்ணத்தோடும், சுயமான சித்தத்தோடும் செய்வதால் இது குறித்து மேலும் எந்த விசாரணைக்கும் அரண்மனை வைத்தியர் மெய்ஞான சிவன் ஆட்படுத்தப்பட வேண்டியதில்லை என்றும், அவர் மீது எந்தக் குற்றமும் இல்லையென்றும், அவருக்கு எதிர்ப்பதமாய் எந்தத் தீர்ப்பும் இது குறித்து வழங்கப்படக்கூடாது என்றும் நான் உறுதியாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதை மீறி அவருக்கு எதிராய் ஏதேனும் தீர்ப்பு எவர் மூலமாவது சொல்லப்பட்டால், அது ராஜதுரோகக் குற்றமாகக்

கருதப்படும். இது உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரின் மாதேவியார் அரசியார் பஞ்சவன்மாதேவியின் ஆணை."

ஓலை வைத்தியரால் வாசிக்கப்பட்டது. மலடாக்கும் மருந்துகள் அரசியாருக்கு அவரால் தரப்பட்டது.

அரண்மனை வைத்தியர் மெய்ஞான சிவன் கொடுத்த மருத்துகள் பஞ்சவன்மாதேவியின் உடலை வருத்தி எடுத்தன. கை, கால்கள் வீங்கின. இரத்தப் போக்கு அதிகமாக இருந்தது. வயிறு முறுக்கி வலித்தது. ஆனாலும் பஞ்சவன்மாதேவி பொறுத்துக் கொண்டார். எட்டு வாரங்கள் பொறுத்து எழுந்து நடமாடினார். அடுத்த இரண்டு வாரங்கள் நந்தவனத்தில் உலாவினார். இன்னும் இரண்டு வாரங்கள் குதிரையேறி, யானையேறி, பல்லக்கில் போய் அருகிலிருக்கும் ஊர்களுக்குப் பயணப்பட்டார்.

சரியாக பன்னிரண்டாவது வாரம் சிறு தேர் ஏறி, உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் எங்கிருக்கிறார் என்று பார்த்து, அங்கு போய் அவரை விழுந்து நமஸ்கரித்தார்.

"என்ன திடீரென்று ஓடி விட்டாய்?" - உலகமாதேவியார் விசாரிக்க, அவரைக் கட்டித் தழுவி அவரது கன்னங்களில் பஞ்சவன்மாதேவி முத்தமிட்டார்.

"உங்களைப் பார்க்கத்தான் மறுபடி ஓடி வந்து விட்டேனே..." என்று சிரித்தார்.

"இல்லை. உன் முகத்தில் ஏதோ மாற்றம் தெரிகிறது. உடம்பிலும் லேசான தொய்வு இருக்கிறது. உனக்கு நிஜமாகவே உடம்பு சரியில்லையா அல்லது நான் பேசியதற்கு வருத்தப் பட்டு அழுதழுது உடம்பைக் கெடுத்துக் கொண்டாயா?"

"அட சிவனே, அழுகிற பெண்ணா நான்? எனக்கு என்றாவது அழுகை வருமா?" என்று சிரித்தபடி சொன்ன பஞ்சவன்மாதேவி, உலக மகாதேவியின் கைகளைக் கோர்த்துக் கொண்டார்.

"பிறகு ஏன் மூன்று மாதம் தள்ளிப் போயிருந்தாய்?"

"உங்களிடம் மட்டும் சொல்கிறேன். இதை நீங்கள் வேறு யாரிடமும் சொல்லமாட்டேன் என்று சத்தியம் செய்யுங்கள்..."

"சொல்..."

"நீங்கள் சத்தியம் செய்தால்தான் சொல்வேன்."

"சொல். பிறகு சத்தியம் செய்கிறேன்..."

"இல்லை. நீங்கள் சத்தியம் செய்தாலொழிய உங்களிடம் சொல்ல இயலாது..."

"சரி; சத்தியம்... நீ சொல்லப் போகும் விஷயத்தை வேறு எவரிடமும் சொல்ல மாட்டேன்..."

"இதைக்கூட நான் உங்கள் மன ஆறுதலுக்காகத்தான் சொல்கிறேன். 'பஞ்சவன்மாதேவி உள்ளே வந்து விட்டாள். அவளுக்குக் குழந்தை பிறந்தால் அது இராஜேந்திரனுக்கு எதிராக இயங்கும். மறுபடியும் சோழ தேசம் ஒரு பங்காளிச் சண்டையைச் சந்திக்க நேரும்' என்று செம்பியன் மாதேவி சொன்னார்கள்.

அது கேட்டு நீங்களும் பயந்தீர்கள். இராஜேந்திரனை ஒன்றும் செய்யாதே என்று என்னிடம் கேட்டீர்கள். அந்த நேரம் நான் செத்துப் போனதுபோல உணர்ந்தேன்.

ஆகவே ட்முழுவூருக்குப் போய் அங்குள்ள அரண்மனை வைத்தியரைச் சந்தித்து மருந்துகள் சாப்பிட்டு என்னை மலடாக்கிக் கொண்டேன். இனி எனக்குக் குழந்தையே பிறக்காது. ஒரு நாளும், ஒரு பொழுதும் பஞ்சவன்மாதேவி இனி தாயாகவே மாட்டாள்..."

மூச்சிரைக்க பஞ்சவன்மாதேவி சொல்ல, உலகமகாதேவி வாய்விட்டு அலறினார். நெஞ்சில் அடித்துக் கொண்டார். பொங்கிப் பொங்கி கதறினார்.

"அடி சண்டாளி, அடி மகாபாவி... என்னை இவ்வளவு பெரிய துரோகியாவா நினைத்திருக்கிறாய். என்னை இவ்வளவு கேவலமானவளாகவா நினைத்திருக்கிறாய். நான் ராஜ்ய பிரச்சினைக்குப் பயந்தேனே தவிர, உன்னைக் குழந்தை பெற்றுக் கொள்ள வேண்டாம் என்று சொல்வதற்கு நான் யார்? எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? கடவுளே இப்படியும் ஒருத்தி செய்வாளா..."

"உங்களுக்காகச் செய்தேன் அக்கா. நீங்கள் என் மீது எந்த விதத்திலும், எந்தக் காரணத்துக்காகவும் சந்தேகப்படக்கூடாது என்பதற்காகச் செய்தேன். நீங்கள் எப்படி இராஜேந்திரனை நேசிக்கிறீர்களோ, அதேபோல் நானும் இராஜேந்திரனை நேசிக்கிறேன். அவனை என் மகனாகப் பார்க்கிறேன். அவனை

வளர்ப்பதற்கு எனக்கு எல்லா உரிமைகளும் இருக்கிறதென்று நினைக்கிறேன்.

அக்கா... இனி எக்காலத்திலும் எனக்குக் குழந்தை பிறக்காது. எனவே தயவுசெய்து நீங்கள் எனக்கு ஒரே ஒரு வரம் தர வேண்டும். இராஜேந்திரன் என்னை அம்மா என்று அழைப்பதற்கு நீங்கள் உங்கள் திருவாயால் உத்தரவிட வேண்டும்..."

இதைச் சொல்கிறபோது பஞ்சவன்மாதேவிக்குக் கண்களில் மெல்ல நீர் கோர்த்தது.

பஞ்சவன்மாதேவி ஒரு கணம் சிலையாய் நிற்க, உலகமாதேவி தடேரென்று பஞ்சவன்மாதேவியின் காலில் விழுந்தாள். கால்களைக் கெட்டியாக, இறுகப் பிடித்துக் கொண்டாள். கதறிக் கதறி அழத் துவங்கினாள்.

பஞ்சவன்மாதேவி அவளுக்கு அருகே உட்கார்ந்து, அவளை வாரி நெஞ்சில் அணைத்துக் கொண்டு சமாதானப் படுத்த, அங்கு அந்த இரண்டு பெண்மணிகளும் மனம் கனிந்து, கரைந்து ஒன்றானார்கள்.

ஒரு தேசத்தின் எதிர்காலத்தைத் தூக்கி நிறுத்துவதற்குச் சபதம் செய்தார்கள். ஒரு நாகரிகத்தை மேன்மேலும் வளர்ப்பதற்கு உறுதி பூண்டார்கள். 'ஒற்றுமையாக இருப்போம்' என்று சூளுரை செய்தார்கள்.

'உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரே தெய்வம். அவர் வழியைப் பின்பற்றி நாங்கள் நடப்போம்' என்று ஆணையிட்டார்கள். சங்கும் சக்கரமும் தாங்கி, திருமால் போல் மிளிறுகின்ற அந்த அரசருக்குப் பக்கத்தில் ஸ்ரீதேவியும், பூதேவியுமாய் நின்று சோழ மக்களை வாழ்வித்தார்கள்.

அன்று முதல் உலகமாதேவி, பஞ்சவன்மாதேவி உணவு உண்டாரா என்று தெரியாமல் உண்ணுவதில்லை. தனக்கு வரும் பரிசுப் பொருட்களை பஞ்சவன்மாதேவிக்குப் பகிர்ந்து கொடுக்காமல் தான் மட்டும் ஏற்றுக் கொள்வதில்லை.

"என்னை மயக்கினாய். எப்படி என்று எனக்குத் தெரியும். என் மனைவியையும் மயக்கினாயே... இந்தச் சாமர்த்தியத்தை நீ எங்கு பெற்றாய்?" என்று ராஜராஜர் வியந்து பலமுறை பஞ்சவன்மாதேவியை மனதாரப் பாராட்டியிருக்கிறார்.

அவர் திருப்புகலூர் கோவிலுக்கு நிவந்தம் கொடுக்கும் போது 'அரசியார்' என்கிற அடை மொழியோடு அவள் பெயரைப் பொறிக்கச் சொல்லியிருக்கிறார்.

பஞ்சவன்மாதேவிக்குத் தனித்த மரியாதையும், அவருக்கென்று பாதுகாப்புக்காக ஒரு தனித்த படையும் ஏற்படுத்தியிருக்கிறார்.

உண்மையில் பஞ்சவன்மாதேவி வெறும் அரசி மட்டுமல்ல; அரசியல் தெரிந்த அனுபவசாலி. அரசருக்கு யாரெல்லாம் எதிரிகளோ, அவர்களெல்லாம் பஞ்சவன்மா தேவிக்கும் எதிரிகளாக இருந்தார்கள். எனவே, பஞ்சவன்மா தேவியை அரசர் கண்ணெனக் காத்து வந்தார். அவரைக் கலந்தாலோசிக்காமல் எந்த விஷயமும் அவர் செய்வதில்லை. இன்று மட்டும் சொல்லிக்கொள்ளாமல், பழமர்நேரிக்கு அவரை விட்டுவிட்டு ஏன் போனார் என்ற மெல்லிய கேள்வி பஞ்சவன்மாதேவி மனதுக்குள் இருந்தது. கடைசி நேரத்தில் 'நீயும் வா' என்றழைப்பாரோ என்று அவர் ஏங்கிக் கிடக்க, அரசர், 'நான் வருகிறேன்' என்று சொல்லிப் புறப்பட்டு விட்டார்.

இப்போது அவர் வருகை பஞ்சவன்மாதேவிக்கு முக்கிய மாக இருந்தது. அவர் வந்ததும், 'என்ன நடந்தது' என்று தெரிந்துகொள்ள ஆவலாக இருந்தார். சித்திரவல்லியையும், சீருடையாளையும் கைதட்டி அழைத்தார்.

அவர்கள் அருகே வந்ததும் "மன்னரோடு எவரேனும் வந்தால், வந்தவருக்குத் தெரியாதபடி அவரைக் கண்காணிக் கின்ற விஷயத்தை நீங்கள் மேற்கொள்ள வேண்டும்.

அவருக்குப் பணிவிடை செய்வதுபோல், சாதாரண சேடிப் பெண்களைப் போல இருந்து, அவர் என்ன செய்கிறார், யாரிடம் பேசுகிறார் என்று தெரிந்து என்னிடம் சொல்ல வேண்டும்..." என்று உத்தரவிட்டார்.

அவர் சொல்லி முடித்ததும் தோட்டக் கதவுகள் திறந்து கொண்டன. மன்னர் குதிரையைச் செலுத்திக் கொண்டு முன்னே வந்து கீழே இறங்கி, பஞ்சவன்மாதேவியை நோக்கி நடந்து வந்தார்.

அவரின் பின்னால் இன்னொரு குதிரை நுழைந்தது. அந்த குதிரையிலிருந்து இராஜராஜீ கீழிறங்கினாள். அவள் குதித்த வேகத்தைப் பார்த்து பஞ்சவன்மாதேவி வியந்தார்.

'அட, இந்தப் பெண்ணா... இவள் பரவையின் தூரத்து உறவினளாயிற்றே... இராஜேந்திரன் பரவையோடு நெருக்கமாக இருக்கும்போது, இவளையும் அந்த இடத்தில் பார்த்திருக்கிறேன். இவள் எதற்குத் தஞ்சைக்கு வந்திருக்கிறாள்' என்று மனதுக்குள் கேள்வி கேட்டு கொண்டாள்.

இராஜராஜீ உள்ளே நுழைந்தாள். தீப்பந்த வெளிச்சத்தில் பஞ்சவன்மாதேவி நிற்பதை பார்த்தாள். 'அரசி வணக்கம்' என்று மண்டியிட்டு, நிலம்படத் தொழுது எழுந்து நின்று கைகூப்பினாள்.

உள்ளே நுழைந்த இராஜராஜீக்கு பின்னாலேயே ஒரு அந்தணனும் நுழைவதை அங்கிருந்த எவரும் பார்க்கவே இல்லை.

## 13

மாமன்னர் இராஜராஜர் குதிரையிலிருந்து கீழே இறங்கி, பேசிக் கொண்டிருந்த பஞ்சவன்மாதேவியை அந்த இருட்டிலும் அடையாளம் கண்டு, 'குட்டி' என்று செல்லமாக விளித்தார்.

பின்னால் இரண்டு பெண்கள் இருந்ததால், மன்னர் தன்னை அப்படிக் கூப்பிட்டது பஞ்சவன்மாதேவிக்கு திடுக்கென்று தூக்கி வாரிப்போட்டது.

'என்ன இது... மன்னர் கண்டபடிக்குப் பேசுகிறாரே' என்று கவலையோடும், ஆச்சரியத்தோடும் அவரைப் பார்த்தார் பஞ்சவன்மாதேவி.

இராஜராஜர் வாயிலிருந்து அன்பினால் தப்பி வந்த அந்த வார்த்தையைச் சொல்லிவிட்டோமே என்று வருத்தப்படாமல், சாதாரணமாக நடந்துபோய் போர்வையோடு பஞ்சவன்மா தேவியை அணைத்துக் கொண்டார்.

மன்னர் சந்தோஷமாக இருக்கிறார் என்பதை அவர் தொடல் பஞ்சவன்மாதேவிக்குக் காட்டியது.

படியேறி மேல் தளத்திற்குப் போனதும், தன்னை அறைக்குத் தனியே அழைத்துப் போய், கட்டிலில் வைத்து இறுக்கிக் கொள்வார் என்பது தெள்ளத் தெளிவாகப் புரிந்தது.

"நல்லவேளை தேவி. பழமர்நேரி போனது உத்தமமான விஷயமாகி விட்டது. வரைபடங்கள் கொண்டு வந்த மாட்டுவண்டி காவிரி வெள்ளத்தில் குடை சாய்ந்து உடைந்து போயிற்று. வரைபடங்கள் அடங்கிய பெட்டியையும் மீட்டு, சிக்கிக் கொண்ட ஆட்களையும் காப்பாற்றி விட்டோம்.

இந்தப் பக்கமும் சில மணி நேரங்களுக்குத் தண்ணீர் வராது என்பதைப் பறையடித்துத் தெரிவித்து விடுங்கள். மறுபடியும் தண்ணீர் முன்போலவே வேகமாக வரும் என்றும் ஜனங்களுக்குத் தெரிவியுங்கள். திடீரென்று தண்ணீர் வராமல் போனதற்காகப் பயந்துவிடப் போகிறார்கள்..." என்று இராஜராஜர் அக்கறையோடு சொன்னார்.

பஞ்சவன்மாதேவி கைகாட்ட, அங்கிருந்த காவலாள் ஒருவன், இதை கிராம அதிகாரிகளுக்குச் சொல்ல மாளிகையை விட்டு வெளியேறினான்.

"தேவி... இவள் இராஜராஜீ. இவள் தான் வரைபடங்கள் கொண்டு வந்த பெண். அந்த வெள்ளத்தை மாட்டு வண்டி எளிதாகத் தாண்டியிருக்கலாம். ஏதோ கல் புரட்டி சக்கரம் உடைந்துவிட, வண்டி குடை சாய்ந்து விட்டது.

நம் சேனாதிபதி பிரம்மராயர் அனைவரையும் காப்பாற்றிக் கரை சேர்த்துவிட்டார். வண்டியையும் அப்படியே தூக்கி, வரை படங்களையும் மீட்டுவிட்டோம்.

இன்னும் சிறிது நேரத்தில் வரை படங்கள் வந்துவிடும். அவைகளை உலர வைத்து, நாளை காலை ஒவ்வொன்றாய்ப் பரிசீலிக்க வேண்டும்..." மன்னர் மிருதுவாக அழுத்தமான குரலில் பேசினார்.

"இராஜராஜீக்குத் தங்குவதற்கு இடம் கொடு. அவளுக்கு உடைகள் கைவசம் இல்லையென்று நினைக்கிறேன். மாற்றுடைகளுக்கு ஏற்பாடு செய். ஏதேனும் முக்கியமான பொருள்களை அவள் மாட்டு வண்டியில் இழந்திருந்தால் அதையும் கொடுப்பதற்கு முயற்சி செய்.

இராஜராஜீ நம்முடைய விருந்தினள். அவள் குழு எல்லோரையும் அருகே உள்ள மாளிகையில் தங்க வை. அவர்களின் உணவு விஷயங்களையும் கவனித்துக் கொள். இங்கு தங்கிய பிறகு, சில நாட்களில் அவர்கள் தஞ்சாவூர் பயணப்பட வேண்டும். தஞ்சாவூரில் மற்ற ஏற்பாடுகளை, அவர்களுக்கான

வீடுகளை நான் பார்த்துக் கொள்கிறேன். வேறு ஏதேனும் செய்தி உண்டா?" அவர் உள்ளே நகர்ந்து படியேறினார்.

படியேறியவர் திரும்பி இராஜராஜீயைப் பார்த்தார்.

"இராஜராஜீ... நன்றாக ஓய்வெடுத்துக் கொள். நாளை முழுவதும் கூட என்னை நீ சந்திக்க வேண்டிய அவசியமில்லை. நாளை மறுநாள் – நீயும், உன் குழுவினரும் என்னை நேரடியாகச் சந்திக்கலாம். அப்பொழுது நிறைய பேசுவோம். போய் ஓய்வெடுத்துக் கொள் இராஜராஜீ..." கூர்மையான பார்வையுடன், இதமான பேச்சுடன், புன்னகையுடன் அரசர் சொல்ல, அவர் காலில் விழுந்து பணிந்து இராஜராஜீ பின்னடைந்தாள்.

"தேவி... எனக்கு அலுப்பாக இருக்கிறது. நான் போய் படுத்துக் கொள்கிறேன். உலக மகாதேவியிடம் இருந்து ஏதேனும் செய்தி வந்ததா..."

"எதுமில்லை அரசே... நாளை காலை வரும் என்று எதிர்பார்க்கிறேன். நான் இன்னும் சிறிது நேரத்தில் உங்கள் அறைக்கு வருகிறேன்..."

"அவசியமில்லை தேவி. படுத்தவுடன் நான் தூங்கிவிடப் போகிறேன். நாளை காலையில் எனக்கு வேலைகள் அதிகம் இருக்கின்றன..."

"இல்லை... இப்போதே வந்து விட்டு..." –பஞ்சவன்மாதேவி படியேற, அரசர் திரும்பி அவரைத் தடுத்து நிறுத்தினார்.

"இராஜராஜீயைக் கவனித்து விட்டு வா. அவள் மட்டுமில்லை... அவளோடு பதினாறு, பதினேழு பெண்கள் வந்திருக்கிறார்கள். மூன்று ஆண்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் அனைவரையும் தஞ்சை வரை சௌகரியமாக அனுப்பி வைப்பது நமது பொறுப்பு. வழியிலேயே இரண்டு, மூன்று சிரமங்களை அனுபவித்து விட்டார்கள். அதற்கும் நாமே காரணம். எனவே, இராஜராஜீ முக்கியம். என்னைப் பிறகு கவனித்துக் கொள்ளலாம்..." அவளைத் தடுத்துவிட்டு, படியேறித் திரும்பி மறைந்து போனார்.

பஞ்சவன்மாதேவி, இராஜராஜீயைப் பார்த்து மெல்லப் புன்னகை செய்தார்.

"என்ன ராஜீ... எப்படி இருக்கிறாய். வீட்டில் அனைவரும் நலமா. தாயார் எப்படி இருக்கிறார்கள். காஞ்சிபுரம் ஏரி நிரம்பியிருக்கிறதா. உளவுப் படைகள் செம்மையாய் நடக்கிறதா.

கோவில் பராமரிப்புகளைக் கவனமாய்ப் பார்க்கிறார்களா. நீ எந்தக் கோயிலைக் கண்காணிக்கிறாய். ஏகாம்பரேஸ்வரர் அல்லவா. வருடத்திற்கு மூன்று முறை நீண்ட குச்சியினால் வௌவால்களைத் துரத்தி, ஒட்டடை அடித்து, மண்டபம் முழுவதும் மேற்கூரையில் சுண்ணம் பூச வேண்டும் என்று சொல்லியிருந்தேன். செய்திருக்கிறார்களா...?"

"எல்லாம் குறைவற நடந்து கொண்டிருக்கிறது அரசியாரே... இம்மாதிரி வேலைகள் செய்யப்படும் போதெல்லாம் மக்கள் உங்கள் பெயரைத்தான் சொல்கிறார்கள். போன மாதம் -கோயில் மேற்கூரையில் சுண்ணம் அடிக்கும் பொழுது, ஜனங்கள் தாங்களாகவே முன் வந்து தரையில் விழுந்த சொட்டுக்களை ஈரத்துணியால் துடைத்து வேலையாட்களுக்கு உதவி செய்தார்கள்."

"வேறு என்னென்ன நடக்கிறது?"

"கோயில் நிர்வாகமும் மக்களும் சேர்ந்து காமாட்சி அம்மன் ஆலயத்தில் தூர் எடுத்தார்கள்."

"பிறகு?"

"போன சதய விழாவின்போது நூற்றியோரு வேதம் படித்த மாணவர்களை வரிசையாக வரச் சொல்லி, அவர்களுக்கு மரியாதை செய்தார்கள். அன்று முழுவதும் பல பேர், பல வீதிகளில், பல கோயில்களில் இலவசமாக உணவு போட்டார்கள். ஜனங்கள் உண்டு மாளவில்லை போங்கள். அவ்வளவு கோலாகலமாக சதயத் திருவிழா நடந்தது...." இராஜராஜீ ஆவலாகச் சொன்னாள்.

"பெண்களே... நீங்கள் படுக்கப் போங்கள்..." இராஜராஜீயின் பேச்சைக் கேட்டுக் கொண்டேயிருந்த பஞ்சவன்மாதேவி சித்திரவல்லியையும் சீருடையாளையும் திரும்பிப் பார்த்து அங்கிருந்து துரத்தினார். அவர்கள் இருவரும் குனிந்து வணங்கிவிட்டு விடை பெற்றார்கள்.

அவர்கள் போனதும், சட்டென்று பஞ்சவன்மாதேவி இராஜராஜீயின் அருகே வந்தார். "ஏதேனும் முக்கிய செய்தி உண்டா ராஜீ...?" என்று உற்றுப் பார்த்துக் கேட்டார்.

"மிக முக்கியமான செய்தி உண்டு அரசியாரே..."

"நாம் மிக கவனமாகப் பேச வேண்டும். வா... மாளிகையை விட்டு வெளியேறி விடலாம்" மாளிகைக்குள் யாரேனும்

ஒட்டுக் கேட்கக்கூடும் என்ற எண்ணத்தோடு, மாளிகையை விட்டு, தலையில் துணியைப் போர்த்தியபடி பஞ்சவன்மாதேவி, இராஜராஜீயோடு தோட்டத்துப் பக்கம் நகர்ந்தார்.

பெரிய மல்லிகைப் பந்தலுக்குக் கீழே உள்ள மேடையில் அமர்ந்து கொண்டார். அருகே தரையில் அமரப் போன இராஜராஜீயைத் தடுத்து, அவளையும் மேடையில் அமரச் சொன்னார்.

“என்ன... விரைவாகச் சொல்...” பஞ்சவன்மாதேவி கேட்டார்.

மல்லிகை பந்தலின் மறுப்பக்கம் மெல்ல ஊர்ந்துபோய், குமுதினியின் கணவனான ஆதிகேசவர், குத்திட்டு அமர்ந்து கொண்டார். காதுகளை பெண்கள் இருந்த பக்கம் திருப்பிக் கொண்டார். இராஜராஜீ மூச்சுவிடுகிற சத்தம்கூட அவருக்குத் தெளிவாகக் கேட்டது.

“சேர தேசத்திற்கும் பாண்டிய தேசத்திற்கும் நடுவே உள்ள ஒரு காட்டில் மன்னர் இராஜராஜருக்கு எதிராக அபிசார ஹோமம் செய்யப்படுகிறது. மிக உக்கிரமான தெய்வங்கள், பைசாசங்கள் அங்கு கிளறிவிடப்பட்டு, அவை தஞ்சை நோக்கி அனுப்பப்படுகின்றன.

கடந்த ஐந்து மாதங்கள் நாள் தவறாது செய்யப்பட்டு வந்த இந்த ஹோமம், இன்னும், ஒரு மாதத்தில் முடிவுக்கு வர இருக்கிறது. அந்த ஹோமம் அல்லது யாகம் முழுமை பெற்றுவிட்டால் இராஜராஜருடைய உடல்நலம் சீர்கெடக் கூடும். அவர் எடுத்த பணியெல்லாம் தடுமாறக் கூடும் என்று சொல்கிறார்கள்.

இந்தத் தகவல் பாண்டிய தேசத்திலிருந்து ஒற்றர்கள் மூலமாக இராஜேந்திரருக்கு வந்தது. இதற்கு என்ன செய்வது என்று இராஜேந்திரருக்குத் தெரியவில்லை. ஆனால் எங்கு நடக்கிறது என்று கண்காணிக்க ஆட்களை அனுப்பி இருக்கிறார். வியாபாரிகள்போல் வேடமிட்டு பதினைந்து பேர்கள் பிரிந்து, அந்த எல்லையை நோக்கிப் போயிருக்கிறார்கள்.

இந்த விஷயத்தை உங்களிடம் சொல்லி, உங்கள் மூலம் கருவூர்த்தேவருக்குச் சொல்லவேண்டும் என்று இராஜேந்திரர் பிரியப்படுகிறார். இந்த விஷயத்தை இராஜராஜருக்குத் தெரிவிக்க வேண்டாம் என்றும், முக்கியமாய் மும்முடிச் சோழப்

பிரம்மராயருக்கு நிச்சயம் தெரிவிக்க வேண்டாம் என்றும் சொல்லியிருக்கிறார்."

"அதற்கு ஏதேனும் காரணம் சொன்னாரா?"

"இராஜராஜர் இதை நம்பமாட்டார். மும்மடிச் சோழப் பிரம்மராயர், இராஜராஜருக்குத் தெரிவிக்காமல் எதையும் செய்யமாட்டார். உடனே படையெடுத்துப் போகலாம் என்று பிரம்மராயர் ஆரம்பிக்கக் கூடும். மன்னருக்குத் தெரிந்து, அவர் தடுக்கக்கூடும்.

அப்படி ஒரு படை பாண்டிய தேசத்தைத் தாண்டிப் போனால், போவதற்குள் அவர்கள் இடம் மாற முற்படுவார்கள். அவர்களில் யாரேனும் ஒருவர் தப்பித்தால்கூட இந்த அபிசார யாகம் தொடர்ந்து நடைபெறும். எனவே இதை எப்படிச் சமாளிப்பது என்று கருவூர்த்தேவருக்கு மட்டுமே தெரியும். ஆகவே, அவருக்கு இந்தத் தகவலை உங்கள் மூலம் தெரிவிக்குமாறு இராஜேந்திரர் கேட்டுக் கொண்டுள்ளார்."

"இப்படி பைசாசங்களை அனுப்ப முடியுமா... இராஜேந்திரர் இதை நம்புகிறாரா..." என்று பஞ்சவன்மாதேவி கேட்க, அதற்கு இராஜராஜீ சொல்லிய பதில் அவரைத் திகைப்படைய வைத்தது.

அந்தத் திகைப்பு, பின்னால் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த அந்தணர் மீதும் தாக்கியது. அந்தணர் குத்துக்கால் நழுவி, தரையில் உட்கார்ந்தார்.

அந்தச் சப்தம் இராஜராஜீக்குத் தெளிவாகக் கேட்டது.

## 14

ஒற்றராக இருப்பது எளிதல்ல. மிகுந்த புலனடக்கம் உடையவர்கள், உடம்பைத் தன் இஷ்டம்போல் வளைக்கக் கூடியவர்கள், அசைக்க முடியாத வைராக்கியம் உடையவர்கள் தான் ஒற்றராக இருக்க முடியும். அடிப்படையாக சகிப்புத் தன்மை உடையவர்களைத்தான் ஒற்றர் படையில் தேர்ந் தெடுப்பார்கள்.

குமுதினியின் கணவர் ஆதிசேகவன், மும்முடிச் சோழ பிரம்மராயரின் ஒற்றர் படையில் பயிற்சியாளராக இருப்பவர்.

பிரம்மராயர், தன்னிடம் அனுப்பிய ஆட்களைப் பல்வேறு விதமாகச் சோதித்து, சிலரைத் தேர்ந்தெடுத்து, கடும் பயிற்சி கொடுத்து, பயிற்சிகள் முடிந்தவுடன் நல்ல வருமானத்தில் அவர்களை ஒற்றர் படையில் நியமிப்பார்.

ஒரு இளைஞன் ஒற்றர்படையில் சேர்ந்து விட்டா னென்றால், ஆறு பேர் கொண்ட அவன் குடும்பம் மிக சந்தோஷ மாக வாழும். அதைத் தவிர, அரண்மனையின் எந்தப் பகுதிக்கும் அவன் போக முடியும். அரசரை எப்பொழுது வேண்டு மானாலும் அவன் சந்திக்க முடியும். அரசாங்கத்தில் ஏன்ன நடக்கிறது என்பதை உடனுக்குடன் தெரிந்து கொள்ள முடியும்.

அரசருக்கென்று தனியே ஒரு ஒற்றர்படை இருந்தது. அந்த ஒற்றர்படையை பிரம்மராயரின் ஒற்றர் படை வேவு பார்த்தது.

ஒரு அரசாங்கத்தில் இதுவெல்லாம் சகஜம். எவரையும், எது குறித்தும் நம்பாத இயல்புதான் ஒரு அதிகாரிக்குத் தேவை. இதைத் தெளிவாக வளர்த்துக் கொண்டு வெளியே சொல்லாமல், உள்ளுக்குள்ளேயே சந்தேகக் கண்ணோடு பார்க்கின்ற அதிகாரி தான் சிறப்பாகச் செயல்பட முடியும்.

வெளியே நம்புவதுபோல் நடித்து, பின்னே வேவு பார்ப்பது என்பது வழக்கமாக, பரம்பரையாக எல்லா காலகட்டத்து அரசியலிலும் நடக்கும் செயல்.

இரண்டு, மூன்று முறை பிரம்மராயரின் ஒற்றர்கள், அரசரின் மெய்க்காப்பாளர்களால் கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஆனால் அதில் பிரம்மராயர் தலையிட்டு, நான்தான் அனுப்பினேன் என்று ஒரு வார்த்தை சொன்னால், மறு பேச்சில்லாமல் அவனை விடுவித்து விடுவார்கள்.

அரசர்கூட இது குறித்துக் கேள்வி கேட்பதில்லை. எப்போதேனும் விளையாட்டாக அரசர் பிரம்மராயரைக் கேலி செய்வதுண்டு.

“எல்லாம் ஆயத்தமாக இருக்கிறதா. நான் பயணத்திற்குக் கிளம்பலாமா...” என்று பிரம்மராயரை இராஜராஜர் கேட்பார்.

“புறப்படலாம் மன்னா...” என்று பிரம்மராயர் சொன்னதும், “உங்கள் ஒற்றர்படை முன்னே போகிறதா, அல்லது பின்னே வருகிறதா...” என்று கேள்வி கேட்பார்.

"ஒற்றர்படை உங்களோடு வருகிறது அரசே..." என்று கண் சிமிட்டியபடி பிரம்மராயர் பதில் சொல்வார்.

"நல்லவேளை என் சேனாதிபதிகளை ஒற்றர்கள் என்று இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறீர். நாளை என் மனைவியர்களையும் ஒற்றர் என்று சொல்வீர். உம்மோடு பேசிக் கொண்டிருப்பதே ஆபத்தான விஷயம்..." என்று அரசர் அவரை வணங்கிப் புறப்படுவார்.

பேச்சு கேலியாக இருந்தாலும், ஒற்றர்படை என்று ஒன்று இருக்க வேண்டும் என்று எல்லோராலும் அங்கீகரிக்கப் பட்டாலும், அப்படி ஒற்றன் என்று யாரையாவது கண்டு பிடித்துவிட்டால் அந்தக் கோபம் சாதாரணமாகப் போகாது.

'என்னையா வேவு பார்க்கிறாய்' என்று பல ஒற்றர்கள் கடுமையாக அடி வாங்கியதுண்டு. ஒற்றர்களுடைய வீடு சுற்றி வளைத்துத் தாக்கப்பட்டதுண்டு. ஒற்றர்கள் மீது வேறு குற்றம் சுமத்தி, 'இவன் திருட வந்தான். மனைவியின் கையைப் பிடித்து இழுக்க வந்தான். மகளைக் கெடுக்க வந்தான்' என்று புகார்கள் சொல்வதுண்டு.

ஆனால், ஒற்றர்களைப் பற்றி பொது நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க இயலாது. அரசு உயரதிகாரிகளோ, அரசரோதான் அதை விசாரிக்க இயலும்.

ஒற்றர்கள் அத்து மீறியதும் ஓரொரு சமயம் நடந்திருக்கிறது. ஒரு ஒற்றன் அமைதியாக இருக்க வேண்டும். அப்படி இல்லாமல் ஒருவன், தன்னைக் கேலி செய்தவனைப் போருக்கு அழைத்து தனிப்போர் புரியச் சொல்லி, பல ஆயிரக்கணக்கான மக்களின் முன்னே கேலி செய்தவனை அவமானப்படுத்தி, தான் மிகுந்த திறமைசாலி என்று ஊருக்குப் பறைசாற்றி, எல்லாம் முடிந்து திரும்புகிற சமயம் எதிர்பாராதவிதமாய் கேலி செய்த அந்த மனிதனாலேயே தாக்கப்பட்டு இறந்துபோன ஒற்றன் உண்டு.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு மன்னர், ஒற்றர்கள் மீது கடுமையான கட்டுப்பாடுகளை விதித்தார். "எந்தக் காரணம் கொண்டும் ஒற்றர்கள் ஜனங்களுக்கு நடுவே தாங்கள் இன்னார் என்று காட்டிக் கொள்வதும், தங்கள் பெருமைகளை வெளிப்படுத்துவதும், தனிப்போருக்கு அழைப்பதும் அல்லது தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்வதும் கூடாது. அவ்விதம் செய்தார்கள் என்று தெரிந்தால், அவர்களைத் தனியே

அழைத்துப் போய், மறைமுகமாய் உயிர்கூடப் பறிக்கப் படலாம்..." என்று ஒற்றர்கள் கூட்டத்தைக் கூட்டி எச்சரித்தார்.

அரசருடைய ஒற்றர் படையைச் சேர்ந்தவர்கள் அநேகமாய் பழையாறையைச் சேர்ந்தவர்களும், குடந்தையைச் சேர்ந்தவர்களும், திருவையாறைச் சேர்ந்தவர்களுமாய்த்தான் இருந்தார்கள். காவிரி எங்கு வளமாய்ப் பாய்ந்து, பல கிளைகள் பரப்பி பூமியைச் செழிப்பாக்குகின்றதோ, அந்த பூமியைச் சார்ந்தவர்களாகத்தான் இருந்தார்கள்.

வசதி இல்லாதவர்கள் ஒற்றர்களாக இருக்க முடியாது. வசதியோடு வாழ்பவர்கள்தான் ஒற்றர்களாக இருக்க முடியும். அப்படி வசதியோடு, சுகமாக வாழ்ந்தவர்களைக் கடுமையான பயிற்சியின் மூலம் அமைதியாக இருப்பதற்குக் கற்றுக் கொடுத்து விட்டால், மிகச் சிறந்த ஒற்றர்களாக அவர்கள் இருப்பார்கள்.

ஆதிகேசவன் அந்த இருட்டில் எழுந்திருக்காமல், புதர்களூடே இன்னும் குறுக்கிக் கொண்டு, உட்கார்ந்தபடியே குதிகால் உயர்த்தி வேகமாக நகர்ந்து, அந்தப் பெண்களுக்கு எதிர்ப்பக்கம் போனார். சுருண்டு உட்கார்ந்து கொண்டார். மூச்சுகூட வேகமாய் விடாமல், மெல்லிய இழையாய்விட அவரால் முடிந்தது.

சத்தம் கேட்டு ராஜராஜீ திகைக்க, பஞ்சவன்மாதேவி முல்லைப் பந்தலிருந்து கழியை உருவி, அவர் உட்கார்ந்திருந்த மல்லிகைப் புதரில் ஓங்கி அடித்தார். ஆதிகேசவன் அங்கு இருந்திருந்தால் அந்த அடி மிக பலமாய் அவரைத் தாக்கியிருக்கும். பக்கத்தில் சில இடங்களில் மூங்கில் கழியால் குத்தித் துழாவினார்.

"ஏதுமில்லை அரசியாரே... ஈர மண்ணில் கல் புரண்டு அந்தச் சப்தம் எழுந்திருக்கும் என்று நினைக்கிறேன். அல்லது நாம் திகைத்ததற்கு எதிரொலியாக அந்தச் சப்தம் எழுந்திருக்குமென்று நினைக்கிறேன். இங்கு எனக்குத் தெரிந்து மனிதர்கள் யாருமில்லை..." என்று இராஜராஜீ சொன்னாள்.

பஞ்சவன்மாதேவி சிறிது நேரம் புதரை உற்றுப் பார்த்து விட்டு பலகையில் உட்கார்ந்து கொண்டார். இராஜராஜீயையும் உட்காரச் சொன்னார்.

"மறுபடி சொல்... அரசருக்கு எதிராக அபிசார ஹோமம் செய்வது யார்...? யார் இந்தத் தகவலை இராஜேந்திரருக்குத் தெரிவித்தார்கள்..."

"அரசியாரே... சேர தேசத்திற்குப் போகும் வழியில் கொல்லிமலை என்று ஒரு இடம் இருக்கிறது. அந்தக் கொல்லி மலையின் பள்ளத்தாக்கில் ஒரு நீர்ச்சுனைக்கு அருகே, பெரிய குடில் அமைத்து பதினைந்து, பதினாறு பேர் தங்கியிருக் கிறார்கள். அவர்கள் எல்லோரும் கையில் காப்பு கட்டிக் கொண்டு, சோழ தேசத்தை அழித்து விடுவதாய் சபதம் செய்திருக்கிறார்கள்.

சோழ தேசத்தைப் போர் செய்து அழிக்க முடியாது என்று நன்கு தெரிந்து, வேறுவிதமாய் அழிக்க முற்படுகிறர்கள். இராஜராஜசழரை ஒழித்து விட்டால் சோழ தேசம் ஒழிந்தது என்பது அவர்கள் எண்ணம். எனவே பெரிய அளவில் அபிசார ஹோமம் செய்கிறார்கள்.

மாதக்கணக்கில் மந்திரஜபம் ஜபித்து, பூஜ பிசாசங்களை வரவழைத்து, அவற்றை அரசர் மீது ஏவி விடுவது அவர் களுடைய திட்டம். இதைக் கண்டுபிடித்துச் சொன்னது மதுராந்தக கண்டராதித்தர். இந்தத் தகவலையும் உங்களுக்கு இராஜேந்திரர் சொல்லச் சொன்னார்."

"மதுராந்தக கண்டராதித்தர் நேரே வந்தாரா... அல்லது ஒலை வந்ததா...

"ஓலை வந்தது."

"ஏன் ஓலை?"

"மதுராந்தக கண்டராதித்தரை இந்த அபிசார ஹோமம் செய்பவர்கள் கடத்திக் கொண்டு போய் விட்டார்களாம். நடுக்காட்டில் அவர் பயணம் செய்து கொண்டிருந்தபோது, சுற்றி வளைத்து சேர தேசத்திற்குக் கூட்டிக்கொண்டு போய்விட்டார் களாம்.

'இராஜராஜருக்கு எதிராக நீங்கள் ஹோமம் செய்ய வேண்டும். நீங்கள்தான் அதற்குக் கர்த்தாவாக இருக்க வேண்டும். நீங்கள்தான் கையில் தர்ப்பை பிடித்து ஹோமத்தை

ஆரம்பிக்க வேண்டும். நீங்கள்தான் வரமிளகாயைக் கொட்டி, மாமிசங்கள் போட்டு, மதுக்குடம் சாய்த்து யாகம் செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார்களாம். மறுத்துபோது, அடித்துத் துன்புறுத்தினார்களாம்.

'எங்களாலேயே செய்ய முடியும். இந்த இடத்தில் உட்கார்ந்தபடி இராஜராஜசோழனை அழித்துவிட முடியும். ஆனால் இராஜராஜசோழனுக்கு ரத்த சம்பந்தம் உள்ள நீ, கையில் தர்ப்பை பிடித்து ஹோமத்தை ஆரம்பித்து வைத்தால் வெகு நிச்சயமாய் இதன் பலன் விரைவாக இருக்கும். நாள் தவறாது வரமிளகாயை இதில் கொட்டி, நீ ஜபம் செய்தால், இராஜராஜ சோழனுடைய பற்கள் வெகு விரைவில் கொட்டி விடும். முகம் மாறும். வயிறு நோகும். நெஞ்சை அடைக்கும்' என்றெல்லாம் சொன்னார்களாம்.

அடி, உதைக்குப் பயந்து செய்வதாக ஒப்புக்கொண்டு, அவர்கள் இருப்பிடம் எது என்று கண்டுபிடிப்பதற்காக அவர்களோடு இருப்பது போல் நடித்து, அவர்கள் சொல்லிக் கொடுத்த மந்திரத்தைச் சொல்லாமல் கையில் தர்ப்பை பிடித்தபடி வெறும் 'நமச்சிவாய மந்திரம்' சொல்லிவிட்டு மதுராந்தக கண்டராதித்த தேவர் அவர்களுடைய பூஜையில் இருந்து தப்பித்து ஓடிவந்து, ஒரு பௌத்த மடாலயத்தில் அடைக்கலம் கேட்டிருக்கிறார். பௌத்தர்கள். முழுவிவரம் தெரிந்து கொண்டு அவருக்கு அடைக்கலம் கொடுத்திருக் கிறார்கள்.

அம்மா... அவர் அடைக்கலமான பௌத்த மடாலயம் எது தெரியுமா..." என்று இராஜராஜீ கேள்வியோடு நிறுத்தி, பஞ்சவன்மாதேவி தன் முகத்தில் அதிர்ச்சியைக் காட்டியது 'எது... சீக்கிரம் சொல்' என்பதுபோல் இருந்தது.

## 15

"உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவரின் இரண்டாவது மகளான மாதேவடிகள் வசிக்கின்ற பௌத்த மடாலயம். அங்கு போய் தான் அவர்களிடம்தான் மதுராந்தக கண்டராதித்தர் அடைக்கலம் கேட்டிருக்கிறார்... என்றாள் ராஜராஜீ.

பஞ்சவன்மாதேவி கண் மூடிக் கொண்டார். 'என் சிவனே, என் சிவனே' என்று உள்ளுக்குள் கதறினார்.

"இங்கே ஆனந்தமயமாய் ஒரு மனிதர், உலகத்திலேயே மிகச் சிறந்த ஒரு கற்றளி எழுப்ப வேண்டும் என்று தீர்மானித்துச் செய்து கொண்டு இருக்க, சிவனுக்கு மிகப் பெரிய கோவில் ஒன்று எழுப்ப வேண்டும் என்று ஆவலோடு அலைந்து கொண்டிருக்க, அவருக்கு எதிராய் அவரைச் சுற்றி என்னவெல்லாம் நடக்கிறது..." என்று வருத்தப்பட்டார்.

"அரசரின் ஒரு வேதனை இன்னொரு வேதனையிடம் போய் நின்றிருக்கிறது. இந்த வேதனை அந்த வேதனையிடம் அடைக்கலம் கேட்டு, இரண்டு வேதனைகளும் ஒன்றாக இருந்திருக்கிறது. அங்கு என்ன நடந்ததோ, இனி என்ன நடக்கப் போகிறதோ தெரியவில்லையே..." என்று வேதனைப்பட்டார்.

அரசருடைய முதல் மகள் குந்தவை. இரண்டாவது மகள் மாதேவடிகள். மூன்றாவது குழந்தை மகன் இராஜேந்திரன்.

மாதேவடிகள் பதினாறு வயதில் சிவனை மறுத்து, சிவன் கோயில் பூஜையை மறந்து, சபைக்கு வந்த பௌத்தர்களோடு வெளியேறி, 'இனி அரசவைக்குத் திரும்பமாட்டேன். அரசருக்கு மகளாக இருக்கமாட்டேன். இனி நான் துறவி' என்று தெளிவாக அறிவித்து விட்டுப் போய் விட்டாள்.

மாதேவடிகள் நன்கு நடனமாடக்கூடியவள். அருமையாய் பாடக்கூடியவள். அற்புதமாய்ச் சித்திரம் வரைபவள். மிகுந்த புத்திசாலி. கேள்வி கேட்பதில் மிகுந்த சாமர்த்தியசாலி. குதிரையேற்றம் கற்றவள். வில் வித்தை தெரிந்தவள். இப்படி எல்லா கலைகளையும் கற்று அவள், அனைத்தையும் நொடி நேரத்தில் உதறி, 'நான் துறவி' என்று போனது அரசருக்குப் பேரிடியாய் இருந்தது. அதிலிருந்து அரசர் மீள இரண்டு வருடங்களாயிற்று.

இவ்வாறு தன் இரண்டாவது மகள், பெயர் மாற்றிக் கொண்டு, மாதேவடிகள் என்று தன்னை அழைத்துக் கொண்டு பௌத்த மதத்தைத் தழுவியதை உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் குடும்பத்தார் எவராலும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

எல்லோரும் சீறியெழ, அரசர் மட்டும் கைஉயர்த்தி, 'என்னுடைய ஆட்சியில், யாருக்கு எந்த மதம் பிடிக்கிறதோ, அந்த மதத்தை அவர்கள் பின்பற்றலாம். இந்த ஊரில்

உள்ளவர்களாக இருந்தாலும் சரி, என் உறவினர்களாக இருந்தாலும் சரி, எனக்கு நெருங்கிய சொந்தமாக இருந்தாலும் சரி, அவர்களுக்கு மதம் மாற பூரண உரிமை உண்டு.

எனவே, என் மகள், அவளுக்கு விருப்பமான மதத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அவள் மறுபடியும் மனம் மாறி இந்த வீட்டிற்கு வந்தாலும் இருகை விரித்து அவளை வரவேற்க நான் தயாராக இருக்கிறேன்.

மக்கள் தேசத்திற்கு எதிராகத் திரும்பினால் மட்டுமே நான் பகைவனாக மாறுவேன். இந்த தேசத்திற்கு எந்த இடையூறும் செய்யாதவஸ்கயில் மதம் மாறினாலும் சரி, இனம் மாறித் திருமணம் செய்து கொண்டாலும் சரி எனக்கு ஆட்சேபணை யில்லை...” என்று அரச சபையில் உரக்க அறிவித்தார்.

மதம் மாறிய மாதேவடிகளுக்கு சீர் செனத்தி செய்வது போல் நிரம்பப் பொருள்கள் கொடுத்து, பசுக்களும், ஆடுகளும், துணிமணிகளும், பொற்கழஞ்சுகளும் அனுப்பி கௌரவித்தார்.

ஆனால் இதைவிடக் கொடுமையான விஷயம் அதற்கு முன் நடந்தது. சைவ சமயத்தையே உயிராகக் கருதி, திருவல்லம் என்கிற கிராமத்திலே தங்கி, அங்குள்ள மிகப்பெரிய சிவன் கோயிலைப் பராமரித்து வந்த மதுராந்தக கண்டராதித்தர் திடீரென்று காணாமல் போனது அவருக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது.

‘மேல்பாடிவரை போய் வருகிறேன். நாளை அரிஞ்சயருக்குத் திதி வருகிறது’ என்று புறப்பட்டுப் போன மதுராந்தக கண்டாரதித்தரைப் பிறகு காணவே இல்லை.

அவரைச் சிலர் கடத்திக் கொண்டு போனார்கள் என்று சேதி வந்த போது, சோழ தேசம் முழுவதும் வலை வீசித் தேடியும் கிடைக்கவில்லை. சேரதேசம், பாண்டியதேசம் என எல்லா இடங்களிலும் தேடியும் அவர் காணக் கிடைக்கவில்லை.

அவரை, ‘பாண்டிய நாட்டின் ஆபத்துதவிகள்’ எனப்படும் ஒரு தனிப்படை, சோழ தேசத்தைப் பழி வாங்குவதற்காக சபதமேற்று அழைத்துப் போய் இருக்கிறதாய் தகவல்கள் வந்தன. அவர்கள் இடம் மாறிக்கொண்டே இருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டது.

தேடுதல் ஓயும் வரைக்கும் அவர்கள் நிரந்தரமாய்த் தங்கப் போவதில்லை என்றும் தெரிவிக்கப்பட்டது. பாரத தேசத்தின்

மேற்குக் கடற்கரையை அடைந்து அங்கிருந்து வடக்கே போய், சோழர்களுடைய நிரந்தரப் பகையான சத்தியாசிரயனிடம் அவர்கள் சரணடைந்தார்கள் என்று சொல்லப்பட்டது.

தனக்கு உரிமையுள்ள சோழ சாம்ராஜ்யத்தில் ராஜராஜர் அமர்ந்திருக்கிறார் என்றும், அவர் வாரிசுகளே மறுபடி மறுபடி அரசாள முற்படுகின்றன என்றும், அதை உடைத்தெறிந்து தன்னுடைய ஆட்சியைத் தான் நிலைநிறுத்தி சபதம் மேற்கொண்டு, அதற்காகப் படை திரட்ட வடமேற்கே மதுராந்தக கண்டராதித்தர் போயிருக்கிறார் என்றும் திருவல்லம் முழுவதும் செய்தி பரப்பப்பட்டது.

யார் இந்தச் செய்தியைப் பரப்பினார்கள் என்று விசாரிக்க, மதுராந்தக கண்டராதித்தரே இப்படிப் பரப்பச் சொன்னதாகவும் சிலர் சொன்னார்கள். இந்தச் செய்தி மதுரையிலும், சேர தேசத்திலும் அதிகம் பேசப்பட்டது. தஞ்சையில் கிசுகிசுப்பாகப் பரிமாறிக் கொள்ளப்பட்டது.

சோழ தேசத்திற்கு எப்போதும் ஒரு ஆபத்து இருந்து கொண்டே இருக்கும். அப்படி இருந்தால்தான் சோழ தேசம் சிறப்பாக இருக்கும்' என்று குடிமக்களால் சிரிப்பாகச் சொல்லப்பட்டது. அந்தச் சிரிப்பினூடே கவலையும் இருந்தது.

ஆனால், இரண்டு மூன்று வருடங்களாக மதுராந்தக கண்டராதித்தரிடமிருந்து எந்தச் செய்தியும் வரவில்லை. அவர் எங்கிருக்கிறார் என்றும் தெரியவில்லை. உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் இதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை.

"போர் என்ற ஒன்று வருமல்லவா. அப்போது பார்த்துக் கொள்ளலாம். படை திரட்டி சோழ தேசத்தை நோக்கி வருவதற்குச் சில நாட்கள் ஆகுமல்லவா. படை திரட்டுகிறார்கள் என்று தெரிந்தால் போதும் நான் திரட்டுகிற இடம் நோக்கி என் படைகளைத் திரட்டிக் கொண்டு போவேன்.

நேருக்கு நேர் மோதுகிறபோது, அவர்கள் யார் யார் என்று தெரிந்து போகும். யார் பக்கம் இறைவன் இருக்கிறான் என்பது விளங்கிவிடும்.

எனவே, சபதம் செய்து விட்டுக் காணாமல் போனவனைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இல்லை. அவன் யாரிடம் போய்ச் சேர்ந்தாலும் அது பற்றிக் கவலையில்லை.

சதித் திட்டங்கள் ரகசியமாகத் தீட்டலாம். போர் நேரடியாத்தானே நடத்த வேண்டும். நம்முடைய பலத்தை போரின்போது நாம் காட்டுவோம். அதுவரை அவரவர் வேலையை அமைதியாகச் செய்து கொண்டிருக்கலாம். வீணாக தெருவில் அரசியல் பேசுவது என்பது எனககுப் பிடித்தமான விஷயம் அல்ல.

சோழ தேசத்திற்கு நாம் செய்ய வேண்டிய பணிகள் அதிகம் இருக்கின்றன. சோழ தேசத்தின் விளை நிலங்களை அளவெடுக்க வேண்டும். எல்லா கிராமங்களையும் ஒன்று திரட்டி, அதற்குப் பொதுவான சபை அமைக்க வேண்டும்.

அந்த சபைக்கு ஆட்களை நல்லமுறையில் தேர்வு செய்ய குடவோலை முறை வகுக்க வேண்டும். மூன்று வருடத்திற்கு ஒரு முறை குடவோலை முறை நடத்த வேண்டும்.

எல்லாக் குடியினருக்கும் எல்லா வித வசதிகளும் கிடைத்து, மக்களைச் சந்தோஷமாக வாழ வைப்பதே உயரதிகாரிகளின் கடமையாக, படித்தவர்களின் கடமையாக, செல்வந்தர்களின் கடமையாக இருக்க வேண்டும்.

நமது மக்களை நாமே இழிவு படுத்துவதும், இனம் சொல்லிப் புண்படுத்துவதும் சற்றும் தகாது. திறமையுள்ளவர் எந்த இனத்தில் இருப்பினும் அவர் அங்கீகரிக்கப்பட வேண்டும். கொண்டாடப்பட வேண்டும். அதுதான் அடுத்த தலைமுறை இளைஞர்களுக்கு நல்ல பழக்க வழக்கங்களைக் கொண்டு வந்து கொடுக்கும்.

இல்லையெனில், நாம் ஒரு சொல்லால் இழிவுப்படுத்தினோம் என்றால் நம் பிள்ளைகள் மூன்று சொற்களால் இழிவுபடுத்தத் துவங்குவார்கள்...'' என்று மதுராந்தக கண்டராதித்த தேவர் விஷயத்தை உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவர் சாதாரணமாக்கி விட்டார்.

அவர் இனவேறுபாடு கூடாது என்று பேசியதுதான் மக்களுக்கு முக்கியமாகப் போய்விட்டது. விளைநிலங்களை அளக்கிற விஷயத்திற்கு ஜனங்கள் திசை திரும்பி விட்டார்கள்.

மூன்று போக நிலம் எது, இரண்டு போக நிலம் எது, ஒரு போக நிலம் எது என்று சர்ச்சையில் இறங்கிவிட்டார்கள்.

ஒரு போக நிலம் அதிகமிருப்பது தெரிந்ததால், கால்வாய்கள் வெட்டும் பணியும் கூடவே தொடர்ந்து நடந்தன.

மக்களுக்கு மதுராந்தக கண்டராதித்த தேவர் காணாமல் போனது நினைவில்லாமல் போய் விட்டது.

திடீரென்று அந்தப் பெயர் உச்சரிக்கப்பட்டதும் பஞ்சவன்மாதேவி திகைத்தார். அவர் எதிரியா அல்லது உறவா என்று புரியாமல் விழித்தார்.

“நேரே சோழ தேசத்திற்கு வந்தால், தான் சொல்பவை களை நம்புவார்களோ, மாட்டார்களோ என்று பயந்து, எங்கோ ஒரு பௌத்த மடத்தில், மாதேவடிகளின் பாதுகாப்பில் தன்னுடைய அலங்காரங்களையெல்லாம் அழித்துவிட்டு, முற்றிலும் உருமாறி மதுராந்தக கண்டராதித்த தேவர் அமைதியாக உட்கார்ந்து விட்டார். முதலில் வேடமாக பௌத்த துறவி ஆடைகளை அணிந்தாலும், பிறகு மெல்ல மெல்ல மாறி, மாதேவடிகளின் போதனையால் அவரும் பௌத்தராகி விட்டார் என்று சொல்கிறார்கள்.

அவர் பௌத்தரானாலும், ‘உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவர் இந்த யுகத்தின் மனிதர். சோழ தேசத்தின் நல்முத்து, எனவே, அவருக்குத் தீங்கு இழைக்கப்படுவதை நான் சகிக்க மாட்டேன்’ என்று தெளிவாகச் சொல்லி ஓலை எழுதி யிருக்கிறார்.

அந்த ஓலை மும்முடிச் சோழர் பல்லவராயனிடம் கிடைத்தது. பல்லவராயன் அதை இராஜேந்திரருக்குச் சொல்லி, ராஜேந்திரர் உடனடியாக அந்தத் தகவலை உங்களிடம் சொல்லச் சொன்னார். தன்னைத் தேட வேண்டாம் என்றும், அப்படித் தேடினால் அது எதிரிகளுக்கு உதவியாகப் போய்விடும் என்றும் மதுராந்தக கண்டராதித்த தேவர் எழுதியிருக்கிறார்.

இந்த ஓலையை வைத்துக் கொண்டு இந்த அபிசார ஹோம விஷயத்தை நம்புவதா, வேண்டாமா என்று இராஜேந்திரருக்குத் தெரியவில்லை. எனவேதான் இந்தச் செய்தி உங்களுக்கு வந்தது.

நீங்கள் இதை உடனடியாக கருவூர்த் தேவரிடம் சொல்ல வேண்டுமென்பது அவருடைய விருப்பம். இதனால் எந்தத் தவறும் நேர்ந்து விடக்கூடாது என்பது அவருடைய எண்ணம். இவையே தங்களுக்குச் சொல்லுமாறு எனக்குச் சொல்லப்பட்ட

தகவல்கள். அனைத்தையும் தெரிவித்து விட்டேன்...” இராஜராஜீ கையெடுத்துக் கும்பிட்டாள்.

“உள்ளே போகலாம் வா...” சொல்லிவிட்டு, பஞ்சவன்மாதேவி எழுந்து உள்ளே போனார்.

ராஜராஜீக்கும் மற்றவர்களுக்கும் தங்குவதற்கு இடம் ஒதுக்கிக் கொடுத்தார். அனைவருக்கும் மாற்றுடைகள் தரச் சொன்னார்.

மெல்ல மேல் தளத்திற்குப் படியேறினார். மரத்தாலான படிகளைக் கடந்து மேல் தளம் நடந்து போய், வளைந்த பிறகு, ஈசான்ய மூலையில் இருக்கும் பெரிய அறையின் கதவை மெல்ல மூடினார்.

அந்த அறை இரண்டாகப் பிரிக்கப்பட்டிருந்தது. நடுவில் கனமான மரத்தடுப்பு போடப்பட்டிருந்தது. அந்த மரத்தடுப்பு தெற்கு பார்த்த சாளரங்களைக் கொண்டிருந்தது.

## 16

அந்த மரத்தடுப்பைத் தாண்டி அவர் உள்ளே போக பெரிய கட்டிலில் பஞ்சணைகள் இருக்க, உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் தலைக்குத் திண்டு வைத்து கால் அகட்டிப் படுத்திருந்தார்.

அவர் மார்பின் மீது ஒரு மெல்லிய துணிமட்டும் போர்த்தப்பட்டிருந்தது. கழுத்தில், அரசனாகும் போது அணிந்த மாணிக்கப் பதக்கம் இருந்தது. கேயுரங்களையும், கங்கணங் களையும் கழற்றி வைத்திருந்தார். காது குண்டலங்களில் வைரங்கள் மின்னின. அவர் மூச்சு சீராக ஏறி இறங்கிக் கொண்டிருந்தது.

பஞ்சவன்மாதேவி மெல்ல அவருக்கு அருகே போய் அமர்ந்து கொண்டார். அவரையே உற்றுப் பார்த்தார்.

அரசு என்பது எவ்வளவு கொடுமையான விஷயம். ஒரு மன்னனுக்கு என்னவெல்லாம் பிரச்சினைகள் வருகின்றன. அவனை அந்தப் பதவியிலிருந்து விலக்க எத்தனை பேர் எத்தனைவிதமாய் முயற்சி செய்கிறார்கள்.

ஆனால் அத்தனையையும் மீறி இந்த மனிதர் மெல்ல மெல்ல முன்னேறிக் கொண்டிருக்கிறார். தான் என்ன செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டாரோ, அந்த ஆசையிலிருந்து சிறிதளவும் பிசகாமல் நடத்திக் கொண்டிருக்கிறார்.

இவர் ஆசைகளெல்லாம் மிகப் பெரிய ஆசைகளாக இருக்கின்றன. பிரம்மாண்டமாக இருக்கின்றன. நான்கு பனை உயரத்துக்கு கோயில் கட்டவேண்டும் என்று இவர் சொல்லி பதினைந்து வருடங்கள் ஆகிவிட்டன. திரும்பத் திரும்ப எவரைச் சந்தித்தாலும், எங்கு சந்தித்தாலும் இந்தக் கோவில் பற்றிய பேச்சாகவே இவர் மனது திரும்பி விட்டது. கோயில் தவிர வேறு எதுவும் செய்ய இவருக்கு எண்ணமே இல்லை என்பதுபோல் தோன்றுகிறது.

ஆனால், இத்தகைய ஒரு மனிதரை, சோழதேசத்தின் நாகரீகத்தை உச்சாணிக் கிளைக்குக் கொண்டு போனவரை பேய், பிசாசால் அழித்து விடலாம் என்று நினைக்கிறார்கள். படையெடுத்து வரமுடியாதபோது, வாள் உருவி நேருக்குநேர் நிற்க முடியாதபோது, அவரின் முதுக்குப் பின்னால் மந்திர வித்தைகள் செய்து அழித்து விடலாம் என்று கங்கணம் கட்டிக் கொண்டு அலைகிறார்கள்.

பஞ்சவன்மாதேவி அவருக்கு அருகே படுத்துக் கொண்டு மெல்ல உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவரின் நெஞ்சை நீவிக்கொடுத்தார்.

இராஜராஜருக்கு விழிப்பு ஏற்பட்டது. அவர் பஞ்சவன்மா தேவிக்கு அருகே நகர்ந்து படுத்தார். கைகளை வீசி அவர் மீது போட்டு இறுக்கிக் கொண்டார்.

முதுகுப்பக்கம் இருந்த கச்சையின் சுருக்கை பளிச்சென்று இழுத்து அவிழ்த்தார். தோள்பக்கம் சேர்த்து இறுகப் பிடித்துக் கொண்டார்.

பின்னி, இறுகி, அவர் கழுத்தில் முகம் புதைத்து அப்படியே தூங்கிப் போனார். அவர் ஆழ்ந்து தூங்கும் வரை பஞ்சவன்மாதேவி மெல்ல அவர் முதுகை வருடிக் கொண்டிருந்தார். இடது கையால் தலையைத் தடவிக் கொண்டிருந்தார். அந்த சுகம் அவரை இன்னும் ஆழ்ந்த தூக்கத்துக்குக் கொண்டு போயிற்று.

தன்னுடைய சுகத்தை விடுத்து, தனக்கு வேண்டியவை களை மறந்து புருஷன் நன்கு தூங்க வேண்டும் என்று சிருஷை செய்கிற மனைவிகள் அற்புதமானவர்கள், தபஸ்விகள். அவர்கள் புகழைத்தான் உலகம் இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறது.

ஆதிகேசவன் நடந்து மாளிகையைவிட்டு வெளியே போனார். அந்த ஊர் எல்லையில் உள்ள கொட்டாரத்தில் உறங்கிக் கொண்டிருந்த காவல் வீரனை எழுப்பினார். 'என்னைக் கொண்டுபோய் பழமர் நேரியில் விடு' என்று கட்டளையிட்டார்.

அவன் எழுந்து முகம் துடைத்துக் கொண்டு, குதிரையை சிறுதேரில் பூட்டினான்.

இரண்டு பேர் நின்று பயணம் செய்கிற சிறுதேர் அது. உட்கார்ந்தால் குதிரைக்கு எடைகூடி கஷ்டமாக இருக்கு மென்பதால், கால் பரப்பி, அருகே இருக்கிற மூங்கில் பிடித்து, நின்றுகொண்டே வருவார்கள்.

ஒருவர் தாராளமாக ஓட்டிக் கொண்டு வரலாம். இருவர் எளிதாகப் பயணம் செய்யலாம். சில சமயம் இம்மாதிரி தேரில் மூன்று, நான்கு பேர்கூட ஏறுவதுண்டு. நல்ல குதிரை பூட்டி இரண்டுபேர் ஏற, அந்தக் குதிரை வெகுவிரைவில் குறிப்பிட்ட இடத்தை அடைந்து விடும்.

அவர் பழமர்நேரியை கால் நாழிகையில் அடைந்தார். குதிரைக்காரனுக்கு காசு, கொடுத்தார். வீடு நோக்கி நடந்தார்.

வீட்டை அடைந்து கதவு தட்டினார். குமுதினி கதவு திறக்க, உள்ளே போய் முற்றத்தில் இறங்கி, கைகால் அலம்பி, முதுகு முழுவதும் ஜலம் அடித்துத் தெளித்துக் கொண்டு, இடுப்பு வேட்டியை உருவிப்போட்டு, தலைக்குத் தண்ணீர் தெளித்து மறுவிநாடியே உடை மாற்றி, பல்தேய்த்து, உலர்ந்த துண்டால் முகம், தலை எல்லாம் துடைத்து, சிகையைப் பிரித்து விட்டுக் கொண்டு, மறுபடியும் திருமண் எழுதி, இடுப்பு வேட்டியைச் சரசரவென்று மடித்துக் கட்டிக் கொண்டு, மேல் துணியை இடுப்பில் இறுக்கிக்கொண்டு, வீட்டின் அடுப்புத் தளத்தில் நடுப்புறத்தில் படுத்திருக்கும் பிரம்மாரயருக்கு அருகே போய் நின்றார். பிரம்மராயர் எழுந்து உட்கார்ந்ததும், அவரை சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்தார்.

"ஆதிகேசவன்... உட்கார்..." பிரம்மராயர் கை காட்ட, ஆதிகேசவன் பிரம்மராயருக்கு அருகே உட்கார்ந்தார்.

"என்ன... இராஜராஜீ எதற்கு வந்திருக்கிறாள்?" பிரம்மராயர் கேட்டார்.

"மிக மிக முக்கியமான தகவல் கொண்டு வந்திருக்கிறாள்..." ஆதிகேசவன் பதிலுரைத்தார்.

"அப்படியா... அதை என்னிடம் சொல்லவில்லையே... யாரிடம் சொன்னாள்... மன்னரிடம் வழியில் பேசினாளா?"

"மன்னரிடம் ஒரு வார்த்தை பேசவில்லை. மன்னரை மேலே மாடிக்கு அனுப்பி விட்டு, கீழே தூங்கப் போவதுபோல பாவனை செய்து, பஞ்சவன்மாதேவியைத் தனியே சந்தித்துப் பேசினாள். பஞ்சவன்மாதேவியிடம் அவள் சொன்ன விஷயங்களை ஒட்டுக்கேட்டு விட்டு உங்களிடம் வந்து சொல்கிறேன்..."

"நல்லது... என்ன விஷயம்?"

"மதுராந்தக கண்டராதித்த தேவர் ஓலை அனுப்பியிருக்கிறார்..."

"என்ன?"

அதிர்ந்துபோய் பிரம்மராயர் திரும்பினார். ஆச்சரியத்தோடு கேட்டார்.

"காணாமல் போன மதுராந்தக கண்டராதித்தரா?"

"ஆமாம்..."

"உத்தமசோழனுடைய மகனாரா?"

"ஆமாம்..."

"என்ன... என்ன ஓலை?"

"உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவருக்கு எதிராக கொல்லி மலையில் பாண்டிய தேசத்து ஆபத்துதவி வீரர்களால் அபிசார ஹோமம் செய்யப்படுகிறது. அந்த ஹோமம் பூத, பைசாசங்களைக் கிளறி, இராஜராஜத்தேவர் மீது வந்த விழச் செய்யும்.

தேவர் உடல்நலம் இதனால் பாதிக்கப்படும். அவர் பற்கள் விழத் தொடங்கும் என்றெல்லாம் சொல்லப்படுகிறது.

இந்த ஹோமம் முடிவதற்கு இன்னும் சிறிது நாட்களே இருக்கின்றன. இதைப் பற்றிய விவரங்களை கருவூர்த்தேவரிடம்

சொல்லி, கருவூர்த்தேவர் என்ன சொல்கிறாரோ அதன்படி செய்ய வேண்டும் என்று இராஜேந்திரர் கேட்டுக்கொண்டிருப்ப தாக இராஜராஜீ பஞ்சவன்மாதேவியிடம் சொன்னாள்..."

"இராஜேந்திரர் யார் யாரிடம் இதைச் சொல்லச் சொல்லி இருக்கிறார்?"

"இளவரசர் இராஜேந்திரர் இதை பஞ்சவன்மாதேவியிடம் மட்டும் சொல்லச் சொல்லி இருக்கிறார். குறிப்பாய், உடையார் ஸ்ரீராஜராஜத் தேவரிடமும் உங்களிடமும் சொல்லக் கூடாது என்று சொல்லியிருக்கிறாராம்."

"ஏன்... காரணம் ஏதேனும் உண்டா?"

"உண்டு. உங்களிடம் சொன்னால் நீங்கள் மறுவிநாடியே இதை உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரிடம் தெரிவித்து விடுவீர்களாம். உடையார் இராஜராஜத்தேவர் இதை நம்பாமல் சிரித்துவிட்டுப் புறந்தள்ளி விடுவாராம்.

ஏதேனும் செய்ய முற்பட்டால், செய்யக்கூடாது என்று சொல்லிவிடுவாராம்.

எனவே, இந்தமாதிரி விஷயங்களை அவரிடம் எடுத்துக்கொண்டு போவதில் நியாயமில்லை. எனவே, இந்தப் பிரச்சினையைத் தீர்க்கக்கூடிய ஒரே ஒரு மனிதர் கருவூர்த்தேவர் என்பதால் அவரிடம் சொல்லி இதை எப்படிச் சமாளிப்பது என்பதைத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

கருவூர்த்தேவர் என்ன கட்டளையிடுகிறாரோ, அதே விதமாகச் செய்ய இராஜேந்திரர் சித்தமாக இருக்கிறார்."

"ஹோமம் எத்தனை நாட்களாக நடைபெறுகிறது?"

"கிட்டதட்ட ஐந்து மாதங்களாக நடைபெறுகிறது. ஆறாவது மாதம் இந்த ஹோமம் பூர்த்தியாகிவிடும் என்று சொல்கிறார்கள்."

"அபிசாரத்தில் பலவிதமான ஹோமங்கள் இருக்கின்றன. இவர்கள் எந்தவிதமான ஹோமம் செய்கிறார்கள்... ஏதேனும் தகவல் உண்டா?"

"அது பற்றியும் இராஜராஜீ பஞ்சவன்மாதேவியிடம் பேசினாள். வரமிளகாயையும், மாமிசங்களையும், மதுக்குடங் களையும் நடுநிசியில் ஹோமகுண்டத்தில் சொரிந்து அதர்வண வேதத்தை உரத்துச் சொல்லி ஆடுகிறார்களாம்..."

"அப்படியா... உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் போல பதுமை செய்து வைத்திருக்கிறார்களாமா?"

"இல்லை. அப்படி ஒரு தகவலை இராஜராஜீ சொல்லவில்லை."

"சரி; இதற்கு பஞ்சவன்மாதேவி என்ன சொன்னார்?"

"எந்தப் பதிலும் சொல்லவில்லை. இதைக் கேட்டதும் நான் திடுக்கிட்டுச் சரிந்து விட்டேன். என்னைத் தேடுவதற்காக மூங்கில் கழியை உருவி, நாலுபக்கமும் வீசி எறிந்தார். என்மீது படாதவாறு, நான் உட்கார்ந்தபடி எதிர்திசைக்குப் போய் விட்டேன். அவர் தனக்குப் பின்பக்கம் ஆள் இருப்பர் என்று நம்பிக் கொண்டு, இடம் மாற்றி உள்ளே போய் விட்டார்..."

"இன்னும் அமைதியாக இருந்து விஷயங்கள் கேட்டு வந்திருக்கலாம். ஒரு ஒற்றன், தான் அறியும் செய்தியைப் பற்றி திடுக்கிடுதல் கூடாது. அதிர்ச்சியை வெளிக்காட்டிக் கொள்ளல் கூடாது. உனக்கு நல்ல பழக்கங்கள், பயிற்சிகள் இருந்தும் முக்கியமான நேரத்தில் சரிவர செய்ய முடியாமல் போகிறது.

அடிக்கடி இம்மாதிரி விஷயங்களில் உன்னை நீ ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். வெறும் அந்தணனாகவே நீ உலவி வருகிறாய். முக்கியமான நேரத்தில் உன்னை வெளிக் காட்டிக் கொண்டிருக்கிறாய். அதனால் செய்தியின் தொடர்ச்சி பளிச்சென்று அறுந்து விட்டது பார்..." மென்மையாக ஆதிகேசவனை பிரம்மராயர் கடிந்துகொண்டார்.

ஆதிகேசவன் பதில் பேசாதிருந்தார். ஆதிகேசவனுக்கு நேர் பின்னே குமுதினி சகலமும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"வேண்டுமானால் நான் உணவு வகைகளை எடுத்துக் கொண்டு பஞ்சவன்மாதேவியைப்போய் பார்த்து வரட்டுமா..." குமுதினி கேட்டாள்.

"செய்யலாம். உடனே செய்தால் அவருக்குச் சந்தேகம் உண்டாகும். வேறு ஏதேனும் சரியான காரணம் கண்டு பிடிக்கலாம். அந்த ஓலை மதுராந்தகருடைய ஓலைதான் என்பது இராஜேந்திரருக்கு எப்படித் தெரியும்? ஓலை கொடுக்கப் பட்டதா?" பிரம்மராயர் ஆதிகேசவன் பக்கம் திரும்பிக் கேட்டார்.

"இல்லை. ஓலை கொடுக்கப்படவில்லை. ஓலையின் பிரதியும் கொடுக்கப்படவில்லை. ஓலையிலுள்ள விஷயங்கள் மட்டுமே சொல்லப்பட்டன..." ஆதிகேசவன் சொன்னார்.

"எந்த இடத்தில் அபிசார ஹோமம் நடக்கிறது என்று சொன்னாய்?"

"கொல்லிமலையில்..."

"சரி; இது சாதராணமாக நினைக்கக்கூடிய விஷயம் இல்லை. உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்?"

"அவர் மாளிகைக்குப் போனவுடனேயே மேல் தளத்திற்குப்போய் அறைக்குள் நுழைந்துவிட்டார். இதை என் கண்ணால் பார்த்தேன். அலுப்பாக இருக்கிறது என்று பஞ்சவன்மாதேவியிடம் சொன்னார்."

"நடுநிசி வரைக்கும் உழைத்திருக்கும் மன்னருக்கு அலுப்பாகத்தான் இருக்கும். மற்றபடி மன்னரிடம் வேறு ஏதேனும் மாற்றமுண்டா?"

"எதுவுமில்லை மன்னர் கம்பீரமாக, தெளிவாக இருக்கிறார்."

'நல்லது... இராஜராஜீ என்ன செய்து கொண்டிருக்கிறாள்?"

"இராஜராஜீயும் உறங்கப் போய் விட்டாள்."

"பஞ்சவன்மாதேவி உறங்கிவிட்டாரா?"

"அவர் அரண்மனையின் மேல் தளத்திற்குப்போய், அரசர் இருக்கின்ற அறைக்குள் நுழைவதையும் பார்த்து விட்டுத்தான் வந்தேன்."

"நல்லது... சகலரும் ஓய்வெடுக்கட்டும். நாம் கிளம்பு வோம்..."

பிரம்மராயர் அவசரமாக எங்கோ கிளம்புவதற்கு ஆயத்தமானார். ஆதிகேசவன் குழப்பமானார்.

## 17

"எங்கு போக வேண்டும்?" – ஆதிகேசவன் அதிர்ச்சியுடன் ·ட்டார்.

"வெளியே போய் கிராம அதிகாரியிடம் பேசி உனக்கு ஒரு குதிரை சம்பாதித்துக் கொள். நாம் இருவரும் குடந்தை நோக்கிப் போவாம்.

குமுதினி... நாளையோ, நாளை மறுநாளோ பஞ்சவன்மா தேவியிடம் பேசி, இந்தச் செய்தியைப் பற்றி மேற்கொண்டு ஏதேனும் தகவல் இருந்தால் விசாரித்து, உடனடியாக ஒரு ஆள் மூலம் குடந்தைக்கு அனுப்பவேண்டும். குடந்தையையும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் நாம் பயணம் செய்வோம்..."

"என்ன காரணம் என்று தெரிந்து கொள்ளலாமா?" ஆதிகேசவன் கேட்டார்.

"கருவூர்த்தேவர் குடந்தைக்கு அருகேயுள்ள கிராமத்தில் இருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவேளை – அவர் உடையாளூரில் அவர் மாளிகையிலேயே தங்கியிருக் கலாம். அப்படியிருப்பின் அவரை நேரே பார்த்துவிட்டுப் பேசிவிட்டு வரவேண்டும்".

"இந்தக் காரியம் அத்தனை முக்கியம் என்று நினைக் கிறீர்களா?"

"முக்கியம்தான். அரசருக்கு ஆபத்தெனில் நாம் பரபரக்க வேண்டியது நம்முடைய கடமை."

"இது அரசருக்கு ஆபத்து தரும் என்று நினைக்கிறீர்களா?" ஆதிகேசவன் பணிவாகக் கேட்டார்.

"தெரியவில்லை ஆதிகேசவா... யார் செய்கிறார்கள், எவ்வளவு உக்கிரமாகச் செய்கிறார்கள் என்று புரியவில்லை. ஆனால் ஒரு விஷயம் ஆறுதலாக இருக்கிறது.

அந்த ஆபத்துதவி படைவீரர்களிடமிருந்து மதுராந்தக கண்டராதித்ததேவர் தப்பித்து, தகவல் அனுப்பியிருக்கிறார் என்பதே சந்தோஷமான விஷயமாக இருக்கிறது.

அந்தச் சதிச்செயலில் அவர் இல்லை என்பதே கேட்பதற்கு நிம்மதியாக இருக்கிறது. ரத்த பந்தம் உள்ள உறவுகள் 'அபிசார ஹோமம்' செய்தால் அது வேகமாகப் பலிக்கும். வெறும் எதிரிகள் செய்தால் சற்று தாமதமாகும்..."

"இது நடக்குமென்றா நினைக்கிறீர்கள். எனக்கு நம்பிக்கை யில்லை."

"உனக்குப் புரியவில்லை ஆதிகேசவா. வேலை தெரிந்தவர்கள் இம்மாதிரி விஷயங்களை வெகுநிச்சயமாய் செய்து முடித்து விடுவார்கள்." பிரம்மராயர் சொன்னார்.

"நம் மன்னர் சிறந்த சிவபக்தராயிற்றே?"

"அவருடைய பக்தியை மீறியும் அவரை இந்த விஷயங்கள் தாக்கக்கூடும். காபந்து செய்ய கருவூர்த்தேவர் போன்றவர்களால் தான் முடியும்."

"யார், எங்கே செய்கிறார்கள் என்று தெரிந்து படையெடுத்து அழித்துவிட்டால்...?"

"அது இன்னொரு வித்தை. அதற்குமுன் இதை கருவூர்த் தேவரிடம் போய்க் கேட்டுக்கொண்டு வந்து விடுவோம்."

"நீங்கள் ஒன்றரை நாழிகைதான் உறங்கியிருக்கிறீர்கள். அதற்குள் மறுபடியும் கண் விழித்து விட்டீர்கள். உங்கள் உடல்நலத்தை நீங்கள் பாதுகாக்க வேண்டாமா?" – பிரம்மராயரைப் பார்த்து குமுதினி பிரியமாகக் கேட்டாள்.

"எப்போது அரசாங்க அதிகாரியாகப் பதவி ஏற்றேனோ, அப்போதே நல்ல உணவும், நல்ல உறக்கமும் என்னை விட்டு நகர்ந்துவிட்டன.

மன்னர் என்பவர் உறங்காமல் தன்னுடைய கடமைகளை ஓடியாடிச் செய்கிறபோது, ஒரு அதிகாரி எப்படி உறங்க முடியும். மன்னரைக் காப்பாற்ற வேண்டியது என்னுடைய வேலை. சோழ மக்களைக் காப்பாற்ற வேண்டியது என் பொறுப்பு.

இதை நான் சரிவரச் செய்துதான் ஆக வேண்டும். உறக்கமும், உணவும் எப்போதேனும் கிடைக்கும். அப்பொழுது அனுபவித்துக் கொள்ள வேண்டியதுதான்.

நான் சொன்ன விஷயத்தை மட்டும் ஞாபகம் வைத்துக் கொண்டு, பஞ்சவன்மாதேவி இதைப் பற்றி என்ன முடிவு எடுக்கிறார்; எங்கு ஆள் அனுப்புகிறார் என்பதைச் சரிவரத் தெரிந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்.

நான் கருவூர்த்தேவரிடம் போய் உட்கார்ந்திருக்கப் போகிறேன். அவராகப் பேச்சை ஆரம்பித்தால் விஷயம் சொல்லப் போகிறேன். இதற்கு நடுவே, பஞ்சவன்மாதேவியிடமிருந்து யாராவது வந்தால், அவரை மடக்கி, என்னவென்று விசாரிக்கப் போகிறேன்." பிரம்மராயர் சொன்னார்.

"ஐயனே... இன்னொரு கேள்வி..."

"கேள் ஆதிகேசவா..."

"இது உண்மைதானா என்று தெரிந்துகொள்வதற்கு நாம் யாரையேனும் கொல்லிமலைக்கு அனுப்பினாலென்ன?"

"அதுவும் நடக்கும்." பிரம்மராயர் சொன்னார்.

"நான் கொல்லிமலைக்குப் போகட்டுமா?"

"உனக்குக் கொல்லிமலை பற்றி ஒன்றும் தெரியாது என்று நினைக்கிறேன் ஆதிகேசவா. அது மிகக்கடினமான மலை. உன்னைப்போல் தஞ்சாவூர் வயல்வெளியில் பிறந்து வளர்ந்தவர்கள், கொல்லிமலையில் ஏறி இறங்குவதென்பது கடினமானது.

மலையேறுவதில் பயிற்சி பெற்ற மலைவாழ் மக்களை அனுப்பினால் தான் நகர்ந்து போக முடியும். வெறுமே அவர்கள் பூஜை செய்கிற இடங்கள் மட்டுமல்லாமல், அவர்கள் எப்படித் தப்பித்துப் போவார்கள், எங்கே தப்பித்துப் போவார்கள், தப்பித்துப்போகும் வழிகளெல்லாம் என்னென்ன என்பதையும் நாம் தெரிந்து கொண்டாக வேண்டும். எனவே கொல்லி மலைக்கு நீ போக வேண்டாம். என்னோடு குடந்தைக்கு வந்துவிடு.

நமது ஒற்றர்படையில் காரிகுளிப்பாகை என்பவன் இருப்பான். அவன் குள்ளன். மலைவாசி. விரைவாக குதிரை ஓட்டுவதில் வல்லவன். நல்ல வேஷதாரி. அவன் ஒரு கோமாளியைப்போல் நகரங்களில் நடமாடி நிறைய தகவல்கள் கொண்டு வந்திருக்கிறான். அவனைத் திருவையாறில் நிறுத்தி வைத்திருக்கிறேன்.

போகும்போது அவனுக்கு இந்த விஷயங்களை விளக்கமாகச் சொல்லி, கொல்லிமலைக்கு மூன்று ஆட்களோடு அனுப்பி, அங்கிருந்து அந்த ஆட்களிடம் தகவல்கள் அனுப்பிக் கொண்டே இருக்க வேண்டும் என்று தெரிவித்துவிட்டு, பின்பு நாம் குடந்தையை நோக்கிப் பயணம் தொடர வேண்டும்.

நீ அரசாங்க அதிகாரி எவரையேனும் முன்னே அனுப்பி, காரிகுளிப்பாகையைத் தயாராக இருக்கச் சொல். குமுதினி, உண்ண என்ன இருக்கிறது?'' என்று அடிக்குரலில் குமுதினியைப் பார்த்துக் கேட்டார்.

பிரம்மராயர் கேட்டவுடனேயே குமுதினி சமையலறை நோக்கி ஓடினாள். அப்பங்கள் கொண்டு வந்தாள். கஞ்சியில்

மோர்விட்டுக் கலக்கினாள். கலயங்களை அவர் எதிரே கொண்டு வந்து வைத்தாள்.

இரண்டு அப்பம் தின்றுவிட்டு, ஒரு குவளை நிறைய அரிசிக்கஞ்சியை குடித்ததும் சிறிய ஏப்பம் பிரம்மராயரிட மிருந்து வெளியே வந்தது.

"நல்ல உணவு குமுதினி. இது நாளை காலைவரை தாங்கும். நான் எங்கு போயிருக்கிறேன் என்று மன்னர் கேட்டால், குடந்தையை நோக்கிப் போயிருக்கிறேன் என்று சொல்.

'என்ன வேலை' என்று கேட்பார். குடந்தைக்கு அருகே நிலம் மடக்குகிற வேலை தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. அந்த நிலம் மடக்குகிற வேலையை மேற்பார்வை பார்க்கப் போயிருக்கிறார்' என்று அரசரிடம் தெரிவித்துவிடு.

நான் குடந்தையில் அந்த வேலையையும் பார்க்கப் போகிறேன். எனவே, நீ அரசரிடம் பொய் சொல்வதுபோல் ஆகாது. அதனால் தயக்கமின்றி தைரியமாக அரசரிடம் பேசு... வேறு ஏதாவது வேண்டுமா குமுதினி... கைச்செலவுக்குக் காசு இருக்கிறதா?"

"ஆஹா... நீங்கள் வருடாவருடம் கொடுத்துக் கொண் டிருக்கிற பொற்கழஞ்சுகளும், இருநூறு கலம் நெல்லும் எங்களுக்குப் போதுமானதாக இருக்கிறது. மிஞ்சியவற்றை நாங்கள் ஊர்மக்களுக்குத் தானமாகவும் தருகிறோம். எங்கள் நிலங்களிலும் நல்ல விளைச்சல் இருக்கிறது. செல்வத்திற்குக் குறைவேயில்லை. கருவூர்த்தேவரிடம் பேச நேரின், ஒரு சிறிய உதவி செய்ய வேண்டும்." - குமுதினி தாழ்மையுடன் கேட்டாள்.

"என்ன அது?" - பிரம்மராயர் வினவினார்.

"எனக்குப் பிள்ளைப்பேறு இல்லை. சோழ தேசத்திற் காகவும், உடையார் ஸ்ரீராஜராஜதேவருக்காகவும் என் வாழ்க்கையை தத்தம் செய்து கொடுத்திருக்கிறேன். உங்கள் ஒற்றர் படையில் ஒரு முக்கியமான ஆளாக இருக்கிறேன்.

ஆனாலும், இது தாண்டி நான் ஒரு பெண். ஒருவருக்கு மனைவி. நான் தாயாக விரும்புவது தவறில்லை என்று நினைக்கிறேன். தயவுசெய்து, தாயாகும் பாக்கியத்தை நான் பெறவேண்டும் என்று கருவூர்த்தேவரை ஆசிர்வாதம் செய்யச் சொல்லுங்கள்.

பழமர்நேரி குமுதினி என்றால் அவருக்குத் தெரியும். மூன்றுவேளை என் அகத்திலே அவர் உணவு உண்டிருக்கிறார்.

அவரோடு காவிரிக்கரையில் ஒருநாள் முழுவதும் அலைந்திருக்கிறேன். நல்ல தாவரங்களை அவர் எனக்கு இனங்காட்டியிருக்கிறார். எனவே, அவர் என்னை ஞாபகம் வைத்திருப்பார். தயவுசெய்து குமுதினி பிள்ளைவரம் கேட்டாளென்று தெரிவியுங்கள். இந்த உதவி போதும்...” என்று கைகூப்பினாள்.

“நிச்சயம் சொல்கிறேன்...'' என்று சொல்லிவிட்டு பிரம்மராயர் கிளம்ப, குமுதினி பிரம்மராயர் கையில் ஒரு குவளை நீர் கொடுத்தாள்.

பிரம்மராயர் நீர் குடித்துவிட்டு, அவள் தலையை அன்போடு தடவிக்கொடுத்துவிட்டு, வாசலுக்கு வந்தார்.

அவர் வாசலுக்கு வரவும், குதிரைகள் அவர் வீட்டுப்பக்கம் நகரவும் சரியாக இருந்தன. படியிலிருந்தே குதிரைமீது தாவி ஏறிக்கொண்டார்.

பிரம்மராயர் குதிரையை முன்னே செலுத்தியவுடன் ஆதிகேசவனும் குதிரையில் தாவி ஏறிக்கொண்டார்.

திரும்பி மனைவியைப் பார்த்தார். ‘வருகிறேன்’ என்று சொன்னார். மனைவி சரியென்று தலையசைத்தாள். ஆதிகேசவன் குதிரை, பிரம்மராயர் குதிரையைப் பின் தொடர்ந்தது.

ஆற்றில் தண்ணீர் போக்குவரத்து குறைந்திருந்தது. எதிர்ப்பக்கம் மாட்டுவண்டிகள் மெல்ல ஆற்றில் இறங்கி, பழமர்நேரி கரையை நோக்கி நகர ஆரம்பித்திருந்தன. தீப்பந்த வெளிச்சத்தில் அவைகள் நகர்வது தெளிவாகத் தெரிந்தது.

“காத்திருக்க வேண்டுமா?” ஆதிகேசவன் கேட்டதற்கு, “வேண்டாம்.” என்று சொல்லி விட்டு, குதிரையை திருவையாறு நோக்கி பிரம்மாரயர் விரட்டினார். ஆதிகேசவன் பின் தொடர்ந்தார்.

அவர்கள் போவதை, தேவரடியார் பெண்களோடு துணைக்கு வந்த வீரன் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான்.

## 18

சேறு நிறைந்த வயல்கள்தான் சோழதேசத்தின் உயிர் நாடி. குறிப்பாய் குடந்தையிலும், அதைச் சுற்றியுள்ள கிராமங் களிலும் வண்டல் மண்வயல்களில் காவிரி நீர் நின்று, கதிர் கதிராய் நெல்லை விளைவித்து மக்களை வாழ வைத்துக் கொண்டிருந்தது.

சித்திரை, வைகாசி, ஆனி மூன்று மாதத்திலும் கடும் வெயில் பூமியைத் தாக்க, பூமி வறண்டு லேசாய் விரிசல் விட்டு மழைக்காகக் காத்திருக்கும். ஆடி மாதக் காற்றில் மண் புரளும். இலைகள் உதிரும். உரமாகும். கால்நடைகள் பூமியில் மிஞ்சியிருக்கின்ற புல்லைக் கடித்து இழுத்து, பூமியின் மேற்பரப்பை லேசாக்கும். ஆடி மாதம் வெயில் குறைய, அவ்வப்போது லேசாய் மழை பெய்யும். புற்கள் முளைக்கும்.

ஆவணி மாதம் தொலைதூரம் மேகம் கறுத்து, இரண்டு மூன்று முறை நல்ல மழை பெய்து பூமியைக் குளிர்விக்கும். புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை மூன்று மாதங்களிலும் மழை அடித்துப் பெய்யும்.

மனிதர்களோ, மிருகங்களோ, பறவைகளோ வெளியே தலைகாட்ட முடியாத அளவுக்கு மூர்க்கமாய் பூமியைத் தாக்கும். விரிசலின் உள்ளே நீர் பாய்ந்து, பத்து முழம் அளவுக்கு நீர் தரைக்குள் இறங்கி உள்ளே தேங்கி நிற்கும்.

அந்த நேரத்தில் என்ன விதைத்தாலும் முளைவிடும். கை தவறிச் சிந்திய தானியம்கூட முளைவிட்டுப் பயிராகும். எல்லா இடங்களிலும், எல்லா வகைச் செடிகளும் முளைத்து – சோழ தேசம் பச்சைப் பசேலென்று இருக்கும்.

மழை வருவதற்கு முன்பே காவிரியில் வெள்ளம் வந்து விடுவதும் உண்டு. தொலைதூரத்தில் குடகுமலையில் மழை பெய்ய, அந்தப் பலத்த மழை காரணமாக, காவிரி பொங்கிப் பிரவாகமாக வந்து, வெயில் சுளீரென்று காய்ந்து கொண் டிருக்கிற நேரத்திலேயும் அடர்த்தியாய், அகலமாய்ச் சிலிர்த்துக் கொண்டு ஓடுவதைத் தஞ்சை மக்கள் பலமுறை பார்த்திருக் கிறார்கள்.

கிழக்கே இருட்டுகிறதா, மேற்கே இருட்டுகிறதா என்று அவர்கள் கவலையோடு பார்ப்பார்கள். மூன்றாம்பிறை

சந்திரனில் வடகோடு உயர்ந்திருக்கிறதா, தாழ்ந்திருக்கிறதா என்று ஒருவரோடு பேசிக்கொள்வார்கள். வடகோடு உயர்ந் திருப்பின், குடகு தேசத்தில் மழை வந்துவிடும். ஆடி மாதம் கரை புரண்டு ஓடும்.

வெகு தொலைவே மழை வந்து, தமிழ் மண்ணை நனைப்பதற்காகவே காவிரி பொங்கிப் பிரவாகமாக ஓடி வருகிறாள்.

தாயார் வீட்டுச் சீதனத்தை அள்ளி எடுத்துக்கொண்டு, மிகுந்த ஆவலோடு திருச்சீரபுரம் நோக்கி ஓடி வந்து, 'இதோ பார்... என் அகத்தில் எத்தனை கொடுத்திருக்கிறார்கள். எல்லாம் உங்களுக்குத்தான்' என்று நல்ல சொத்து சுகத்தோடு வந்த மருமகளைப்போல காவிரி செயல்படுவாள்.

சோழதேசத்து மக்களும் அதே அன்போடு காவிரிக்கு மரியாதை செய்வார்கள். 'வந்துவிட்டாளா, வந்துவிட்டாளா' என்று ஆவலாகக் கேட்டுக் கொள்வார்கள்.

காவிரியில் வெள்ளம் வருவது அற்புதமான காட்சி. மெல்ல மெல்ல மணல் தடவி, கணுக்காலளவு நீர் விரையும். அந்த நீரைக் காலால் எட்டி உதைத்துக்கொண்டு சிறு பையன்கள் ஊருக்குக் கொண்டு வருவார்கள்.

'வா, வா' என்று மண் வெட்டியால் வழி செய்து, அவளைத் தன் ஊருக்கு இழுத்து வருவார்கள். அந்த ஊருக்கு இழுத்து வந்து மண் ஈரமானதும், அடுத்த ஊர் மக்கள் அங்கிருந்து மறுபடியும் காவிரியை இழுத்துக்கொண்டு தங்கள் ஊருக்குப் போவார்கள். கடை மடை வரை காவிரிக்கு இளைஞர்களாலும் சிறுவர்களாலும் உற்சாகமான வரவேற்பு கிடைக்கும்.

நான்கு நாட்களில் காவிரியில் முழங்கால் ஜலம் வந்துவிடும். யாரும் இறங்கிக் குளிக்க மாட்டார்கள். கலங்கலாய், பழுப்பாய் ஓடுகின்ற ஜலத்தில் கால் வைக்கலாகாது என்பது தான் எழுதப்படாத சட்டம். அது ஆரோக்கியமல்ல என்று எல்லோருக்கும் தெரியும். சில சமயம் கரையோரத்து விஷ ஜந்துக்கள்கூட அடித்துக்கொண்டு வரப்படலாம் என்பதால் காவிரியைக் கரையோரம் உட்கார்ந்து வெறுமனே வேடிக்கை பார்த்துக்கொண்டு இருப்பார்கள்.

பழுப்பு குறைந்து, நீர் தெளிந்து, வேகம் அதிகரித்த பின் நீரில் இறங்க ஆரம்பிப்பார்கள். இதற்குள், கிராமங்களில் பல இடங்களில் மடைவெட்டி காவிரியைத் திசைதிருப்பி, மதகு தூக்கி, உள்ளே வரவழைத்து, காய்ந்துபோன வயல்வெளிகளை ஈரமாக்குவார்கள்.

காவிரி ஜலம் உள்ளே நுழைந்ததும், ஒரு சுமங்கலியை வரவேற்பதுபோல மஞ்சளும், குங்குமமும், முளைப்பாரியும் போட்டு அவளை வயலுக்குள் வரவேற்பார்கள். ‘அம்மா, அம்மா வா’ என்று விழுந்து கும்பிடுகிற பெண்கள்கூட உண்டு. ஏனெனில் காவிரி நித்திய சுமங்கலி.

ஆடி மாதக் காவிரி, இரண்டு கரைகளையும் தொட்டுக் கொண்டு கனகம்பீரமாய் விரைந்து போவாள். அப்போது ஜனங்கள் இறங்கிக் குளிக்கத் துவங்குவார்கள்.

காவிரியில் முங்கிக் குளித்துவிட்டு வேட்டிகளையும், தலைப்பாகைகளையும், இடுப்புத் துண்டையும் கல் வைத்து உலரவைப்பார்கள்.

ஆடிமாதக் காற்று என்றால் அதில் கல்லையும் புரட்டிப் போடுகிறவேகம் இருக்கும். குறிப்பாய், காவிரிக் கரையோரம் குளித்து விட்டு, இடுப்புக் கோவணத்தோடு உட்கார்ந்து கொண்டிருக்கும்போது, காற்றினுடைய சிலுசிலுப்பு உடம்பைக் கடுமையாகத் தாக்கும். மனமும், உடம்பும் குளுமையாக இருக்கிற நேரம் அது.

துணி உலரும் வரையில் சிலுசிலுப்பான காற்றில் காத்திருந்துவிட்டு, முக்கால்வாசி உலர்ந்ததும் இடுப்பில் கட்டிக் கொண்டு, மெல்ல கோவில் நோக்கி நடப்பார்கள் ரசனையே இல்லாதவனுக்குள்ளும் பாட்டு பொங்கும் நேரமது.

காவிரிக்குளியல், காற்றின் ஊதல், இடுப்பு வேட்டியின் மெல்லிய ஈரம் எல்லாம் சேர்ந்து ஒரு மிகக் குளுமையான மனோநிலையை மனிதர்களுக்கு ஏற்படுத்தும். தஞ்சை மக்கள் கலைஞர்களாக இருக்க காவிரி நதி காரணம்.

உழவர்கள் கலப்பையை மண்ணில் இறக்கி, காவிரி நீர் ஓடிய வயலை உழத் துவங்குவார்கள். கீறிக்கீறி மண்ணைப் புரட்டி இன்னும் சேறாக்குவார்கள். வயலெல்லாம், வரப்பெல்லாம் மனிதர்கள் போகின்ற பாதையெல்லாம் ஈரமாக இருக்கும்.

மண்ணைப் புரட்டிவிட்டு ஒரு வாரம் காத்திருந்தால், புற்கள் சாண் உயரம் முளைத்துவிடும். மறுபடியும் இறங்கிப் புரட்டினால் மொத்தப் புல்லும் மண்ணுக்கடியில் போய் உரமாகும்.

பிறகு நல்ல நாள் பார்த்து விதைக்கத் துவங்குவார்கள். விதைக்க ஆரம்பித்துவிட்டால் சோழ தேசத்தில் விவசாயத்தைத் தவிர வேறு எந்தப் பேச்சும் இருக்காது.

ஒரு மாதம் நாற்றங்கால் வளர்ந்து முழங்கை உயரம் வர, மொத்தமாய்ப் பறித்துக் குடும்பம் குடும்பமாய் வயலில் இறங்கி நாற்று நடுவார்கள். புரட்டாசி ஐப்பசியில் மழை வர, நீர் எல்லாப் பக்கமும் பரவ, நெற்கதிர்கள் நீரை உறிஞ்சிக் குடித்து நல்ல உயரத்துடன் வளரும்.

கார்த்திகையில் மழை குறைந்து குளிர் ஆரம்பமாகும். நெற்கதிர்கள் பால் பிடிக்கும். மார்கழியில் தழை சரியும். தை மாதம் நீரை மடக்கி, பூமியை வரள விடுவார்கள். நெற்கதிர்கள் தலை சாய்க்கும். அறுக்க ஆரம்பித்து விடுவார்கள். போரடிப் பார்கள். உயரத் தூக்கி உமி பிரிப்பார்கள். நெல்லைக் கூடை கூடையாய் கொண்டு வந்து உலர்த்துவார்கள்.

'என்ன விளைந்தது, விளைச்சல் எப்படி?' என்று பேசுவார்கள். அந்த வருடம் முழுவதும் அடுத்த ஆடி மாதம் வரையும் எந்தக் குறையும் இல்லை என்று சந்தோஷமாய் பேசிக்கொள்வார்கள்.

நெல் மட்டுமல்ல; நெல்லோடு கரும்பும், காய்கறிகளும், வெற்றிலையும், வாழையும், ஏகப்பட்ட பூச்செடிகளும் அந்த நேரம்தான் வளர்ந்து கிளைத்துச் செழித்து ஓங்கும். சோழதேசம் பஞ்சமே இல்லாத ஒரு அற்புதமான இடம்.

காவிரியின் பல கிளை நதிகள், பல கிராமங்களூடே புகுந்து வளைந்து, காலம் காலமாய் நகர்ந்து, அந்த தேசம் முழுவதையும் சேறாக்கி, செழிப்பாக்கிக் கொண்டிருந்தது.

உடையாளூர் பக்கமும் காவிரியின் ஒரு கிளை நதி ஓடிக் கொண்டிருந்தது. குடந்தையிலிருந்து ஐந்து காத தூரத்திலிருக்கின்ற உடையாளூர், சோழ மன்னர் குடும்பங்களில் முக்கியமான ஊர். மேல்ப்பழையாறை, கீழ்ப்பழையாறை என்று அரச குடும்பங்கள் வசிக்கின்ற இடம் தாண்டி இருக்கும்

உடையாளூர், வேளாளர்கள் அதிகம் குடியிருக்கும் கிராமமாகத் திகழ்ந்து வந்தது.

கீழ்ப்பழையாறையிலும், மேல்பழையாறையிலும் கட்டுக் காவல்கள் அதிகம் இருக்கும்.

தெருவில் விரைந்து போனால் சோழ மன்னரின் மெய்க்காவல் படையாட்கள் தடுத்து நிறுத்துவார்கள். 'எங்கே விரைவாகப் போகிறாய்' என்று கேட்பார்கள்.

நான்கு பேர் கூட்டம் கூடிச் சிரித்தால், வந்து அருகே நின்று கொள்வார்கள். 'ஏதேனும் முக்கிய விஷயமா' என்று மெல்லப்பேசுவார்கள். 'ஏதுமில்லையென்றால் கலைந்து போங்கள்' என்று உத்தரவிடுவார்கள். லேசாக மறுத்தாலும் முரட்டுத்தனமாக நடந்து கொள்வார்கள்.

'பழையாறை என்பது அரண்மனையைச் சார்ந்த இடம். இந்த இடத்தில் ஒவ்வொரு வைக்கோல் புல்லின் அசைவையும் நாங்கள் கவனித்தாக வேண்டும். எங்கள் சொல்படிதான் இங்கு வரும் மனிதர்கள் நடந்தாக வேண்டும். எதிர்த்துப் பேசினால், முரட்டுத்தனம் காட்டினால் பதிலுக்கு நாங்கள் மிகக் கடுமையாக நடந்து கொள்வோம். அரசரே வந்து தடுத்தாலும் எங்கள் செயலை நிறுத்த முடியாது' என்று எச்சரிப்பார்கள்.

எந்தக் காரணமுமின்றி அரண்மனை நோக்கி நடக்கிறவர் களை மெய்க்காவல்படை சூழ்ந்து கொண்டு, வெறுமே இரண்டு நாழிகை இங்கு நில்' என்று சொல்வதுண்டு.

அந்த இரண்டு நாழிகை பதட்டமில்லாமல் அமைதியாக உட்கார்ந்தால், தீர விசாரித்துப் பின் அரண்மனைக்குள் அனுப்புவார்கள். லேசான பதட்டம் காண்பித்தாலும் சந்தேகப்படுவார்கள். அவர்களுக்கு சோழ மன்னரும், சோழ மன்னரின் குடும்பமும்தான் மிக முக்கியமான விஷயம். மற்றவை ஏதும் லட்சியமில்லை.

ஒருமுறை குடந்தையைச் சேர்ந்த அந்தணர்கள் நாற்பது பேர் கும்பலாக வந்து, 'அரசரைப் பார்த்துப் பேச வேண்டும்' என்று எதற்கோ ஆவேசமாகச் சொல்லி, 'வாருங்கள்... அரசரிடம் போவோம்' என்று சோழ மன்னரின் மெய்க்காவல் படை அவர்களைச் சுற்றி வளைத்துக் கூட்டிக்கொண்டு போய் காராகிரகத்தில் அடைத்துவிட்டார்கள். கம்பிகளுக்குப் பின்னே உட்காரவைத்து விட்டார்கள்.

மன்னரே நேரே ஓடிவந்து விடுவித்த பிறகுதான் அந்தணர்களுக்கு மூச்சு வந்தது. 'சிறைச்சாலையைப் பார்த்ததே இல்லையே... பாவி... பார்க்க வைத்துவிட்டானே' என்று பல அந்தணர்கள் அழுதார்கள்.

ஆனால் உடையாளூர் அவ்விதமான இடமில்லை. மெய்க்காவல் படைகள் இங்கு அதிகம் வந்து மிரட்டுவதில்லை. அதையும் தவிர, கருவூர்த்தேவர், உடையாளூரின் மையமான இடத்தில் இருப்பதால், அவரைத் தேடி சாதுக்களும், யாத்ரீகர்களும், வெளியூர் மக்களும் அடிக்கடி வந்து போவார்கள். அவர்களை உடையாளூர் மக்கள் மரியாதையாக வரவேற்று உபசரித்து, பிறகு கருவூர்த் தேவரிடம் அனுப்பு வார்கள்.

ஊர் செழிப்பாக இருந்தால், அமைதியாக இருந்ததால், பொது மக்களின் போக்குவரத்து அதிகமாக இருந்ததால் ஊர் சுமுகமாக இருந்தது.

வியாபாரிகள் பழையாறையை நெருங்கும் முன், உடையாளூரில் தங்கி இளைப்பாறிவிட்டுப் போவார்கள். அவர்கள் தங்குவதற்கென்றே பெரிய சத்திரங்கள் ஊரின் எல்லையில் கட்டப்பட்டிருந்தன. அவைகளில் இரண்டு சத்திரங்கள் காவிரிக்கரையின் ஓரத்தில் நிறுவப்பட்டிருந்தன.

உடையாளூர் கோவில் மிகச் சிறியது. ஆனால் கொள்ளை அழகு. இரண்டே பிரகாரங்கள் கொண்ட கோவில் என்றாலும், ஒரு அமைதியும் சுபிட்சமும் அந்தக் கோவிலில் எவரும் உணர முடியும்.

ஊர் மக்களுக்கு விவசாய வேலைகள் அதிகம் என்பதால், ஊருக்குள் வருபவர்களை வரவேற்பதற்கும், அவர்களைக் கவனிப்பதற்கும் தனியே ஆட்கள் நியமித்திருந்தார்கள். ஒவ்வொரு வருடமும் ஊர்மக்களே இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சுழற்சி முறையில் இதை நடத்துவார்கள். அதிகாரிகளும் மூன்று வருடங்களுக்கு ஒருமுறை மாறுவார்கள். மறுபடியும் குடவோலை முறையால் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டு, வேறு ஒருவர் உபசரிப்பாளராய் பதவிக்கு வருவார்.

மன்னருக்குக்கூடப் பயப்படாத மெய்க்காவல்படை கருவூர்த்தேவருக்குப் பயப்படும். மெய்க்காவல்படை, சற்று

அத்துமீறும் இயல்புடையது. வேண்டுமென்றே ஒரு மெய்க்காவல் வீரன், கருவூர்த்தேவரின் வீட்டு வாசலில் குதிரையைக் கட்ட, அதை அவிழ்க்கும்படி கருவூர்த்தேவரின் வேலைக்காரி முத்தான பொன் நங்கை அதட்ட, 'இங்குதான் கட்டுவேன். என்ன செய்வாய்' என்று அவன் உரத்த குரலில் பேச, கருவூர்த் தேவர் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

யாரும் பதிலுக்குப் பேசவில்லையென்பதால், அந்த மெய்க்காவல் வீரன் தன் குதிரையை அவிழ்த்துக் கொண்டு, அதன் மேல் தாவி உட்கார்ந்தான்.

கருவூர்த் தேவர் வாய்விட்டுச் சிரித்தார். 'என்ன' என்பதுபோல அந்த மெய்க்காவல் வீரன் அவரைப் பார்த்தான்.

"ஏறி விட்டாயல்லவா... இனி இறங்க முடியாது..." என்று சொன்னார்.

"என்ன சொல்கிறீர்?" என்று ஏக வசனத்தில் அந்த வீரன் கேட்க,

உன்னால் இறங்க முடியாது. முத்து மாணிக்கத்திடம் மன்னிப்புக் கேட்கும்வரை இந்தக் குதிரை உன்னைக் கீழே இறக்காது..." என்று கூர்மையாகச் சொன்னார்.

திடீரென்று குதிரை ஓடத் துவங்கியது. காடு, மேடு, ஆறு, சேறு, வயல்கள் எல்லாம் தாண்டி பல காதங்கள் அவனைச் சுமந்து ஓடியது. அந்த வீரனின் இடுப்பும், வாயும், வயிறும் நோக நோக ஓடியது.

அவன் கதறிக் கதறிப் பல்வேறு விதங்களில் குதிரையை நிறுத்த முயற்சித்துத் தோல்வி அடைந்தான்.

## 19

அந்த மெய்க்காவல் வீரன் பல்வேறு விதங்களில் அந்தக் குதிரையை நிறுத்த முயற்சி செய்து தோல்வி அடைந்து, மறுபடியும் குதிரையை உடையாளூர் நோக்கி திருப்பி வந்தான்.

காலையில் சூரியன் உதயமாகி மூன்று நாழிகைக்குக் குதிரையேறியவன், இருட்டி, இரண்டு நாழிகை பொறுத்து கருவூர்த்தேவர் வீட்டு வாசலுக்கு முன் வந்து நின்று - இரண்டு

கைகளையும் தூக்கி, 'மன்னிக்க வேண்டும். மன்னிக்க வேண்டும்' என்று கதறினான்.

முத்தான பொன் நங்கையை நோக்கிக் கைகூப்பினான். இடைவாளைக் கழற்றி தரையில் எறிந்தான். தலைப்பாகையை உருவி தரையில் போட்டான். மேல் சட்டையைக் கழற்றி இடப்புறம் வீசினான். இடுப்பு வேட்டியை உருவி வலப்புறம் வீசினான்.

அவன் வெறும் கோவணத்தோடு குதிரையில் உட்கார்ந்து கொண்டிருக்க, குதிரை எகிறிக் கொண்டே இருந்தது.

'போதும்' என்று ஒரு வார்த்தை கருவூர்த்தேவர் சொல்ல, குதிரை அமைதியாகியது.

அந்த மெய்க்காவல் வீரன் உடம்பு நடுங்கக் கீழே இறங்கி, சுருண்டு விழுந்து, மெல்லத் தவழ்ந்து வந்து கருவூர்த்தேவரின் காலில் வந்து விழுந்து, "என் கர்வத்தை மன்னிக்க வேண்டும். எனக்கு இதற்கு மேலும் தண்டனை இருப்பினும் நீங்கள் தரலாம். நான் ஏற்றுக்கொள்ளச் சித்தமாக இருக்கிறேன்..." என்று சொன்னான்.

"நீ மெய்க்காவல் செய்தது போதும். உன் ஊருக்குப் போய் உழவுத்தொழில் செய்..." என்று அவனை கருவூர்த்தேவர் திருப்பி அனுப்பினார்.

அன்றிலிருந்து பழையாறை மெய்க்காவல் வீரர்கள் எவரும் உடையாளூரில் வாலாட்டுவதில்லை. கருவூர்த்தேவரின் புகழ், சோழ தேசம் முழுவதும் பரவியது.

கருவூர்த்தேவர் சிறந்த வைத்தியர். சித்த புருஷர். ஞானி. சோழ மன்னர் இராஜராஜர் விரும்பி ஏற்றுக்கொண்ட குரு. அரசாங்கத்தின் முக்கிய முடிவுகளை, சேனாதிபதி கிருஷ்ணன் ராமன் என்கிற மும்முடிச் சோழப் பிரம்மராயர் அவருக்குத் தெரிவித்துவிட்டுத்தான் தொடர்ந்து நடந்துவார்.

அவர் அறியாது சோழ தேசத்தில், ஏன் பரத கண்டத்தில், ஏன் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் எதுவும் அசைவதில்லை. அவருடைய முழுபலம் தெரிந்தவர்கள் வெகு சிலரே!

அருண்மொழிப் பட்டரின் அப்பா சேனாதிபதியான கிருஷ்ணன் ராமன் என்கிற பிரம்மராயர், உடையாளூருக்கு அருண்மொழியை அனுப்புகிறபோது, "மறந்து போயும்

அவருக்கு எதிரே மரியாதைக் குறைவாக ஒரு வார்த்தைகூடச் சொல்லி விடாதே... மரியாதைக் குறைவாக ஒரு எண்ணம்கூடத் தோன்ற விடாதே... உன் எண்ணம் தோன்றுகிற போதே உனக்கு முன் அந்த எண்ணத்தை அவரால் அறிய முடியும்.

கருவூர்த்தேவர் எல்லாம் கடந்தவர். எங்குமிருப்பவர். அவர் இறைவனின் அம்சம். சோழ தேசத்தின் உயர்வுக்கு மிக முக்கியக் காரணம் கருவூர்த்தேவர். இதை இராஜராஜர் நன்கு அறிவார். அரண்மனையில் உள்ள பல பெண்டிர்களும், முக்கியமானவர்களும் அறிவார்கள். எனக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரியும்.

தயவு செய்து நீயும் புரிந்து கொள். அவரை நோக்கிச் சிறிதளவும் பிசகாக நடந்து கொள்ளாதே. இது என் கட்டளை. மீறி நடந்ததாகத் தெரிந்தால், அவர் உன்னைத் தண்டிக்கிறாரோ இல்லையோ – நான் உன்னைக் கடுமையாகத் தண்டிப்பேன்...” என்று எச்சரித்து அனுப்பினார்.

தன் அன்புத் தந்தையும், சேனாதிபதியுமான பிரம்மராயர் இத்தனை கடுமையாகப் பேசி அருண்மொழி பார்த்ததே இல்லை.

அவன் அப்பாவை நமஸ்காரம் செய்து, “தந்தையே... உங்கள் உத்தரவுப்படி கருவூர்த்தேவரை நெஞ்சுக்குள் வைத்துப் போற்றி நடந்து கொள்வேன். சிறிதளவும் அவரை எதிர்க்கின்ற ஒரு மனோபாவத்தை வளர்த்துக் கொள்ளமாட்டேன்.

அதேநேரம் எனக்கு இருக்கிற கேள்விகளை, பிரபஞ்சம் பற்றிய சந்தேகங்களை, வாழ்க்கை பற்றிய அலசல்களை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் இருக்கிறது. இதற்கு உங்கள் அனுமதி வேண்டும்...” என்று கைகூப்பினான்.

“இதை என்னிடம் கேட்பதைவிட, அங்கு போய் நின்றதும் அவரிடம் கேள். அவர் கற்றுத்தருகிறேன் என்றால் மேற்கொண்டு தொடர்ந்து பேசு... இல்லையெனில் வெறுமே அங்கு ஒரு வேலைக்காரனாக இரு...” என்று பதில் சொன்னார்.

அருண்மொழி சம்மதித்தான். சோழ தேசத்தின் வழிகாட்டியாக இருக்கின்ற கருவூர்த்தேவரோடு ஓரிரு மாதம் இருப்பதற்காக அவரை நோக்கி வந்து, அவரை நமஸ்கரித்து, அவர் அனுமதி பெற்று, அவர் வீட்டிற்கு எதிரேயுள்ள ஒரு

அந்தணர் வீட்டில் தங்கியிருந்து, அவரைத் தினசரி தரிசித்து வந்தான்.

கருவூர்த்தேவர், அருண்மொழியை அருகே உட்கார வைத்து, அவன் தகப்பனாரான சேனாதிபதி கிருஷ்ணன் ராமனுடைய நலங்கள் பற்றி விசாரித்தார். அவன் படிப்பு பற்றி விவரம் தெரிந்து கொண்டார் 'இரு' என்று கட்டளையிட்டார்.

கருவூர்த்தேவர், அருண்மொழியை சேனாதிபதியின் மகன் என்று கொண்டாடவும் இல்லை; புறக்கணிக்கவும் இல்லை. எப்போது அவனிடம் பேச வேண்டுமோ, என்ன அவனிடம் பேச வேண்டுமோ, அதை மட்டும் தெளிவாய்ப் பேசி வந்தார்.

'குரு என்பவருக்கு அருகில் உட்கார்ந்திருப்பதுபோல சந்தோஷமான விஷயம் உலகத்தில் வேறு எதுவுமில்லை. எல்லாம் கற்றறிந்து, எந்தக் கேள்விக்கும் பதில் கொடுத்து, எது பற்றியும் தெளிவாகப் பேசி, உள்ளுக்குள் இருக்கும் சந்தேகங்களை மெல்ல அகற்றி, சீடன் அறியாமலேயே அவனை வழிநடத்திக் கொண்டு போகிற மகானுக்கு குரு என்று தானே பெயர்.

அப்படிப்பட்ட குருவின் சந்திதானம் எத்தனை இதமானது. வாழ்க்கையைப் பற்றி எவ்வளவு பெரிய நம்பிக்கை களை இவர் பேச்சுக்கள் கொடுக்கின்றன' அருண்மொழிப் பட்டன் ஆச்சரியத்தோடு தன் எதிரே அமர்ந்திருக்கின்ற கருவூர்த்தேவரைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

கருவூர்த்தேவருக்கு இடப்பக்கம் அவன் அமர்ந்திருக்க, வலப்பக்கம் உள்ளவர்களையே அவர் பார்த்துக் கொண் டிருந்தார்.

நீண்ட வெள்ளைத் தாடி, அதைவிடவும் வெண்மையாய்ப் பூத்த தலைமுடி, சுருக்கங்கள் விழுந்த முகம், மெத்து மெத்தென்ற உள்ளங்கைகள், நீண்ட விரல்கள், பொன்னிறத்தோடு கூடிய முழங்கை ரோமங்கள், எலும்புகள் துருத்திக் கொண்டிருக்கும் உடம்பு, கூர்மையான கண்கள், அசைந்து, படம் போன்ற மார்பு, உபவாசத்தால் ஒட்டிய வயிறு நல்ல உயரம்.

அவர் அவ்வப்போது சிரிக்கும் பொழுது, மனம் சொக்கிப்போய் அவரையே பார்த்துக்கொண்டிருக்கும் பேச்சைவிட அந்தச் சிரிப்பில்தான் எல்லோர் மனமும் மயங்கி

அவர் காலின் கீழ் வழித்துப்போட்ட உணவாய் விழுந்து கிடந்தது.

அவர் யாரையும் வேற்றாளாகவே பார்க்கவில்லை. எவரையும் பிரித்தே எண்ணவில்லை. யார் வந்தாலும் எழுந்திருக்கவில்லை. எது நடந்தாலும் பதட்டப்படவில்லை. இது இப்படித்தான் நடக்கும் என்று தெரிந்தது போலவே எப்போதும் அமர்ந்திருந்தார்.

"ஐயா... உங்களுடைய ஊரான கருவூர் எங்கிருக்கிறது. நீங்கள் எப்போது பிறந்தீர்கள்..."

எதிரே அமர்ந்திருந்த ஒரு படித்த இளைஞன் கைகட்டிக் கொண்டு கேள்வி கேட்டான்.

"என்னுடைய தாயின் கருப்பைதான் நான் பிறந்த ஊர். என் தாய் எந்த ஊரில் இருந்தாள் என்று எனக்குத் தெரியவில்லை. அது பற்றி நான் அக்கறையும் படவில்லை.

என் தாயினுடைய ஊருக்கு வந்து சேர்ந்தவுடனேயே அந்த ஊர் பற்றி நான் தெரிந்து கொண்டு விட்டேன். அந்த ஊரில் நான் வளர்ந்த ஒவ்வொரு நொடியும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. நான் வெறும் ஆத்மாவாக அங்கு இருந்ததும், அந்த ஆத்மா என் மனதை மலர வைத்ததும், மனம் மலர புத்தி ஒன்றானதும், புத்தி பலமாக – உடம்பிலுள்ள அவயங்கள் வளர்ந்ததும், அவைகளுக்குப் புத்தி கட்டளையிட்டதும் எனக்குத் தெள்ளத் தெளிவாய் நினைவில் இருக்கிறது.

எல்லா மனிதர்களுக்கும் கருவில் வாழ்ந்த காலம் நினைவில் இராது. அதனால்தான் அவர்கள் மனிதர்கள். கருவில் வாழ்ந்த காலம் எவனுக்கு நினைவில் இருக்கிறதோ அவன் தேவன். நான் சாதாரண மனிதன் அல்ல. நான் மனிதர்களுக்கும் மேலே என்பதால்தான் என்னைத் தேவன் என்று அழைக்கிறார்கள். நான் கரு என்ற ஊரிலே பிறந்த மனிதனல்லாத தேவன் இனத்தைச் சார்ந்தவன். நான் சொல்வது ஜாதியை அல்ல. என் நிலையை..."

"ஐயா... இதைத்தான் 'கருவிலே உதித்த திரு' என்று சொல்வார்களா..."

"சொல். சொன்னால் கேட்க நன்றாகத்தான் இருக்கிறது."

“ஐயா... நீங்கள் பிறந்த ஊரை எனக்குத் தெரிவிக்க வேண்டாம். நீங்கள் வாலிபனாக இருந்தபோது யார் அரசாண்டார்கள் என்பதைச் சொல்லலாம் அல்லவா...”

“ஆஹா... தாராளமாய்ச் சொல்லலாம். நான் வாலிபனாக இருந்தபோது ராமர் அரசாண்டார்...”

“என்ன...”

“ராமச்சந்திர பிரபு அயோத்தியைத் தலைநகராகக் கொண்டு, பரத கண்டம் முழுவதும் அரசாண்டிருந்தார்...”

“அவ்வளவு வயதா உங்களுக்கு?”

“ஏன்... கிருஷ்ணருடைய காலத்தில்கூட நான் இருந்திருக்கிறேனே... அவர் யாதவ மன்னராக அங்கு ஆட்சி செய்து பாரதப் போர் நடத்தியபோது நானும் அங்கு போயிருக்கிறேன்.”

கூட்டம் வாயடைத்து நின்றது.

“ஏன்... நான் சொன்ன பதில் உனக்குத் திருப்திகரமாக இல்லையா...” கைகட்டிக் கேள்வி கேட்டவனை உற்றுப் பார்த்துக் கேட்டார்.

“எனக்குத் தெரியவில்லை ஐயா... நீங்கள் பேசுவது அதிசயமாக இருக்கிறது.”

“நீ உனக்குத் தேவையில்லாத விஷயத்திற்குக் கேள்வி கேட்டிருக்கிறாய். அதனால் பதில் அதிசயமாய்ப் போய் விட்டது. உனக்குத் தேவைப்பட்டிருந்தால் பதிலை ஆராய்கின்ற புத்தி உடனே மனதிற்கு வந்திருக்கும். எனவே, நீ என்னைப் பற்றி ஆராய்வதை விட்டு விட்டு, உன்னைப் பற்றி – நீ யார் என்று விசாரிக்கக் கற்றுக்கொள்...”

“நான் யார் என்று எப்படி விசாரிப்பது...” – இடது பக்கம் அமர்ந்திருந்த அருண்மொழிப்பட்டன் சட்டென்று கேள்வி கேட்டான்.

“உன்னை உற்றுப் பார்ப்பதின் மூலம்...”

“என்னை உற்றுப் பார்ப்பது எவ்விதம் நடக்கும்...”

“அது தியானத்தின் மூலம் நடைபெற வேண்டிய விஷயம்.”

“தியானம் செய்வதற்கு என்ன முறை?”

“தியானம் செய்வதற்கு மந்திரஜபம் அல்லது இறைவன் நாமம் திரும்பத் திரும்பச் சொல்லப்பட வேண்டும்.”

"எந்த இறைவன் நாமத்தை நான் திரும்பத் திரும்பச் சொல்லலாம்..." வேறொருவன் கேட்டான்.

"எதை வேண்டுமானாலும் சொல்லாம். அதோ அந்த முற்றத்தில் இருக்கின்ற காக்கை, 'கா, கா' என்று அடிக்குரலில் குமுறுகிறதே... அதே விதம்ாகக் கூடச் சொல்லலாம்.

'மரா, மரா' என்று ஒரு மரத்தின் பெயரைச் சொல்லிக் கொண்டிருந்தவன் ராமருடைய காவியத்தை எழுதுகின்ற ஞானத்தைப் பெறவில்லையா... அதேபோல, நீயும் அந்தக் காக்கைபோல அடிக்குரலில் குமுறக் கற்றுக்கொள் உனக்குத் தியானம் கைகூடும். தியானம் கைகூடினால் சகலமும் நடக்கும்..."

"இடையறாது மந்திரஜபம் செய்வதற்கு என்ன யுக்தியைக் கையாள வேண்டும்?"

"வைராக்கியம் வேண்டும். தந்திரங்கள் பலிக்காது. செய்தே ஆக வேண்டும் என்ற வெறி ஒரு மனிதனுக்கு ஏற்பட வேண்டும்."

"அந்த வெறி ஒருவனுக்கு எப்போது ஏற்படும்?"

"எவன் தோற்றுப் போய் சிதறுண்டு கிடக்கிறானோ, எவன் வாழ்க்கையில் அடிவாங்கி அழுகிறானோ அவனுக்குள்தான் வேகமான வைராக்கியம் பிறக்கும்.

மனதில் அதிருப்தி ஏற்படும் வரை, உலக வாழ்க்கையில் நசுங்கி வேதனைப்படும்வரை கடவுள் பற்றிய சிந்தனை எவருக்கும் வராது.

வெற்றிகள் உங்களுக்கு மயக்கத்தைக் கொடுத்து, கடவுளி லிருந்து அப்பால் அழைத்துப் போய்விடும். 'நான் செய்தேன். என்னால் முடியும்' என்கிற அகங்காரத்தைக் கொடுக்கும். அகங்காரம் வளர வளர, உங்களைச் சுற்றியுள்ள மனிதர்களைக் கூட நீங்கள் அறிய முடியாமல் போய் விடுகிறீர்கள்."

"இதுதான் 'தோல்வியே வெற்றிக்கு அடிப்படை' என்ற காரணமா?"

"அப்படியும் வைத்துக் கொள்ளலாம்."

கருவூர்த்தேவர், மாணவர்களோடு அந்த மாளிகையின் கூடத்தில் பேசிக் கொண்டிருக்கும்போதே முற்றத்தை ஒரு கணம் உற்றுப் பார்த்தார். மெல்லப் பின் பக்கம் எட்டிப் பார்த்தார்.

"முத்து நங்கை... மழை வரும்போல் இருக்கிறது. மாடியில் நெல் உலர்த்தியிருக்கிறார்கள். அதை வாரிக்கொண்டு வந்துவிடு..." என்று உத்தரவிட்டார்.

"ஐயா... எப்படி சட்டென்று மழை வரும் என்று சொல்கிறீர்கள்..."

"நன்கு வெயில் காய்கிறது. ஆனால் வெளிச்சம் குறைந்து விட்டது. காற்றின் திசை மாறிவிட்டது. இவற்றை வைத்துத்தான் மழை வரும் என்று சொல்கிறேன்."

"ஐயா... இந்த மழை வருவதைத் தெரிந்து கொள்ளும் தந்திரத்தை எனக்குக் கற்றுக் கொடுத்தலாகாதா..."

"உலகத்தில் ஒரே ஒரு தந்திரம் தான் உண்டு தம்பி..." கேள்வி கேட்டவனை நோக்கி அவர் பதில் சொல்லத் துவங்கினார்.

## 20

மனதை ஒருமுகப்படுத்தி உள்ளுக்குள் ஆழ அமிழ்ந்துவிடுவது என்கிற ஒரு தந்திரம்தான் உண்டு. எவன் ஒருவன் மனதை ஒருநிலைப்படுத்தி, தனக்குள் அமிழ்ந்து தானற்றுப் போகிறானோ அவனுக்குச் சகல கலைகளும் கைகூடும்.

ஏன் தெரியுமா... தானற்றுப் போகிற மனதிற்கு எது பற்றிய அபிப்ராயமும் இருக்காது. அது வெள்ளையாக இருக்கும். வெள்ளையான விஷயத்தில் சுற்றுப்புறச் சூழ்நிலையும், எதிரே வருகின்ற மனிதரின் மனமும், நடை, உடை, பாவனையும் ஏகப்பட்ட விஷயங்களைச் சொல்லும்.

அது தவிர – சூட்சுமமாக பல்வேறு விஷயங்கள் உள்ளுக்குள் பூரிக்கும். அப்படி பூரிக்கின்ற விஷயத்தை மிகச் சாதாரணமாக எடுத்துக்கொண்டு, மிகச் சாதாரணமாக அந்த மனிதர்கள் வெளியிடுவார்கள். உலகத்தில் பல்லாயிரக் கணக்கான தந்திரங்கள் இல்லை. உன்னுள் நீ அமர்வதே மிகப் பெரிய தந்திரம்.

அப்படி உள்ளுக்குள் அமர்ந்தவனுக்கு என்ன விதை எங்கே முளைக்கப் போகிறது என்று தெரியும். பூமி எப்போது

நடுங்கும் என்று தெரியும். யாருக்கு, எந்த இடத்தில் ருத்ர பூமி விதிக்கப்பட்டிருக்கிறது என்று தெரியும். இவற்றில் எது தெரிந்தாலும் அதைப் பற்றி அவன் எந்த அபிப்ராயமும் கொள்வதில்லை.

எதைப் பற்றியாவது அபிப்ராயம் கொள்ளும்போது, அந்த அபிப்ராயம் கண்ணைத் தூசு போல் மறைக்கிறது. அபிப்ராயத்தின் மீது அபிப்ராயம் விழுந்து உண்மையைப் பார்க்க மனது மறந்து போகிறது. தனக்குள் உள்ளவன் அபிப்ராயங்கள் கொள்வதில்லை. அவன் சுத்தமாக எப்போதும் எந்தக் கறையுமின்றி வெளிச்சமாக இருக்கிறான். வெளிச்சம் அவனுக்குச் சகல விஷயத்தையும் காட்டிக் கொடுக்கிறது.”

அருண்மொழி உட்பட எதிரே உள்ள இளைஞர்கள் அனைவரும் பேச்சற்று அவரையே பார்த்துக்கொண்டிருந் தார்கள். அவர் மேல் தளத்தில் நெல்மணிகளைப் பெருக்குகின்ற சப்தத்தையே உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தார்.

“முத்து நங்கையும் மழை வராது என்று நினைக்கிறாள். தேவையற்ற வேலை என்று பெருக்குகிறாள். ஆனால் மாலை நிச்சயம் மழை வரும். இப்போது குளிக்கப்போகலாமா...” என்று அவர் நிதானமாய் கையூன்றி எழுந்திருந்தார்.

அவருக்குக் கைத்தாங்கலாக இரண்டு, மூன்று பேர் வந்து தூக்கி நிமிர்த்தி விட்டார்கள். கீழே கிடந்த சால்வையை எடுத்து அவர் மீது போர்த்தினார்கள் அவர் கமண்டலத்தையும், தண்டத்தையும் எடுத்துக்கொண்டார்கள். நீண்ட கழியைக் கையில் பிடித்து, அதை மெல்ல ஊன்றியபடி அவர் வாயில் பக்கம் போனார்.

வாசலிலும் அவரைப் பார்ப்பதற்குப் பத்து பதினைந்து ஆட்கள் வந்திருந்தார்கள். அவர் சற்று நேரம் தரையைப் பார்த்துச் சிந்தித்துவிட்டு, மெல்ல வாசல் நோக்கிப் போனார்.

அருண்மொழி தன்னுடைய உடைவாளை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு, மேல் துணியால் உடம்பையும், உடைவாளையும் போர்த்திக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்தான்.

இன்று காலையில் கரைபுரண்டு ஓடும் ஆற்றில் நன்கு நீந்திக் குளித்தாயிற்று. களிமண்ணால் முகம் முழுவதும் பூசிக்கொண்டு உலர வைத்து, பிறகு மறுபடியும் சுத்தமாய் கழுவிக் கொண்டாயிற்று. இருப்பினும், வெயில் உச்சிக்கு வந்த

வேளை குளிக்கப் போகலாமா என்று குருநாதர் எழுந்திருக்கிறார். மறுபடியும் குளிக்க வேண்டுமா... அல்லது கரையில் நின்று குருநாதரை வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தால் போதுமா?' – அருண்மொழி யோசிக்கத் துவங்கினான். அவர்கள் அந்த மாளிகையை விட்டு வெளியே வந்தார்கள்.

அது உடையாளூரில் இருக்கிற கருவூர்த்தேவர் மாளிகை. மாளிகை என்ற அளவில் கட்டடம்தான் இருக்கிறதே தவிர, உள்ளே எந்த சொகுசான பொருள்களும் வருவதற்கு கருவூர்த்தேவர் அனுமதிக்கவில்லை. கூடம் முழுவதும் தர்ப்பைப் பாய்கள்தான் பரப்பப்பட்டிருக்கும்.

காற்று வீசும் ஒரு மூலையில், அவர் தலைக்கு மணைப்பலகை வைத்து, காலுக்குச் சிறிய அரிசி மூட்டை வைத்துப் படுத்துக் கொண்டிருப்பார். அல்லது அரிசி மூட்டையை இடது காலில் அண்டக்கொடுத்து உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பார்.

அவர் நகர்ந்தவுடன் அந்த அரிசி மூட்டையிலிருந்த அரிசியைக் கொட்டி சமையல் செய்து விடுவார்கள். வேறு புதிய அரிசி அந்தப் பையில் நிரப்பி; அவர் காலின் கீழ் வைத்து விடுவார்கள். வாசலில் ஒரு தீப்பந்தமும், சமையலறையில் ஒரு கைவிளக்கும் தவிர, வேறு விளக்குகள் அந்த வீட்டில் ஏற்றப்படமாட்டாது.

வாசலிலுள்ள உடையாளூர் மக்கள், அவரைக் கண்டதும் காலில் விழுந்து நமஸ்கரித்தார்கள். கருவூர்த்தேவர் படி விட்டிறங்கி மாளிகையின் வெளிப்புறம் போய் நின்று கொண்டார்.

'என்ன வேண்டும்' என்பதுபோல் எல்லோரையும் உற்றுப் பார்த்தார்.

வாசலிலிருந்தவர்களில் சிலர் தங்கள் உடல்நலனைப் பற்றிப் பேசினார்கள். 'ஓயாது இருமல்' என்று ஒரு கிழவன் கூற, அவன் முதுகைத் தடவிக் கொடுத்தார்.

'வயதாகி விட்டதல்லவா... இனி இதை நிறுத்த முடியாது. இதோடு வாழப் பழகிக் கொள். தொண்டை வலிக்கும் போதெல்லாம் சுடுநீர் குடி..."

முதுகு தடவிக்கொண்டே கருவூர்த்தேவர் பேச, அப்போதும் அந்தக் கிழவன் வேகமாக இருமினான். சிறித

அசைந்தாலும் அவனுக்கு இருமல் ஆரம்பித்து விடுகிறது. அந்த இருமலுக்கு நடுவே பரிதாபமாகப் பேசினான்.

"எனக்கு நூற்று மூன்று வயதாகி விட்டது. ஆனால் இறக்க முடியவில்லை. இறப்பதற்குத் தெரியவில்லை. தற்கொலை பாவம் என்று சொல்கிறார்கள். எனக்கு சுமுகமான மரணத்தை குருதேவர் தரவேண்டும்." என்று கைகூப்பினான்.

"நீ இடங்கை வீரனல்லவா... ஒரு வீரனுக்குச் சுமுகமான மரணம் எப்போது வரும்... போரில்தானே... எல்லா போர் களிலும் ஜெயித்து வாகைசூடி, சோழதேசத்தை உச்ச நிலைக்குக் கொண்டு வந்து விட்டாய். உனக்கு மரணமா பரிசாகத் தருவது... கவலைப்படாதே... உன்னுடைய இருமல் விரைவில் குணமாக நான் உதவி செய்கிறேன். இன்று இரவு மருந்து தயார் செய்து நாளை காலையில் புகட்டி விடுகிறேன். இப்போது நம் மாளிகை வாசலில் படுத்துக் கொண்டு தூங்கு..." என்று தலையைத் தடவினார். அந்தக் கிழவன் கால் தொட்டுக் கும்பிட்டு விட்டுப்

இரண்டு பெண்கள் வந்து குசு குசுப்பாய் அவரிடம் ஏதோ பேசினார்கள். அவர்களுடைய மாதாந்திர விலக்கு பற்றிப் பேசுவது அவர்கள் முக பாவத்தில் இருந்து தெரிந்து. கருவூர்த்தேவர் எந்தச் சலனமும் இன்றி அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

கருவூர்த்தேவரோடு பேசிய இரண்டு பெண்களில் ஒரு பெண்ணிற்குத்தான் மோசமான வயிற்று வலியும், ரத்தப் போக்கும் இருந்தது போல இருக்கிறது. அவளைச் சுட்டிக்காட்டி இன்னொருவள் பேச, பாதிக்கப்பட்டவள் தலை கவிழ்ந்து மெல்ல விசும்பிக் கொண்டிருந்தாள்.

அவளுக்கு இருபது வயதிருக்கும். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவள் போலத் தெரிந்தாள். திருமணமாகி, குழந்தை பெற்ற உடம்பாகவும் பார்ப்பதற்குத் தெரிந்தது.

கருவூர்த்தேவர் மெல்ல முணுமுணுக்க, அவள் மார்ச் சேலையை நீக்கிவிட்டு, பருத்த தன் முலைகளை கருவூர்த் தேவருக்குக் காட்டினாள்.

கருவூர்த்தேவர் தன் விரலால் அவள் இருதயத்தைத் தொட்டு உன்னிப்பாகக் கவனித்தார். புறங்கையால் மூச்சுக் காற்று எப்படி வருகிறது என்று பார்த்தார். அவளைத் திருப்பி

முதுகை நீவினார். மேல் புடவை நீக்கப்பட்டு, இடுப்புப் புடவை மட்டும் சிறிதளவு உடுத்திக் கொண்ட நிலையில் அந்தப் பெண் தலை குனிந்து நின்றிருந்தாள். தொலைவில் உள்ள ஆண்கள் அனைவரும் கைகட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கருவூர்த்தேவர் மறுபடியும் அந்தப் பெண்ணைத் தன் பக்கமாய் நிமிர்த்தி, உள்ளங்கை விரித்து மறுபடியும் அந்தப் பெண்ணிடம் ஏதோ சொல்ல, அந்தப் பெண் இடுப்புப் புடவையைத் தளர்த்திக் கொண்டாள். அடிவயிறு மட்டும் மறைத்த நிலையில் அவள் நிற்க, தன் உள்ளங்கையை அவள் வயிற்றில் வைத்து கருவூர்த்தேவர் கண்கள் மூடிக் கொண்டார்.

அந்தக் கைகளின் வழியே ஏதோ ஒரு வித்தை அந்த வயிற்றுக்குள் நடந்து கொண்டிருக்கிறது என்பது போல் தொலைவிலிருந்து பார்த்த ஆண்களுக்குத் தெரிந்தது.

அந்தப் பெண் கிட்டத்தட்ட நிர்வாணமாய் நிற்பது, அவர்களுக்கு எந்தக் கிளர்வையும் கொடுத்து விடவில்லை. அந்தப் பெண்ணும் வெட்கப்படவில்லை. அந்தப் பெண்ணுக்கும், இந்த ஆண்களுக்கும் நடுவே தெய்வம் போன்ற ஒரு குருநாதர் இருப்பதால், எவருமே எந்தச் சலனமும் இல்லாமல் அமைதியாய் நடப்பதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சிறிதுநேரம் கையை மெளனமாக அவள் வயிற்றில் வைத்த பிறகு, சடக்கென்று எடுத்து வேகமாக நடந்து போய் – மணலை அள்ளி, கைகளை மணலால் தேய்த்துத் துடைத்துக்கொண்டு காவிரி நீரில் இறங்கி, நீரை அள்ளி எடுத்து முழங்கை வரை கழுவிக் கொண்டு, அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு, ‘குளித்துவிட்டு வீட்டுக்குப் போ’ என்று சொல்ல, அந்தப் பெண் இறங்கி, முழுங்காலளவு ஜலத்தில், மெல்ல புதர்கள் இருக்கும் பக்கம் நடக்கத் துவங்கினாள். அவள் பின்னே காவலுக்கு வந்த மறு பெண்ணும் தொடர்ந்து போனாள்.

அவர்கள் போனதும், கருவூர்த்தேவரைப் பின் தொடர்ந்து ஆண்கள் அவரை நெருங்கி வந்து நின்றார்கள்.

“குளிக்கலாமா...” மறுபடியும் கருவூர்த்தேவர் கேட்க, இம்முறை சகலரும் தங்கள் ஆடைகளைக் கழற்றிவிட்டு, இடுப்புக் கோவணத்துடன் ஆற்றில் இறங்கினார்கள்.

அருண்மொழிப் பட்டனுக்கு மட்டும், 'காலையில் குளித்தாகி விட்டதே. மறுபடியும் குளிக்க வேண்டுமா' என்ற கேள்வி திரும்பவும் எழ, சற்று தயங்கி நின்றான்.

"வா... நீயும் குளி..." அருண்மொழிப் பட்டனை கருவூர்த் தேவர் அருகே அழைத்தார்.

அருண்மொழிப் பட்டன் வேட்டியையும், மேல் துண்டையும் கழற்றி வைத்துவிட்டு, அதன் மீது உடையவாளை வைத்து, இறுகக் கட்டிய லங்கோடு மீது சிறிய இடுப்புத் துண்டைக் கட்டி ஆற்றில் இறங்கினான்.

அந்தப் பெண்கள் பக்கம் கருவூர்த் தேவர் பார்த்துக் கொண்டிருந்தார்.

மற்றவர்கள் குளிக்கத் துவங்க, அருண்மொழி பட்டன் கருவூர்த் தேவருக்கு அருகே போய் நின்று, "அந்தப் பெண் மணிக்கு என்ன ஆயிற்று..." என்று பரிவோடு விசாரித்தான்.

"எந்தக் காரணமுமின்றி கருக்கலைப்பு ஏற்பட்டிருக்கிறது. எல்லா வகையிலும் விசாரித்துப் பார்த்து விட்டேன். கருக் கலைப்பிற்கான காரணம் எதுவும் இல்லை. கனிவான புருஷன், இதமான வேலை, அமைதியான சூழ்நிலை, ஆரோக்கியமான உடம்பு இருப்பினும் கருகலைந்திருக்கிறது என்றால், இங்கு வேறு ஏதோ நடமாட்டம் இருக்குமென்று தோன்றுகிறது..."

"என்ன சொல்கிறீர்கள். புரியவில்லை..."

"தீயசக்திகள் கிராமத்தில் நடமாடினால் மாதர்களுக்குக் கருக்கலைப்பு ஏற்படும். நாய்களுக்குத் தூக்கம் கெடும். கோவில் சிலைகள் பின்னமாகும். விளக்குகள் அல்லது யாகத்தீகள் அணையும். நாய்களுக்குக் கடும் ஜுரம் ஏற்படும்."

"உடையாளூரில் தீய சக்திகள் உண்டா?" அருண்மொழிப் பட்டன் கேட்டான்.

"இதுவரை இல்லை. ஆனால் யாரோ ஏவி விட்டிருக் கலாமோ என்று தோன்றுகிறது. இன்றிரவு கண்டுபிடித்து விடலாம்" கருவூர்த்தேவர் திரும்பிச் சிரித்தார். அவனின் கைகளைக் கோர்த்துக் கொண்டார். ஆற்றில் இறங்கி அவன் கைகளைப் பிடித்து முழுக்குப் போட்டார்.

# 21

கருவூர்த்தேவர் கைப்பிடித்துக் கொண்டிருந்த அருண் மொழிப் பட்டன் யதேச்சையாய்த் திரும்பிப் பார்த்தபோது, அவனுடைய மேலங்கி காற்றில் உருண்டு ஓடிக் கொண்டிருந்தது. இடுப்பு வேட்டி விரிந்து பரந்து, எம்பி எம்பிப் பறந்து கொண்டிருந்தது. உடைவாள், யாரோ இழுத்துப் போனதுபோல வெகுதூரம் கிடந்தது.

'உடைவாளைப் புரட்டிப் போடுகிற அளவுக்குக் காற்றடிக்கவில்லையே..."

அருண்மொழிப்பட்டன் யோசித்தான். சடேரென்று அவனை ஒரு பயம் தாக்கியது.

நீரிலிருந்து தலை உதறி கருவூர்த்தேவர் மேலே எழுந்தார். "போ... உன் வாளைக் கொண்டு வா..." என்று உரக்கக் கட்டளை யிட்டார்.

அருண்மொழிப்பட்டன் வேகமாய் கரை நோக்கி ஓடினான்.

கருவூர்தேவரைச் சுற்றியுள்ள ஆட்கள் அனைவரும் நல்ல அனுபவஸ்தவர்களாக இருந்தார்கள். அந்தப் பெண்ணை ஆற்றில் முழங்கால் ஜலத்தில் நிற்க வைத்து, அவளுடைய மேல் துணியை அகற்றி, அவளுடைய மார்பகத்தில் பல இடங்கள் தொட்டு, இருதயப் துடிப்பு பார்த்து, முதுகைத் திருப்பி நீவி விட்டு, பல இடங்களில் நாடியின் அசைவைக் கவனித்து உள்ளங்கையால் வயிற்றைத் தொட்டு, கவலையோடு 'போய் வா' என்று அவளை அனுப்பிய கருவூர்த்தேவர், அருண்மொழி கையைப் பற்றிக் குளித்தபோது அங்குள்ள இளைஞர்கள் எல்லோரும் சிறிதுகூட அசையாமல் இருந்ததை அருண்மொழி கவனித்தான்.

இருபது வயது வாளிப்பான பெண் இடுப்பில் சிறு துண்டோடு நின்றிருப்பினும், அங்குள்ள இளைஞர்களுக்கோ, முதியவர்களுக்கோ எந்தச் சலனமும் ஏற்படவில்லை. ஞானியின் அருகே இருப்பவர்களுக்குக்கூட காமம் ஏற்படுவதில்லை என்பதை அருண்மொழி உணர்ந்தான். தானும் சாதாரண மாகவே அந்தப் பெண்ணைப் பார்த்தது அவனுக்கு நினைவுக்கு வந்தது.

ஆனால், ஆற்றில் இறங்கிய பிறகு அந்தப் பெண்ணைட பற்றி அந்த இளைஞர்களோ, முதியவர்களோ எந்தக் கேள்வியும் கேட்கவில்லை. அது தங்கள் வேலையல்ல என்று மௌனமாக இருக்க, அருண்மொழி மட்டும் ஆவல் தாங்காமல் கேள்வி கேட்க, அவர் அதற்குப் பதில் சொன்னார்.

அவர் பதில் சொன்ன நேரம் யதேச்சையாய் கரைப் பக்கம் பார்க்க, அவன் வாள் காற்றில் புரண்டு ஓடுவது தெரிந்து கைப்பிடித்துக் கொண்டிருக்கிற கருவூர்த்தேவரைப் பார்த்து, துணி என் வாளைப் புரட்டிக் கொண்டு ஓடுகிறது' என்று கூவ, 'போ... போய் உன் வாளைப் பிடி' என்று கருவூர்த்தேவரும் கத்தினார்.

எல்லா இளைஞர்களும் திடுக்கிட்டு எழுந்து திரும்பி கரையைப் பார்த்தார்கள். அந்த வாளின் நகர்வு அமானுஷ்ய மாய் இருந்தது. ஒரு துணி புரட்டி அத்தனை கனமுள்ள உடைவாள் நகரவே நகராது. அந்த நகர்வு, அதை யாரோ நூல் கட்டி இழுத்துப் போவதுபோல் தெரிந்தது.

அருண்மொழிப்பட்டன் நீரில் தாவிக் குதித்து ஓடினான். ஈரத்தோடு கரை ஏறினான்.

ஓடிப்போய் வாளின் மீது கை வைத்தான். வாளை வேறு யாரோ பிடித்துக கொண்டிருப்பதுபோல் தோன்றியது. வாள் தொட்டதும் அவன் உள்ளுக்குள்ளிருந்து ஒரு இறைக் கூவல் எழும்பியது.

"ஹரி' என்று வாளைத் தொட்டவுடன் அவன் கத்தினான். அந்தக் கத்தலுக்கு பிறகு, யாரோ அந்த வாளைக் கைவிட்டு விட்டு ஓடியதுபோலத் தோன்றியது.

"இது பிரமையா, நிஜமா' திரும்பி கருவூர்த்தேவரைப் பார்த்தான்.

கருவூர்த்தேவர் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். அருண்மொழி, துணிகளை உதறி மடித்து வைத்தான். மீண்டும் வாளைத் துணி மீது வைத்தான்.

கருவூர்த்தேவர் அங்கிருந்தபடியே அந்த வாளை நோக்கி ஜலம் வீசினார். ஒரு பொட்டு ஜலம் வாளின் மீதும், இன்னும் சில துளிகள் அருண்மொழிப்பட்டன் மீதும் விழுந்தன.

கருவூர்த்தேவர் கிழக்கு பார்த்துத் திரும்பிக் கொண்டார். அருண் மொழிப்பட்டன் அவருக்கு அருகே போனான். அவர்

முங்கிக் குளிப்பதற்காகக் கை நீட்டினான். அவர் இப்போது கை கொடுக்கவில்லை.

மௌனமாக கிழக்கையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் சடைமுடி அவிழ்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. முங்கிக் குளித்ததால் சடையிலிருந்து நீர் ஒழுகிக் கொண்டிருந்தது. வெள்ளை வெளேரென்ற தாடியும் மீசையும் நனைந்து கழுத்தோடும் நெஞ்சோடும் ஒட்டிக் கொண்டிருந்தன.

முகம் முழுவதும் சிவந்து காணப்பட்டது. கண்ணில் கூர்மை அதிகமாக இருந்தது. உதடு துடித்தது. வயிறு குழைந்தது. வெறுமே கைகளைத் தொங்கவிட்டு, யாரையோ எதிர்பார்ப்பது போல கருவூர்த்தேவர் அசையாது நின்றார்.

மறுபடியும் அவரைத் தொட முயற்சிக்கலாமா என்று அருண்மொழி யோசித்தபோது, கருவூர்த்தேவரோடு எப்போதும் இருக்கின்ற ஒரு வேளாள இளைஞன், ‘வேண்டாம்... தொடாதே’ என்பதுபோல் சைகை செய்தான். அருண்மொழி அவனுக்குப் பணிந்து கருவூர்த்தேவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று புதருக்கப்பால் வீறிட்ட ஒரு பெண்ணின் குரல் கேட்டது. அங்கே கைகலப்புபோல ஏதோ சில அசைவுகள் தெரிந்தன.

அந்த இளம்பெண், புதர் மறைவிலிருந்து கரையேறி ஈரத்தில் ஓடி வந்தாள்.

கருவூர்த்தேவர் வயிறு தொட்டு ஆசிர்வதித்த அந்தப் பெண் மிக வேகமாய், மிகுந்த பயத்தோடு, அதிக ஆத்திரத் தோடு கருவூர்த்தேவரை நோக்கிப் பாய்ந்து வந்தாள். அவள் உடம்பில் ஒரு அங்குலம் கூடத் துணியில்லை.

நிர்வாணமாய் ஓடி வருகிற அந்தப் பெண்ணைப் பார்த்து இளைஞர்களும், அருண்மொழியும் திகைத்துப் போனார்கள்.

கருவூர்த்தேவர் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அவள் நீரில் இறங்கினாள். முழங்கால் நீரில் நின்று கருவூர்த்தேவரைப் பார்த்துக் கோரமாய்ப் பற்களைக் காட்டினாள். விழிகள் தெறித்து விடுவதைப் போல அவரை உறுத்துப் பார்த்தாள். உறுமினாள். வாயிலிருந்து எச்சில் நுரை பொங்கி வழிந்தது. உடம்பு நடுங்கியது. நரம்புகள் புடைத்தன. கழுத்து முறுக்கித் தவித்தது. வயிறு குழைந்து குழைந்து

முறுக்கியது. அவள் கை விரல்கள் கிழித்து விடுவதுபோல் அவரை நோக்கி நீண்டன.

கருவூர்த்தேவர் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அவள் மெதுவாய், நிதானமாய் தாக்க வருபவள்போல நீரில் நடந்து நடந்து, அவரை நெருங்கி, இன்னும் ஒரு எட்டில் அவரைத் தொட முடியும் என்ற நேரத்தில், கருவூர்த்தேவர் பலத்த ஹுங்காரமிட, சட்டென்று பின்னால் சாய்ந்தாள். தலை மட்டும் தெரியும்படி ஆற்றில் விழுந்தாள்.

கருவூர்த்தேவர் அவளைப் பார்த்துச் சுட்டு விரல் நீட்டி, குத்தி விடுவதுபோல் சுட்டிக்காட்ட, அவள் தவித்தாள்.

ஆற்று ஜலத்தை எடுத்து சொட்டேரென்று முகத்தில் அடிக்க, அவள் கதறினாள். உடம்பு முறுக்கினாள்.

'போ' என்று கத்த, அவள் பல முறை ஆற்றில் கழன்று புரண்டாள். 'போ' என்று மறுபடியும் கத்த, அவள் தளர்ந்தாள், உருண்டாள். மெல்ல ஆற்றில் மிதந்தாள்.

புதரிலிருந்து இன்னொரு பெண் முகமெல்லாம் நகக் கீறல்களோடு தள்ளாடி ஓடிவர, பின்னால் இருக்கும் வேளாள இளைஞனைக் சொடுக்குப் போட்டு கருவூர்த்தேவர் அழைத்து, மிதக்கின்ற அந்தப் பெண்ணைத் தூக்கி அமர வைக்கச் சொன்னார்.

அவன் தாவி ஓடிப்போய், அந்தப் பெண்ணின் இடுப்பில் கை கொடுத்துத் தூக்கி நீரில் உட்கார வைத்தான்.

கழுத்து வரை நீரில் அவள் உட்கார்ந்திருந்தாள். அவள் உடம்பு நீரில் மறைந்திருந்தது.

"அருண்மொழி... கரையேறு..." - கருவூர்த்தேவர் கட்டளை யிட்டார்.

அருண்மொழி கரையேறினான்.

கருவூர்த்தேவர் அவளுக்கு அருகே போய், தன் காலை உயர்த்தி அவள் தலையை மிதித்தார். நீருக்குள் அழுத்தினார். எட்டி உதைத்தார். அவளைப் பிடித்துக் கொண்டிருந்த வேளாள இளைஞன் பின்னுக்குப் போக, அவள் மறுபடியும் புரண்டு விழுந்தாள். மீண்டும் மிதந்தாள்.

"பிடி..." என்று அவர் சொல்ல, மறுபடியும் அந்த வேளாள இளைஞன் அவளைத் தூக்கித் தண்ணீருக்குள் உட்கார வைத்தான்.

முகமெல்லாம் கீறலாய் உள்ள, துணைக்கு வந்த பெண் அருகே வர, அவளிடம் துணியை எடுத்து வரச் சொல்ல, அவள் துணியை எடுத்து வந்து கீழே உட்கார்ந்திருந்தவள் உடம்பில் துணியைச் சுற்றி, அந்த இளைஞனைத் தூக்கச் சொல்லி அவளைக் கரையில் போட்டார்கள்.

துணைக்கு வந்த பெண்ணும், வேறு சிலரும் அவளை எடுத்துக் கொண்டு கிராமத்திற்குப் போனார்கள்.

கருவூர்த் தேவரும், அருண்மொழியும் மட்டும் ஆற்றில் இருந்தார்கள்.

"அருண்மொழி... என் கையைப் பிடித்துக்கொள்..." கருவூர்த்தேவர் கைநீட்ட, தன்னுடைய வலக்கையால் அவருடைய இடக்கையை அருண்மொழிப்பட்டன் கோர்த்துக் கொண்டான்.

கருவூர்த்தேவர் பலமுறை காவிரியில் வேகமாய் முங்கி முங்கி எழுந்தார். ஒரு நீத்தார் கடனுக்கு முங்குவதைப் போல அவர் முக்கிய வேகம் இருந்தது. எழுந்து தலை சிலுப்பி நின்றார். அருண்மொழியைப் பார்த்தார்.

அருண்மொழி அவரிடம் பேசப் பயந்தான். ஆனால் என்ன நடந்தது என்று கேட்கின்ற ஆவல் அவன் தொண்டைக் குள் சுழியிட்டது.

அவன் ஆவலை கருவூர்த்தேவர் தெரிந்து கொண்டார். சிரித்தார். "பைசாசம் அனுப்புகிறார்கள். உடையாளூரிலுள்ள கருவூர்த்தேவரைத் தாக்க வெகு தூரத்திலிருந்து பிசாசுகளை அனுப்புகிறார்கள். சோழ தேசத்தை வேறு எவ்விதமாகவும் அவர்களால் வீழ்த்த முடியவில்லை. எனவே தந்திரமும், மந்திரமும் செய்கிறார்கள். இந்த கருவூர்த்தேவர் இருக்கும்வரை ஒரு பைசாசமும் இங்கே நுழைய முடியாது. நுழைய விட மாட்டேன்." ஓங்கி காவிரியை கருவூர்த்தேவர் உள்ளங் கையால் அடித்தார். கரையேறினார்.

அருண்மொழிப்பட்டன் கலவரமும், வியப்புமாய் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீ முங்கிக் குளி... நான் உனக்காகக் கரையில் காத்திருக்கிறேன்..."

கருவூர்த்தேவர் கரையிலிருந்த அருண்மொழிப்பட்டனின் உடை வாளை எடுத்துத் தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டார்.

கிழக்குப் பார்த்தபடி அருண்மொழி முங்கிக் குளித்தான். கரையேறினான்.

"ராஜராஜா... என் செல்வமே... தமிழ் மண்ணின் தனிப்பெரும் குணக்குன்றே.... உனக்குத் துணை நான் இருக்கிறேனடா. நீ கோயில் கட்டு; மாபெரும் மலைபோல கோயில் கட்டு. உனக்குத் துணையாய் இந்த தேவன் இருப்பான்..." - உரத்துப் பேசினார்.

கருவூர்த்தேவர் என்ன சொல்கிறார் என்று அருண்மொழிக்கு விளங்கவில்லை.

அவர் பேசியது எதுவும் அவனுக்குத் தெளிவாகக் கேட்கவில்லை. ஆனால் எங்கோ இருக்கிற இராஜராஜருக்குத் தெரிந்தது.

## 22

ஆற்றில் மாட்டுவண்டி கவிழ்ந்ததும், தூங்கிக் கொண்டிருந்த தேவரடியார் இளம்பெண்கள் பயந்து விழித்து, அலறி என்னவெல்லாம் செய்தார்கள் என்று இராஜராஜீ நடித்துக் காட்ட, பஞ்சவன்மாதேவியும், இராஜராஜசோழரும், அந்தக் கட்டிடத்திற்குள்ளிருந்த சில அதிகாரிகளும், சேடிப் பெண்களும் வாய்விட்டுச் சிரித்து அவள் நாடகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள்.

நல்ல உணவுக்குப் பின் வெற்றிலையைக் கிளி மடிப்பாய் பஞ்சவன்மாதேவி மன்னரிடம் கொடுக்க, மூன்றாவது வெற்றிலையை வாயில் வைத்து பஞ்சவன்மாதேவியைப் பார்த்துக் கண்சிமிட்டி, "உனக்கு இன்னொரு தோழி கிடைத்து விட்டாளென்று நினைக்கிறேன். இனி இந்த இராஜராஜீயை நீ விடமாட்டாய். உன்னுடனேயே தங்க வைத்துக் கொள்வாய். இல்லையா?" என்று கேட்டார்.

பஞ்சவன்மாதேவி என்ன பதில் சொல்வது என்று யோசிப்பதற்கு முன், "அப்படிச் செய்ய வேண்டாம். இவளை தஞ்சைக்கு அனுப்பு. இவளுக்கு அங்கே நிறைய வேலைகள் இருக்கின்றன. மற்ற ஊர்களிலிருந்து வரும் தேவரடியார்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுத்து, அவர்களை ஒரு குழுவாக்கி ஒழுங்காகச் செயல்பட வைக்கின்ற ஒரு பொறுப்பை நான் இவளிடம் கொடுக்கப் போகிறேன். ஊரிலுள்ள கெட்டிக்காரர்களையெல்லாம் அரண்மனையிலேயே தக்க வைத்துக் கொண்டால் தேசத்தினுடைய செயல்பாடுகள் சரியாக வராது.

இந்தப் பெண்ணை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இவளுடைய புத்திசாலித்தனத்தை நம் அரசாங்கம் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்." என்று அவளுக்கு மட்டும் கேட்கின்ற குரலில் இராஜராஜர் பேசினார்.

மன்னர் வெற்றிலையை வாயில் அதக்கிக் கொண்டு, சாறு உமிழ்ந்து, வேறு ஏதோ சொல்ல முற்படுகிறபோது, பளிச்சென்று வெற்றிலைச்சாறு மூக்குக்கு எகிறியது. மூக்குக்குக் காரமான சாறு எகிறிய வேகத்தில் வாயிலிருந்த அத்தனை வெற்றிலைச் சக்கையும் பளிச்சென்று வெளியில் விழுந்தன.

மன்னர் எழுந்து நின்று லேசாய்த் தள்ளாடினார். பஞ்சவன்மாதேவி தாவிப் பிடித்துக்கொள்ள, உறுதியாக நின்றார்.

இராஜராஜருக்கு வயிறு இரைச்சலிட்டது இப்பொழுது காரம் இரைப்பைக்குப் போயிற்று. ஏதோ சங்கடம் செய்தது. மூக்கு எரிந்தது. கண்களிலிருந்து நீர் பொங்கியது. காதுகளில் பெரிய இரைச்சல் கேட்டது. சட்டென்று உடம்புக்குள் மிகப் பெரிய மாறுதல் நடப்பதை உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் உணர்ந்தார்.

வயிற்றுக்குள் போன சாறு, இரைப்பையில் தங்கியிருந்த உணவைக் கிளறி எகிற வைத்தது. மன்னர் வேகமாகப் பின்பக்கம் நகர்ந்தார். இடக்கை பக்கம் இறங்கினார். தூணைப் பிடித்துக் கொண்டு இடக்கை ஓரமிருந்த செடிகளுக்கு அருகே நின்றார்.

மன்னர் உண்ட உணவை வாயிலெடுக்கப் போகிறார் என்று அங்குள்ள பெண்களுக்கு தெரிந்து விட்டது. நீர் சொம்புக்கு ஒருவரும், முகம் துடைக்கும் துணிக்கு ஒருவரும்,

உட்காருகின்ற ஆசனத்துக்கு ஒருவரும், வைத்தியருக்கு ஒருவருமாய் ஓடினார்கள்.

பெண்கள் ஓடுவதைப் பார்த்து வாசலிலிருந்த மெய்க்காவல் படையினர் பரபரப்பானார்கள். உள்ளே பாய்ந்து வந்து மன்னரைச் சுற்றிக் கொண்டார்கள்.

இரைப்பைக்கும், தொண்டைக் குழிக்கும் நடுவே உணவு சிக்கிக் கொண்டு மன்னரின் மூச்சு விடுதலைத் திணறடித்துக் கொண்டிருந்தது.

மன்னர் தவித்து பெருங்குரலில் செரும, "எடுத்து விடுங்கள். வெளியே எடுத்து விடுங்கள்..." என்று பஞ்சவன் மாதேவி கூவினார். மன்னரைச் சற்றுக் குனியவைத்து முதுகில் படபட வென்று அடித்தார்.

மெய்க்காவல் படையினர் என்ன செய்வதென்று தெரியாமல், அதைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்த போது, மன்னரே கைதூக்கி மெய்க்காவல் படையை நிறுத்தி விட்டார்.

இராஜராஜரின் முதுகில் பஞ்சவன்மாதேவி வேகமாகப் படபடவென்று தட்டியதால், இரைப்பையில் மீதமிருந்த காற்று எழும்பி, உணவைத் தள்ளிக் கொண்டு தொண்டை வரை வந்து காரத்தைக் கக்கியது.

மன்னர் முகம் சுளித்தார். தவித்தார். முழு பலத்தோடு, தொண்டைக்குள் ஏறிய உணவைச் செருமி வெளியே துப்பினார். மீதமிருக்கின்ற உணவு வகைகளும் பின்னால் வேகமாக வெளியேற்றப்பட்டன.

மன்னருடைய காதுகளை பஞ்சவன்மாதேவி அழுத்திப் பிடித்துக் கொள்ள, மற்ற பெண்கள் முதுகு நீவ, நீர் சொம்போடு ஒரு பெண் தயாராகி இருக்க, கால் நாழிகையில் மன்னர் ஆசுவாசமடைந்து, அந்த மாளிகையின் கூடத்திற்குத் திரும்பினார். கட்டிலில் சாய்ந்து கொண்டார்.

மெய்க்காவல் படையினர், மன்னர் வாயில் எடுத்த உணவைக் குச்சியால் கிளறி ஆராயத் துவங்கினார்கள். சமையல் செய்த பெண்ணையும், ஆணையும் நெருங்கத் துவங்கினார்கள்.

'அரசியாரைத் தவிர வேறு எந்தப் பெண்களும் இங்கு இருக்க வேண்டிய அவசியமில்லை' என்று கூச்சல் போட்டார்கள். எல்லோரையும் கூடத்துக்கு அப்பாலுள்ள அறைகளில் நிற்க வைத்தார்கள்.

மன்னரால் எதையும் தடுக்க முடியவில்லை. எதையும் பேச முடியவில்லை. மௌனமாக தனக்குள்ளே என்ன நடந்தது என்று யோசித்துக் கொண்டிருந்தார்.

"ஏன் இப்படி ஆயிற்று. உடலில் ஏதேனும் தவறா... உங்கள் உடம்பில் ஏதேனும் சிரமமா..." பஞ்சவன்மாதேவி கிட்டத்தட்ட மன்னரைத் தழுவிக்கொண்ட நிலையில் ஆதாரத்துடன் கேட்க, மன்னர் 'இல்லை' என்று தலையசைத்தார்.

"உள்ளே ஏதோ ஒரு கட்டளை வந்து விட்டது. உள்ளுக்குள் ஒரு செய்தி தோன்றியது. வரும் மூன்று நாட்களும் வெறும் நீர்மட்டும் அருந்தி உபவாசம் இருக்கச் சொல்லி உத்தரவு வந்தது."

"எதற்காக உபவாசம்... வேலைகள் அதிகமிருக்கும்போது நீங்கள் உபவாசமும் இருந்தால் என்ன செய்யமுடியும்?" பஞ்சவன்மாதேவி கவலையோடு கேட்டார்.

"என் உடல் நிலையைச் சீர்செய்ய இந்த உபவாசம் தேவைப்படுகிறது. யாரோ அடுத்த மூன்று நாட்களுக்கு உணவு வேண்டாம் என்று சொல்கிறார்கள். வயிற்றிலிருந்த உணவையும் பிடுங்கி வெளியே எறிந்து விட்டார்கள்."

"யார் அது?" பஞ்சவன்மாதேவி சற்று கோபத்தோடு கேட்டார்.

மன்னர் யோசித்தார். 'யார் அது' என்று அவருக்கும் தெரியவில்லை. கண் மூடிக் கொண்டார். மீண்டும் கண்திறந்து, மல்லாந்தபடி விட்டம் பார்த்தார். மறுபடியும் கண்கள் மூடிக்கொண்டார். கருவூர்த்தேவர் உருவம் கண்முன் தோன்றியது. "அப்பனே, சொன்னதைச் செய்' என்று குரல் கேட்டது.

கருவூர்த்தேவர் இராஜராஜரை 'அப்பன்' என்றுதான் அழைப்பார். கருவூர்த்தேவரை இராஜராஜர் 'அய்யா' என்று அழைக்க, அவர் இராஜராஜரை 'அப்பன்' என்று கூப்பிடுவது வழக்கமாக இருந்தது. அதே குரலில் ஒரு உத்தரவு: இராஜ ராஜரின் உள்ளுக்குள் தோன்றியது.

"காரணம் கேட்க வேண்டாம். அடுத்த மூன்று நாளும் நீர் மட்டும் அருந்தி, எங்கேனும் சென்று அமர்ந்து உபவாசம் இரு. இப்போது இருக்கும் இடத்திலிருந்து நகர்ந்து விடு..." என்று உத்தரவு வந்தது.

"சரி..." என்று இராஜராஜ சோழர் வாய்விட்டு கருவூர்த் தேவருக்குப் பதிலளித்தார். "இன்னும் சிறிது நேரத்தில் நாம் தஞ்சையை நோக்கிக் கிளம்புகின்றோம்..." என்று கட்டளையிட்டார்.

மெய்க்காவல் படையினர் பரபரப்பனார்கள். பஞ்சவன்மாதேவி வியப்போடு இராஜராஜீயைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"சேனாபதி பிரம்மராயர் எங்கே?" -மன்னர் எழுந்து நின்று முகம் துடைத்துக் கொண்டு கேட்டார்.

'அவர் குடந்தை நோக்கி உதவியாளரோடு போயிருக்கிறார்' என்று பதில் வந்தது.

"ஆஹா... எனக்கு முன்பே அவருக்குச் செய்தி வந்து விட்டதா. அவருக்கும் தோன்றி விட்டதா... பிரம்மராயர் பிரம்மராயர்தான்..." என்று மனம்விட்டுப் பாராட்டினார். பிரம்மராயர் கருவூர்த்தேவரை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார் என்பதை வெகு எளிதாகப் புரிந்து கொண்டார்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை. என்ன செய்கிறீர்கள் என்று தெரியவில்லை. தயவுசெய்து எனக்கு விளக்கமாகச் சொல்லிவிட்டுச் செய்யக் கூடாதா. எல்லாவற்றையும் ஏன் மறைமுகமாகவே செய்து கொண்டிருக்கிறீர்கள். ஏன் கூட இருப்பவர்களைத் தவிக்க விடுகிறீர்கள்..." பஞ்சவன்மாதேவி சற்று உரக்க கோபத்தோடு கேட்க, மன்னர் அவரைப் பார்த்துச் சிரித்தார்.

"எல்லாவற்றையும் எல்லா நேரத்திலும் சொல்லிக் கொண்டிருக்க முடியாது தேவி, சில சமயம் உனக்குச் சந்தேகங்கள் எழும்போதுகூட மௌனமாக இருந்துவிடுவது நல்லது. நீயும், நானும் அந்தரங்கமாக இருக்கும் போது கேட்பது நல்லது. உனக்குச் சொல்லாமல், உனக்குத் தெரியாமல் நான் எதுவும் செய்வதில்லை. இப்போது சொல்லவில்லையென்றால் அதற்குக் காரணம் இருக்குமல்லவா... ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறாய்... உனக்கு அவசரம். திடீர் திடீரென்று சந்தேகம் வேறு ஏற்படுகிறது. இந்த அவசரப் போக்கைத் தயவு செய்து குறைத்துக் கொள். என் பொருட்டு எதற்காகவும் பதட்டமடையாதே. மற்ற விஷயங்களில் திறமையாகவும் நிதானமாகவும் இருக்கின்ற நீ, எனக்கு ஏதேனும் குறை என்று

கண்டால், எனக்கு ஏதேனும் பிரச்சினை என்று தெரிந்தால் கடும் பதட்டத்துக்கு ஆளாகிறாய். இது உனக்கும் உதவாது. எனக்கும் உதவாது... தயவு செய்து புரிந்து கொள்..."

இராஜராஜரின் இந்தப் பேச்சு ஒரு கட்டளை போல் சற்றுக் கடுமையாக இருக்க பஞ்சவன்மாதேவி திகைத்து அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். வெட்கமானார். சோகமானார். 'சரி' என்று தலையசைத்தார். அவர் கண்களில் நீர் தேங்கியது.

வழக்கமாய் பஞ்சவன்மாதேவியை உடனடியாகச் சமாதானம் செய்யும் மன்னர், எதுவும் சொல்லாமல் நகர்ந்து வேறு அறைக்குப் போய் அங்குள்ள வரைபடங்களை எடுத்து அடுக்குவதற்கு ஆட்களை ஏவினார். வரைபடங்கள் பெட்டியில் போட்டு மூடப்பட்டவுடன் மன்னர் சட்டென்று திரும்பினார். "எங்கே அந்தப் பெண் இராஜராஜீ..." என்று உரக்கக் கேட்டார்.

மெய்க்காவலர்கள் பரபரத்தார்கள். இராஜராஜீ மன்னரின் எதிரே கொண்டுவந்து நிறுத்தப்பட்டாள்.

"உன்னைச் சார்ந்த மற்ற பெண்களுடன் எவ்வளவு விரைவில் தஞ்சை வந்து சேரமுடியுமோ – அவ்வளவு விரைவில் தஞ்சை வந்து சேர்ந்து விடு. பழமர்நேரியிலிருந்து இரண்டு அதிகாரிகள் உங்களுக்குக் கூடவே வந்து, வழியில் சகல ஏற்பாடுகளையும் செய்வார்கள். இன்னும் இரண்டு ஆறுகள் தாண்ட வேண்டியருப்பதால், இந்த வரை படங்களை நான் எடுத்துப் போகிறேன். கவனமாக தஞ்சை வந்து சேர்..." என்று கட்டளையிட்டு, இராஜராஜர் அறையை விட்டு வெளியே நகர்ந்தார். வாசலுக்குப் போனார். மெய்க்காவல் படையினர் அவரைச் சூழ்ந்து கொண்டு வணக்கம் சொன்னார்கள்.

அவர் தோட்டத்தில் இறங்க, பழமர்நேரி அதிகாரிகள் வந்து கைகூப்பினார்கள். மடமடவென்று பலருக்கும் பல உத்தரவுகள் இராஜராஜர் பிறப்பித்தார்.

"மன்னர் எத்தனை வெற்றிலை சாப்பிட்டார்?" – சேடிப்பெண்ணை மெய்க்காவல்படையினர் கேட்க, "மூன்றாவது வெற்றிலை சாப்பிடுகிற போது எகிறிவிட்டது. இது முதல் வெற்றிலை. இது இரண்டாம் வெற்றிலை..." -ஒரு சேடிப் பெண் சொன்னாள்.

அரைத்து மெல்லப்பட்ட வெற்றிலையின் சக்கையைக் குச்சியால் புரட்டினார்கள். கறுப்பு நிறத்தில் ஒரு சிறு

வேர்க்கடலை வடிவத்தில் பல்லால் அரைக்கப்படாத ஒரு பொருள் இருந்தது. ஒரு மெய்க்காவல் வீரன் வாழைச் சருகு கொண்டுவந்து அந்தப் பொருளை எடுத்து வைத்து மடித்துக் கொண்டான். அந்த இடத்தைத் தண்ணீர் ஊற்றிக் கழுவச் சொன்னான்.

மெய்க்காவல் படையினர் மன்னர் வாயில் எடுத்ததைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ளவில்லை. 'என்னவென்று தெரியாமல் ஓயமாட்டோம்' என்பதுபோல் கடுகடுப்பாய் இருந்தார்கள்.

"அடுத்த மூன்றுநாள் உபவாசம் என்று மன்னர் சொல்கிறார். அப்படியானால் அவரைப் பார்க்க எவருக்கும் அனுமதியில்லை என்று சொல்லிவிடு. அரசர் வற்புறுத்தினாலொழிய எவரையும் உள்ளே அனுமதிப்பதிற்கில்லை. பஞ்சவன்மாதேவி மட்டும் இதற்கு விலக்கு..." என்று உத்தரவிட்டார்கள்.

"மன்னர் குதிரை ஏற வேண்டாம். தேரில் ஏறிக் கொள்ளட்டும். தேரை ஆயத்தப்படுத்து..." என்று இன்னொரு கட்டளை பிறப்பித்தார்கள்.

பழமர்நேரி அதிகாரிகளிடம் பேசிவிட்டுத் திரும்பிய போது, மன்னருக்கு அருகே தேர் வந்து நின்றது. 'ஏன்' என்பது போல் மெய்க்காவல் படையை அவர் பார்க்க. 'அப்படித்தான்' என்று மெய்க்காவல் படையினர் சைகை செய்தார்கள். மன்னர் மறுப்பேதும் பேசாமல் தேரிலேறி அமர்ந்தார்.

# 23

திரும்பி பஞ்சவன்மாதேவியைப் பார்த்தார் உடையார் ஸ்ரீராஜராஜந்தேவர். பஞ்சவன்மாதேவியும் அருகே வந்து அமர்ந்து கொண்டார். தேர் நகர்ந்தது.

மாளிகையை மெய்க்காவல் படையினர் விரைவாகக் காலி செய்தார்கள். வெளியிலிருந்த அந்தத் தேவரடியார் பெண்கள் வயலுக்குப் போனார்கள். பழமர்நேரி அதிகாரிகள் மற்ற பெண்களைக் கூட்டிக்கொண்டு வர குதிரையில் விரைந்தார்கள்.

அந்த மாளிகையின் சமையல் ஆளும், காவல்காரனும் கொல்லைப்புறத்தில் கைகட்டி நின்றிருந்தார்கள். மெய்க்காவல்

படையின் மூன்று ஆட்கள் மாளிகையைச் சுற்றிவர, அதில் தலைவனைப்போல் தெரிந்த ஒருவன் மற்ற இருவரையும் பார்த்து, “இந்த சமையல்காரனையும், வேலைக்காரனையும் விசாரித்துவிட்டு வாருங்கள். இவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுங்கள்...” என்று சொல்லிவிட்டு உள்ளே நகர்ந்தான்.

‘கொல்லையில் நின்று விசாரிப்பதா... அல்லது வாசலுக்குப் போவதா... மன்னர் கிளம்பிக் கொண்டிருக்கிறார். எனவே வாசலுக்குப் போவது நல்லது’ என்று யோசித்த மெய்க் காவல்படையினர், “இருவரும் வாசலுக்கு வாருங்கள்...” என்று கட்டளையிட்டுவிட்டு வாசலுக்கு விரைந்தார்கள்.

சமையற்காரன் முன்னே நகர்ந்தான். சமையற்காரனுக்கு உதவியாக இருந்த வேலைக்காரன், இடுப்பிலிருந்து சிறிய பெட்டியை எடுத்து, அதிலிருந்த வஸ்துவைப் புதர் மறைவில் கொட்டினான். கருப்பாய் வேர்க்கடலை அளவுக்கு நான்கு உருண்டைகள் அதிலிருந்தன. அந்த உருண்டைகள் செடிகளின் வேர்களில் விழுந்தன. அந்த வேலைக்காரன் செடிகளை வேடிக்கையாகப் பார்த்தான். இன்னும் இரண்டு நாளில் இந்தச் செடிகள் முற்றிலும் கருகிவிடுமென்று அவனுக்கு நன்கு தெரியும்.

வாசலில் தேர் நகர, மன்னரின் மெய்க்கீர்த்தி சொல்லப் பட்டது. முன்னும் பின்னும் மெய்க்காவல் வீரர்கள் புடைசூழ, மற்ற தாதிகள் வேறு தேர்களில் ஏறிக்கொள்ள, சற்று விரைவாக அந்தப் படை தஞ்சையை நோக்கிப் பயணப்பட்டது.

மெய்க்காவல் படைத்தலைவனை அருகே அழைத்து, இராஜராஜர் அவன் தோளில் கை வைத்தார்.

“சேனாபதி பிரம்மராயருக்கு நான் தஞ்சைக்கு நகர்ந்துவிட்டதாகச் செய்தி தெரிவித்து விடுங்கள். விரைவாய், மிக விரைவாய் அவரை நோக்கி ஆள் அனுப்பி வையுங்கள்.”

“அப்படியே செய்கிறேன் அரசே...” மெய்க்காவல் படைத் தலைவன் தலை வணங்கினான். குதிரையை நகர்த்திக் கொண்டான். யாருக்கோ கட்டளையிட்டான்.

ஒரு குதிரை வீரன் நகர்ந்து குடந்தையை நோக்கித் தலைதெறிக்கப் பறப்பதை மன்னரும், பஞ்சவன்மாதேவியும் பார்த்தார்கள்.

“பிரம்மரியர் எதற்கு இப்போது குடந்தை போயிருக் கிறார்?” – பஞ்சவன்மாதேவி மன்னரைப் பார்த்துக் கேட்டார்

'கருவூர்த்தேவரைச் சந்திக்க...' மன்னர் ஒற்றை வரியில் பதில் சொன்னார்.

"நம்மிடம் சொல்லவே இல்லையே..."

"அவசியமில்லை. அவசரம் எனும்போது சிலசமயம் அவர் என் உத்தரவை எதிர்பார்க்காது தன்னிச்சையாய் செயல் படலாம்...."

"கருவூர்த்தேவரை அப்படி அவசரமாய்ப் பார்க்கும்படி என்ன நேர்ந்தது?" – பஞ்சவன்மாதேவி கேள்வி கேட்டார்.

இராஜராஜர் அதற்கு பதில் சொல்லவில்லை.

மறுமுறையும் பஞ்சவன்மாதேவி அதே கேள்வியைக் கேட்டபோதும் அரசர் பதில் பேசவில்லை. கேள்விக்குப் பதில் சொல்லாத கணவர்களைப் பெண்களுக்குப் பிடிக்காது. பஞ்சவன்மாதேவி முகம் திருப்பிக் கொண்டார். தான் எத்தனை கெட்டிக்காரர் என்று நினைத்துக் கொண்டாலும், இந்த அரசியல் விஷயங்களிலும் முழுமையான ஆளுமை தனக்கு வரவில்லை என்று வருத்தப்பட்டார். எப்படி வரவழைத்துக் கொள்வது என்று யோசிக்கத் துவங்கினார். 'சட்டென்று பிரம்மராயர் நகர்ந்ததுதான் இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் காரணமோ' என்று சிந்தித்தார்.

'மன்னரிடம் கூடச் சொல்லாமல் பிரம்மராயர் குடந்தையை நோக்கிப் போக வேண்டிய அவசியமென்ன... இந்தப் பிரம்மராயரைச் சோழ தேசத்தில் எவருமே கட்டுப்படுத்த இயலாதா... யாருமே அவரை அறிய முடியாதா... மன்னர்கூட பிரம்மராயர் விஷயத்தில் ஏன் மெத்தனமாக இருக்கிறார் என்று புரியவில்லை. பிரம்மராயர் என்ன செய்கிறார் என்று பார்க்க யாரையாவது நியமிக்க வேண்டும்' – பஞ்சவன்மாதேவி முடிவு செய்தார்.

பயணம் தொடர்ந்து நடந்தது.

"ஒன்று புரிந்து கொள் அருண்மொழி. இந்த உலகத்தில் உடம்பெடுத்தவர்கள் மட்டுமில்லை. உடம்பில்லாத சூட்சும உருவங்களும் நம்மோடு நமக்கருகே வாழ்ந்து கொண்டிருக் கின்றன. நம்முடைய செயல்களைக் கவனித்துக் கொண்டிருக் கின்றன. அதற்கேற்ற வண்ணம் அவைகளுடைய செயல்கள் அமைகின்றன. நம்முள் நல்லவர்கள், கெட்டவர்கள் இருப்பது போல அவைகளிலும் நல்லவர்களும், கெட்டவர்களும் உண்டு.

இந்த உலகத்தோடு சம்பந்தமில்லாமல், இன்னொரு உலகம் இந்த உலகத்திற்கு வெகு அருகிலேயே இந்த உலகத்தைச் சுற்றி இயங்கிக் கொண்டிருக்கிறது.

இந்த சக்திகளைக் கண்டு கொண்ட சிலர், மனிதர்களுக்கு இல்லாத ஆற்றல்கள் அவைகளுக்கு இருப்பதைக் கண்டு பிடித்து, அதன் மூலம் தன் சக மனிதர்களை மிரட்டுவதற்கு முயற்சி செய்கிறார்கள். இந்தச் சூட்சும சக்திகளோடு தொடர்பு கொண்டு, அவைகளைத் தங்கள் வசப்படுத்தி, அவைகளுக்கு வேண்டியன கொடுத்து, தங்களுக்கு வேண்டியதை நிறைவேற்றிக் கொள்கிறார்கள். இடைவிடாத வைராக்கியமும், இடைவிடாத பயிற்சியும் இருந்தால் இது எவருக்கும் சாத்தியம்...'' ஆற்றங்கரையில் அருண்மொழியோடு நடந்து கொண்டிருந்த கருவூர்த்தேவர், அடிக்குரலில் அவனுக்கு விளக்கிக் கொண்டு வந்தார்.

“பூமியின் புவியீர்ப்பு குறைந்த நாட்களில், சந்திரனின் வலிமை அதிகரிக்கின்ற நாட்களில், இந்தச் சூட்சும சக்திகளுக்குப் பலம் ஏற்படும். அப்போது அவைகளே கூட மனிதர்களோடு தொடர்பு கொள்ள முயற்சி செய்யும். அந்தச் சக்திகள் தாங்கள் உடலோடு இருந்தபோது வைத்துக் கொண்டிருந்த மனோ பீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ள மனிதர்களை நாடுவதுண்டு. அவைகளுக்கு உடம்பு இல்லையெனினும், கடும் பசியிருக்கும். அதாவது அவைகளுக்கு மனம் செயல்படும். பசியெடுப்பது போன்ற ஒரு பிரமை ஏற்படும். தனக்குப் பசிக்கிறது. தனக்குத் தூக்கம் வருகிறது என்றெல்லாம் உடம்போடு கூட இருந்த காலத்தில் ஏற்பட்ட நினைவுப் பதிவுகளின் காரணமாக அவைகள் அல்லலுறும்.

இந்தச் சூட்சும சக்திகளுக்குக் காமமும் ஏற்படுவதுண்டு. நீர் வேட்கையில் தவிப்பதுண்டு. சில சக்திகள் இறந்தபோது ஏற்பட்ட ஆற்றாமையால் அழுது கொண்டே இருக்கும். சில சக்திகள் எப்போதும் கடுங்கோபத்தில் இருக்கும்.”

அருண்மொழி அவரையே வியப்போடு பார்த்து கொண்டிருந்தான்.

“சோழ தேசத்தில் இந்தச் சூட்சும சக்திகளைப் பற்றி யாரும் அதிகம் அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. இவைகளை முக்கியம் என்று கருதுவதற்கில்லை. அவைகள் உலகத்தில் அவைகள் இருக்கட்டும் என்று விட்டு விலகிப் போய்

விடுவார்கள். பாண்டிய தேசத்திலும் இவைகள் முக்கியமில்லை. ஆனால், மலைகளும், பள்ளத்தாக்குகளும் நிறைந்த சேர தேசத்தில் இவைகளுக்கு ஏனோ ஒரு முக்கியத்துவம் கிடைத்து விட்டது.

பரசுராமர் காலத்திலிருந்தே சேர தேசத்தில் சூட்சும சக்திகளோடு தொடர்பு கொள்ளுவதற்கென்று ஒரு தனிக்குழு இயங்கி வருகிறது. சேர தேசத்து முன் குடுமி அந்தணர்களுக்கு, இவ்வித சக்திகளின் மீது அபரிமிதமான ஆசை உண்டு. அவைகளைப் பயன்படுத்தி, மக்களுக்கு நடுவே தங்களை உயர்த்திக் கொள்ளும் அலட்டல் உண்டு.

ஆனால் அருண்மொழி... ஒரு முறை இவைகளோடு தொடர்பு கொண்டு, இவைகளுக்கு உண்டான தேவைகளை நிறைவேற்றத் துவங்கி விட்டால் இவைகள் மனிதர்களை எளிதில் விடுவதில்லை. எத்தனை கொடுத்தாலும் திருப்தி அடைவ தில்லை. விதவிதமான அகோர ருசிகளோடு அவைகள் அலைய, அவைகளுக்கு உணவிடுவதே மிகப் பெரிய வேலையாக வாழ்நாள் முழுவதும் செய்கிற கடமையாக சிலருக்கு ஆகி விடுகிறது. வேறு எது பற்றியும் யோசிக்க முடியாத நிலைமை ஏற்பட்டு விடுகிறது. இந்தச் சூட்சும சக்திகளோடு தொடர்பு கொண்டவர்கள் வாழ்க்கை சுகமாக, சௌஜன்யமாக சந்தோஷமாக இருக்காது. இவர்களும் பேய், பிசாசைப் போல முகம் இருண்டு உலாவத் தலைப்பட்டு விடுவார்கள்.

ஆற்றங்கரையில் என்னை நோக்கி ஓடி வந்தது அந்தப் பெண் அல்ல. சூட்சும உருவங்களுக்குச் செயல்படுகிறபோது உடம்பு வேண்டும். எனவே, பலவீனமான உடம்புகளுக்குள் அவைகள் புகுந்து கொள்ளக்கூடும்.

பூப்படைந்த பெண்கள், கருவுற்ற எழுபது நாட்களான பெண்கள், மலஜலம் கழித்த பிறகு சுத்தி செய்துகொள்ளாத அந்தணர்கள், கடும் கோபத்தோடு தனக்குத்தானே பேசிவிட்டுத் தூங்கப் போகிறவர்கள் போன்றவர்களின் உடம்புகளுக்குள் இவைகள் புகுந்து கொள்கின்றன. சில சமயம் பசு, யானை போன்ற மிருகங்களுக்குள்ளும் இவைகள் நுழைவதுண்டு.

அடிப்படையில் இது ஒரு அருவெறுப்பான விஷயம். மனிதருக்குத் தேவையில்லாத ஒரு நிலை. அதனால்தான் இதனைப் பற்றி அதிகம் நாம் பேசுவதில்லை. ஆனால் சேர தேசத்து அந்தணர்களின் ஒரு குழுவினர், பரம்பரை பரம்பரை

யாக இதுவே தொழிலாகக் கொண்டு, இதையே தங்கள் குடும்பத்திலுள்ள எல்லா ஜனங்களுக்கும் பயிற்றுவித்து, இடைவிடாது சூட்சும சக்திகளை அடக்குவதற்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அடக்கி, பிறர் மீது ஏவி, தமக்கு வேண்டிய காரியங்களைச் சாதித்துக் கொள்கிறார்கள். ஆரம்ப வெற்றிகளை அடைந்து குதூகலிக்கிறார்கள். பிற்பாடு அவஸ்தைப்படுகிறார்கள். எத்தனை அவஸ்தைப்பட்டாலும், இந்த சக்தியின் மீது ஈடுபாடு கொண்டு விட்டால். இதிலிருந்து தப்பித்துக் கொள்ள மனம் வராது...”

“இந்த உடையாளூரில், நீங்கள் இருக்கும் இடத்தில் இப்படிப்பட்ட சக்திகள் உண்டா...” அருண்மொழி ஆவலாகக் கேட்டான். அவன் குரலில் லேசான கலவரம் இருந்தது.

“இதுவரை இல்லை. இப்போது வந்திருக்கிறது...” கருவூர்த்தேவர் சற்று கவலையாகச் சொன்னார்.

“எதனால் இது...”

“சோழ தேசத்தின தலைமையை அசைத்துப் பார்க்க முயற்சி செய்கிறார்கள். படை திரட்டி, போர் நடத்தி ஜெயிக்க முடியாதவர்கள் பிசாசை ஏவி விடுகிறார்கள்.”

“யாரை நோக்கி ஏவி விடுகிறார்கள் குருதேவரே...”

“அவர்களுடைய குறி மாமன்னன் இராஜராஜன். இராஜராஜனை நெருங்க வேண்டுமென்றால், கருவூர்த்தேவனை அடித்துச் சாய்க்க வேண்டும். கருவூர்த்தேவனைக் கலவரப் படுத்த வேண்டும். எனவே, உடையாளூருக்கு அனுப்பி விடுகிறார்கள். கருவூர்த்தேவன் யாரென்று சேரதேசத்து அந்தணர்களுக்குத் தெரியவில்லை. எல்லாம் வல்ல சிவன் தன் வேலையைத் துரிதப்படுத்த எனக்கு உற்சாகமூட்டியிருக்கிறார். நான் தொடைதட்டி எழுந்துகொள்ள பைசாசங்களை அறிமுகப் படுத்துகிறார். இனி சகலமும் விரைவாக நடக்கும்.”

“சேரதேசத்து அந்தணர்களுக்குச் சோழமன்னர் மீது என்ன கோபம்... உண்மையில் யார் இதைச் செய்வது...” அருண்மொழி கேட்டான்.

“உனக்கு ஏன் புரியவில்லை... நீ சிறுவன். உனக்குச் சோழதேசத்து அரசியலில் என்ன நடந்தது என்பது தெளிவாகத் தெரியாது என்று நினைக்கிறேன். இராஜராஜன் பட்டத்துக்கு

வரும் முன்பு சோழ தேசத்தை ஆண்டது யார் என்று உனக்குத் தெரியுமா?"

"தெரியும் உத்தம சோழர் என்றழைக்கப்பட்ட மதுராந்தகர்..." அருண்மொழி பதில் சொன்னான்.

"மதுராந்தகருக்கு முன்பு சோழ தேசத்தை ஆட்சி செய்தவர் யார் என்று தெரியுமா?

"தெரியும்... சுந்தரசோழர்."

"சுந்தர சோழருக்குப் பிறகு யார் ஆட்சிக்கு வர இருந்தார்கள் என்று தெரியுமா?" அருண்மொழியைக் கூர்மையாகப் பார்த்தபடியே கருவூர்த்தேவர் கேட்டார்.

"தெரியும். ஆதித்த கரிகாலர் இளவரசுப் பட்டம் ஏற்றார். அவர்தான் அரசராக வரவேண்டியவர். ஆனால் அவரை..." அருண்மொழி தயங்கினான்.

"சொல்..."

"அவரைப் பாண்டிய தேசத்து மன்னனின் ஆபத்துதவிகள் கொலை செய்து விட்டார்கள். சுற்றி வளைத்துக் கொடூரமான முறையில் கொன்று போட்டார்கள் என்று கேள்விப்பட்டிருக் கிறேன்."

"அப்படிக் கொன்று போட்டவர்கள் யார் என்று தெரியுமா?" கருவூலத்தேவர் கேட்டார்.

"தெரியும். ரவிதாஸன் என்ற பெயரைக் கேள்விப் பட்டிருக்கிறேன். உடையார்குடி அவன் ஊர் என்று சொல்லி யிருக்கிறார்கள்." அருண்மொழிப்பட்டன் ஆவலாக பதிலளித் தான்.

"உடையார்குடி எங்கிருக்கிறதென்று தெரியுமா?"

"தெரியும்..."

"போயிருக்கிறாயா?" கருவூலத்தேவர் கண்களைச் சுருக்கிக் கொண்டு அருண்மொழிப்பட்டனை உற்றுப் பார்த்தபடி கேட்டார்.

அருண்மொழிப்பட்டனின் காது பக்கத் தலை முடியி லிருந்து நீர் வழிந்து, தோளில் உருண்டு, மார்பில் வழிந்து கொண்டிருந்தது.

"நான் உடையார்குடி போயிருக்கிறேன்." – அருண்மொழி பதில் சொன்னான்.

"எப்போது?"

"குடந்தைக்கு வரும்முன் காஞ்சிபுரத்திலிருந்து வீரநாராயணபுரம் ஏரி வழியாய் உடையார்குடி போய், அங்கு மூன்று நாட்கள் தங்கிவிட்டு, பிறகு குடந்தையை நோக்கிப் பயணப்பட்டேன்."

"உடையார்குடி போக வேண்டும் என்று உனக்கு யார் சொன்னார்கள்?"

"என் தந்தை. அவர் அங்கு நடந்தவைகளைக் கதைபோல எனக்குச் சொல்லியிருக்கிறார். மாமன்னர் இராஜராஜரின் கோபம் பற்றிப் பேச்சு வந்தபோது, அதன் வீரியம் பற்றி விளக்கிச் சொன்னார். ஆதித்த /கரிகாலனை ரகசியமாகக் கொன்றுவிட்டு, மதுராந்தகருடைய ஆட்சியில் அதற்கு எந்தத் தண்டனையும் பெறாமல், மாறாய் சன்மானம் பெற்று, உடையார்குடியின் ஏரிப்பாசனத்திற்கு அருகே மிகப் பெரிய நிலபுலன்களைச் சொந்தமாக்கிக் கொண்டு ஒரு பிரபுவைப் போல வாழ்ந்த வந்த ரவிதாஸனையும், அவனது சுற்றத்தார் களையும் பதினாறு வருடங்கள் கழித்து மறுபடியும் விசாரித்து, அவர்களை உண்மையைச் சொல்லவைத்து, அவர்கள் அந்தணர்களாக இருக்கும்படியால் ரவிதாஸனையும், அவன் தம்பியையும், அவர்களது மகன், மகள், மகனுக்குத் தன் மகளைக் கொடுத்தவர், பேரன் பேத்திகளுக்குப் பெண் கொடுத்து, பெண் எடுத்து உறவுமுறையானவர்கள் எல்லோரையுமே – நிலபுலன் களையும் சொத்து பத்துக்களையும் விட்டுவிட்டு, உடுத்திய துணியோடு உடையார்குடியை விட்டு வெளியேறச் சொல்லி, அவர்களை ஒட்டு மொத்தமாய் சோழதேசத்தின் எல்லைக்குக் கொண்டு போய், அநாதையாய் நாடு நடத்தியதை தந்தை விவரித்துச் சொல்வார்.

அந்தத் தண்டனையை அவர் நேரடியாகக் கூடத் தரவில்லை. ரவிதாஸனைப் பார்த்தால், தான் வாள் உருவிப் பாய்ந்து விடுவோம் என்று அச்சப்பட்டு, அப்படிச் செய்யக் கூடாது என்று தீர்மானித்து, தன்னுடைய ஸ்ரீமுகத்தை ஓலை நாயகத்தை விட்டு எழுதி அனுப்பி, பிறகு ஊர் கூட்டச் சொல்லி, உரக்க அந்த ஓலையைப் படிக்கச் சொல்லி, ஊர் அதிகாரிகள் மூலம் இந்தத் தீர்ப்பை ரவிதாஸனுக்கு விவரித்து, தீர்ப்பு சொன்ன மறு விநாடியே அவர்களை ஊர்விட்டு விரட்டுகின்ற பணியையும் ஊர் மக்களிடம் கொடுத்து, தன்னுடைய

கோபத்தைக் குறைத்துக் கொண்டார் என்று தந்தை சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். எவ்வளவு அழுத்தமான, அடக்கமான கோபம் இருந்தால் இப்படி ஒரு காரியம் செய்திருக்க முடியும்... ஆதித்த கரிகாலன் கொலை பற்றி எவ்வளவு பெரிய மனோவேதனை இருந்தால், தான் ஆட்சிபீடம் ஏறிய மறு வருடமே அதை விசாரணைக்குட்படுத்தி இத்தகைய தீர்ப்பை வழங்க முடியும்... மன்னருடைய மன உறுதியும், ஆதித்த கரிகாலன்பால் அவர் கொண்டிருந்த அன்பும் அவர் இழப்பினால் அவர் அடைந்த துயரமும் இந்தத் தீர்ப்பில் எவ்வளவு தெளிவாகத் தெரிகின்றன...."

''ரவிதாஸனைக் கொன்று போட்டிருக்கலாமே??'' கருவூர்த்தேவர் சோழ சரித்திரம் தெரியாதவர் போல் அருண் மொழிப்பட்டனைக் கேட்டார்.

"இல்லை. அது நல்ல முடிவாகாது. ரவிதாஸன் மட்டுமே பொறுப்பல்ல. அந்த அந்தணர் குடும்பம் மொத்தமும் இதற்குப் பொறுப்பு. அவர்கள் அனைவரும் பாண்டியனின் ஆபத் துதவிகள். சேர தேசத்திலிருந்து பஞ்சம் பிழைக்க வந்ததுபோல் இங்கே வந்தவர்கள். வேதமந்திரங்கள் சொல்லி, ஆகம விதிகள் சொல்லி மெல்ல மெல்ல மக்களிடையே புகுந்து, பிறகு அரசியலில் நுழைந்து, சோழ தேசத்திற்கு எதிராகச் செயலாற்றி யவர்கள். அவர்களில் பெண்டுகள்கூட தண்டிக்கப்பட வேண்டியவர்கள் என்று மன்னர் தீர்மானித்து, அத்தனை பேரையும் சோழ தேசத்தை விட்டு விரட்டினார். ஒரு தூக்குத் தண்டனையை விட, வாளால் வெட்டி ஒரு மனிதனைக் கொல்வதைவிட, ஆயிரத்து முந்நூற்று இருபத்தாறு பேர்கள் கொண்ட அந்த வம்சம் நடந்து நடந்து சோழ தேசத்தின் எல்லையைத் தாண்டி அநாதையாக நிறுத்தபட்டதுபோல உயர்வான தண்டனை ஒன்று தர முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. இராஜராஜத்தேவரின் கடுங்கோபத்திற்கு இது ஒரு எடுத்துக்காட்டு..."

"உடையார்குடியில் அந்த மண்டபம் பார்த்தாயா?"

'இராஜராஜத்தேவரின் ஸ்ரீமுகம் வாசிக்கப்பட்ட அந்த மண்டபம்தானே... ஆமாம். பார்த்தேன். அங்கு சற்று நேரம் உட்கார்ந்திருந்தேன். கோவிலின் பின் பக்கம் போய் ரவிதாஸனுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையைப் பற்றி

விளக்கமாக எழுதப் பெற்றிருந்த கல்வெட்டையும் நான் படித்துப் பார்த்தேன். சோழ தேசத்திற்கு ஏற்பட்ட அந்தக் களங்கம் என்னை வேதனைக்குள்ளாக்கியது. மன்னராக இருக்க வேண்டிய இளவரசர் ஆதிக்க கரிகாலரின் மனக்கேதம் தீர்க்கும் பொருட்டு, அங்கே நெய்யில் ஒரு நந்தா விளக்கு ஏற்றிவிட்டு வந்தேன். நான் இருந்த மூன்று நாட்களும் அந்த நொந்தா விளக்கு சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது."

"நிச்சயம் ஆதித்த கரிகாலனின் மனக்கேதம் தீர்ந்திருக்கும் அருண்மொழி. ஆனால் அந்த ரவிதாஸன் ஆட்கள் இன்னமும் ஆடிக் கொண்டிருக்கிறார்கள்..." – கருவூர்த்தேவர் சொன்னார்.

"எனக்கு இதுதான் புரியவில்லை குருதேவரே, காந்தளூர்ச் சாலைப் படையெடுப்பின்போது, ரவிதாஸன் குடும்பத்தினரை -குறிப்பாய் அவர்களில் போர் செய்யும் ஆண்களை இராஜராஜ சோழர் வெட்டிக் கொன்று விடவில்லையா... ரவிதாஸன் ரகசியமாய்ப் படை திரட்டுகிறான். காந்தளூர் கடிகையில் அவர் களுக்குப் பயிற்சி கொடுக்கிறான் என்று கேள்விப்பட்டுத்தானே உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் கோபத்தோடு காந்தளூர் போனார். கடிகையையிடித்து ரவிதாஸனைத் தண்டித்தார். இன்னமுமா இருக்கிறார்கள் அந்த வம்சத்தினர்?"

"ஆமாம். அன்று குழந்தைகளாக இருந்தவர்கள். பெண்களால் வளர்க்கப்பட்டு, அங்குள்ள குருமார்களால் பயிற்சி செய்யப்பட்டு, சோழ தேசத்திற்கு எதிராகத் திருப்பி விடப்பட்டு இருக்கிறார்கள். அந்தக் குழந்தைகளுக்கு வீரம் போதவில்லை. வாள் உருவிப் போர் செய்ய முடியாத அந்த இரண்டுங்கெட்டான் வாலிபர்கள் மந்திரதந்திரங்களால் சோழ தேசத்தைக் கவிழ்த்துவிட முடியும் என்று நினைக்கிறார்கள். இந்தக் கருவூர்த்தேவர் இருக்கும்வரை அது ஒருக்காலும் நடக்காது.

ரவிதாஸன் மரணத்திற்குப் பழிக்குப் பழி என்று பைசாசங் களை ஏவி விட்டிருக்கிறார்கள். இப்போது இந்தப் பெண் மூலம் ஆடிய பைசாசம் கூட கொல்லிமலையிருந்து இங்கு வந்ததுதான்." கருவூர்தேவர் வெகு தொலைவே பார்த்தார்.

"அருண்மொழி... உனக்கு வேலை வந்துவிட்டது. சோழ தேசத்தின் அரசரைக் காப்பாற்ற நீ தயாராக இருக்கிறாயா?" கருவூர்த்தேவர் சட்டென்று திரும்பி கூர்மையாகக் கேட்டார்.

அருண்மொழி சட்டென்று விறைப்பானான். இடுப்பிலிருந்த வாளை எடுத்து நெஞ்சில் வைத்துக் கொண்டான். படீரென்று நெஞ்சில் அறைந்து கொண்டான்.

“இது என்னுடைய மண், இராஜராஜர் என்னுடைய அரசர். என் உடல், பொருள், ஆவி அனைத்தும் அவருக்குச் சமர்ப்பிக்கிறேன். இந்த தேசத்திற்காக, என் மொழிக்காக, என் சமயத்திற்காக, என் மன்னருக்காக எதையும் எப்போதும் இழக்க நான் தயாராக இருக்கிறேன். இது சத்தியம்... சத்தியம்... சத்தியம்...” என்று அருண்மொழி உணர்ச்சி பொங்கக் கூறினான்.

தொலைதூரத்தில் மேற்கே இடி இடித்தது.

“ஆமாம். உன் தகப்பனார் சேனாதிபதி பிரம்மராயர் இப்போது எங்கிருக்கிறார்?” திடீரென்று அருண்மொழியை கருவூர்த்தேவர் கேள்வியை வீசினார். பேச்சைத் திசை மாற்றினார்.

“தெரியவில்லை குருதேவரே... அரசர் எங்கிருக்கிறாரோ அங்குதான் தந்தையும் இருப்பாரென்று நினைக்கிறேன்...”

கருவூர்த்தேவர் அவன் பதிலைக் காது கொடுத்து வாங்கிக் கொள்ளவில்லை. மிக வேகமாக மாளிகைக்குள் நுழைந்தார். மான் தோல், கூடத்திற்கு நடுவே விரிக்கப்பட்டிருந்தது. அந்த மான்தோலில் அமர்ந்து, அன்றைய அனுஷ்டானங்களைச் செய்யத் துவங்கினார்.

## 24

ஒரு தேசத்தின் அதிகாரிகள், ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடம் போவதற்கு மிகச் சரியான வாகனம் குதிரைதான். கொடி வைத்த தேரோ, ஆட்கள் தூக்கிப் போகும் சிவிகையோ, அம்பாரி கட்டிய யானையோ அதிகாரிகள் போக லாயக்கான விஷயமல்ல. உறவுப் பெண்களோடு சந்தோஷமாய்ச் சிரித்துக் கொண்டு போக தேர் நல்ல விஷயம் கொஞ்சம் சல்லாபமாய் போக முத்துச் சிவிகையைக் கூடப் பயன்படுத்தலாம். அம்பாரி கட்டிய யானை கம்பீரமே தவிர, அதன், அசைவுகள் வெகு தூரம் பயணப்பட லாயக்கில்லாதவை

யானையிலிருந்து இறங்கியதும், தூங்கமுடியாமல் ஒரு பேரவஸ்தை உடம்பு முழுவதும் ஏற்பட்டு விடும்.

நல்ல ஜாதிக் குதிரைக்கு, நோகாத சேணமிட்டு, அமைப்பான கடிவாளமிட்டு, சரியாகப் பராமரித்து வந்தால் அற்புதமான வேகத்தில் பத்து காதம் வரை அயராது ஓட்டலாம். அதுவும் தவிர, நல்ல காடுகளூடே, ஒற்றையடிப் பாதையில், புதர்களின் மறைப்பில் எவருக்கும் தெரியாமல் மறைந்தும் போகலாம்.

மற்ற எல்லா வாகனங்களுக்கும் ராஜபாட்டை தேவைப் படும். குதிரைகளில் பயணப்பட அவ்விதம் தேவை இல்லை. கிராமங்கள் இல்லாத இடங்களில் பாதைகளைத் தேர்ந்தெடுத்து, கிராமங்கள் வரும்போது சற்று சுற்றிக் கொண்டு தோப்புக் களூடோ, வயல் வரப்புகளூடோ அல்லது காடுகள் மண்டிய புதர்களூடோ எவர் கண்ணிலும் படாமல் நகர்ந்து போய்விட முடியும். யாரோ இரண்டு சோழ தேசத்துக் குதிரை வீரர்கள் போகிறார்களென்று மக்கள் தொலைவிலிருந்து கையுயர்த்திப் பார்ப்பார்களே தவிர, குறிப்பாக யார் போகிறார்களென்று குதிரையில் போகிறவர்களைக் கண்டுகொள்ள முடியாது. சிலசமயம், ஒரு தேசத்தின் அதிகாரி இவ்விதம் ரகசியமாய்ப் பயணப்படுவதும் தேவையாக இருக்கிறது.

கிட்டத்தட்ட இந்தப் பயணம் ரகசியமானதுதான். அதே சமயம் தெரிவதால் எந்தக் கெடுதலும் நடந்துவிடப் போவதில்லை. எதற்கு, ஏன் என்ற கேள்விகள் மக்கள் நடுவே எழும். 'திடீரென்று குடத்தைப் பக்கம் வந்திருக்கிறாரே. என்ன செய்தி' என்று மக்கள் தேவையில்லாமல் பேசிக் கொள்வார்கள். 'தஞ்சையில் கோவில் கட்டத் துவங்கவில்லையா' என்று பார்த்ததும் கேள்வி கேட்பார்கள். 'மன்னர் வெளியூர்களிலிருந்து ஆட்கள் வரவழைக்கிறாராமே, யாரெல்லாம் வந்திருக் கிறார்கள்?' என்று தகவல் கேட்பார்கள்.

மக்கள் அதிகாரிகளிடம் நேரடியாகத் தகவல் கேட்பதும் தவறல்ல. அதிகாரிகள் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும். மிகப் பெரிய அரசாங்க ரகசியங்களைத் தவிர, மன்னருடைய உடல்நிலை, அன்னாருக்கு அருகே தங்கியிருப்பவர் யார், மன்னருடைய அடுத்த திட்டமென்ன, மன்னருடைய அடுத்த கொடை என்ன, மன்னர் எப்போது இந்த ஊருக்கு வருவார்

என்பன போன்ற கேள்விகளுக்கெல்லாம் ஒரு அதிகாரி பதில் சொல்லியாக வேண்டும். சொல்லாது போனால், மன்னரை மக்கள் சந்திக்கிறபோது, 'சேனாபதியான பிரம்மராயரை நாங்கள் விசாரித்தோம். எந்தப் பதிலும் சொல்லாமல் முகம் திருப்பிக் கொண்டு போகிறார். எங்களுக்கு அது அவமரியாதை யாக இருந்தது. நாங்கள் என்ன தவறு செய்தோம். ஏன் சேனாபதி எங்களைப் புறக்கணிக்கிறார்..." என்று குற்றம் சுமத்துவார்கள்.

மன்னர் இதை விரும்பமாட்டார். அப்படிக் குற்றம் சுமத்தப்பட்ட உடனேயே, குற்றம் சுமத்தப்பட்ட அதிகாரி அருகில் இருந்தால் வெகு வேகமாய் அந்த அதிகாரியை மிரட்டிப் பார்ப்பார்.

ஒருமுறை இப்படி மக்கள் புகார் சொல்ல, பிரம்மராயரை உற்றுப் பார்த்த மன்னர் தானே எழுந்து, "பிரம்மராயருக்குப் பதிலாக நான் மன்னிப்பு கேட்கிறேன்" என்று கரம் கூப்பினார். மக்கள் வட்டம் பதறிவிட்டது. பிரம்மராயர் தவித்துப் போனார்.

அதே கூட்டத்தில் கூட்டம் முடிகிறபோது, 'முடிந்தவரை என் அதிகாரிகளை உங்களிடம் பணிவாகவும், பிரியமாகவும் வெகு நிச்சயம் பேசச் சொல்கிறேன். உங்களிடம் பேசுவதல்லால் வேறு எந்தப் பணியும் அவர்களுக்கு முக்கியமில்லை. உங்களுக்குத் தரக்கூடாத தகவல்கள் ஏதும் அரண்மனையில் நடைபெறுவதில்லை. தகுந்த காரணமில்லாது உங்களிடம் எதையும் மறைக்க வேண்டிய அவசியமில்லை. படையெடுப்பு நடத்தப் போவதாக இருந்தாலும், அது பற்றி முன்கூட்டியே உங்களுக்குச் சொல்லியாக வேண்டும் என்று நான் உத்தர விட்டிருக்கிறேன்.

பிரம்மராயர் – சோழ தேசத்தின் மீதும், என் மீதும், உங்கள் மீதும் மிகுந்த மரியாதையும், மதிப்பும் வைத்திருப்பவர். நமக்கெல்லாம் பிரியமானவர். காரணமின்றி அவர் உங்களுடன் பேச மறுத்திருக்க மாட்டார். எனவே, இந்த முறை அவரை மன்னித்து விடுங்கள்..." என்று அவர் கரம் கூப்ப, பிரம்மராயர் எழுந்து நின்று, தன்னிலை விளக்கம் சொல்ல வேண்டிய தாயிற்று.

'இளவரசர் இராஜேந்திர சோழருக்கும், மாமன்னர் இராஜராஜருக்கும் ஏதேனும் மனக்கசப்பு உண்டா? ஏன்

மன்னரைவிட்டு இளவரசர் இராஜேந்திரர் பிரிந்திருக்கிறார்?' என்று ஒரு கிழவர் என்னைக் கேட்டார்.

இதற்கு ஒரு சேனாதிபதியான நான் என்ன பதில் சொல்ல முடியும்... இந்தக் கேள்வியை அந்தக் கிழவர் என்னிடம் கேட்டதைவிட, மாமன்னர் இராஜராஜரிடம் கேட்டிருக்கலாம். இளவரசர் இராஜேந்திரரிடம் கேட்டிருக்கலாம். அப்படி யல்லாது, சேனாபதியான என்னிடம் கேட்டபோது, அதற்கு நான் என்ன பதில் சொன்னாலும் உவப்பாக இராது என்பதால் நான் மௌனம் சாதித்தேன்..." என்று பிரம்மராயர் தன்பக்க விளக்கம் கொடுத்தார்.

மன்னர் அந்த விளக்கம் கேட்டு வாய்விட்டுச் சிரித்தார். சேனாபதி பிரம்மராயரை அருகே அழைத்து அணைத்துக் கொண்டார்.

"எனக்கு உங்கள் நிலைமை புரிகிறது பிரம்மராயரே. ஆனால் இந்தக் கேள்விக்கு நீங்கள் பதில் சொல்லாமல் மௌனம் சாதித்தபோது, இந்தக் கேள்வியின் உக்கிரம் அதிக மாகிறதே தவிர, குறைவதில்லை. மறுபடியும் அவர்கள் என்னைச் சந்திக்கும்வரை அல்லது இளவரசர் இராஜேந் திரனைச் சந்திக்கும்வரை இந்தக் கேள்வியைத் தங்களுக் குள்ளாகவே கேட்டுக் கொண்டு, தாங்களே பதில்கள் ஏதேனும் சொல்லிக் கொண்டு அல்லல்பட்டிருப்பார்கள். இந்தக் கேள்வி என்னை நோக்கிப் பிறகு கேட்கப்பட வேண்டிய கேள்வி அல்ல. "மன்னரிடம் கேளுங்கள்" என்று சொல்லிவிட்டு, நீங்கள் வந்திருக்கலாம். மௌனமாக வந்தது அதிகமான ஆவலைத் தூண்டியிருக்கும் என்று நான் கருதுகிறேன்.

எனினும், இப்போது இந்தக் கேள்விக்குப் பதில் சொல்கிறேன். எனக்கும், எனது மகனான இளவரசர் இராஜேந்திரனுக்கும் நெல்முனையளவுகூட கருத்து வேறுபாடு எதுவுமில்லை. எனக்கு அடங்கிய பிள்ளையாக, என்மீது அதிகம் அக்கறையுள்ள பிள்ளையாக, நான் காட்டிய வழியில் கம்பீரமாய் முன்னேறுகின்ற மகனாக, சோழப் படையின் மாதாண்ட நாயகனாக இளவரசர் இராஜேந்திரன் இருக்கிறார்..." என்று சோழமன்னர் இராஜராஜர் சொல்ல, மேல் துண்டு விசிறிப் போட்டு மக்கள் ஆரவாரித்தார்கள்.

"மாமன்னர் இராஜராஜர் வாழ்க, இளவரசர் இராஜேந்திரர் வாழ்க..." என்று கூவினார்கள். மெய்க்காவல்

படையினர். வாளை உருவி கவசத்தில் அடித்து, 'சோழம், சோழம்' என்று இடைவிடாது கத்தினார்கள்.

"ஆனால் ஏன் என்னைவிட்டு இளவரசர் விலகி வடக்கே இருக்கிறார் என்று கேட்கிறீர்கள் அல்லவா. சோழதேசம் போன்ற பரந்து விரிந்த தேசத்தில், கூட்டுக் குடும்பம்போல எல்லோரும் பழையாறையில் அடைந்து கொண்டிருக்க முடியாது. அரச குடும்பத்தினர் அத்தனை பேருக்கும் வேவ்வேறு விதமான வேலைகள் இருக்கின்றன. அவர்கள் வருடத்தில் ஒருமுறை அல்லது இருமுறை கூடிப் பேச முடியுமே தவிர, மற்ற நேரங்களெல்லாம் பிரிந்திருக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிறார்கள்.

நான்தான் இளவரசர் இராஜேந்திரனை வடக்கு நோக்கி அனுப்பியிருக்கிறேன். சோழ தேசத்தின் வட எல்லையில் படை வீடு பலமாக அமைத்து, அங்கே காவல் இருக்கும்படி செய்திருக் கிறேன். சோழ தேசத்தின் எல்லையிலிருந்தால், அங்கிருந்து ஒரு நாள் பயணத்தில் நடு நாடு போய்விட முடியும். இரண்டு நாள் பயணத்தில் தொண்டை மண்டலம் போய்விட முடியும்.

அதேபோல, நமது வடமேற்கு எல்லையான மேல் பாடியைக் கவனித்துக் கொள்ளவும் இளவரசரால் முடியும். எல்லைகளை உறுதியாகப் பார்த்துக் கொண்டால்தான் அங்கு படை வீரர்களை உற்சாகப்படுத்துகின்ற ஒரு தலைமை இருந்தால்தான் தஞ்சையிலும், குடந்தையிலும், திருச்சீர புரத்திலும் நாம் அமைதியாக உழவுத் தொழில் செய்து கொண்டு வாழ முடியும்.

எனக்குத் தஞ்சையில் மிக முக்கியமான வேலை ஒன்று இருக்கிறது. அது என்ன என்பதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன் என்னுடைய சில காரியங்களை நான் அமைதியாகச் செய்வதற் காகத்தான் இளவரசர் இராஜேந்திரனை எல்லைப்புறங்களில் இருக்கச் சொல்லி இருக்கிறேன்.

இளவரசர் இராஜேந்திரன் மட்டுமல்ல; என் தமக்கை குந்தவையின் கணவர் வந்தியத்தேவரும் இவ்விதமே பல்வேறு ஊர்களுக்குப் பயணப்பட்டுக் கொண்டிருக்கிறார். குந்தவை நாச்சியாரும், அவரைத் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிற என் பாட்டியார் செம்பியன் மாதேவியாரும் செங்கற் கோயில்களைக் கற்றளிகளாக மாற்றுகின்ற மகத்தான பணியை மேற்கொண்டு ஊர் ஊராக நகர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

என்னுடைய சிற்றப்பா, முன்பு இந்தச் சோழ தேசத்தின் மன்னராக இருந்த 'உத்தம சோழர்' என்று பெயரிட்டுக் கொண்ட மதுராந்தகரின் மகன் – மதுராந்தக கண்டராதித்தர், ஒவ்வொரு கோயிலாக நான் நிவந்தம் கொடுத்த கோவில் களுக்கெல்லாம் சென்று, அங்கு கணக்குத் தணிக்கைகள் செய்து கொண்டிருக்கிறார்.

ஊரும், ஊர் மக்களும், கோவிலும், கோயில் அதிகாரிகளும், சபைகளும் சரிவர இயங்குகின்றனவா என்று தெரிந்து கொண்டு, எனக்கு நாள் தவறாது ஓலைகள் அனுப்பிக் கொண்டிருக்கிறார். தகவல்கள் வந்துகொண்டு இருக்கின்றன.

சமீபத்தில்கூட ஒரு குறிப்பிட்ட கோவிலில் நிவந்தங்களை வாங்கிக் கொண்டு, அதற்கு ஏற்றபடி அந்தணர்கள் விளக்கெரிக்கவில்லை. ஆறுகால பூஜைகள் செய்யவில்லை என்று கண்டுபிடித்து, அவர்களை மிகக் கடுமையாகக் கண்டித்து, தண்டித்து அவர்களுக்குப் பதிலாய் வேறு ஆட்களை நியமித்து, சபையினுடைய அங்கத்தினர்களை மாற்றி, ஊரின் நிர்வாகத்தை இருந்து சரி செய்துவிட்டு இடம் பெயர்ந்திருக்கிறார்.

மக்களே... சோழ தேசம்போல ஒரு விரிவான தேசத்தை ஆட்சி செய்வதென்பது எளிதல்ல, என்னுடைய உறவினர் களையும், சேனாபதி பிரம்மராயர் போன்றவர்களையும் நம்பித்தான் நான் இந்த ஆட்சியைச் செய்து கொண்டிருக்கிறேன்.

இராஜராஜனால் மட்டுமே சோழ தேசத்தை ஆண்டுவிட முடியாது. என் பின்னே, பலம் பொருந்திய திறமைமிக்க உறவினர்களும், அதிகாரிகளும் இருப்பதால்தான் இந்தத் தேசம் சீரும் சிறப்புமாய் நடந்து கொண்டிருக்கிறது.

இவைகளையெல்லாம் விட, என் மீது மாறாத காதல் கொண்ட சோழ மக்கள் காட்டுகின்ற அன்பு, அவர்கள் கொடுக்கின்ற காணிக்கை, தானே முன் வந்து செலுத்துகின்ற நில வரி, புறவரி, தினைவரி இவைகளால்தான் சோழ தேசம் நல்ல முறையில் இயங்கிக் கொண்டிருக்கிறது.

எனவே, என்னுடைய வீடு பற்றி எந்தக் கவலையும் படாமல், என்னுடைய உறவுகள் பற்றி எந்தச் சந்தேகமும் இல்லாமல், சந்தோஷமாக, உங்கள் வேலைகளைச் செய்து வாருங்கள். உங்களுக்கு ஏற்படுகின்ற சிறிய குறைகளையும் எந்த அச்சமுமின்றி, எந்த வெட்கமுமின்றி உங்கள் அதிகாரிகளிடம்

தெரிவியுங்கள். உங்களுக்கு ஏற்பட்ட குறைகள் என் கவனத்திற்கு ஒரு வார காலத்திற்குள் வந்து சேராவிட்டால், அந்த அதிகாரிகளை நான் கடுமையாகக் கண்டிப்பேன்.

எனவே, சோழ தேசத்தின் உயிர்நாடியான மக்கள் நீங்கள் இருக்கும்வரை எனக்கு எந்தக் கவலையும் இல்லை என்று சொல்லிக் கொண்டு உங்களிடமிருந்து விடைபெறுகிறேன்...” என்று மாமன்னர் இராஜராஜர் மறுபடி கைகூப்பினார்.

மக்கள் அந்த அன்பான பேச்சுக்குக் கதறிவிட்டார்கள். பிரம்மராயரின் கால் தொட்டு மன்னிப்புக் கேட்டார்கள்...

பிரம்மராயரைக் கண்டிப்பதுபோலக் கண்டித்து, அதே சமயத்தில் மிக உயர்ந்த நிலையில், மக்கள் மனதில் அவரைப் பற்றி ஒரு அபிப்பிராயத்தைத் தோற்றுவித்த மன்னரது பேச்சு சாமர்த்தியத்தைக் கண்டு, பிரம்மராயர் வியந்து போனார்.

மன்னரோடு தனியே இருக்கும் போது அவர் பாதம் தொட முற்பட, மன்னர் பாய்ந்து வந்து தடுத்தார்.

“என்னிலும் நீங்கள் வயதானவர்கள். என்னிலும் நீங்கள் அனுபவம் மிக்கவர்கள். அதையும் தவிர, வேதமறிந்த அந்தணர். நீங்கள் என் காலில் விழுவது மரபுப்படி சரியாக இருந்தாலும், மனித நேயப்படி தவறு. ஒருநாளும் மறுபடியும் இந்த முயற்சியைச் செய்யாதீர்கள். மாறாய் இந்த இராஜராஜன் மக்களுக்கு பிடித்த மன்னனாக, வாழ்நாள் முழுவதும் இருக்க வேண்டுமென்று மனப்பூர்வமாய் ஆசீர்வாதம் செய்யுங்கள். இராஜராஜனுக்காக மட்டுமல்லாது, இந்தச் சோழ மக்களுக்காக, சோழ மன்னர்களின் பரம்பரைக்காக பரம்பரை பரம்பரையாய் உழைப்பேன் என்று சத்தியம் செய்யுங்கள். அது போதும் எனக்கு...”

“மன்னா...” பிரம்மராயர் தடுமாறினார்.

“பரம்பரை பரம்பரையாக உழைக்க வேண்டும் என்று சத்தியம் செய்யுங்கள்.” மறுபடியும் மன்னர் உரத்த குரலில் பேசினார்.

சுற்றியுள்ள அமைச்சர்கள் திகைத்தார்கள்.

“ஏன்? சத்தியம் செய்ய என்ன தயக்கம்?” மன்னர் அதட்டலாகப் பேசினார்.

“நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை மன்னா...”

"ஹா… இந்த தேசத்தின் மிக புத்திசாலியான சேனாதிபதி, அந்த ஊர்களிலேயே அறிவிற் சிறந்த அந்தணர், வாளெடுத்துப் படை நடத்திச் செல்லக்கூடிய அறிவு பெற்றவருக்கு ஒரு மன்னர் என்ன பேசுகிறார் என்று தெரியவில்லையென்றால், இதைவிட இழுக்கான விஷயம் சோழ தேசத்தில் வேறு என்ன இருக்க முடியும்…" மன்னர் கோபமும், கேலியுமாகப் பேசினார்.

"உங்களுக்கு என்ன வேண்டும் என்று சொல்லுங்கள் மன்னா. தரச் சித்தமாக இருக்கிறேன்…"

"மறுத்துவிட்டால்…" மன்னர் மறுபடியும் உரத்துக் கேள்வி கேட்டார்.

"வெட்டி என்னைக் கொல்லுங்கள்…" – பிரம்மராயர் உறுதி படச் சொன்னார்.

"அந்தணனைக் கொல்வது மரபல்ல என்று உங்களுக்குத் தெரியுமே… சோழ மன்னர்கள் அந்தணர்களைக் கொல்வ தில்லை என்று உங்களுக்குத் தெரியுமே… உடனிருந்து நீங்கள் கவனித்திருப்பீர்களே…"

"மன்னா… என்னை நாடு கடத்துங்கள்…"

"உங்களை நாடு கடத்திவிட்டு நான் எப்படி ஆட்சி செய்வது… நான் உங்களைக் கேட்பது பரம்பரை பரம்பரையாக எனக்கு உதவி செய்யுங்கள் என்பதே. உங்களுக்கு ஏன் அது புரியவில்லை?"

பிரம்மராயர் அமைதியாக யோசித்தார். "என் மகனைக் கேட்கிறீர்களா மன்னரே…" என்று கைகூப்பினார்.

"அருண்மொழி நேற்று சோழ தேசத்திற்குள் வந்து விட்டதாக எனக்குச் செய்தி வந்தது. காந்தளூர்ச் சாலை கடிகையில் யுத்தப் பயிற்சி முடித்து விட்டு, காஞ்சிபுரம் கடிகையில் அரசியல் தந்திரங்கள் பற்றிப் படித்துவிட்டு, சோழ தேசத்தின் எல்லா எல்லைகளையும் தங்கியிருந்து பார்த்துவிட்டு, நேற்று இரவு தனியனாய் சோழ தேசத்தின் எல்லையில் கால் வைத்து விட்டதாய் இராஜேந்திரனிடமிருந்து ஓலை வந்தது. அருண்மொழியிடம் சில முக்கியமான தகவல்கள் கொடுத் தனுப்புவதாகச் சொல்லியிருக்கிறார். அருண்மொழியைப் பற்றி இளவரசர் இராஜேந்திரர் மிக அழகான குறிப்பு ஒன்று அந்த ஓலையில் எழுதியிருக்கிறார்… அதை நான் படிக்கிறேன் கேட்கிறீர்களா?"

மன்னர் சொல்ல, ஆவலோடு பிரம்மராயர் மன்னரைப் பார்த்தார்.

மன்னர் பிரம்மராயரைப் பார்த்துச் சிரித்தபடியே ஒரு குழலிலிருந்து பனை ஓலையை எடுத்து நீவிப் படிக்கத் துவங்கினார்.

## 25

'இனிய தந்தையே இந்த இளைஞன் அருண்மொழியை எனக்கு அருகிலேயே இருக்கும் அதிகாரியாக நியமிக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். இது குறித்து தயவுசெய்து சேனாதிபதி பிரம்மராயரிடம் பேசுங்கள். அவருக்கு தன் மகனைத் தனக்கு உதவியாக வைத்துக்கொள்ளும் ஆசை இருக்கலாம். ஆனால் இந்த அருண்மொழிப் பட்டன் ஒரு சேனாதிபதிக்கு உதவியாளனாக இருக்க வேண்டிய அவசிய மில்லை. இந்த இளைஞன் முழுமையானவன். பல விஷயங்களை நன்கு கற்றுத் தெளிந்தவன். மிகத் துடிப்பானவன். கேள்விகளும் அதற்கான பதில்களும் அவனிடம் நிரம்பியிருக்கின்றன. மிக நிதானமாகவும், மிக்க கோர்வையாகவும், மிகத் தெளிவாகவும் அவன் சிந்திக்கிறான்.

அவனோடு நேற்று விளையாட்டாக வாள் பயிற்சி செய்தேன். அவனை நெருங்கக்கூட முடியவில்லை. ஆறுபேர்கள் சேர்ந்து தாக்கியும் அவனை அடக்க முடியவில்லை. மிக எளிதாக அவன் எங்களை சமாளித்தான். சோழதேச எல்லைகள் பற்றி அவன் கருத்துக்கள் சந்தேகத்திற்கு இடமின்றி இருக்கின்றன. அவனுடைய லட்சியம் 'பரத கண்டம் முழுவதையும் சோழப் புலிக்கொடிக்குக் கீழ் கொண்டு வருவது' என்று சொன்னபோது அவனை ஓடிப்போய் தழுவிக்கொண்டேன்.

அருண்மொழிப்பட்டன் தனது தந்தையைச் சந்திக்க இன்று இரவு கிளம்புகின்றான். அவனை நீங்களும் சந்தித்து, ஆசீர்வதித்து, எனக்கு சேனாதிபதியாய் அனுப்புமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். அருண்மொழியின் தகப்பனார் சேனாதிபதி பிரம்மராயருக்கும் மற்றும் அங்குள்ள அதிகாரிகளுக்கும் என் பணிவான வணக்கங்களைச் சொல்லவும்.'

ஓலையை மன்னர் படித்து முடித்ததும், குபுக்கென்று பிரம்மராயருக்கு கண்ணில் நீர் தளும்பியது. சட்டென்று திரும்பி மன்னருக்கு முதுகு காட்டி பிரம்மராயர் தலை குனிந்துக் கொண்டார். அழுகையினால் அவர் உடம்பு குலுங்கத் துவங்கியது. அமண்குடி துர்க்கையை நோக்கி மனதுக்குள் கைகூப்பினார்.

“தாயே மஹா துர்கே. சிம்மவாஹிணி. உன்னைக் குறித்து தவமிருந்து உன் அருளினால் பெற்ற பிள்ளை எனக்கு நல்லபெயர் வாங்கிக் கொடுத்திருக்கிறான். அவன் சீரும் சிறப்பு மாக வாழ உன் பாதங்களை பற்றிக் கொள்கிறேன். தாயே, உன் பெயர் சொல்லி, உன்முன்னே ஆயிரம் பேருக்கு அன்னதான மிடுகிறேன் தாயே, அவனை ஆசீர்வாதம் செய். உனக்கு என் நன்றிகளை வெவ்வேறு விதமாய் தெரிவிக்கிறேன் என்று கை கூப்பினார். வேண்டுகிறபொழுதே உணர்ச்சி தாங்காமல் லேசாய் உடம்பு பதறியது. மன்னர் அவர் முதுகு தொடுவது தெரிந்தது.

மன்னர் அவரைத் திருப்ப, பிரம்மராயர் தலைகுனிந்த படியே இருந்தார்.

“என்ன இது, சேனாபதி பிரம்மராயர் மாவீரன் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அருண்மொழிப்பட்டனின் தந்தை இவ்வளவு கோழையாக இருக்கிறாரே… ஏன் இப்படி? இதற்குத்தான் தந்தைப் பாசம் என்று பெயரா…?”

“எனக்குப் புரிகிறது பிரம்மராயரே, மாமன்னர் நான் வேறு, இராஜேந்திரனின் தகப்பன் இராஜராஜனாக இருக்கிற போது நான் வேறு. இராஜேந்திரனைப் பற்றி நான் எவ்வளவு பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியும். அவ்விதமே, எனது நண்பரும், சேனாதிபதியுமான நீங்கள், உங்கள் மகனைப் பற்றி பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டும், என்பதற்காகத் தான் இத்தனைபேருக்கு நடுவே, ரகசியமாக எனக்கு வந்த ஓலையை வாசித்தேன். நல்ல குழந்தைகள் பெறுவது என்பது மிகப்பெரிய கொடுப்பினை, பாக்கியம். இது இறையருள், குருவருள்.

பிரம்மராயரே! என் மகன் வேண்டிக்கொண்டபடி என் மகனின் தந்தையாகிய இந்த இராஜராஜன் ஒரு தந்தையிடம் கையேந்தி, அவர் மகனைத் தரும்படி கேட்டுக்கொள்கிறான்.

தருவீரா அருண்மொழிப்பட்டனை என் மகனுக்கு துணையாக அனுப்புவீரா?

இராஜேந்திரன் எவரையும் புகழக்கூடியவன் அல்ல. அவன் கர்வமிக்கவன். சற்று முன்கோபி. மனமார அவன் இத்தனை தூரம் பாராட்டியிருக்கிறான் என்றால் அருண் மொழிப்பட்டன் இந்த பாராட்டையெல்லாம் விட மிக உயர்ந்தவனாய் இருந்திருக்க வேண்டும். எனவே, அப்படிப்பட்ட ஒரு இளைஞன் என் மகனுக்குத் துணையாக இருப்பதையே நானும் விரும்புகின்றேன்.

பிரம்மராயரே! அருண்மொழிப்பட்டன் வந்ததும், எனக்குச் சொல்லி அனுப்புங்கள். சந்திக்க ஆவலாக இருக்கிறேன். அவனுக்கு சோழ தேசத்தில் இளவரசருக்கான, இளவரசரின் தனிப்படைக்கான சேனாதிபதி நியமனம் காத்திருக்கிறது. உங்கள் மகனை சோழதேசத்துக்கு தத்தம் செய்யுங்கள்'' என்று மன்னர் பிரம்மராயரைப் பார்த்து கைகூப்பினார்.

"மாமன்னரே! நான் தின்ற சோறு உங்களுடையது எனில், இந்த சோழ மண்ணினுடையது எனில், இந்த மண்ணின் விளைவால், இந்த சோற்றின் விளைவால் எனக்குப் பிறந்த மகனும் உங்களுடையவன். இந்த மண்ணுக்குச் சொந்தக்காரன். அவனை உங்களுக்காக உபயோகப்படுத்த என்னிடம் நீங்கள் அனுமதி வாங்க வேண்டிய அவசியமே இல்லை. இந்த சோழதேசத்தின் ஒவ்வொரு குடிமக்கள் மீதும் உங்களுக்கு உரிமை இருக்கிறது. என் மகன் உங்கள் சொத்து... அதற்குப் பிறகு உங்கள் மகனின் சொத்து. எனவே என்னுடைய அனுமதியை கேட்கவேண்டிய அவசியமே உங்களுக்கு இல்லை. இருப்பினும் தந்தை என்ற முறையில் என் மூத்த மகன் அருண்மொழி பட்டனை உங்கள் குடும்பத்திற்காக நான் தத்தம் தந்தேன். தந்தேன். தந்தேன்'' என்று வலக்கையை உயர்த்தி உரக்க மூன்று முறை சொன்னார்.

மந்திரி சபைக்கூட்டம் எழுந்து நின்று ஆரவாரித்தது. "சேனாபதி கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் வாழ்க" என்று வாழ்த்துக் கூறியது. மாமன்னரின் மெய்க் கீர்த்தியை சகலரும் ஒட்டுமொத்தமாய் உரக்கச் சொன்னார்கள்.

அடுத்த மூன்று மாதமும் அருண்மொழிப்பட்டன் அப்பாவோடு இருந்ததை விட மாமன்னர் இராஜராஜனோடு

இருந்த நேரங்கள் தான் அதிகம். தன்னோடு அருண்மொழியை பல இடங்களுக்கு அழைத்துப் போன மன்னர், அவனை 'கருவூர்த் தேவரோடு போய் இரு' என்று ஆணையிட்டார். அருண்மொழியைத் தனியே அழைத்துப்போய் அவருக்கும் கருவூர்த்தேவருக்கும் இருக்கும் தொடர்புகளை விவரித்துக் கூறினார்.

மன்னரின் கட்டளையை ஏற்று, கருவூர்த்தேவர் குடியிருக்கின்ற உடையாளூர் நோக்கி போன மாதமே அருண் மொழிப்பட்டன் பயணப்பட்டு விட்டான். இளவரசரின் சேனாதிபதி என்று அவனுக்கு சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, எந்த பதவிப்பிரமாணமும் நடந்துவிடவில்லை. அதுபற்றி அவன் கேட்கவுமில்லை அவன் கைசெலவுக்கு ஒரு பை பொற்காசுகள் கொடுத்து கட்டித் தழுவி மன்னர் அனுப்பியது தவிர வேறு எந்தப் பரிசும் தந்துவிடவில்லை. அந்தக் குழந்தைக்கு ஏதேனும் நிலபுலன்களை தர வேண்டாமா என்று மாதரசி பஞ்சவன்மா தேவி மன்னருக்கு நினைவூட்ட, 'மொத்த சோழ மண்டலமே அவனிடம் நிர்வகிக்கப் கொடுக்கப் போகிறேன். கையகல நிலம் கொடுத்து என்ன ஆகப்போகிறது... இவையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போது எந்த அவசரமும் இல்லை' என்று சொன்னார்.

மன்னர் மனதில் அருண்மொழிப்பட்டனைப் பற்றிய பெரிய நம்பிக்கைகள் இருப்பதை பிரம்மராயர் புரிந்து கொண்டார். இன்றைக்கு உடையாளூரிலிருக்கும் கருவூர்த் தேவரை நோக்கி அவசரமாக போகும்படி நேரிட்டதால் மகனைப்பற்றிய சிந்தனைகளும் பிரம்மராயருக்கு அதிகமாகி விட்டது. மகனையும் பார்க்க முடியும் என்கிற ஒரு விஷயம் உள்ளுக்குள்ளே சந்தோஷத்தைக் கொடுத்தது.

உடையாளூரிலிருந்து அவனையும் அழைத்துக்கொண்டு திருநாறையூர் என்கிற நாச்சியார் கோவிலுக்குப் போய் ஸ்ரீனுவாசப் பெருமாளை வணங்கி விட்டு அங்கிருந்து அமண்குடிக்குப் போய் துர்க்கைக்கு ஒரு அபிஷேகம் செய்துவிட்டு பிறகு தஞ்சை திரும்பலாம் என்ற எண்ணம் வந்தது.

இரவு முழுவதும் தூக்கமின்மையால் பசியும், களைப்பும் வெயில் ஏற அதிகரித்தன. திருக்கபித்தலம் நெருங்கியபோது வயல்பக்கம் மறைந்து போகாமல் ராஜபாட்டையின் வழியே

ஊருக்குள் நுழைந்தார். 'தான் வந்திருப்பதைச் சொல்' என்று அருகே வந்த ஆதிகேசவனை முன்னே அனுப்பினார்.

ஆதிகேசவன் குதிரையைத் துரத்திக் கொண்டு முன்னே போய் பிரம்மராயரின் வருகையைச் சொல்ல, ஊரில் அதிகாரிகளும், வேளாளர்களும், அந்தணர்களும் ஒன்று கூடினார்கள். வரவேற்றார்கள். ஊரிலுள்ள சிறிய படை வரிசையாக நின்று வாளுயர்த்தி அவரை வரவேற்றது.

பிரம்மராயர் கபித்தலத்தில் இறங்கி காவிரியில் குளித்தார்.

ஆதிகேசவன் அதற்குள் அவருக்கு பிடித்த உணவைத் தயார் செய்யச் சொல்லி உத்தரவிட்டிருந்தான். ஒரு வைணவர் வீட்டில் உணவெடுத்துக் கொண்டதும், ஆதிகேசவன் உணவுக்கான காசை அவரிடம் தட்சணையாக மரியாதையுடன் சமர்ப்பித்தான். அவர் மறுத்த போது, 'அது மரபல்ல, வாங்கிக்கொள்வதே மரியாதை' என்று வற்புறுத்தினான். அவர்கள் வாங்கிக் கொண்டு ஆசீர்வதித்தார்கள். தங்கள் வீட்டுக்குழந்தைகளை அவருக்கு விசிறச் சொன்னார்கள்.

தெற்குப்பார்த்த வாசலுள்ள வீடு அது. காற்று குபு, குபுவென்று வரும். வழியில் மரக்கட்டில் போட்டு அதில் மெல்லியதுணி விரித்து தலைக்கு மரப்பலகையும் அதற்குமேல் துணிகட்டிய கோரைப்பாயும் போட்டு படுக்கக் கொடுத்தார்கள். தன்னுடைய பருத்த உருவத்தைச் சாய்த்ததுமே பிரம்மராயர் உறங்கிப் போனார். ஆதிகேசவன் அவருக்கு அருகே குத்திட்டு உட்கார்ந்துகொண்டார். கண்மூடித் தூங்கினார்.

நான்கு நாழிகை அயர்ந்து தூங்கியதும் எழுந்து மேலுக்கு நீர் இறைத்துக் கொண்டு, வாய்கொப்புளித்து, சூடான பசும்பால் சாப்பிட்டு விடைபெற்றுக் கொண்டு, கபித்தலப் பெருமான கோயிலுக்குப் போய், புஜங்காசனத்தில் கிடத்திருக்கும் பெருமாளின் தாள் பற்றி வணங்கி கோயிலின் வசதிகள் பற்றி விசாரித்துவிட்டு, குடந்தைக்குப் போகிறேன்' என்று சொல்லி, மறுபடியும் குதிரையேறி அவரும் ஆதிகேசவனும் வேகமாகப் பயணப்பட்டார்கள்.

கபித்தலப்பெருமாளை வணங்குகிற போதே நாச்சியார் கோவிலுக்குப் போக வேண்டும் என்று எண்ணம் அதிகமாகி விட்டது. வைணவத்தின் அதிரூப சுந்தரனான சீனிவாசனையும்,

நம்பிக்கை நாச்சியார் என்கிற மஞ்சுள வல்லித் தாயாரையும் கண் குளிர்ப்பார்க்க வேண்டும் என்ற ஆசை வந்துவிட்டது.

"ஆதிகேசவா..." பிரம்மராயர் மெல்ல அழைத்தார்.

ஆதிகேசவன் குதிரையை அருகில் கொண்டு வந்தான். 'என்ன?' என்பது போல பார்த்தான்.

"நாச்சியார் கோவிலுக்கு இரவுக்குள் போய்விடலாமா?" என்று கேட்டார்.

ஆதிகேசவன் விழிகள் சற்றே விரிந்தன. போய்விடலாம் என்று பதில் சொன்னான்.

"உனக்கு நாச்சியார்கோவில் சுவாமி தரிசனம் செய்ய வேண்டும் என்ற ஆசை இருக்கிறதா?"

"ஆஹா செய்யலாமே சீனிவாசனை தரிசனம் செய்து வெகுநாள் ஆயிற்று. நான்கு வருடம் முன்பு என் மைத்துனிக்கு திருமணம் நடந்தது. அவளைப் புக்ககத்தில் கொண்டு போய் விடுவதற்கு நானும் போயிருந்தேன். அவளுடைய புக்ககம் உப்பிலியப்பன் கோவில். உப்பிலியப்பன் கோவிலிலிருந்து நானும், என் மனைவியும் மட்டும் நாச்சியார் கோவிலுக்குப் போய் நமஸ்காரம் செய்து விட்டு அரைநாள் அங்கு தங்கி விட்டு வந்தோம். மறுபடியும் சீனிவாசர் தரிசனம் என்றால் கசக்கவா செய்யும்" ஆதிகேசவன் ஆனந்தமாய்ச் சொன்னான்.

"நாச்சியார் கோவிலில் உனக்குப்பிடித்த விஷயங்கள் என்ன?"

"எனக்கு மட்டுமா... எல்லா வைஷ்ணவர்களுக்கும் நாச்சியார்கோவில் என்றால் ஒரு தனி விருப்பம்தான். வைணவர்களின் மிக முக்கியமான சடங்கான பஞ்ச சமஸ்காரத்தை அங்கு சீனிவாசனே செய்து வைப்பதாக ஒரு வரலாறு உண்டு. மஹாலட்சுமி மஞ்சுளவல்லி என்ற நாமத்தில் அங்கு பிறக்க, அங்கே மகாவிஷ்ணு வந்து லட்சுமிதேவியை திருமணம் செய்ததாகவும் தலவரலாறு பேசும். இதையெல்லாம் விட, திருமங்கையாழ்வாருக்கு இது மிகவும் பிடித்த தலம். நூறுக்கும் மேற்பட்ட பாசுரங்களால் அவர் சீனிவாசனைக் கொண்டாடியிருக்கிறார். சங்கு சக்கரதாரியாக நிற்கின்ற சீனிவாசன் ஒரு அடி முன்னே வந்து பக்தர்களை ஆட்கொள்கின்ற ஒரு அவசர நிலையில் தோற்றமளிப்பதாகவும் இந்தத் தலத்தைப் புகழ்வார்கள். இதையும் தவிர, நாச்சியார்

கோவிலில் வாழ்ந்த ஒரு வைணவ பிரம்மச்சாரிக்கு நூற்றியெட்டு வைஷ்ணவ தலங்களைக் காண வேண்டும் என்ற ஆவல் இருந்தது. ஆனால் இயலவில்லை. இதற்காக தினமும் கண்ணீர் மல்க சீனிவாசனைப் பிரார்த்திக்க சீனிவாசன் கனவில் வந்து நூற்றியெட்டு வைணவ தேசத்து பெருமாள்களின் விக்கிரங்களை கொடுத்ததாகவும், அதை நெடுங்காலம் தனது இல்லத்தில் வைத்து அந்தப் பிரம்மச்சாரி பூஜித்ததாகவும், அவருக்குப்பிறகு இந்த விக்கிரகங்கள் திருநாறையூர் என்கிற இந்த நாச்சியார் கோயிலில் வைக்கப்பட்டு விட்டதாகவும் இன்னொரு வரலாறு சொல்கிறார்கள். இம்மாதிரி பல்வேறு சிறப்புகள் நாச்சியார் கோவிலுக்கு உண்டு. அங்கு போய் சுவாமி தரிசனம் செய்ய எந்த வைஷ்ணவனுக்கும் உற்சாகமாகத்தான் இருக்கும்,'' ஆதிகேசவன் நிதானமாகப் போனான்.

"ஆதிகேவசவா! வைஷ்ணவனான எனக்கும் நாச்சியார் கோவில் பிடிக்கும். ஆனால் நீ சொன்ன காரணங்கள் மட்டுமல்ல. நாச்சியார்கோவில் பற்றி இன்னுமொரு வரலாறு இருக்கிறது. நான் சொல்வது சரித்திரம். சங்ககாலச் சரித்திரம். கோச்செங்கிணன் என்று ஒரு சோழன் இருந்தான். அவனை உனக்குத் தெரியுமல்லவா?"

"ஆமாம். கேள்விப்பட்டிருக்கிறேன்," ஆதிகேசவன் பதில் சொன்னான்.

"அவனைப்பற்றிய ஒரு கதை. இந்த ஊர் சம்பந்தப் பட்டதாய் உண்டு. மறுபடியும் சொல்கிறேன். இது, தல வரலாறு அல்ல, சரித்திரம். உண்மை நிகழ்ச்சி.

பிரம்மராயர் தனது ஒற்றர்படையின் முக்கியமான ஆளான ஆதிகேசவனிடம் மனம்விட்டு கோச்செங்கணான், கதையைப் பற்றி பேசத் துவங்கினார்.

## 26

கதிரவனின் பொன்னிற கிரணங்கள் ஆற்றங்கரையில் வரிசையாக முளைத்திருக்கும் மரங்களை தகதகக்க வைத்துக் கொண்டிருந்தன. சற்று மேட்டில் ஏறி பின்பு குதிரையை மெல்லிய ஓட்டமாக சரிவில் இறக்கும்போது காவிரியினுடைய

நீர்ப்பெருக்கும், மரங்களின் வரிசையும், தொலைதூரம் படர்ந்த பச்சை வயலும் கண்ணுக்கு மிக ரம்மியமாக இருந்தன. கதிரவனின் ஒளிபட்டு காவிரி உருக்கிய வெள்ளி போல் மின்னிக் கொண்டிருந்தாள். அந்த அலைகளிலிருந்து ஒரு முழ உயரத்திற்கு வெளிச்சம் தெரிந்து, இமைக்க ஒட்டாமல் அந்த ஜாலத்தையே பார்க்க வைத்தது.

பகலில் ஓய்வெடுத்துக் கொண்ட உழவர் பெருமக்கள் அடுத்த கட்ட பணியை வயல்களில் துவங்கியிருந்தார்கள். ஆதிகேசவன், பிரம்மராயரின் குதிரைக்கு அருகே தன் குதிரையை ஓட்டியபடி அவரையே பார்த்தபடி தொடர்ந்து வந்தான். போரின் போதும் நீண்ட தூர பயணத்தின்போதும் அதிகாரி, வேலையாள் என்ற பாகுபாடெல்லாம் இல்லை.

அதிலும் குறிப்பாக, மும்முடிச் சோழ பிரம்மராயரான கிருஷ்ணன்ராமன் அவ்விதம் பார்ப்பதில்லை. அவருக்கு ஒருவரைப் பிடித்து விட்டதென்றால் தோளில் கை போட்டுக் கொண்டு பரம சுகமாய் உரையாடுவார். பிடிக்கவில்லையென்றால் திரும்பிக் கூட பார்க்க மாட்டார். உண்மை, சுறுசுறுப்பான வேலை, தெளிவு போன்ற குணங்கள் உடையவரை அவர் மிகவும் நேசிப்பார். இழுத்து வைத்துக் கொண்டாடுவார். உண்மை சிறிது பிசகினாலும் ஏதோ ஒரு இடத்தில் பொய் சொல்ல முயற்சித்தாலும் அவர், அந்த மனிதரை அதற்குப் பிறகு அருகே சேர்ப்பதில்லை.

அவருக்குக் கீழ் வேலை செய்யும் ஒற்றர் படை வீரர்களுக்கு, சோழ தேசத்து மற்ற படை வீரர்களுக்கு இல்லாத பல சலுகைகள் உண்டு. அப்படி சலுகைகள் தரப்பட்டிருக்கின்றன என்பது அவருக்கும் மன்னனுக்கும் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

அதே நேரம் ஒற்றர்படையினர் ஆடம்பரமாக இருப்பதை அவர் விரும்புவதில்லை.

"உனக்கு கொடுக்கப்பட்ட சன்மானங்கள் உன் வீட்டின் சுகத்திற்காக, உன் வீடு உன்னை மரியாதையுடன் போற்றுவதற்காக, நீ பட்டும், முத்தும், பவளமுமாய் வெளியே வந்தால், உன் மீது பார்வை அதிகம் போகும். ஒற்றர் படையில் இருப்பவன் பிரபலமாய் இருப்பது கூடாது. கும்பலோடு கும்பலாய் மிக மிக சாதாரணமாய் இருப்பதுதான் ஒற்றர்

படையில் உள்ளவனுக்கு அழகு. தன்னை அலங்கரித்துக் கொள்கிறவனுக்கு என்னிடத்தில் வேலை இல்லை" என்று இறுக்கமாகப் பேசுவார். ஒழுக்கம் பற்றி அதிகம் வலியுறுத்துவார்.

"பெண் சுகம் என்பது மிக முக்கியம். அது ஒரு தனி போஷாக்கு. நான் மறுக்கவில்லை. ஆனால், போகிற இடங்களி லெல்லாம் பாய் விரித்துப் படுக்காதே. வாய் வைத்து உண்ணாதே. மனைவியைத் தவிர வேறு யாரேனும் ஒரு தேவரடியாரோடு தொடர்பு வைத்துக்கொள். ஆட்டம் போடு. ஆனால் எல்லாப் பக்கமும் மனசை அலைய விடுகிறவன் இந்த ஒற்றன் வேலைக்கு லாயக்கில்லாதவன். அப்படி எவரேனும் ஒரு தேவரடியாரோடு நீ சிநேகமாக இருந்தால், அந்த சிநேகம் உன்னைப் பற்றிய ரகசியக் குறிப்புகளில் பதிவு செய்யப்பட வேண்டும். அவளும் நமது கண்காணிப்புக்கு உட்பட்டவளா வாள் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்."

கிட்டத்தட்ட ஆயிரம் பேருடைய பிரம்மராயரின் ஒற்றர்படையிலுள்ள அத்தனை வீரர்கள் பெயரும், குடும்ப சரித்திரமும் பிரம்மராயருக்குத் தெரியும். இந்த ஒரு குணமே ஒற்றர்களை, அவர் மீது மிகுந்த மரியாதையுடன் பார்க்க வைத்தது.

ஆதிகேசவனுக்கும் அந்த மரியாதை உண்டு. அதைவிட பெரிய மரியாதை மும்முடிச்சோழ பிரம்மராயரின் வைணவப் பற்று, அதை விட பெரிய மரியாதை அதை எல்லா நேரமும் பறையடித்துக் கொள்ளாமல் எப்போதேனும் ஒரு முறை தகுந்த ஆட்களிடம் அது பற்றி மனம் நெகிழ உரையாடுகின்ற விதம். அது மட்டுமல்லாது, மற்ற வைணவர்களைப் போல், சைவர்களிடம் அலட்சியமாகவோ, அகம்பாவத்தோடோ நடந்து கொள்ளாமல் அவர்கள் கொடுக்கின்ற திருநீறை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு தலைஉச்சியில் தடவிக் கொள்கிற குணம் அவரிடம் இருந்தது.

சைவர்கள் மிகுந்த சோழ சாம்ராஜ்யத்தில் மன்னரும் சைவராக இருக்க மகா மந்திரியும் சேனாதிபதியுமான கிருஷ்ணன் ராமன் வைணவராக இருந்தபடியால், வைஷ்ணவ விண்ணகரங்கள், அவைகளுக்கு உண்டான பங்கைப் பெற்று ஆறுகால பூஜையோடும், நல்ல வேலையாட்களோடும் நிவத்தங்கள் விட்ட நிலங்களோடும், செழிப்பாக இருந்தன.

அப்படிப்பட்ட சேனாதிபதியை, ஊர் மக்கள் சுற்றியிருக்கும் போது விலகியிருந்த ஆதிகேசவன் இப்பொழுது குதிரையை மிக நெருக்கமாகச் செலுத்தி, "ஏதோ கதை சொல்லுகிறேன் என்று சொன்னீரே..." என்று கிட்டத்தட்ட ஏகவசனத்தில் அவர் மௌனத்தைக் கலைத்தான்.

"ஆமாம். கோச்செங்கணான் கதை. சட்டென்று கதையைத் தாண்டி மனம் வேறெங்கோ போய்விட்டது. இறையனுபவம் என்பது எல்லோருக்குமா ஏற்பட்டுவிடுகிறது. அறிவோ, அதிகாரமோ, பணபலமோ, படைபலமோ இருந்தால் இறை அனுபவம் கிடைத்து விடுமா? காசு கொடுத்து எதை வேண்டுமானாலும் வாங்கலாம். இறை அனுபவத்தை எப்படி வாங்குவது?

கோச்செங்கணானுக்கு ஒரு இறை அனுபவம் ஏற்பட்டது. ஆதிகேசவா, அவன் சைவன். வைணவத்தின் மீது அதிக பிடிப்பு இல்லாதவன், தன்னுடைய கோயில் என்று சிவன் இருக்கின்ற ஆலயத்தைக் கொண்டாடி, விண்ணகரத்திற்கு அழுது அழுது கேட்டால் சிறிது கொடுக்கிறவன்.

சோழ தேசத்தை இன்றிலிருந்து அறுநூறு வருடங்களுக்கு முன்பு ஆட்சி செய்து கொண்டிருந்த கோச்செங்கணான் வடக்கேயிருந்து வந்த எதிரிகளால் தாக்கப்பட்டு தேசத்தை விட்டு துரத்தப்பட்டான். காடுகளில் ஒளிந்து வாழ்ந்த கோச்செங்கணான் மணிமுத்தாறு நதிக்கரையில் முனிவர்கள் சிலரைக் கண்டு வணங்கினான். அவன் மன்னனென்பதையும், அவன் நிர்கதியையும் புரிந்து கொண்ட முனிவர்கள் 'திரு'நரையூர் என்கிற இந்த நாச்சியார் கோவில் உப்பிலியப்பனுக்கு நேர்ந்து கொண்டு உபவாசம் இருந்தால் உடனே வெற்றி கிட்டும்' என்று சொன்னார்கள்.

அதுவரை தீவிர சைவனாக இருந்த சோழ மன்னன் தன் நிர்கதியை உணர்ந்து, ஸ்ரீனுவாசனை மனதார துதித்து, 'எனக்கு வெற்றி கிட்டினால் உனக்கு வேண்டியது செய்கிறேன்' என்று சங்கல்பம் செய்து கொண்டு உபவாசம் இருந்தான்.

அடுத்த சில நாட்களில் மணிமுத்தாறு நதியில் மூழ்கி எழும்போது, கைகளுக்குள் ஒரு வாள் சிக்கியது. அந்த வாளைத் தொடும்போதே ஒரு வீர உணர்வு உள்ளுக்குள் படர்ந்தது. இந்த வாள் தன்னை மறுபடியும் உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரும் என்று தோன்றியது. அவன் அந்த வாளை இடுப்பில் தரித்து,

மறுபடியும் உப்பிலியப்பனை வணங்கி, சிதறிக்கிடந்த தனது படைகளை ஒன்று திரட்டி, நல்ல நாள் பார்த்து, தன் தேசத்தை அடைந்து, அங்குள்ள மக்களுக்கு ரகசிய செய்தி கொடுத்து, எதிரிகள் அறியா வண்ணம் மறுபடியும் காடுகளுக்குப் போய் படைகளுக்கு நல்ல பயிற்சி கொடுத்து எதிரியைத் தாக்கி சோழதேசத்தை கைப்பற்றிக் கொண்டு, பிறகு ஓடஓட எதிரியை அவருடைய எல்லையைத் தாண்டி பலகாதம் துரத்தினான். சோழ தேசம் வெகு சீக்கிரம் விடுதலை பெற்றது.

நன்றி மறவாத கோச்செங்கணான், ஸ்ரீனுவாஸன் கோயிலில் தன் பெயரில் ஒரு திருமண மண்டபம் அமைத்து விமானத்திற்கு தங்கம் வேய்ந்து, கோவிலுக்கு நல்ல விளை நிலங்கள் அளித்து, மூலவருக்கு ஆபரணங்கள் பூட்டி மகிழ்ந்து தன் நன்றியை தெரிவித்தான்.

அந்த காலத்தில் தாம் செய்த நன்கொடைகளை கல்வெட்டில் எழுதி வைக்கும் பழக்கமில்லை. ஆனால், அப்போது வாழ்ந்த பெரியவர்கள், அரசர்கள் செய்த் நல்லவற்றை தங்கள் பாடலிலே எழுதி வைத்தார்கள்.

"செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே தெய்வவாள் வளங் கொண்ட சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே" என்று திருமங்கையாழ்வாரால் அந்த சோழ மன்னன் பாடப்பட்டான். அவன் அறுபத்து மூன்று நாயன்மார்களில் சோழ நாயன்மாராக கருதப்பட்டான். இன்று நேற்றல்ல. வெகுகாலம் முன்பு சைவ சமய மன்னனை நம்பெருமாள் கவர்ந்து கை கூப்பித் தொழ வைத்திருக்கிறார். நமது மன்னரையும் நம்பெருமாள் கவரலாகாதா ஆதிகேசவா" ஆதிகேசவன் பேசாது அவரையே பார்த்தபடி வந்தான்.

"தஞ்சையில் பரதகண்டமே பார்த்திராத மிகப்பெரிய கோயில் சிவனுக்காக நமது மன்னர் எழுப்பப் போகிறார். பல ஆயிரக்கணக்கான கல்தச்சர்களை தஞ்சைக்கு வரவழைத்து மிகப்பெரிய கற்றளி அமைக்கப் போகிறார். அந்த வேலையை அவர் மனதுக்குள் துவங்கிவிட்டது எனக்குத் தெரிகிறது. அதற்காகவே அவர் இடைவிடாது சிந்தித்துக் கொண் டிருப்பதை நான் உணர்கிறேன். அதனுடைய முதற்கட்டமாய் தேவரடியார்கள் காஞ்சிபுரத்திலிருந்து வரைபடங்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். இனி அடுத்த சில வருடங்கள் மாமன்னர்

இராஜராஜர் கட்டுகின்ற கோயிலுடைய நினைப்பாகவே நம் வாழ்க்கை நகர்ந்து வந்துவிடும்.

என்ன இருந்தாலும் நான் வைணவனல்லவா ஆதிகேசவா. இப்படி ஒரு கோயில் நம் பெருமாளுக்கும் எழுப்ப எவராவது முன்வரவேண்டுமே என்று தோன்றுகிறது. அப்படி ஒரு ஆசை வருகிறது. உயரமும், அகலமுமான கோயில்கூட தேவையில்லை. இருக்கின்ற விண்ணகரங்களை சுத்தப்படுத்தி, உள்ளுக்குள் இருக்கின்ற சிலைகளைச் செப்பனிட்டு எல்லாப் பகுதிகளிலும் பிரபந்தங்கள் பாட நிவந்தங்கள் விட்டு, வைணவத்தை ஆதரிக்கின்ற திரிதண்டி சந்நியாசிகளுக்கு உணவிட்டு உபசரிக்க வேண்டும். இதை அரசாங்கத்தில் எவரேனும் செய்தால்கூட போதும். திரும்ப திரும்ப நானே விண்ணகரத்திற்கு செய்து கொண்டிருப்பது எவருக்கேனும் கசப்பை ஏற்படுத்துமோ என்ற அச்சம் எனக்குள் இருக்கிறது. ஆகவேதான், வைஷ்ணவனான நான் இதனைச் செய்யாமல், சைவம் சார்ந்த அவராவது விண்ணகரங்களுக்கு நிவந்தங்கள் விட்டால், உதவி செய்தால், அது பொருத்தமுடையதாக இருக்கும். வெகு நிச்சயம் சமயச் சண்டைகளைச் சோழ தேசத்தில் குறைக்கும்" பிரம்மராயர் கூறினார்.

"நன்றாகச் சொன்னீர்கள், உங்களுடைய ஏக்கம் எனக்கு மிகவும் புரிகிறது. உயரமான கோயில் வேண்டாம். இருக்கின்ற கோயிலை பராமரித்தால் போதும் என்று சொன்னீர்கள் பாரும். இது ஆயிரத்தில் ஒரு வார்த்தை. மக்களில் சைவர்கள் அதிகம் இருக்க, வைணவர்களால் கோயிலை பராமரிக்க முடியவில்லை என்பது ஒரு முக்கியமான விஷயம். சிவனடியார்கள் செல்வச் செழிப்பில் இருக்க, வைஷ்ணவ திரிதண்டி சந்நியாசிகள் சற்று இளைப்பாகத்தான் இருக்கிறார்கள். இதை நாம் சுட்டிக் காட்டினால் நம்மை அவர்கள் எதிரியாக நினைக்க வாய்ப்பு இருக்கிறது. சரி, அரசர் விண்ணகரத்திற்கு எதுவும் செய்த தில்லையா?" ஆதிகேசவன் கேட்டான்.

"நிறைய செய்திருக்கிறார். இன்னமும் செய்வார்" பிரம்மராயர் பதில் சொன்னார்.

"ஆனால் நீங்கள் என்ன செய்தீர்கள் சைவத்திற்கு என்று உடனடியாக அவர்கள் உங்களைக் கேட்கக்கூடும்" ஆதிகேசவன் சொல்ல, பிரம்மராயர் சடக்கென்று திரும்பினார். பிரம்மராயரின் குதிரை இடதும், வலதும் நகர்ந்து ஆதிகேசவனின் குதிரையை இடித்தது.

"ஓ... அப்படி ஒரு கேள்வி என்மீது வரும் என்று நினைக்கிறாயா?" பிரம்மராயர் ஆதிகேசவனிடம் கேட்டார்.

"நிச்சயம் வரும். நீங்கள் இது குறித்து கேள்வி எழுப்பினால். பதில் கேள்வி சைவர்கள் எழுப்ப மறுப்பார்களா?" ஆதிகேசவன் பதிலுரைத்தான்.

"ஆமாம். எழுப்புவார்கள்."

"அவர்கள் கேள்வி எழுப்புவதற்கு முன்பு நாமாக ஏதும் செய்துவிட்டால்..."

"எனக்குப் புரியவில்லையே ஆதிகேசவா..."

"நீங்கள் சைவத்திற்கு எதிரி இல்லையே?" ஆதிகேசவன் கேள்வி எழுப்பினான்.

"உண்மைதான். நான் சைவத்திற்கு எதிரி இல்லை. ஆனால் சைவத்திற்கு நான் என்ன செய்திருக்கிறேன். எங்கேனும் சிவன் கோயில் கட்டியிருக்கிறேனா? அல்லது செங்கல் தளியை கற்றளியாக புதுப்பித்திருக்கிறேனா? இல்லையே, நான் மட்டும். மன்னன் விண்ணகரங்களைப் புதுப்பிக்க வேண்டும் என்று எண்ணுகிறேனே, நல்லது ஆதிகேசவா, சரியான சமயத்தில் ஞாபகப்படுத்தினாய். என்னுடைய ஊரான அமண்குடியில் அரசரின் பெயரால் அரசனுக்குப் பிடித்த சிவனுக்கென்று ஒரு கோயில் நான் நிச்சயம் எழுப்புவேன். அருகே பாலதிரிபுர சுந்தரியை ஸ்தாபிப்பேன். நான் வைஷ்ணவனாக இருந்தாலும், போருக்குப் போகும்போது என் மனம் துர்க்கையிடம் சரணடைகிறது. போரின் உக்கிரத்தை பார்க்கும்போது எனக்குள் துர்க்கை பற்றிய ஆவேசம் ஏற்படுகிறது. நான் சாக்த வழிபாடு செய்வதில்லையெனினும், சைவ, வைஷ்ணவத்தைத் தாண்டி இந்த சோழ தேசத்தை துர்க்கைதான் காப்பாற்றிக் கொண் டிருக்கிறாள் என்கிற பரபரப்பு ஏற்படுகிறது.

ஆதிகேசவா, சிவன் கோயில் மட்டுமல்லாது அஷ்ட தச புஜ துர்க்கைக்கும் ஒரு சந்நிதி ஏற்படுத்தி, என் ஊர்மக்கள் வழிபடும்படி நான் செய்வேன். இதோ என் வலப்பக்கம் பொங்கிப் போய்க் கொண்டிருக்கிற காவேரித்தாய் மீது ஆணை. இதோ என் குதிரை நடந்து கொண்டிருக்கிற சோழ மண்ணின் மீது ஆணை. இதோ வானத்தைத் தங்க மயமாக்கிக் கொண்டிருக்கிற கதிரவன் மீது ஆணை. நான் சைவத்திற்காக ஏதேனும் நிச்சயம் செய்வேன். இது மட்டுமல்லாது, இன்னும்

பலவும் செய்வேன். நான் இவ்வாறு செய்வதால், இன்னும் நாலு சைவர்கள் விண்ணகரத்திற்கு செய்வார்கள் அல்லவா, நல்லவேளை பேச்சோடு பேச்சாய் என் கண்களைத் திறந்து விட்டாய். நான் என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரிந்து விட்டது. வா, விரைவாக போகலாம்." பிரம்மராயர் குதிரையை வேகமாக விரட்டினார்.

## 27

திருவக்கரை வக்ரகாளி, சிவந்த நிறத்தில் இடுப்புப் புடவை மட்டுமே தரித்து அமர்ந்த கோலத்தில் இருந்தாள். கழுத்தில் முழங்கை தடிமனுக்குப் பெரிய சாமந்தி மாலை போடப்பட்டிருந்தது.

இடக்காலைத் தரையில் ஊன்றி, வலக்காலைக் குத்திட்டு வைத்து, எட்டுக் கைகளோடு ஒரு மெல்லிய சிரிப்போடு, கண்ணோரத்தில் கொஞ்சம் கோபத்தோடு அமர்ந்திருந்தாள். கழுத்து ஒட்டிய ஒரு அட்டிகையைத் தவிர, கால் கொலுசு தவிர மற்ற ஆபரணங்களெல்லாம் கழற்றப்பட்டு மெருகேற்ற எடுத்துப் போயிருந்தார்கள்.

வெளியே வெயில் கொளுத்திக் கொண்டிருந்தது. வானம் பளீரென்று நீலமாக இருந்தது. வெளிச்சம் தரையைத் தாக்கி, முழங்கை உயரத்துக்கு மேலே எகிறி, கண்களைச் சுருக்கிப் பார்க்க வைத்தது. அப்படிக் கண்களைப் பலவீனப்படுத்தி, கருவறை பார்க்கிறபோது இருட்டாக்கியது.

உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவரின் பெரியப்பா கண்டராதித்தரின் மனைவி செம்பியன் மாதேவி மூதாட்டியார். காளியைப் பார்த்துவிட்டுக் கண்களை மூடிக்கொண்டார். பிறகு மெல்ல கண்களைத் திறந்தார் மறுபடியும் காளியைப் பார்த்தார். சாதாரண பெண் போல அவள் உட்கார்ந்திருப்பது பார்க்க சந்தோஷமாக இருந்தது.

செம்பியன் மாதேவியை சந்நிதி விளிம்பில் தனியே உட்கார வைத்து விட்டு, சேடிப்பெண்களும், வேலையாட்களும், மெய்க்காவல் படையினரும் விலகி நின்றார்கள்.

இளங்காலைப் பொழுதினில் கோயிலுக்கு வந்ததும் சிவபூஜை செய்வார். சிவபூஜை முடித்து வெயில் உக்கிரமடையும் போது, காளி எதிரே போய் உட்கார்ந்து கொள்வார். வெயில் உச்சிக்கு வரும்வரை முணுமுணுத்தபடி காளியோடு பேசிக் கொண்டிருப்பார்.

சில சமயம் உரக்கப் பேசுவார். தான் பேசுவது என்னவென்று மற்றவருக்குத் தெரிய வேண்டாதிருக்க, எல்லோரையும் விலகியிருக்கக் கட்டளையிடுவார். அவருடைய மிக அந்தரங்கமான வேலைக்காரியைக் கூட அந்த நேரத்தில் அவர் அண்ட விடுவதில்லை. என்ன பேசுகிறாரென்று தெரிந்து கொள்ள வேண்டும் என்று எவரேனும் காதைத் தீட்டிக் கொண்டு அலைந்து திரிந்தால், அவரைத் தன் படையிலிருந்தே விலக்கி விடுவார்.

“என்னை வேவு பார்ப்பதற்குத் துணிந்தவர்களை என் அருகே நான் வைத்துக்கொள்ள இயலாது. நீ தஞ்சைக்குப் போய்விடலாம் அங்கே போய் இராஜராஜர் படையிலே சேர்ந்து கொள்ளலாம். அல்லது பிரம்மராயர் கிருஷ்ணன் ராமனுடைய வேவுக்காரப் படையிலே நல்ல பதவி வகிக்கலாம். என்னிடம் உனக்கு எந்த வேலையும் இல்லை. விலகிப் போ...” என்று கூலி கொடுத்து அனுப்பிவிடுவார்.

செம்பியன் மாதேவிக்கு மெய்க்காவலாக இருக்கின்ற வீரர்கள், எடுபிடி, ஆட்கள், சமையல் வேலை செய்பவர்கள், கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்கிறவர்கள் அனைவரும் வேறு எந்த வீரர்களோடும் பேசிப் பழகுவதை அவர் விரும்பவில்லை. குடும்பம், குழந்தைகளோடு அங்கேயே இருக்கின்ற தொந்தரவில்லாத வேலையாட்களையே செம்பியன் மாதேவி தன்பக்கம் வைத்துக் கொண்டார்.

மெய்க்காவல் படை வீரனும், சமையல் செய்கிற பெண்ணும் கணவன் மனைவியாக இருப்பார்கள். வெளி வாசலுக்குப் போகின்ற எடுபிடி ஆளும், செம்பியன் மாதேவிக்குக் கால்பிடித்து விடுகின்ற பணிமகளும் ஒட்டி உறவாடி வாழ்வார்கள்.

செம்பியன் மாதேவி அவர்களைக் குடும்பம் குடும்பமாகச் சுவீகரித்து, கிட்டத்தட்ட தன்னைத் தாண்டிப் போகாதவாறு வைத்துக் கொண்டார்.

வருடா வருடம் ஊர் மாற்றி, வெவ்வேறு ஊர்களுக்கு நகர்ந்து, வெவ்வேறு, சிவன் கோயில்களைப் பார்வையிட்டு, செங்கல்லாய் இருக்கின்ற சிவன் கோவில்களைக் கருங்கல் கட்டடங்களாய் மாற்றி, கும்பாபிஷேகம் நடத்தி, அந்த ஊரில் பல பேருக்கு உணவளித்து, அவர்கள் மத்தியில் மிக உயர்வான மதிப்போடு வாழ்ந்து வந்தார்.

சிலகாலம் சோழ மன்னராக இருந்து மேற்கெழுந்தருளிய கண்டராதித்தரின் மனைவியார், இராஜராஜனின் தமையனான ஆதித்த கரிகாலனின் மரணத்திற்குப் பின், கிட்டத்தட்ட பதினாறு ஆண்டுகள் சோழ சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி செய்த மதுராந்தகனாகிய உத்தம சோழனின் தாயார், தற்போது ஆட்சி செய்கின்ற மாமன்னர் இராஜராஜசோழரின் பெரிய பாட்டியார் செம்பின் மாதேவியார் தன் கணவர் கண்டரா தித்தர் பணித்தபடி இடையறாது சிவப்பணிகள் செய்து, சிவ பூஜைகள் செய்து, தேவாரப் பாடல்கள் பெற்ற செங்கற்றளி களைக் கற்றளிகளாக மாற்றியமைத்து, ஹோம யாகங்கள் செய்து, அந்தச் சிறப்புகளினாலும் புகழ்பெற்று, தனியே வைக்கப் பட்ட மாணிக்கக்கல் போலப் பிரகாசித்து வந்தார்.

அவரை, ‘எங்கள் ஊருக்கு வாருங்கள் எங்கள் கோயிலைச் சரி செய்யுங்கள்’ என்று பல ஊர்களிலிருந்து ஆட்கள் வந்து கெஞ்சிக் கேட்டிருந்தார்கள்.

‘எங்கள் ஊர் கோயிலின் புராணக் கதை இது. ஸ்தல வரலாறு இது. கோயிலின் உருவ அமைப்பு இப்படி’ என்று விவரங்கள் சொல்லி, செம்பியன் மாதேவியைப் பரவசப்படுத்தி, அவரைத் தங்கள் ஊருக்கு வரவழைத்து, ஊருக்கு வந்ததும் தனித்த மாளிகை ஒழித்துக் கொடுத்து, பல வசதிகள் ஏற்படுத்திக் கொடுத்து, அவரிடமிருந்து கிடைக்கின்ற பொன்னும், பொருளும் வைத்துக் கொண்டு ஊரின் செழிப்பை வளர்ந்து, கோயிலையும் கனமாகக் கட்டிக் கொண்டார்ககள்.

செம்பின் மாதேவியார் காலடி எடுத்து வைக்கும் ஊரின் சிறப்பு அதிகமாகி விடுகிறது. செல்வச் செழிப்பு மிகுதியாகி விடுகிறது. பணப்புழக்கம் தாராளமாகி விடுகிறது. மறவர் களுடைய ஓலைக் குடிசைகளெல்லாம் ஓட்டு வீடுகளாகி விடுகின்றன. ஓட்டு வீடுகளெல்லாம் தளங்கள் போட்ட மாளிகைகளாகி விடுகின்றன. அரிசியும், பருப்பும், நெய்யும் விளக்குக்கான எண்ணெயும் அரசியாருக்காக வந்து, மக்க ளுக்கும் எளிதில் கிடைக்கின்றன.

ஒவ்வொரு பண்டிகைக்கும் விதம் விதமாய் உணவு தயார் செய்து, ஊர் மக்கள் அனைவரையும் கூட்டி, வயிராறச் சோறு போடுவது செம்பியன் மாதேவியின் வழக்கமாக இருந்தது.

செம்பியன் மாதேவியோடு, நூற்றுக்கும் மேற்பட்ட ஆண்களும் பெண்களும் கொண்ட படையும் ஊரில் வந்து தங்கும். செம்பியன் மாதேவி அழைத்தாரென்று சிற்பிகளும், மரத்தச்சர்களும், ஓவியர்களும் வந்து தங்கியிருப்பார்கள்.

அவர்களுக்காக தினமும் உணவு தயாராகும். அந்த உணவில் ஒரு பகுதி கிராமத்துக் குழந்தைகளுக்குப் போகும். கிராமத்துக் குழந்தைகள் கோயிலில் சாப்பிட்டதால், வீட்டிலுள்ள அரிசி பெரியவர்களுக்குப் போதுமானதாக இருக்கும்.

அது தவிர, இரவு நேரங்களில் புராணக்கதை சொல்லவும், பாட்டுப் பாடவும், கூத்து நடத்தவும் தினமும் செம்பியன் மாதேவி ஏற்பாடு செய்வார். நல்ல விஷயங்களைக் கற்றுக் கொள்ள கிராம மக்களுக்கு இது உதவியாக இருந்தது.

அதேசமயம், செம்பியன் மாதேவி அதிகம் தொந்தரவுகளை விரும்புவதில்லை. தனியே அமைதியாக உட்கார்ந்திருப்பதையே அவர் விரும்புகிறார் என்று சொல்லப்பட்டது. இடையறாது மந்திர ஜபமும், கூர்மையான இறைவழிபாடும் செய்து, சோழ தேசத்தின் செழிப்புக்காக வேண்டிக் கொள்கிறார் என்று சொல்லப்பட்டது.

வெயில் கொளுத்துகின்ற அந்தக் காலை வேளையில் செம்பியன் மாதேவி வக்ரகாளியின் முன்பு உட்கார்ந்து கொண்டார்.

தஞ்சையிலும், பழையாறையிலும், குடந்தையிலும் நல்ல மழையாம். காவிரி ஒரு ஆள் ஆழத்திற்குச் சுழித்துக் கொண்டு ஓடுகிறதாம். எல்லா நீர் நிலைகளிலும் ஜலம் தளும்புகிறதாம். கால்வாய்களில் மதகுகளைக் கவனமாகத் திறந்து விட்டு, நதியின் வேகத்தைக் குறைந்திருக்கிறார்களாம். சிலுசிலுவென்று குளுமையாக இருக்கிறதாம். அந்தப் பக்கமிருந்து மேகங்கள் தப்பி, திருவக்கரை மீது நகர்ந்தாலும் மழை பொழியவில்லை. இரவிலும் வெக்கை இருந்தது.

செம்பியன் மாதேவி, கையிலிருந்த ஜபமாலையை மெல்ல உருட்டினார்.

"உனக்கு என்ன ஓரவஞ்சனையடி..." வக்ரகாளியை நோக்கி மெல்லச் சிரித்தார்.

"இங்கிருந்து ஒரு நாள் பயணத்திலிருக்கின்ற குடந்தையில் நல்ல மழை. இங்கு சிறு தூறல் கூட இல்லை. நானிருக்கிற இடத்தைக் குளுமையாக்கமாட்டாயோ... என் வயிற்றைக் குளிர்விக்கமாட்டாயோ... எப்பொழுதுமே நான் ஒரு வெப்பத்தில் வெம்மை கலந்த வேதனையில் தவித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது தான் உன்னுடைய விருப்பமா. செம்பியன் மாதேவி என்ற பெயருக்குப் பெரியவளாய் எனனை வைத்துவிட்டு, ஊர் வணங்கச் செய்துவிட்டு, உள்ளுக்குள்ளே உளுத்துப் போனவளாய் என்னை ஏன் வளர்த்திருக்கிறாய்... என்னைச் சுற்றியிருந்த அத்தனை பேரும் இறந்து விட்டார்கள். என்னை மட்டும் நெடுநாள் வாழவைத்து, இப்படி ஒரு சித்திரவதை ஏன் செய்து கொண்டிருக்கிறாய்?

இங்கே, இந்த இடத்திற்கு வந்து மூன்று வருடங்களாகி விட்டன. ஒவ்வொரு நாளும் உன் எதிரே நின்று, 'என்னுடைய வேதனைக்குப் பதில் சொல்' என்று உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு இருக்கிறேன். விதம் விதமாக மந்திர ஜபங்கள் செய்து கொண்டு இருக்கிறேன். ஒரு சிறு அசைவுகூட இல்லாமல், மிகுந்த செழிப்போடு சோழ தேசத்தை வாழ வைத்துக் கொண்டிருக்கிறாய்.

இராஜராஜன் கோவில் கட்டப் போகிறான். இதுவரை எவருமே பார்த்திராத அளவிற்கு, பல பனைகள் உயரத்திற்குக் கோயில் கட்டப் போகிறானாம். ஆயிரக் கணக்கில் வரை படங்கள் தயாராகி, பெட்டி பெட்டியாய் சோழ தேசத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கின்றன.

தஞ்சையில் தங்கியுள்ள அத்தனை சிற்பிகளும், ஓவியர்களும் இந்த வேலைதான் செய்து கொண்டிருக்கிறார்களாம். தன்னுடைய பண்டாரத்தைத் திறந்து வைத்து, எவரெல்லாம் இந்தக் கோவில் வேலை செய்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம் குறைவற பொன்னும் பொருளும் வாரிக் கொடுத்துக் கொண்டிருக்கிறானாம்.

இரவு முழுவதும் நாட்டியமாம்... நாடகமாம், அவன் வெற்றி பெற்ற கதைகளையெல்லாம் வரிசையாக ஜனங்களுக்குச் சொல்லி மயக்குகிறார்களாம். அவன் எப்படி ஜெயித்தான் என்று யாருக்குத் தெரியும்... எனக்கு மட்டுமே தெரியும்...

*இராஜராஜனின் வெற்றி எவ்வளவு கேவலமானது என்று என்னைத் தவிர வேறு யார் அறிவார்?*

*இந்த அரச பட்டத்திற்கு அவன் உரியவனா... இந்தச் சோழ தேசத்திற்கு அவன் மன்னனாக இருக்கத் தகுதி உண்டா? என் பிள்ளையல்லவா... என் பிள்ளை மதுராந்தகனல்லவா தொடர்ந்து ஆட்சி செய்திருக்க வேண்டும். மக்கள் விரும்பு கிறார்கள் என்று எம் பிள்ளையைத் தரை இறக்கினானே... அரச தர்மத்தின்படி நடந்த என் பிள்ளை மீது வீண் பழி சுமத்தினானே... நீ ஆண்டது போதுமென்று பதினாறு வருடம் கழித்து அமைச்சர்களையும், சேனாதிபதிகளையும் நெருக்க வைத்து, தலையில் இருக்கிற கிரீடத்தைத் தரையில் இறக்கி வைத்தானே...*

*சரி... என் பிள்ளை சரியாக ஆட்சி செய்யவில்லை. என் பிள்ளைக்கு சாமர்த்தியம் போதவில்லை. ஆனால் பட்டம் அடுத்தபடி என் பேரனுக்கல்லவா போயிருக்க வேண்டும்... மதுராந்தகனான உத்தம சோழனுக்குப் பிறகு, மதுராந்தகன் கண்டராதித்தனுக்கல்லவா போயிருக்க வேண்டும். சிவநெறிச் செல்வர் கண்டராதித்தருடைய பேரன் மதுராந்தக கண்டராதித்தனல்லவா ஆட்சி செய்திருக்க வேண்டும். இடையில் இவன் புகுந்து, கிரீடத்தை எவ்வளவு எளிதாகப் பறித்துக் கொண்டான்?*

*மாமன்னர் பராந்தகருக்கு மூன்று பிள்ளைகள். முதல்வர் ராஜாதித்தர். இரண்டாமவர் என் புருஷன் கண்டராதித்தர். மூன்றாமவர் அரிஞ்ஜெயன்.*

*முதல்வர் ராஜாதித்தர் தக்கோலப் போரில் மரண மடைந்தார். அவருக்கு வாரிசு இல்லை. அடுத்தபடி பட்டத்துக்கு வரவேண்டியவர் யார்? கண்டராதித்தர்தானே, அவர் பட்டத் திற்கு வந்தார். அவர் இறந்த பிறகு அரிஞ்ஜெயன் – அவருடைய தம்பி பட்டத்திற்கு வந்தார்.*

*இப்போது அடுத்தபடி அரசாள வேண்டியவர் யார்... இரண்டாவது பிள்ளையின் வாரிசுதானே அரசாள வேண்டும். ஆனால், மதுராந்தகனுக்கு வயது போதவில்லை. அவன் இளைஞன். அவனின் சிற்றப்பனான அரிஞ்ஜெயனின் மகன் சுந்தரசோழன் வாலிபமானவன். எனவே, சுந்தர சோழனை ஆட்சிப் பீடத்தில் ஏற்றலாமென்று முடிவு செய்து அவனை மன்னராக்கினார்கள். இதிலும் ஒரு நியாயமிருக்கிறது.*

சுந்தரசோழன் ஆட்சிக்கு வந்து, வயதாகி, உடல்நிலை கோளாறாகி, இறந்தபிறகு யார் ஆட்சிக்கு வரவேண்டும் மதுராந்தகன்தானே, இதில் எந்தத் தவறும் இல்லையே...

ஆனால், சுந்தர சோழனின் மகன் ஆதித்த கரிகாலனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டினார்கள். வயிறு எரிந்து போயிற்று. 'கண்டராதித்தரின் வம்சம் அப்படியே நின்று போகவேண்டுமா' என்று நான்தான் கேள்வி கேட்டேன்.

அதற்கு, 'மதுராந்தகனுக்குத் திறமை போதாது' என்று சொன்னார்கள். 'அவனுக்கு வலிவு இல்லை' என்று சொன்னார்கள். அரசாளுகின்ற திறமை இல்லையென்று சொன்னார்கள். 'நூறு மதுராந்தகன் சேர்ந்தால் ஒரு ஆதித்த கரிகாலன்' என்று சொன்னார்கள். எதிர்த்துப் பேச முடிய வில்லை. அந்த ஆதித்த கரிகாலன் மனிதனா... அவன் மிருகம். பாண்டிய தேசத்தையும், சேர தேசத்தையும் சூறையாடியவன். அடேயப்பா... இப்போதும் அந்தக் கொடுங்காட்சி கண் முன்னால் நிற்கிறது.

அரசர்களுக்குள் சண்டை நிகழ்வதுண்டு, போர் வெறியால் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்வதுண்டு. நாடு பிடிக்கின்ற ஆசை வருவதுண்டு. கையில் வாளெடுத்து, உன்னால் முடியுமா, என்னால் முடியுமா என்று சண்டை போடுவதுண்டு.

ஆனால், போரிலிருந்து வெகு தூரம் ஓடியவனை, காட்டுக்குள் ஓடி ஒளிந்தவனை, பின்னால் துரத்திக் கொண்டு போய் அவனை மடக்கிப் பிடித்து, அந்தப் பாண்டியன் தலையைக் கொய்து, அதை ஈட்டியில் சொருகிக் கொண்டு வந்து, மூன்று நாள் அழுகிய தலையைத் தஞ்சைக் கோட்டை வாசலின் மேல் மாட்டி வைத்தானே இந்தக் கொடுமையை வேறு எவரிடம் காண முடியும்?

இப்படிப்பட்ட கொடுங்கோலனான ஆதித்த கரிகாலன் தான் ஆட்சி செய்ய வேண்டும் என்று மக்கள் விரும்பி னார்களா... சோழ தேசம் இப்படித்தான் நாகரீகமாக வளர வேண்டுமென்று எவர் ஆசைப்பட்டார். நல்லவேளை, சோழ தேசத்தின் நல்லவேளை – ஆதித்த கரிகாலனை யாரோ கொன்று போட்டார்கள். எங்கு, எவரை, எப்படி அநியாயமாகக் கொன்றானோ தெரியவில்லை – அதே விதமாக, அநியாயமாய்க் கொல்லப்பட்டு ஏரியில் மிதந்து கிடந்தான்.

சரி... இப்போது ஆட்சிக்கு வரவேண்டியவர் யார்... ஆதித்த கரிகாலனின் தம்பி இராஜராஜ சோழனா... அப்பொழுது கண்ட

ராதித்தருடைய மகனான மதுராந்தகர் என்ன பொறுப்பில் இருப்பார்... அவருடைய கதி என்ன... நான் மறுபடியும் ‘கேட்டேன். இராஜராஜன். ‘மதுராந்தகனே ஆட்சி செய்யட்டும்’ என்று நகர்ந்து விட்டான். எனக்கு வயிறு குளிர்ந்தது. நல்ல பிள்ளை; நியாயம் தெரிந்த பிள்ளை என்று நினைத்தேன். சோழ வம்சத்தில் இதோ ஒரு குணக்குன்று என்று கொண்டாடினேன். ஆசீர்வதித்தேன். ஆரத் தழுவிக் கொண்டேன்

ஆனால், அது புலி, பதுங்குகிற புலி பாய்ந்து கடித்துக் குதறுவதற்குத்தான் பதுங்குகிறது என்று இந்தக் கிழவிக்குத் தெரியாமல் போயிற்று. பதினாறு வருடம் கழித்து, அந்தப் புலி பாய்ந்து கடித்துக் குதறி விட்டது. எதிர்க்க... எவராலும் முடியவில்லை.

அந்தப் பதினாறு வருடமும் சோழ தேசத்தின் எல்லா இடங்களிலும் தனது செல்வாக்கை ஆழ நிலைநிறுத்தி, அழுத்தமாய் ஊன்றி, அவனும் அவன் தமக்கையும் திட்டமிட்டு ஆட்சியைப் பிடித்து விட்டார்கள். அவனுடைய தமக்கையின் கணவன் அவனுக்கு உறுதுணையாய் உதவி செய்ய, அவன் ஒவ்வொரு அங்குலமாய் முன்னேறி, மதுராந்தகனை வீசி எறிந்துவிட்டு தான் ஆட்சிக்கு வந்து விட்டான்.

“சரி... உனக்கும் ஆட்சி செய்ய வேண்டும் என்று ஆசை இருக்கும். உனக்குப் பிறகு யார்’ என்று கேட்டால், அவன் வாயே திறக்கவில்லை. மதுராந்தகன் மகன் கண்டராதித்தனை வெறும் அதிகாரியாக நியமித்தான்.

‘கோவில் கணக்கு வழக்கைப் பார்’ என்று சொன்னான். வெறும் விபூதியைத் தலையில் கொட்டி, சிவன் அருள் பெற்றவர் என்று கொண்டாடினான். தேவாரம் எவ்வளவு இனிமையாகப் பாடுகிறார்’ என்று அவன் மனதை மாற்றினான்.

ஆட்சி செய்ய சிறிதளவும் தகுதியில்லாதவனாய் அவன் கையில் கப்பரையையும், ஊன்று தடியையும் கொடுத்து, பல்லக்கில் ஏற வைத்து, சாதாரண சிவன் ஆண்டியாய்ச் செய்து மதுராந்தக கண்டராதித்தனையும் காணாமல் போக்கி விட்டான்.

அவனுக்கு இறை நிலைமை முற்றிப்போய் சகலத்தையும் விடுவித்துவிட்டு, வெறும் கோவணதாரியாய் வெகுதூரம் போய் விட்டான். வடக்கே போய்விட்டான் என்று சொன்னார்கள்.

'அதிகாரியாய் இருக்கவே பிரியப்படவில்லை; ஆட்சியைப் பற்றி எனக்கு எந்தக் கவலையும் இல்லை' என்று சொல்லிவிட்டதாய்ச் சொன்னார்கள்.

இதோ -இந்தச் சோழ தேசத்தில் அசைக்க முடியாதவாறு இந்த இராஜராஜன் உட்கார்ந்திருக்கிறான். எனக்குத் தாங்க வில்லை. அடியே வக்ரகாளி... என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. என் கண்ணெதிரில் என் மகனையும் காணோம்... என் பேரனையும் காணோம்... என் வம்சம் ஒரு முடிவுக்கு வந்து விட்டது. இன்னொரு வம்சம் கிளைத்துக் கொண்டிருக்கிறது. செழித்துக் கொண்டிருக்கிறது. வானுயர வளர்ந்து கொண் டிருக்கிறது. மிகப்பெரிய கோயில் கட்டத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறது என்று பார்க்கிற பொழுது என்னால் ஏக்கப் பெருமூச்சு விடாமல் இருக்க முடியவில்லை.

வக்ரகாளி... என் ஜபங்கள் உன் காதிற்குள் விழ வில்லையா... என் பிரார்த்தனைகள் உன்னை எட்ட வில்லையா... இப்படி அநியாயம் செய்தவரை நீ பழிவாங்க மாட்டாயா... உனக்கு இராஜராஜர் தேவையா... என் பிரார்த்தனை தேவையில்லையா... உனக்கு இந்தக் கற்றளி எழுப்பியது யார் – நான் தானே. உன் குடிசையைக் கோவிலாக மாற்றியது யார். நான் தானே... பதிலுக்கு நீ எனக்கு என்ன செய்யப் போகிறாய்... என் வம்சம் அழிந்து போயிற்றே. இதற்குப் பழி வாங்க மாட்டாயா.

வக்ரகாளி... 'என்ன வேண்டும் உனக்கு' என்று கேட்கிறாயா... எனக்குச் சோழ தேசம் அழிய வேண்டும் என்ற ஆசையில்லை. சோழ மக்கள் வேதனைப்பட வேண்டும் என்ற ஆசையில்லை.

இராஜராஜன் அழிய வேண்டும். இந்த க்ஷணமே துடிதுடித்து அவன் சாக வேண்டும். அவன் தலை கொய்யப்பட வேண்டும். அவன் இடது கையும், வலது கையும் சீழமுற்று விழ வேண்டும். அவன் வாயில் நுரை கக்கி, கண் பார்வை போய், தட்டுத் தடுமாறி கடும் சூலை நோயால் அவதிப்பட்டு மெல்ல மெல்லச் சாக வேண்டும்.

"கண்டராதித்தா, கண்டராதித்தா' என்று என் பேரன் பெயரைச் சொல்லி மாள வேண்டும். 'மதுராந்தகா... மதுராந்தகா... என்னை மன்னித்து விடு' என்று கதறிச் சாக வேண்டும். 'பாட்டியே... என்னை மன்னித்து விடுங்கள்' என்று

என் காலில் விழுந்து கண்ணீரால் நனைத்து, நான் பார்க்க மரணமடைய வேண்டும். இதை நடத்திக் கொடுப்பாயா வக்ரகாளி... உனக்கு என்ன வேண்டும் சொல்... நரபலி தரவும் தயாராக இருக்கிறேன்..."

அவர் மெல்ல மெல்ல உரத்துப் பேச ஆரம்பித்தார். உக்கிரமாகப் பேச ஆரம்பித்தார். மனம் விட்டு காளியோடு ஆத்திரத்தோடு பேச ஆரம்பித்தார்.

சுற்றும் முற்றும் பார்த்தார். வெகுதூரத்தில் வேலை யாட்கள் நின்றிருந்தார்கள் எழுந்தார். முகம் துடைத்துக் கொண்டார். கையிலிருக்கின்ற பூக்கூடையில் இருக்கிற செவ்வரளியையும், செம்பருத்தியையும் அள்ளி, வாரி வக்ரகாளி யின் மீது போட்டார்.

'இது என் பிராத்தனை நிறைவேற்றி வை' என்று சொல்லி விட்டுத் திரும்பினார். அவர் படியிறங்கியதும் வேலையாட்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். கைத்தாங்கலாய் அழைத்துக் கொண்டுபோய், திரை மறைப்புகளுக்குள் நகர்ந்து, மண்டபத்தில் உட்கார வைத்தார்கள். உணவு பரிமாறினார்கள்.

கோவில் கருவறையிலிருந்து, மூடியிருந்த போர்வையை, விலக்கி விட்டு ஒரு இளைஞன் வெளியே வந்தான். பாம்புபோல நழுவி, கோவிலின் பின்பக்கம் போய் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டான். மரத்தடியில் கோயில் அர்ச்சகர் வெற்றிலையும், களிப்பாக்கும் எடுத்து வாயில் அதக்கிக் கொண்டிருந்தார். 'என்ன' என்று கேட்டார்.

"நீங்கள் சொன்னது சரி, அவள் அரசருக்கு எதிராகத்தான் புலம்புகிறாள்..."

"முற்றிலும் கேட்டாயா?"

"முழுவதும் ஒரு வார்த்தை விடாமல் கேட்டேன்..."

"என்ன செய்யப் போகிறாய்?"

"இப்பொழுதே பிரம்மராயரிடம் போய் இவள் பேசியதைச் சொல்லப் போகிறேன்..."

"நல்லது... போய் வா. தொடர்ந்து கண்காணிக்க என்னுடைய மகன் இருக்கிறான். நீ எவ்வளவு சீக்கிரம் பிரம்மராயரிடம் போக முடியுமோ. அவ்வளவு சீக்கிரம் போ..."

அந்த அர்ச்சகர் சொல்ல, அந்த இளைஞன் தோளில் துண்டு போட்டுக் கொண்டு கோயிலை விட்டு வெளியேறினான்.

பிரம்மராயரின் ஒற்றர் படைகள் இல்லாத இடமே இல்லையென்று செம்பியன் மாதேவிக்குத் தெரியவில்லை. இராஜராஜரின் சிறப்புக்குக் காரணம், பிரம்மராயர் போன்ற விசுவாசமிக்க சேனாதிபதிகள்தாம் என்பதும் அவருக்குப் புரிய வில்லை.

அவர் உணவருந்தும்போது அவர்க்கு அருகிருந்து கண்காணிக்க, இன்னொரு பெண் வந்து சேர்ந்து கொண்டாள். அவளும் பிரம்மராயரின் வேவுப்படையைச் சேர்ந்தவள் என்பது செம்பியன்மாதேவிக்கு மட்டுமல்ல; அங்கிருந்த எவருக்கும் தெரியவில்லை.

## 28

வயது முதிர்ந்த செம்பியன் மாதேவியாருக்கு எதிரே வாழையிலை விரித்து, அதில் வெள்ளை வெளேரென்ற அன்னமும், சுற்றி வெஞ்சினங்களும் கூட்டும் பரிமாறி நெய்யூற்றி சேடிகள் விலகி நின்றார்கள்.

செம்பியன் மாதேவியார் உணவைப் பார்த்துக் கைகூப்பினார். தொலைவில் தெரிந்த நீலவானத்தை வெறித்துப் பார்த்தார்.

"என் சிவனே... காலையில் எழுந்து பூஜை முடித்து வெயிலேறியதும் பசிக்கிறது. கடுமையாகப் பசிக்கிறது. பசிக்கிறதே என்று நிறைய உணவு போட்டு உண்டால் பல பிரச்சினைகள் வருகின்றன.

உண்ட உடனேயே மூச்சுத் திணறுகிறது. நெஞ்சில் வலி ஏற்படுகிறது. முதுகில் ஒரு அழுத்தம் பரவுகிறது. நல்ல கிறுகிறுப்பு ஏற்படுகிறது. உடம்பில் ஒரு நடுக்கம் ஏற்படுகிறது. வியர்த்துக் கொட்டுகிறது. சாப்பிட்டது போதும் என்று தோன்றுகிறது. போதுமென்று எழுந்தால், சாப்பிட்ட சிறிதுநேரத்திலேயே மறுபடியும் பசிக்கிறது.

வைத்தியர் வந்து நாடி பிடித்துப் பார்த்துவிட்டு, மூன்று நாடிகளுமே தளர்வாக இருக்கின்றன என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். 'உனக்கு இனி வைத்தியம் செய்ய முடியாது. உன் உடம்பு மெல்ல மெல்ல அடங்கிக் கொண்டிருக்கிறது' என்று சொல்லாமல் சொல்லி விட்டுப் போய்விட்டார். உடம்பு தளர்ந்து வருவது தெரிகிறது. ஆனால் மரணம் எப்போது வரும் என்று தெரியவில்லை."

செம்பியன் மாதேவி பெருமூச்சு விட்டார். இலையிலுள்ள உணவை மறுபடியும் பார்த்தார். யாருக்கேனும் உணவு கொடுத்துவிட்டுச் சாப்பிட்டால் நல்லது என்று தோன்றியது. 'யாரேனும் விருந்தாளிகள் உண்டா' என்று ஆவலாக சேடிகளை விசாரித்தார்.

"யாரும் இல்லையம்மா... நீங்கள்தான் முதலில் சாப்பிடுகிறீர்கள்."

"நீங்கள் சாப்பிடவில்லையா?" செம்பியன் மாதேவி வேகமாகக் கேட்டார்.

சேடிகள் இல்லையென்று தலையசைத்தார்கள்.

"நீங்கள் சாப்பிடாமல் இங்கு வேறு யாரும் சாப்பிடுவது இல்லை. அர்ச்சகர்கூட சாப்பிடுவதில்லை. நீங்கள் சாப்பிடுங்கள் அம்மா..." சேடிப்பெண் ஒருத்தி சொன்னாள்.

"இல்லையடி. யாருக்கேனும் உணவு கொடுத்துவிட்டுச் சாப்பிடலாம் என்று தோன்றுகிறது. யாராவது இருக்கிறார்களா... அர்ச்சகரையாவது அழைத்து வா..." என்று செம்பியன் மாதேவி சொல்ல, அவர் சொன்ன நேரம் கோயில் வாசலுக்கருகே நான்கு வடதேசத்து பைராகிகள் உள்ளே நுழைந்தார்கள்.

இடுப்பில் கோவணம், முதுகில் புலித்தோல், கையில் மூங்கில் கழி, அதில் செருகப்பட்ட சூலம், வேலாயுதம், இடையில் குறுவாள். ஜடாமுடி, நீண்ட தாடி, மீசை, கழுத்தெல்லாம் உருத்திராட்சங்கள், உடம்பெல்லாம் திருநீறு. அவர்களை ஒரு சேடிப் பெண் செம்பியன் மாதேவியிடம் அழைத்துப் போனாள்.

"கோயிலில் பிரசாதமுண்டா..." பைராகிகள் பவ்யமாய் கேட்டார்கள்.

செம்பியன் மாதேவி எழுந்து கைகூப்பினார். 'படியேறி வாருங்கள்' என்று அழைத்தார். கைதட்டி சேடிப் பெண்களைக் கூப்பிட்டார்.

"விருந்தினர்களுக்கு என் எதிரிலேயே இலை பரிமாறுங்கள்..." என்று சொன்னார்.

பைராகிகள் திரும்பி கோவில் நோக்கி வணங்கினார்கள். அங்குள்ள பெரிய கங்காளத்திலிருந்து நீரிறைத்து முகம் கழுவிக் கொண்டார்கள். மண்டபம் போக படியேறினார்கள்.

சேடிகள் வழிகாட்ட, மூன்று பக்கமும் திரை போடப் பட்டு, ஒரு அறைபோல மாற்றப்பட்டிருக்கும் மண்டபத்தின் தனிப்பகுதிக்குப் போனார்கள்.

அங்குள்ள செம்பியன் மாதேவியை உற்றுப் பார்த்தார்கள். 'ஜெய விஜயீ பவ' என்று கையுயர்த்தி வாழ்த்தினார்கள். 'சிவோ ஹம்' என்று மண்டபம் கிடுகிடுக்கக் கூவினார்கள்.

"பசிக்கிறது – அன்னமிருக்குமா...?"

சடங்காய், சம்பிரதாயமாய் கப்பரையை நீட்டினார்கள்.

"வருக, வருக..." செம்பியன்மாதேவி இலைவிட்டு எழுந்து, தள்ளாடி, தூண் பிடித்துக் கொண்டு பிறகு சேடிகள் துணையோடு நடந்து, குனிந்து அவர்களின் கால்களைத் தொட்டார். அவர்களுடைய உருத்திராட்சங்களைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டார்.

அவர்கள் விபூதி எடுத்து அவர் தலையில் தடவினார்கள். நெற்றியில் பூசினார்கள். ஒருவன் சட்டென்று முதுகுப்பக்கம் துணியை விலக்கி, பரபரவென்று விபூதியை முதுகில் தேய்த்தான். தன் வலக்கையை செம்பியன் மாதேவி இடக்கையோடு கோர்த்துக் கொண்டான். உற்று அவரைப் பார்த்தான். செம்பியன் மாதேவிக்கு அந்தச் செய்கைகள் விசித்திரமாக இருந்தன. என்ன என்பதுபோல் அவனை உற்றுப் பார்த்தார்...

"உடல்நலம் சரியில்லையா...?" அவன் வடமொழியில் கேட்டான்.

"ஆமாம்' என்று செம்பியன் மாதேவி தலையசைத்தார்.

"இன்னும் சில நொடிகளில் சரியாகி விடும்."

அவன் இடக்கையில் விபூதியை எடுத்து சிறிது நேரம் நெஞ்சில் வைத்துக் கொண்டான். தலைக்கு அருகே வைத்து வேகமாய் ஊதினான். விபூதி பறந்து நாலாபக்கமும் பரவியது.

செம்பியன் மாதேவியை அவர் இடுப்பில் கைவைத்து அழுத்தி நிமிர்த்தினான்.

"நிமிர்ந்து நில்லுங்கள் ஆழ்ந்து சுவாசியுங்கள்" என்று வட மொழியில் கட்டளையிட்டான்.

செம்பியன்மாதேவி அவ்விதமே செய்தார்.

"இப்போது இருமுங்கள்..." என்று கால்கட்டை விரலை மிதித்துக்கொண்டான்.

செம்பியன் மாதேவி மெல்ல இருமினார்.

"வேகமாக இருமுங்கள்..." என்று மறுபடியும் சொன்னான்.

செம்பியன்மாதேவி மறுபடியும் இரும, நெஞ்சுக்குள் சட்டென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. எல்லாம் சரியாகி விட்டதுபோல் ஒரு தோற்றம் ஏற்பட்டது. வாய்வழியே காற்று குபுக்கென்று ஏப்பமாய் வெளியேறியது.

"உட்காருங்கள்..." என்று அவருடைய இலை காண் பித்தான். அவர் உட்கார்ந்து கொண்டார்.

அவர்களுக்கும் உணவு பரிமாறப்பட்டது. உட்கார்ந்து கொண்டார்கள். அருகே சூலத்தையும் வேலாயுதத்தையும் வைத்துவிட்டு, அவர்கள் இடையறாது சில மந்திரம் ஜெபித்தார்கள்.

புத்துருக்கு நெய் போடப்பட்டு, 'சாப்பிடுங்கள்' என்று சேடிகள் கைகாட்ட, அவர்கள் திரும்பி செம்பியன் மாதேவி யைப் பார்த்தார்கள். செம்பியன் மாதேவி இரண்டு கைகளையும் குவித்து 'சிவனடியார்கள் சாப்பிட வேண்டும்' என்று தமிழில் சொன்னார்.

'நல்லது, நல்லது' என்று அவர்கள் கொச்சைத் தமிழில் சொன்னார்கள். சாப்பிடத் துவங்கினார்கள். முதல் கவளம், உண்ட பிறகு, செம்பியன் மாதேவியை நோக்கி 'ஆகட்டும்' என்று கைகாட்டினார்கள். செம்பியன் மாதேவியும் உணவு உண்ணத் துவங்கினார்.

இப்போது அவருக்குப் பசி அதிகமிருந்தது. உண்ணும் போது எந்தப் பிரச்சினையும் எற்படவில்லை. உணவு நன்றாகப் பிசையப்பட்டு, பற்களால் அரையப்பட்டு சுகமாய் வயிற்றுக்குள் இறங்கியது.

இன்னும் சிறிது கீரைக்கூட்டு சேர்த்து, பிறகு தயிர் சேர்த்து திருப்தியாக செம்பியன் மாதேவி சாப்பிட்டார். 'வெகு நாட்களுக்குப் பிறகு நன்கு உண்கிறேனய்யா' என்று அவர்களைப் பார்த்துச் சொன்னார்.

அவர்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள். கை கழுவிக் கொண்டார்கள். வாய் கொப்புளித்தார்கள்.

செம்பியன் மாதேவி வெற்றிலையும் பாக்கும் நீட்ட, வாங்கி கல்லால் அடித்து, நசுக்கி வாயில் அதக்கிக் கொண்டார்கள். அவர்கள் பையிலிருந்து கசக்கிய இலையை எடுத்து முகர்ந்து, இன்னும் கசக்கி அதையும் வாயில் அதக்கிக் கொண்டார்கள். பலமான ஏப்பம் விட்டார்கள். 'மிக்க நன்றி' என்று ஆசீர்வதித்தார்கள். 'சேடிப்பெண்கள் சாப்பிடலாமே' என்று சொன்னார்கள்.

செம்பியன் மாதேவி சேடிப்பெண்களைச் சாப்பிடப் போகும்படி சொல்ல, அவர்கள் அங்கிருந்து அகன்றார்கள்.

பைராகிகளில் ஒருவன் எழுந்து திரையின் ஒரு பக்கம் போய் நின்று கொண்டான். இன்னொருவன் எழுந்து திரையின் இன்னொரு பக்கம் போய் நின்று கொண்டான். மூன்றாமவன் எழுந்து திரையின் பின்பக்கம் போய் நின்றான்.

அவர்கள் நிற்பது பார்த்தால், செம்பியன் மாதேவியையும் அவருக்கு எதிரே இருந்தவனையும் தனித்துவிட்டு வேறு எவரும் அருகில் வராவண்ணம் காவலிருப்பது போலிருந்தது.

செம்பியன் மாதேவி வியப்போடு எதிரே இருக்கிறவனைப் பார்த்தார். அவனிடம் 'என்ன' என்று தமிழில் கேட்டார். அவன் செம்பியன் மாதேவியையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"நான் கேட்பது விளங்கவில்லையா... உங்களுக்கு என்ன வேண்டும்..." வட மொழியில் தட்டுத்தடுமாறி செம்பியன் மாதேவி கேட்டார்.

"என்னைத் தெரியவில்லையா மகாராணி..." எதிரே அமர்ந்திருந்தவன் தமிழில் பேசி கைகூப்பினான்.

செம்பியன் மாதேவியை மகாராணி என்று இப்போது யாரும் கூப்பிடுவதில்லை. அவர் மகாராணியாக இருந்த காலங்கள் முடிந்துவிட்டன. 'யார் இப்போது நம்மை மகாராணி என்று கூப்பிடுவது' – செம்பியன் மாதேவி கண்களைச் சுருக்கிக் கொண்டு உற்றுப்பார்த்தார்.

அவன் ஜடாமுடியை அவிழ்த்து அசைத்து பின்பக்கம் நகர்த்தினான். வழுக்கைத் தலை தெரிந்தது. முகத்திலிருந்து தாடியையும் மீசையையும் களைந்தான். வேறு முகம் வெளிப் பட்டது.

"நான் மலையனூரான். ரவிதாஸனுடைய கடைசித் தம்பி மலையனூரான். என்னை மறந்து விட்டதா மகாராணி. மலையனூரான் சாம்பானை உங்களால் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியவில்லையா. உங்கள் மகன் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்த முதல் ஐந்து வருடங்களில், அந்தக் கடினமான காலங் களில் நான் உங்களுக்கு மெய்க்காவலனாக இருந்தேனே... ஞாபக மிருக்கிறதா...

ஆதித்த கரிகாலனைக் கொன்றது யார் என்று எல்லோரும் எல்லோரையும் சந்தேகப்பட்ட காலத்தில், உங்களையும் உங்கள் மகனையும் சுற்றி அறுநூறுபேர் கொண்ட ஒரு சிறுபடை எப்பொழுதும் எதற்கும் தயாராகி இருந்ததே. அது ஞாபக மிருக்கிறதா...

'அரண்மனையிலேயே அடங்கியிருக்க முடியாது; சோழதேசம் முழுவதும் வலம்வர வேண்டும்' என்று நீங்கள் விரும்பியபோது உங்கள் விருப்பத்திற்கேற்ப, சோழ தேசத்தின் எல்லா தலங்களுக்கும் உங்களோடு படை நடத்தி உங்களுக்குப் பாதுகாப்பாக இந்த மலையனூரான் வந்தானே, நினைவிருக் கிறதா... சற்று பெருத்துவிட்டேன். முகம் மாறிவிட்டது. ஏகப்பட்ட மன உளைச்சல்களால் உடம்பு நிறம் மங்கி விட்டது.

கிட்டத்தட்ட முப்பத்து நாலு வருடங்களுக்கு முன்பு, நான் இருபது வயது இளைஞனாக இருந்தபோது, உங்களுக்கருகே மெய்க்காவலனாக நியமிக்கப் பட்டேன். உங்கள் மீது தூசுகூடப் படாமல் பாதுகாத்தேன். என் அனுமதியில்லாமல் நீங்கள் எங்கும் நகர்ந்ததில்லை. 'சாம்பா, சாம்பா' என்று ஒரு நாளைக்கு நூறுமுறையேனும் என்னை அழைத்து, தூக்கத்தில் கூட நீங்கள் 'சாம்பா' என்று என்னைக் கூப்பிடுவதை நான் கேட்டிருக் கிறேன். என்னை நினைவிருக்கிறதா மகாராணியாரே..." மிகவும் வாஞ்சையோடு குரல் தாழ்த்தி எதிரேயிருந்த பைராகி பேசினான்.

செம்பியன் மாதேவிக்கு வயிறு பிசைந்தது. மார்பு அடைத்தது. படபடப்பு அதிகமாகி, மெல்லத் தள்ளாடினார். தலையைப் பிடித்துக் கொண்டார்.

"என்ன செய்கிறது மகாராணி..."

"இல்லை, உடல்நலம் சரியாக இல்லை. சிறிய அதிர்ச்சிகூட எனக்கு மிகப்பெரிய வேதனையைக் கொடுத்துவிடுகிறது. எதனால் என்று தெரியவில்லை."

மலையனூரான் என்கிற சாம்பான், மகாராணியின் அருகே நகர்ந்து அவரின் இடக்கையை எடுத்து சில விநாடிகள் நாடி பார்த்தான். மெல்லக் கீழிறக்கினான். தன் இடுப்பிலுள்ள சுருக்குப் பையிலிருந்து பச்சிலை எடுத்து நசுக்கினான். உருண்டையாக்கினான்.

"இதை வாயில் போட்டுக் கொள்ளுங்கள் மகாராணி..." என்று சுண்டைக்காயைவிட சிறிய உருண்டையை அவர் கையில் கொடுத்தான். செம்பியன்மாதேவி பயத்தோடு அவனைப் பார்த்தார்.

"ஒன்றும் கவலைப்படாதீர்கள். இன்றைக்கும் இந்தச் சாம்பான் மகாராணியின் மெய்க்காவலன். உங்கள் உடம்புக்கு ஒரு கெடுதி என்றால், என்னால் அதைப் பார்த்துக் கொண்டு அமைதியாக இருக்க முடியாது. உங்களை உயிருள்ளவரை காப்பேன் என்று அன்று சத்தியம் செய்தேனே... அந்தச் சத்தியம் இன்னும் என் மனதைவிட்டு நீங்காமல் இருக்கிறது. கவலைப்பட வேண்டாம். இது மருந்து. நல்ல மருந்து. உங்கள் படபடப்பைக் குறைக்கும். சாப்பிடுங்கள்..."

செம்பியன் மாதேவி அந்த உருண்டையைச் சடக்கென்று வாயில் போட்டுக் கொண்டார்.

'பல்லுக்குக் கீழே அதக்கி வைத்துக் கொள்ளுங்கள் என்று சாம்பான் செய்து காண்பிக்க, அவர் அவ்விதமே அதக்கி வைத்துக் கொண்டார்.

அந்த உருண்டையிலிருந்து சுகமான ஒரு உணர்வு பரவி வாய்க்குள் புகுந்து, வாயிலிருந்து நெஞ்சுக்குள் இறங்கி, நெஞ்சிலிருந்து வயிற்றில் பரவி, வயிற்றிலிருந்து உடம்பு முழுவதும் விகசித்தது. அப்படியே சாய்ந்து கொள்ள வேண்டும் என்பதுபோல் தோன்றியது.

"நன்றாக இருக்கிறதே... என்ன மருந்து இது..." உற்சாகமாக செம்பியன் மாதேவி கேட்டார்.

"அது இருக்கட்டும். நீங்கள் ஏன் இப்படி நாடோடியாக மாறி விட்டீர்கள்?" சாம்பான் மறுபடியும் அடிக்குரலில் கேட்டான்.

"ஏன் இப்படி எல்லோரையும் வளர விட்டுவிட்டீர்கள். இராஜராஜரை உங்கள் பிடிக்குள் வைத்திருப்பீர்கள் என்று நான் நினைத்தேன். முற்றிலும் நகர்ந்துபோய், யார் எப்படிப் போனாலென்ன என்று என் மௌனமாகி விட்டீர்கள்.

ஊரும் உறவும் சேர்ந்து ஏமாற்றி, உங்களை ஒரு ஓரமாக உட்கார வைத்திருக்கிறது. ஏன் கோபமுற்று இருக்கிறீர்கள். சிவத் தொண்டு என்று உங்களை நீங்களே ஏன் ஏமாற்றிக் கொள் கிறீர்கள். எங்கும் இருக்கப் பிடிக்காமல் ஏன் இப்படி பணக்காரப் பிச்சைக்காரியாய் அலைகிறீர்கள்.

மக்களைச் சந்தித்து நியாயம் கேட்கப் போகிறேன் என்றுதானே களமிறங்கினீர்கள். நீங்கள் யாரையும் சந்தித்ததாக எனக்குத் தெரியவில்லை. செங்கல்லால் கட்டப்பட்ட கோயில்களைக் கற்றளியாய் மாற்றுகின்ற வேலையைச் செய்யப் போகிறேன் என்று ஆரம்பித்து, தனக்குத் தானே பேசிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதாய் கேள்விப்படுகிறேன். நீங்கள் மக்களைச் சந்திக்கவில்லையா... அல்லது மக்கள் உங்களைச் சந்திக்கவில்லையா... அல்லது நீங்களும் மக்களும் சந்திக்கா வண்ணம் யாரேனும் நடுவே புகுந்து குழப்பம் ஏற்படுத்தி யிருக்கிறார்களா...

மதுராந்தகர் பதவியிறங்கியதும், இராஜராஜர் பதவி யேற்றதும் நீங்கள் எடுத்த சில முடிவுகள் கண்டு உங்களால் எங்களுக்கு விடிவுகாலம் பிறக்கும் என்று நம்பினோம். இல்லை – உங்களுக்காக நாயாய் உழைத்த நாங்கள் எந்த பலனும் காண வில்லை. உங்களுக்காக உயிரையும் தியாகம் செய்து நாங்கள் செய்த அத்தனை வேலைகளும், வித்தைகளும் விழலுக்கு இறைந்த நீராய் போய்விட்டது.

மதுராந்தகர் என்கிற உத்தம சோழரும் எங்களைக் கை விட்டார். உத்தம சோழரின் மகன் மதுராந்தக கண்டராதித்தரும் எங்களைக் கைவிட்டார். நீங்கள் காப்பாற்றுவீர்கள் என்று நாங்கள் காத்திருந்தோம். நீங்களும் எங்களைப் புறக்கணித்து விட்டீர்கள். மகாராணியாரே... உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா?" சாம்பான் விழிகளை குத்திட்டு மகாராணியை உறுத்துப் பார்த்துப் பேசினான். அவன் கண்களில் நீர் கட்டியது. குரல் நடுங்கியது.

# 29

உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, நடுங்கும் குரலைச் சரி செய்து கொண்டு மலையனூரான் சாம்பான், செம்பியன் மாதேவி பார்த்து பேச்சு தொடர்ந்தான்.

“உடையார்குடிக்கு ஒருநாள் காலை, சக்கரவர்த்தி இராஜாஜ சோழரிடமிருந்து ஸ்ரீமுகம் என்று ஒரு ஓலை வந்தது. சக்கரவர்த்தியிடமிருந்து ஓலை வந்திருக்கிறது என்று பறையறிவித்தார்கள்.

நாங்கள் போய் நின்று, ‘உத்தமசோழரா ஓலை அனுப்பியிருக்கிறார். கொடுங்கள்’ என்று கேட்டோம். ‘சக்கரவர்த்தி இப்போது உத்தமசோழரல்ல; இராஜராஜத் தேவர்’ என்று பதில் சொன்னார்கள். நாங்கள் வாயடைத்துப் போனோம்.

ஸ்ரீமுகத்தில் என்ன எழுதியிருந்தது தெரியுமா. எங்கள் அருமை அண்ணன் பிரம்மாதிராஜன் ரவிதாஸனையும், அடுத்த அண்ணன் இருமுடிச் சோழ பிரம்மாதிராயர் பரமேஸ்வரனையும், என்னையும், எங்கள் மனைவிமார்களையும், எங்கள் தாய் தகப்பனாரையும், எங்களுக்குப் பெண் கொடுத்த பெரியோர்களையும், அவர்கள் குடும்பத்தாரையும் எங்கள் அக்காள் - தங்கைகளுக்குப் பிள்ளைகள் கொடுத்த பெரியோர்களையும், அவர்கள் குடும்பத்தாரையும் ஒட்டுமொத்தமாய் ஊரைவிட்டு வெளியேறச் சொன்னார்கள்.

எங்களுடைய ஆறு வீட்டையும், நாங்கள் குடியிருந்த பதினோரு வீடுகளையும் விட்டுவிட்டு, ஏரிப்பாசனமான இரண்டே முக்கால் வேலி நஞ்சையை விட்டுவிட்டு, பெரிய புஞ்சைக் காட்டை விட்டு, தென்னந்தோப்புகளையும், மாந்தோப்புகளையும் விட்டுவிட்டு, ஒட்டுமொத்தமாய் அந்த இடத்தை விட்டு வெளியேற்றப்பட்டோம்.

மறுத்தவர்களைப் பிரம்பால் அடித்தார்கள். எதிர்த்தவர்களைக் கயிறு போட்டு இழுத்துக் கொண்டு போனார்கள். வழி முழுக்க சோழ மக்கள் நின்று காறி உமிழ்ந்தார்கள்.

கத்தியால் குத்திக் கொன்று விடுவேன் என்று பெண்களையும், குழந்தைகளையும் பயமுறுத்தினார்கள். என் அண்ணனை எட்டி உதைத்தார்கள். என்னை கசையால் அடித்தார்கள். சகிக்க முடியாத வார்த்தைகளைச் சொன்னார்கள்.

ஒருவன் ஓடிவந்து என் பூணூலை அறுத்தான். அந்தணனாடா நீ... துரோகி துரோகி' என்று கத்தினான். பலபேர் வெற்றிலை மென்று உமிழ்ந்த மண்சட்டியைக் கொண்டு வந்து, எங்கள் அண்ணன் ரவிதாஸன் தலையில் போட்டு உடைத்தார்கள், உடம்பெல்லாம் வெற்றிலை மென்று எச்சில் வழிய, எங்கள் அண்ணன் சேரதேசம் நோக்கி நடந்து போனார்.

மகாராணியாரே... இந்தக் கொடுமைகள் உங்களுக்கு எங்கேனும் சொல்லப்பட்டனவா... யாராவது விவரித்தார்களா... பெண் குழந்தைகள் கைக்குழந்தைகள், வயதுக்கு வந்த பெண்கள், நிறைமாத கர்ப்பிணிகள், கிழவிகள், கிழவர்கள் இவர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு ஒரு ஒற்றை மாட்டுவண்டி கூட இல்லாமல், அடுத்த வேளை உணவுகூட இல்லாமல் மாற்று உடைகூட இல்லாமல் கையில் ஒரு செப்புக்காசுகூட இல்லாமல்..."

மலையனூரான் சாம்பான் கண்மூடிக் கொண்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

திரைச்சீலைக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த அந்தப் போர்வீரன் குலுங்கிக் குலுங்கி அழுவதை செம்பியன் மாதேவி வியப்போடு பார்த்தார்.

"அவன் ஏன் அழுகிறான் என்று பார்க்கிறீர்களா... அவன் ரவிதாஸனின் மூன்றாவது மகன் துர்கசரவணன். அப்போது அவனுக்குப் பன்னிரண்டு வயது.

'எதற்காக வீட்டை விட்டுப் போகிறோம். ஏன் இந்த வீட்டை விட்டுப் போகிறோம். இது என் வீடு. இதை விட்டுப் போக மாட்டேன்' என்று அவன் கூவி, கையில் வாளெடுத்துக் கொண்டு நாலாபக்கமும் சுழற்றி நிற்க, அவனைக் கவண் கல்லால் அடித்தார்கள். எருமை மீது உட்கார வைத்து இறுக்கக் கட்டினார்கள். எருமையின் வாலைப் பிடித்து சேற்றிலே புரளவிட்டார்கள். முகமெல்லாம் சேறாக, தலையெல்லாம் சேறாக அவனை அவிழ்த்துக் கொண்டு சமாதானப்படுத்திக் கூட்டிக்கொண்டு போவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது.

'நிறை கர்ப்பிணியாக மூன்று பெண்கள் இருக்கிறார்கள். ஒரு வண்டி கொடுக்கக்கூடாதா' என்று என் தாய் கேட்டதற்கு,

என் தாயை பொதுமகள் என்று அழைத்தார்கள். பொது மகளுக்கு வண்டியேற உரிமை இல்லை' என்று சொன்னார்கள்.

காதுபட எங்கள் தாயை ஒருவன் பொதுமகள் என்று சொல்ல, நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தோம். எங்கள் தாய் கோபத்துடன் கத்த, 'இன்னும் ஒருமுறை பேசினால், உன் உடம்பில் ஒரு பொட்டுத்துணி இருக்காது' என்று எச்சரித் தார்கள்.

பல்லாயிரக்கணக்கான சோழர் கூட்டம். நடுவே நூற்றுப் பதினேழு பேர் கொண்ட எங்கள் குடும்பம். என்னால் மறக்க முடியவில்லை. தாயே, இப்பேற்பட்ட கொடுமைக்கு நீங்கள் பழிவாங்குவீர்கள் என்று நினைத்தேன். உத்தமசோழரின் கணக்கை இராஜராஜரின் ஆட்கள் முடித்துவிடுவார்கள் என்று எனக்குத் தெரியும்.

எல்லை தாண்டியதுமே ரவிதாஸன் அவர்கள் எங்கள் எல்லோரையும் தழுவி, "நான் ஏன் மௌனமாக இருந்தேன் என்றால் உயிர் வாழ்வதற்காக, ஏன் உயிர் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டேனென்றால் பழி தீர்ப்பதற்காக, நான் ஏன் பழி தீர்க்க வேண்டும் என்றால் – அது என்னுடைய கடமை செஞ்சோற்றுக்கடன் என்று சொன்னார்.

உங்கள் கையால் காசு வாங்கி, உணவு உண்டு கொழுத்த தேகம் எங்களுடையது. உங்களுக்கு ஒரு ஆபத்து என்றால் அதைத் தடுப்போம் என்று சத்தியம் செய்தவர்கள் நாங்கள்.

எங்களுக்கு ஒரு ஆபத்து என்றால் நீங்கள் வருவீர்கள் என்று நினைத்தோம். நீங்களும் வரவில்லை. உங்கள் மகனும் வரவில்லை.

சிறுபிள்ளையான கண்டராதித்தனை அவர்கள் பக்கம் சேர்த்துக் கொண்டு விட்டார்கள். தலைநிறைய விபூதியும், குடுமியும் வைத்து, இடுப்பிலே ஒற்றை ஆடை கட்டி. 'சிவனருட் செல்வன்' என்று வளர்த்து விட்டார்கள். வேறு எதுவும் அவனிடம் தலைதூக்காதவாறு பார்த்துக் கொண்டார்கள். அக்குளில் ஓலைச்சுவடிகளை இடுக்கக் கொடுத்து, இதுதான் உன் வாழ்க்கை என்று மாற்றி விட்டார்கள். அவர்கள் மட்டும் உடை வாளையும், தேசத்தையும் இறுகப் பற்றிக் கொண்டு விட்டார்கள்.

தாயே உங்களை நம்பிய இந்தக் குடும்பத்திற்கு நீங்கள் எப்பேற்பட்ட உதவிகள் செய்திருக்கிறீர்கள் தெரியுமா. நீங்கள் இப்போது போட்ட சோறு கசந்தது தாயே... எங்களை இராஜராஜன் ஏமாற்றவில்லை. நாங்கள் எதிர்பார்த்தது போலவே பழிதீர்த்துக் கொண்டான். ஆனால் நீங்கள் ஏமாற்றி விட்டீர்கள் தாயே. எங்களுக்கு உதவி செய்ய வேண்டிய நீங்கள் மௌனமாக இருந்து விட்டீர்கள். அவதிப்படட்டும் என்று எங்களைக் கைவிட்டு விட்டீர்கள்.

தாயே... ரவிதாஸன் சேர அந்தணர் பரம்பரை. இந்த முன்குடுமி சோழியர்கள் ஒருநாளும் சும்மாயிருக்க மாட்டார்கள். இடது கையில் வேதமும், வலதுகையில் வாளும் தரித்தவர்கள் நாங்கள். தர்ப்பைப் புல் கையிலும், காலில் தோல் செருப்பும் அணிந்தவர்கள் நாங்கள். எங்களுக்கு வேதமும் தெரியும். சாஸ்திரமும் தெரியும். சண்டைப் பயிற்சியும் தெரியும்.

சண்டைப் பயிற்சி சரிவராது என்று தெரிந்து கொண்டு நாங்கள் எங்கள் யுத்த முறைகளை வேறுவிதமாக மாற்றிக் கொண்டோம். அண்ணன் ரவிதாஸன் காந்தளூர்ச் சாலைப் போர்களத்தில் இறந்த பிறகு, தம்பி பரமேஸ்வரன் குற்றுயிரும் குலையுயிருமாய் சித்திரவதை செய்யப்பட்டு இறந்த பிறகு நான் தலைமை தாங்கினேன்.

இனி இவர்களோடு நேரடியாகப் போரிடுவதில் அர்த்தமில்லை என்று தெளிவாகப் புரிந்து கொண்டேன். என் யுத்தம் வேறாக மாறியது. அந்த யுத்தத்தில் பங்குபெற உங்களையும் அழைத்துப் போவதற்கு வந்திருக்கிறேன் தாயே. மற்றவை இரவில் சொல்கிறேன். தற்போது உங்களைச் சுற்றி நடமாட்டங்கள் அதிகரித்து விட்டன. நான் எதற்கு இவ்வளவு நேரம் பேசுகிறேன் என்று ஆட்கள் முன்னும் பின்னும் அலையத் துவக்கி விட்டார்கள். ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். இரவு பேசுவோம்."

–அவன் சட்டென்று எழுந்தான். 'ஜெய விஜயீ பவ' என்று குரல் கொடுத்தான். நான்கு பேரும் அங்கிருந்து நகர்ந்து, வக்ரகாளி இருக்கும் மண்டபத்திற்குப் போய் உட்கார்ந்து கொண்டார்கள். செம்பியன்மாதேவி மறுபடியும் தனித்து விடப்பட்டார். திரும்பவும் அவருக்குத் தலை சுற்றியது.

மலையனூரான் என்றழைக்கப்படும் சாம்பானுக்கு ஐம்பத்து நான்கு வயது இருக்கும். ஆனால் அவனுடைய

உடம்பின் திடத்தை, கன்னத்தில் செழுமையை, கை கால்களின் திண்மையைப் பார்க்கிற போது வயது குறைவாகவே மதிப்பிடத் தோன்றும். பொய்யான சடாமுடி தரித்திருந்தபடியால், அவனுடைய வயது பற்றி யாராலும் எதுவும் சொல்ல முடிய வில்லை.

சாம்பானுக்கு அருகே முப்பது வயது மதிக்கத்தக்க இன்னொரு இளைஞன் இருந்தான். அவன் ரவிதாஸனுடைய மூன்றாவது மகன். துர்கசரவணன் என்ற அவனை, துர்கா என்று எல்லோரும் அழைப்பார்கள். அவனுக்கும் கற்றையான சடாமுடி இருந்தது. இடுப்பில் கோவணமும், முதுகில் கரடித் தோலும் தரித்திருந்தான். மிக திடகாத்திரமாக இருந்தான். மற்ற எல்லோரையும்விட உயரமாக இருந்தான். வெகுவேகமாய் ஓடக் கூடியவன் என்று அவனுடைய தொடைகள் தெளிவாக்கின.

துர்காவுக்குப் பக்கத்தில், கிட்டத்தட்ட அதே உயரத்தில் ஆனால் இன்னும் நல்ல நிறத்தில், பெரிய கண்களோடு, சற்று புஷ்டியான உடம்போடும் பீமசேனனைப் போல இன்னொரு இளைஞன் இருந்தான். அவன் ரவிதாஸன் தம்பியான பரமேஸ்வரனின் நான்காவது மகன். பெயர் காளிதாஸன்.

நான்காவதாய் அமர்ந்திருந்தவனுக்கு இருபத்தோரு வயதுதான் இருக்கும். மெல்லிய உடம்பு. கூர்மையான பார்வை. கூர்மையான மூக்கு. மேலுதடு ஒரே கோடாக இருந்து, கீழுதடு கனிந்திருந்தது. உடம்பில் பெண்மையின் சாயல் அதிகமிருந்தது. நெஞ்சில், கைகளில் ரோமங்கள் அதிகமில்லாமல் உருவிவிட்டது போல ஒரு வழவழப்பாக இருந்தது. அவன் பெயர் சாயாகுமாரன்.

இவர்கள் எல்லோருமே வெறும் விபூதி மட்டும் உடம்பெல்லாம் பூசிக்கொண்டு, நெற்றியில் இரண்டு புருவங்களையும் இணைத்து அரக்கு நிற குங்குமத்தையும் தரித்திருந்தார்கள். அந்தக் குங்குமம் அவர்களுடைய முகத்தைக் கோரமாகக் காட்டியது. எல்லோரும் வெற்றிலை போடுகிற பழக்கம் உடையவர்களாய் இருந்தார்கள். வெற்றிலையோடு வேறு தழையும் மென்றார்கள். நல்ல கனமான பட்டுப் பாயை கோவணம் கட்டுகிற கயிற்றிலே செருகிக் கொண்டிருந்தார்கள்.

பச்சைக் கொட்டைப் பாக்கை எடுத்து, மிகச் சிறிய துணுக்குகளாக கொடுவாளால் வெட்டி அதைத் தண்ணீரில்

நனைத்து, தரையிலேயே போட்டு ஊறவைத்து, சிறிது நேரம் பொறுத்து வாயில் அதக்கிக் கொண்டார்கள்.

வாயில் ஊறின உமிழ்நீரை, உடனே எழுந்து போய்த் துப்பினார்கள். அது பதப்பட்டு வந்ததும், கறுத்த பச்சையி லுள்ள வெற்றிலையை எடுத்து, வேகமாக நடுநரம்பு கிழித்து, சுருட்டி வாயில் போட்டுக் கொண்டார்கள்.

வெற்றிலை போடும்வரை எதுவும் பேசாமல், வெற்றிலை போடுவதில் மும்முரமாய் இருந்தார்கள். அரைத்துத் தின்று வெற்றிலையும், பாக்கும் ஒரு பதத்திற்கு வந்த பிறகு, முகம் மலர ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். மற்ற திக்குகளிலும் பார்வையைப் படரவிட்டார்கள். நல்ல உணவுக்குப் பிறகு பாக்கும், வெற்றிலையும் பதமாக வாயில் ஊறி, ஒரு சுகமான அனுபவத்தைக் கொடுத்தன.

"சிற்றப்பா... இதுதான் வக்ரகாளியா..."

"ஆமாம்."

"சோழர்களின் குலதெய்வமா..."

"குலதெய்வங்களில் ஒன்று. சோழர்களின் குலதெய்வம் என்றால், அது தஞ்சையில் இருக்கின்ற நிசும்ப சூதனி, மிகக் கோரமான உருவம்."

"இந்த உருவம் அழகாக இருக்கிறதே சித்தப்பா..."

"ஆமாம். கடவுளைக் கட்டிளங்கன்னியாகப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்ட எவனோ ஒரு சிற்பி இப்படிச் செதுக்கியிருக்கிறான். கைகளும் ஆயுதங்களும்தான் கடவுள் என்று பறைசாற்றுகின்றன. மற்றபடிக்கு ஒரு மத்திம வயதுப் பெண்ணின் அடையாளந்தான் இது. ஒருவேளை இது காலம் சொல்ல முடியாத கோயிலாகவும் இருக்கலாம்."

"எவ்வளவு பெரிய மண்டபங்கள், திரைச் சீலையை அழகாகக் கட்டிக்கொண்டு உள்ளே படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டால் குளிரோ, வெப்பமோ எதுவும் செய்யாது. மகாராணி செம்பியான்மாதேவி வாழ்க்கையை நன்றாக அனுபவிக்கிறார் என்று நினைக்கிறேன்." காளிதாஸன் கொஞ்சம் கோபம் கலந்த குரலிலே கூறினான்.

"இல்லை. அவருடைய வாழ்க்கை முடியப் போகிறது அவருக்கு உடல் நலம் முற்றிலும் குறைந்துவிட்டது. மனதில் வெறும் ஆத்திரம் மட்டுமே இருக்கிறது. அவர் புத்தியும் தடுமாற ஆரம்பித்து விட்டது. அதிகம் தனக்குள் பேசுகிறார் என்று நான் கேள்விப்பட்டேன். அவர் நாடியைப் பிடித்துப் பார்க்கும்போது, கண்ணிமையைப் பார்க்கும்போது, விழிகளில் அசைவைப் பார்க்கும்போது அப்படித்தான் தோன்றியது. அதிகம் தனக்குள் பேசுகிறவர்களின் விழிகள் நிலைத்து நிற்காது. பித்தநாடி தூக்கலாகவே இருக்கும். எவருக்கெல்லாம் நிதானம் தவறுகிறதோ – அவருக்கெல்லாம் பித்தம் தலைக்கேறி விடும்."

"சிற்றப்பா... இந்தக் கோயிலுக்கு நிறைய நிவத்தங்கள் விட்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. மலர் மாலையைப் பாருங்கள் – எவ்வளவு அடர்த்தியாகக் கட்டியிருக்கிறார்கள். கீழெல்லாம் தானியங்கள் வேறு இறைந்திருக்கின்றன. தானியத்தால் அபிஷேகம் செய்திருப்பார்களோ..."

"இல்லை. காளிக்குமுன் தானியங்கள் கொண்டு வந்து படியளந்து கொடுத்து விட்டுப் போயிருப்பார்கள்."

"யார்?"

"வேளாளர்கள், நேர்ந்து கொண்டவர்கள் அப்படிச் செய்வது வழக்கம்."

"அதாவது அரசரைத் தவிர மக்களும் காளியை போஷிக்கிறார்களா..."

"வெகுநிச்சயமாய் அரசன் கட்டடம் கட்டித் தருவான். வேலையாட்களை நியமிப்பான். அந்த வேலையாட்கள் கிராமங் களிலிருந்து தானியங்களை, பொற்காசுகளை வசூல் செய்து கொள்வார்கள்."

"அப்படியானால், இது செழிப்பான கோயிலா சிற்றப்பா... துர்கா அருகே நெருங்கிக் கொண்டு கேட்டான்.

"மிக நிச்சயமாய் செழிப்பான கோயில்தான்."

"நாமும் ஏன் இப்படிச் சிலைகளை வைத்து பூஜை செய்யக்கூடாது..." சாயா வியப்போடு கேட்க மலையனூரான் எனப்படும் சாம்பான் வாய்விட்டுச் சிரித்தான்.

"உங்களில் யாரேனும் இந்தக் கேள்வியைக் கேட்க மாட்டீர்களா என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். சாயா... நீ கேட்டு விட்டாய்.

சாயா, நாம் அந்தணர்கள். நமக்கு உருவ வழிபாடு முக்கியமில்லை. ஆகம விதிகளைக் கடைப்பிடிக்கிறவர்கள்,

வேதமறியா அந்தணர்கள். நாம் வேதம் தெரிந்தவர்கள். வேதத்திலும் மிக முக்கியமாக இருக்கின்ற அதர்வண வேதத்தை மிகத் தெளிவாகக் கற்றவர்கள், அதன் மூலம் நாம் சூட்சுமத்தில் இருக்கின்ற சக்திகளைத் தொடர்பு கொண்டு, அந்தச் சக்திகளின் மூலம் இறைவனை அடைய முயற்சிக்கிறவர்கள். இப்படிக் கல்லை வழிபட வேண்டிய அவசியம் நமக்கு ஒன்றுமே இல்லை."

"அப்பொழுது யார் கல்லை வழிபடுகிறார்கள்?"

"எவருக்கு வைராக்கியம் இல்லையோ, எவருக்குப் புத்திக்கூர்மை இல்லையோ, எவரால் வேதபாராயணம் செய்ய முடியவில்லையோ, எவரால் மந்திர ஜபத்தைக் கைக்கொள்ள முடியவில்லையோ, எவரால் குறுக்கு நிமிர்த்தி மணிக்கணக்கில் உட்கார்ந்து, தன்னுள் தன்னைப் பார்க்க முடியவில்லையோ அவர்கள் பக்தி என்கிற பெயரில் வெறும் விக்கிரக வழிபாடும், அந்த விக்கிரகத்துக்கு அபிஷேக ஆராதனைகளும் செய் கிறார்கள்.

அப்பொழுதும் மனம் அலைபாயும். அபிஷேகம் செய்வதால் மனம் குவிந்து விடாது. மந்திரஜபம் மட்டுமே இறைவனிடம் சேர்க்கும். அந்த மந்திரஜபம், சூட்சும சக்திகளை நமக்கு அருகே கொண்டுவந்து கொடுக்கும். அந்தச் சக்திகள் நமக்கு இறைவனிடம் போவது எப்படி என்பதைத் தெளிவாக்கி விடும்."

"சிற்றப்பா இதுதான் நம் பரம்பரை வழக்கமா..."

"ஆமாம்."

"இப்படிப்பட்ட நல்ல வழக்கம் இருந்தும் நாம் தோற்றுப் போயிருக்கிறோமே... ஏன் சிற்றப்பா?" துர்கா கவலையோடு கேட்டான்.

சாம்பான் முகம் திருப்பிக் கொண்டான். வெகுதூரம் பார்த்தான். சிறிதுநேரம் அவன் பேசவே இல்லை. அவன் பார்வை தொலைதூரத்திலேயே நிலைத்திருந்தது.

## 30

திருவக்கரை வக்ரகாளி சந்நிதியில் சாம்பான் நிமிர்ந்து கல் போல் அமர்ந்திருந்தான். மற்ற மூவரும் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"ஏன் சிற்றப்பா... துர்கா கேட்ட கேள்விக்கு நீங்கள் ஏன் பதில் சொல்லவில்லை. நம்முடைய வழிமுறை தவறா... இராஜராஜனிடம் நாம் ஏன் தோற்றுப் போனோம். சிற்றப்பா?" சாயா கேட்டான்.

"இல்லை சாயா. நம்முடைய வழிமுறை மிக உயர்வான வழிமுறை. ரிக், யஜுர், சாம வேதத்தைவிட அதர்வண வேதம் வெகு கூர்மையான சக்தி வெகு விரைவாகச் செயல்படக் கூடிய ஒரு சக்தி. சூட்சும சக்திகளை அது நமக்கு அருகில் வெகு விரைவில் கொண்டு வந்து விடுகிறது. அதேநேரம் அந்த சூட்சும சக்திகளைத் திருப்திப்படுத்துவது என்பது எளிதான காரியமல்ல. தவறே செய்யாதிருக்கும் பொழுதுதான் இந்த விஷயங்கள் நன்கு பலிதமாகின்றன. தவறு செய்து விட்டால் சகலமும் தலை கீழாகப் போய் விடுகின்றன."

"அப்படியானால் எங்கோ, ஏதோ தவறு நிகழ்ந்து விட்டதா சிற்றப்பா..." காளிதாஸன் அருகே நெருங்கி வந்து கேட்டான்.

"ஆமாம் குழந்தாய். நம்முடைய பரம்பரையில் சில தவறுகள் ஏற்பட்டுவிட்டன. பெண்கள் விஷயத்தில் சில பல கீனங்கள் ஏற்பட்டுவிட்டன. பெண்களும் பலவீனமாகி விட்டார் கள். இடைவிடாது மந்திர ஜபம் செய்து கொண்டிருக்கிற வீட்டில் கள்ளத்தனம், ஒழுக்கக் கேடு நடந்தால் அந்த வீட்டின் நிலைக்கதவு அசைத்துப் பிடுங்கப்படும். ஓடுகள் சரிந்து விழும். துர்வாசனை வீசும். அப்படி சூட்சும சக்திகள் கோபப்படும்படி சில விஷயங்கள் நடந்துவிட்டன. என்ன என்பது முக்கிய மில்லை. அதர்வண வேதத்தைக் கைக்கொண்டு அதில் ஈடுபடுகிறவர்கள் கடும் ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும்.

"ஒழுக்கம் என்பதை பெண்களோடு உண்டான தொடர்பு என்று சொல்கிறீர்களா சிற்றப்பா..."

"எந்தப் பெண்களோடு என்பது மிக முக்கியம் சாயா. கணிகைகளிடம் அதர்வண வேதக்காரன் காசு கொடுத்துப போய்வரலாம். தன் மனைவியோடு எப்பொழுது வேண்டு மானாலும் சந்தோஷமாக இருக்கலாம். ஆனால் மாற்றான் மனைவியைத் தனக்கு இருக்கின்ற சக்திகளைக் கொண்டு ஏமாற்றி மயக்கி, அவளை அனுபவிக்கிற போது, அவள் எழுந்து நின்று மண்வாரித் தூற்றுகிறபோது வீடு குலைந்து போய் விடுகிறது..."

"அப்படி யாரும் நம் குடும்பத்தில் செய்துவிட்டார்களா..." சாயா கன்னத்தில் கை வைத்துக் கேட்டான்.

"ஆமாம். அப்படிச் செய்து விட்டார்கள்..."

"யார் சிற்றப்பா..."

"யாரென்பது முக்கியமில்லை சாயா. நீ செய்யக்கூடாது என்பதுதான் முக்கியம்..."

"என்ன நடந்தது சிற்றப்பா. விரிவாகச் சொல்லுங்களேன்..." காளிதாஸன் வெகு அருகே வந்து கேட்டான்.

"வெகுநாளைக்கு முன்பு, உடையார்குடி முழுவதும் நமது சொல்பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தபோது, பிரம்மாதிராயர் என்கிற பட்டத்தோடு கிட்டத்தட்ட ஒரு சிற்றரசராக நமது ரவிதாஸர் கொலு வீற்றிருந்தபோது, கண்ணுக்கு எட்டிய தூரம் வரை வயலும் மற்ற தோட்டங்களும் நமக்குச் சொந்தமாக இருந்தபோது, நாம் எது கேட்டாலும் கொண்டு வந்து கொடுக்க உடையார்குடியும் சுற்றுப் புறங்களும் தயாராக இருந்த போது, நம்முன் மண்டியிட்டு வணங்கி ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ள அரசரும், அரசரின் துணைவியாரும் வரும்போது இங்கே சில தவறுகள் ஏற்பட்டுவிட்டன.

அரசரின் துணைவியாருக்கு ஏதோ மனக்கசப்பு இருந்திருக்கிறது. உத்தம சோழருக்கு ஐந்து மனைவிகள். ஐந்து மனைவிகளுக்குள்ளும் பிணக்கு இருந்திருக்கிறது. அதில் நான்காவது மனைவி மிகவும் வேதனைப்பட்டு, நம் குடும்பத்தில் ஒருவனிடம் நெருங்கி இதைத் தீர்க்க வேண்டும் என்று சொன்னபோது, சேர தேசத்தைச் சேர்ந்த அந்த அழகிய பெண்ணின் வனப்பிலே மனதைப் பறிகொடுத்துவிட்டு, அவளை மயக்கமடையச் செய்து அவன் அவளைக் கபளீகரம் செய்துவிட்டான்.

யார் என்ன செய்ய முடியும் என்கிற அகம்பாவம்; எதுவும் செய்ய முடியாது என்கிற திமிர்; விழித்தெழுந்து அந்தப் பெண்மணி பயந்து போய் எவருக்கும் சொல்லாமல் தனியே போய்விடுவாள் என்கிற எண்ணம் – அவ்விதம் நடந்து கொண்டு விட்டான்.

ஆனால், விழித்தெழுந்த பிறகு அந்தப் பெண்மணி மன்னரிடம் சொல்ல, மன்னர் கோபப்பட, 'அவள் உங்களுக்கு விஷம் கலக்கத் துணிந்தாள். எனவேதான் அவளுடைய

உடம்பிலே இருக்கின்ற பொறாமையை, வஞ்சனையை வெளியேற்றக் கருதி அவளை நிர்வாணமாக்கி உடம்பை மயிலிறகால் வருடினோம்' என்று பொய் சொல்லிவிட்டார்கள்.

'அவளோடு கூடவே இல்லை' என்று சோழதேசத்தின் மீது சத்தியம் செய்தார்கள். அந்தப் பெண் மீது அபாண்டமாய் பழி சொன்னார்கள். உத்தமசோழர் தன் மனைவியை ஒதுக்கி வைத்துவிட்டார். அந்தத் தெருவில் நின்று அவள் நம் வீட்டின் மீது மண் வாரி வீசினாள். அவள் அப்படி மண் வீசிய ஏழாம் வருடம் நம் வீடு நம்மிடமிருந்து பறிபோயிற்று..."

"உங்களுடைய அண்ணா ரவிதாஸர் எதுவும் சொல்லவில்லையா சிற்றப்பா..." – பரமேஸ்வரனின் மகனான காளிதாஸன் கேட்டான்.

"வேகமாக நடவடிக்கை எடுத்தால் குடும்பம் பிளவுபடும். சிதறும். கட்டுக்கோப்பு உடையும், ஒரு குடும்பமாய், ஒற்றுமையாய் இருக்கிற பொழுதுதான் சோழ தேசத்தின் அரசியலையே நாம் ஆட்டிப் பார்க்க முடிந்தது. சோழமன்னரையே காலில் வந்து விழ வைத்தது. சோழ தேசத்தின் மன்னருக்கு எதிராக இருப்பவர்களை ஓரமாக வைக்க முடிந்தது. இந்தக் கட்டுக்கோப்பு கலையக்கூடாது என்று பெரியமனது செய்து தவறு செய்தவரை மன்னித்து விட்டார்.

மந்திர உச்சாடனம் செய்கிறவன் பெண் சாபத்தைப் பெறவே கூடாது. வேறுவிதமாகச் சொல்வதென்றால், ஒரு குடும்பத்தை நிர்மூலப்படுத்த வேண்டும் என்றால், அந்தக் குடும்பம் பெண் சாபம் பெற்றால் போதும், அந்தக் குடும்பம் மண்ணோடு மண்ணாகப் போய்விடும்..."

அந்த மூன்று பேரும் சாம்பானை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சாயா பளிச்சென்று முகம் மலர்ந்தான். முகம் மலர்ந்த சாயாவை சாம்பான் உற்றுப் பார்த்தான்.

"எனக்குப் புரிந்து விட்டது சிற்றப்பா..." சாயா உரக்கச் சொன்னான்.

"எதனால் நம் குடும்பம் அழிந்ததோ, அதனாலேயே சோழ சாம்ராஜ்யத்தை மறுபடியும் அழிக்க நீங்கள் முயற்சி செய்கிறீர்கள். மாமன்னன் இராஜராஜ சோழனின் குடும்பத்தை நிர்மூலம் செய்ய ஒரு பெண் தேடி இங்கு வந்திருக்கிறீர்கள் சரியா சிற்றப்பா..."

சாம்பான் சிரித்தான். மெல்ல கைநீட்டி, சாயாவின் தலையில் கைவைத்தான். 'ஜெய விஜயீ பவ' என்று குரல் கொடுத்தான்.

"கெட்டிக்காரன். நீ சொல்வது சரி. நாம் கொல்லிமலையில் யாகம் செய்து கொண்டிருக்கிறோம். நம்மால், படைகளைத் திரட்டி நம்முடைய தலைவர் ரவிதாஸனும், பரமேஸ்வரனும் தண்டிக்கப்பட்டதற்கு, நம் குடும்பத்துப் பெண்களும், கிழவர்களும், குழந்தைகளும் தெருவிலே அடித்து விரட்டப் பட்டதற்குப் பழிவாங்க முடியாது. நமக்கு அந்த வலிவு இல்லை.

நம்முடைய வலிவு மந்திர உச்சாடனம். யாக பூஜை. தந்திர உபாசனை. எனவே, கொல்லிமலையில் ஒரு வருடமாய் இடைவிடாது இராஜராஜனைச் சரிப்பதற்கு, அவன் உடல் நலத்தைக் குலைப்பதற்கு. அவன் வீட்டுக்குள்ளே குழப்பம் ஏற்படுத்துவதற்கு நாம் சக்திகளை ஏவிக்கொண்டு இருக்கிறோம். தேசம் முழுவதும் பலவீனப்பட்ட பெண்களைக் கலந்து கலவரம் உண்டு பண்ணவும் சூட்சும சக்திகளை ஏவிக் கொண்டிருக் கிறோம்.

சாயா... அந்த யாகம் பூர்த்தியாகின்ற நிலையிலே இருக்கிறது. ஆயிரம் இருப்பினும் நம்மீதும் தவறு இருப்பதால், முழு உக்கிரத்தோடு அந்த ஹோம குண்டத்தில் மிளகாய் வற்றலை அடித்து இராஜராஜனை ஒழியச் செய்ய முடிய வில்லை. அந்த மனவலிவு நமக்கு இல்லை.

உண்மையிலேயே இராஜராஜனால் பாதிக்கப்பட்டவர்கள், கருமிளகு எடுத்து ஹோம்குண்டத்தில் வீசி எறிந்தார்கள் என்றால், முழு ஆத்திரத்தோடு அடித்தார்கள் என்றால், அதிலிருந்து கிளம்பும் புகையைச் சூட்சும சக்திகள் உருவிக் கொண்டு, யார் இந்தக் கெடுதலைச் செய்தார்களோ அவர்கள் முகத்திலே உமிழ்ந்து விடும்.

மிகவும் யோசித்து ராஜராஜனுக்கு எதிராக மகாராணி செம்பியன் மாதேவி இருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்டு அவளைக் கொல்லிமலைக்கு அழைத்துப்போகவே இங்கு வந்திருக்கிறேன்..." மலையனூரான் என்கிற சாம்பான் சொன்னான்.

"இது நடக்குமா சிற்றப்பா..."

"எது நடக்குமா என்று கேட்கிறாய் காளிதாஸா...

"மகாராணியார் கருமிளகு அடித்தால் ராஜராஜன் மாண்டு போவரா?"

"நம் வீட்டு வாசலில் மண் எறிய, நாம் சரிந்து போகவில்லையா... அவர்கள் குடும்பத்திலிருந்து ஒரு பெண் கருமிளகு எடுத்து அடித்தால் இராஜராஜன் குடும்பம் சிதறாதா... அப்பனுக்கும் பிள்ளைக்கும் சண்டை ஏற்படாதா... அவனுடைய வலது கையும், வலது காலும் கடுமையாய் பாதிக்கப்படாதா. பேச்சு குழறாதா... புத்தி பிசகாதா. எனவே, நாம் தாக்கப்பட்ட வலி. ஆகவே அவனையும் தாக்க இந்தக் கிழவியை நாம் அழைத்துப் போக வேண்டும்..."

"இந்தக் கிழவியை அழைத்துப் போவது அவ்வளவு எளிதா சிற்றப்பா..." சாயா கேட்டான்.

"மிக எளிது. அதற்கென்று தனியே வசிய மந்திரம் இருக்கிறது. அந்த வசிய மந்திரத்தை நான் அவளுடைய உணவிலே கலந்து விட்டேன். அதற்காகத்தான் உணவு உண்ணும் நேரம் பார்த்து இங்கு வந்தேன். இன்று இரவு நடுநிசியில் செம்பியன் மாதேவி தன் இடம் விட்டு நகர்ந்து விடுவார். எனக்குச் சந்தேகம் இல்லை..."

அவர்கள் தூணில் சாய்ந்து உட்கார்ந்தபடியே கண்மூடி ஓய்வெடுத்துக் கொண்டார்கள்.

மாலை நேரம் கிணற்றடியில் குளித்துவிட்டு, அங்குள்ள பாறைக்கற்களில் தோல் பரப்பி உட்கார்ந்து ஜபம் செய்யத் துவங்கினார்கள்.

"எனக்கு ஒரு குறை இருக்கிறது..." சாயாவின் முகத்தைக் கவனித்துவிட்டு, ஒரு வாளிப்பான இளம் பெண் அவன் காலில் பணிந்து நின்று கைகூப்பினாள். சாயா மனதை இறுக்கிக் கொண்டான். 'என்ன' என்று கேட்டான்.

"திருமணமாகி நான்கு வருடங்கள் ஆகிவிட்டன. பூப்படைந்து ஐந்து வருடம் ஆகிவிட்டது. இன்னம் குழந்தைப்பேறு இல்லை. என் கணவர் இரண்டாம் திருமணம் செய்யப் போகிறேன் என்கிறார். அப்படிச் செய்தால் என் நிலைமை இன்னமும் மோசமாகிவிடும். வாழ்க்கையில் பிடிப்பு வர, எனக்குக் குழந்தைப்பேறு ஏற்பட நீங்கள் ஏதேனும் மருந்து

தர வேண்டும்” கண்களில் நீர் வர அந்தப் பெண் சாயாவை நோக்கிக் கேட்டாள்.

சாயா மனம் ஒருமித்து தன்னுள் பார்த்தான். விடை தேடினான். அவள் கருப்பை இயல்புக்கு மாறாய் சற்று மேலே இருந்தது என்பதை அவனால் உணர முடிந்தது.

இடுப்பிலிருந்து கத்தியை உருவினான். தன் நீள சடாமுடி ஒன்றை உச்சியில் அறுத்தான். சுருட்டினான். நெற்றியில் சிறிது நேரம் வைத்துக் கொண்டான். கத்தியை மடக்கி இடுப்பில் செருகிக் கொண்டான். அந்தப் பெண்மணியை நோக்கி புன்னகையோடு ஆசீர்வதித்தான்.

“நல்லது சகோதரி. உன்னுடைய குறை என்னவென்பதை நான் உணர்ந்துவிட்டேன். இதோ, இது என்னுடைய சடாமுடி. இதை எந்த நேரமும் இடுப்பில் இறுக்கிக் கட்டிக்கொள். இப்படி இறுக்கிக் கட்டிக்கொள்வதால் உன்னுடைய கருப்பை வேறுவிதமான நிலைக்கு நகரும். அந்த நிலைக்கு நகர்ந்த பிறகு, ஒரு மூன்று மாதத்திற்குள் உனக்குக் கரு உற்பத்தி ஏற்படும். நிச்சயம் உனக்குக் குழந்தைப் பேறு உண்டாகும். கவலை வேண்டாம். ஜெய விஜயீ பவ...” என்று வாழ்த்தினான்.

“ஐயா... என் பொருட்டு உங்களுடைய சடாமுடி ஒன்றை அறுத்துக் கொடுத்தீர்களே. உங்களுக்குப் பதிலுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன். உங்கள் பாதம் தொட்டு...” என்று அருகே வந்தாள்.

“நில். மறந்து போயும் என்னைத் தொட்டுவிடாதே. உனக்கு அது நல்லதல்ல. விலகிப் போ. உனக்குக் கடவுள் துணையிருப்பார். பராசக்தி வக்ரகாளியைத் தினமும் பெருக்கி, மெழுகி சுத்தமாக வைத்திரு. அந்த சேவைசெய்து கொண்டிரு போ. முடிந்த போதெல்லாம் நறுமணப் புகை போட்டுக் கொண்டிரு. அது போதும். ஜெய விஜயீ பவ...” என்று அவளை விலக்கினான்.

அந்தப் பெண் சந்தோஷமாகக் கோவிலுக்குள் ஓடினாள்.

சாம்பான், சாயாவைத் திரும்பிப் பார்த்தான்.

“சாயா... உன்னைப் பார்க்கிற போது என் அண்ணன் ரவிதாஸனைப் பார்ப்பதுபோலவே இருக்கிறது. எவ்வளவு அழகாக அந்தப்பெண்ணைப் புறக்கணித்தாய். உன்னைத் தலைவனாக நம் குடும்பங்கள் ஏற்று, மறுபடியும் ஒரு

உச்சநிலைக்கு நாம் வருவோம் என்று நினைக்கிறேன். ஜெய விஜயீ பவ...” சாம்பான் நிதானமாகச் சொன்னான்.

அந்த நால்வரும் மறுபடியும் கண்ணை மூடி ஜபம் செய்யத் துவங்கினார்கள். மெல்ல இருட்டத் துவங்கியது.

சேடிப்பெண் விசிறிக் கொண்டிருக்க, செம்பியன்மாதேவி தன்னை மறந்து கண்ணயர்ந்தார். தூக்கத்திற்குள் ஆழ்ந்து போகும்போதே கனவு முளைத்தது. அவருடைய பதின்மூன்று வயது ஞாபகம் வந்தது.

“ஏதோ யுத்த களம். கண்டராதித்தர் முன்னே குதிரையில் செல்ல, இவள் பின்னே சிறு தேரில் விரைகிறாள். உட்கார சிறிய இடமும், பிடித்துக் கொள்ள நடுத்தடியும்தான் இருக்கின்றன. அவளுடைய கணவர் கண்டராதித்தர் அளவுக்கு அவள் பயணிக்கும் சிறுதேரின் வேகம் போதவில்லை. தேர் ஓட்டு பவனுக்குத் திறமை போதவில்லை.

“போ, வேகமாகப் போ...” அவள் பதட்டமாய் கூவ, “அவ்வளவுதான் முடியும்...” தேரோட்டி குரல் கொடுக்கிறான்.

‘அந்தக் குரல் அவள் மகன் உத்தம சோழன் குரலாக இருக்கிறது. முதுகு உத்தமசோழன் முதுகாக இருக்கிறது. அவன் மீது லேசாய் சினம் வருகிறது.

தேர் நடுக்காட்டில் நின்று விடுகிறது. உத்தமசோழனின் மனைவியர் ஆரத்தியெடுத்து செம்பியன் மாதேவியை வரவேற்கிறார்கள்.

‘அம்மா, அம்மா’ என்று கொஞ்சுகிறார்கள். தலையில் மலர் தூவுகிறார்கள்.

ஆனால், கண்டராதித்தரைக் காணவே காணோம். அவர் மேற்கே வெகுதூரம் போய்விட்டதாய்ச் சொன்னார்கள். இனி வருவதற்கு வாய்ப்பே இல்லை என்று சொன்னார்கள்.

அந்தக் காட்டில், அவளுக்குத் தெரிந்தவர்கள் கூச்சலாய் அவளை வரவேற்றாலும், கண்டராதித்தர் அங்கு இல்லாதது அவளுக்குத் துக்கமாக இருந்தது.

“கண்டராதித்தர் எங்கு போனார்?”

“மேற்கே போய்விட்டார். திரும்பி வர மனமில்லாமல் மேற்கெழுந்தருளி விட்டார்...”

"ஏன் அப்படி..." செம்பியன் மாதேவி பயந்து பயந்து கேட்டாள்.

"உன்னையும் உன் பிள்ளையையும் பார்க்கச் சகிக்காமல் சகலமும் துறந்து தேசம் விட்டு வெளியேறி விட்டார்."

உத்தம சோழனின் மனைவியருள் ஒருத்தி உரக்கக் கத்தினாள். சொன்னவள் மீது செம்பியன் மாதேவிக்குக் கோபமும் வந்தது. பயமும் வந்தது.

"அடி நாயே..." உத்தமசோழன், குறை சொன்ன மனைவியை வெட்டப் போனான்.

செம்பியன்மாதேவி, 'ஐயோ' என்று கத்தினாள். அவளின் கனவு கலைந்தது.

## 31

'சோழ தேசத்தின் சூரிய வெளிச்சமான இராஜேந்திர சோழ உடையார் அவர்களுக்கு...

ஒற்றர்படைத் தலைவன் கடுவன்காரியின் சாஷ்டாங்க நமஸ்காரம். தேவரடியார்கள் கூட்டத்துடன் நலமே பழமர்நேரி வந்து சேர்ந்தேன். இங்கே அரசர் தேவரடியார்களை எதிர் கொள்ள, வரைபடங்கள்அடங்கிய பெட்டிகள் கைமாறின.

சேனாதிபதி பிரம்மராயரும், அவருடைய வேவுப்படைக் கூட்டமும் அரசருக்கு அருகேதான் இருக்கின்றன. அரசரைச் சுற்றிய மெய்க்காவல்படை மிக கவனமாகவும், கடினமாகவும் இருக்கின்றது. அரசரைத் தொலைவிலிருந்து உற்றுப்பார்த்தால் கூட என்ன என்று கேட்கிறார்கள். அவர்கள் சொல்லுமிடத்தி லிருந்து பார்க்கச் சொல்கிறார்கள்.

அரசரோடு பஞ்சவன்மாதேவியும், அவரது தோழிகளும் இருக்கிறார்கள். அவர்கள் அறியாமல் தொடர்ந்து பின்னே போய் வேவு பார்த்ததில், அரசருக்கு மெல்லியதாய் ஒரு உடல்நலக் குறைவு ஏற்பட்டதைக் காண முடிந்தது. வயிறு புரட்டி வாயிலெடுத்தார்.

எனவே, பொதுமக்கள் எவரையும் சந்திக்கக்கூட விடாது. அரசரைத் தேரிலேற்றி தஞ்சையை நோக்கிப் பயணப்படுங்கள் என்று சொல்லிவிட்டார்கள். தஞ்சையிலுள்ள அரண்மனையில் மிக கவனமாய் வைக்கப் போகிறார்களாம். மெய்க்காவல் படையின் குரலே அதிகம் ஒலித்துக் கொண்டிருக்கிறது. தஞ்சை அரண்மனையிலிருந்தபடியே கோயில் வேலைகளை அரசர் நல்ல நாள் பார்த்து துவக்கி விடுவார் என்று சொல்கிறார்கள்.

இதுவரை சிற்பிகளோ, கல்தச்சர்களோ தஞ்சைக்கு வரவில்லை. இந்த வரைபடங்களை மன்னர் பார்த்து ஒரு முடிவுக்கு வந்தபிறகு, அவர்களுக்கு ஓலை அனுப்பப்படும் என்று தெரிகிறது. யார் என்ன சொன்னாலும், எவர் எப்படித் தடுத்தாலும் மன்னர் கோயில் கட்டுவதில் உறுதியாக இருக்கிறார்.

சோழதேசம் முழுவதும் பரவலாக மழை பெய்திருக்கிறது. காவிரி மார்பளவு புரண்டு ஓடுகிறது. இரண்டாம் போகம் வளர்ந்து, கதிர்கள் பால் பிடிக்கத் துவங்கி விட்டன. கரும்பு வகையறாக்களை அதிகம் பயிர் செய்து கொண்டிருக்கிறார்கள். கால்நடைகள் பெருகி, விரவிக் கிடக்கின்றன. மக்கள் சந்தோஷமாய் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

பிரம்மராயர் உடையாளூருக்குப் பயணப்பட்டிருக்கிறார் என்பதை அவர் வீட்டிலுள்ளோர் மூலம் அறிந்தேன். உடையாளூரில் தான் கருவூர்த்தேவர் அமர்ந்திருக்கிறார். கருவூர்த்தேவரோடு சேனாதிபதி பிரம்மராயரின் மகன் அருண்மொழியும் உடன் இருக்கிறான். மிக ரகசியமாய் அவனுக்கு ஏதோ பயிற்சி கொடுப்பதாக இங்கு பேசிக் கொள்கிறார்கள்.

பஞ்சவன்மாதேவியின் கொடி பட்டொளி வீசிப் பறக்கிறது. அரசரை அவர் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்கிறார். அரசரின் மற்ற மனைவியர் பழையாறையிலும், தஞ்சையிலும் இருப்பதாகக் கேள்விப்படுகிறோம்.

மூதாட்டியார் செம்பியன்மாதேவியார், திருவக்கரை கோயிலில் வக்ரகாளி அம்மனுக்குக் கற்றளி எழுப்பி கடுந்தவம் செய்துகொண்டிருப்பதாகவும், இருமல் ஈளையால் பாதிக்கப் பட்டு அவஸ்தைப்படுவதாகவும், மருந்துகளில் குணமாகாமல் புலம்பிக் கொண்டிருப்பதாகவும், தனித்துப் பேசிக் கொண் டிருப்பதாகவும் இங்கு நம்மைச் சார்ந்த ஒரு ஒற்றன் கூறினான்.

உங்களுடைய ஒற்றர்படை அரசரைச் சுற்றிலும், தஞ்சையைச் சுற்றிலும் வெகுபலமாய் ஊன்றப்பட்டிருக்கிறது. தஞ்சையின் அதிகாரிகளோடு பேசிப் பார்த்ததில் அவர் களுக்கும் அரசர் கோயில் கட்டுவதில் விருப்பமில்லை என்று தெரிகிறது. பகல், இரவு தூங்கமுடியாமல் கூடுதல் பொறுப்புகள் வந்து சேரும் என்று சலித்துக் கொள்கிறார்கள்.

போர் ஒரு பழக்கமான விஷயம். துணிந்து இறங்கி, சில நாழிகைகள் வேகமாகப் போரில் ஈடுபட்டால் வெற்றி அல்லது வீரமரணம் என்று தெரிந்துவிடும். பிறகு வெற்றிக்கு ஏற்றபடியோ., வீரமரணத்திற்கு ஏற்றபடியோ வாழ்க்கை அமைந்துவிடும்.

ஆனால் வருடக்கணக்கில் மெல்ல மெல்ல எழுப்ப வேண்டிய கோயிலை முதன்மையாக வைத்துக் கொண்டால் வேறு விஷயங்கள் ஏதேனும் செய்யமுடியுமா என்பது பற்றிக் கவலையாக இருக்கிறது என்று பேசிக் கொள்கிறார்கள்.

அந்தணர் குடியிருப்புகளிலும் இதுபற்றிய சிறிய சலிப்பை நான் உணர்ந்தேன். 'இது அவசியமில்லையே... அக்னி போதுமே. அதைவிட உயர்ந்த விஷயம் வழிபடுவதற்கு உண்டா' என்று ஒரு தலைமை அந்தணர் கேட்க, மற்றவர்கள் தலையாட்டுவதை நான் நேரில் பார்த்தேன்.

தஞ்சையின் மூலப் பண்டாரம் முழுவதும் இடம் மாற்றி, வேறு எங்கோ ரகசியமாய் வைக்கப்பட்டதாய் ஒரு செய்தி கிடைத்தது. இது எவ்வளவு உண்மை என்று தெரியவில்லை. மூடி போட்ட பல்லக்கு வண்டிகளில் பொற்காசுகளை இடம் மாற்றி யிருக்கலாம் என்று நமது ஆள் சொல்கிறான்.

என்னை இதுவரை யாரும் சந்தேகிக்கவில்லை. ஆனால் மிக கவனமாய் என்னைப் பின்தொடர்ந்து வருகிறார்கள். நான் எழுதப் படிக்கத் தெரியாத வெறும் காவலாளியாய் நடித்து வருகிறேன்.

தொடர்ந்து மாமன்னரைப் பற்றி உங்களுக்குத் தகவல் அனுப்புகிறேன். மாமன்னர் திருவையாறிலிருந்து தஞ்சை நோக்கிக் கிளம்பிவிட்டார். நான் இரண்டு நாள் இடைவெளி விட்டு பிரம்மராயரின் அசைவுகளைத் தெரிந்துகொண்டு, பிறகு மன்னரைப் பின்தொடர்வேன். தஞ்சையிலிருந்து மறுபடியும்

உங்களுக்கு ஓலை அனுப்புவேன். இவை என் எழுத்து கடுவன்காரி.'

அவன் ஓலைகளுக்கு மஞ்சள் பூசினான். வாங்கி வைத்திருந்த பச்சைக் கற்பூரத்தை மேலே தடவினான்.

ஒரு குதிரையின் சேணத்தைத் திறந்து, அதற்குள்ளே வரிசைக் கிரமப்படி வைத்தான். குதிரைச் சேணத்தை மறுபடி கவனமாகத் தைத்தான்.

அவன் தங்கியிருந்த ஓட்டு வீட்டை விட்டு வெளியே வந்தான். வாசலில் நின்ற இளைஞனிடம் குதிரைச் சேணத்தைக் கொடுத்து, குதிரையைக் கட்டச் சொன்னான்.

அந்தப் பதினேழு வயது இளைஞன் குதிரையில் சேணத்தைப் பூட்ட, கடுவன்காரி, கவனமாகப் பார்த்தான். அந்த இளைஞனைத் தட்டிக்கொடுத்து விடைகொடுத்தான்.

அந்தக் குதிரை, இராஜேந்திர சோழர் இருக்கும் திருவொற்றியூர் நோக்கி மிதமான நடையில் அந்த இளைஞனால் செலுத்தப்பட்டது.

இராஜேந்திர சோழருடைய ஒற்றன் கடுவன்காரி, தான் தங்கியிருந்த வேளாளர் வீட்டிலிருந்து விடைபெற்றுக்கொண்டு, மருவூர் என்கிற அந்தக் கிராமத்தை விட்டு சாலை மீது ஏறினான்.

அந்தச் சாலையோரம் மருவூரின் காவல் தெய்வமான மாயா கொலுவிருந்தாள். சிறிய கோயில் கட்டி, முன்னே மண்டபம் கட்டி, அவளுக்கு நித்தியப்படி சுற்றுப்புற கிராமங்களில் வாழும் மக்கள் வந்து வணங்கி, பூஜை செய்து கொண்டிருந்தார்கள். அவள் அனுமதி பெற்றே ஒவ்வொரு காரியமும் நடத்தி வந்தார்கள். முழங்கை உயரமுள்ள தீர்க்கமான அமைப்புள்ள மாயா சிரித்துக் கொண்டிருந்தாள்.

கடுவன்காரி கோயிலுக்குள் நுழைந்தான். இடுப்பில் துண்டு கட்டிக் கொண்டான். சட்டியில் வைத்திருந்த திருநீறை எடுத்து நெற்றியில் பூசிக் கொண்டான்.

"தாயே... சோழ தேசத்தவனாயினும், சோழ மன்னரை வேவு பார்க்கின்ற வேலை எனக்குக் கொடுத்திருக்கிறாய். அப்பாவையும், பிள்ளையையும் என்னுடைய தலைவர்களாக, தெய்வங்களாகக் கொண்டிருப்பினும், மகனுக்காகத் தந்தையை வேவு பார்க்கின்ற ஒரு இடத்தை அளித்திருக்கிறாய்.

இராஜேந்திர சோழரின் வளமான எதிர்காலம் கருதி, சோழ தேசத்தின் சிறப்பான எதிர்காலம் கருதி, இந்த வேலையை நான் தொடர்ந்து செய்ய இருக்கிறேன். உன்னைப் பற்றிப் பலபேர் புகழ்ந்து சொல்லக் கேட்டிருக்கிறேன். நீ ஒரு பிரியமுள்ள காவல் தெய்வம்., பக்தர்களின் வேண்டுதலை உடனடியாய் நிறைவேற்றுகின்ற தேவதை என்று புகழக் கேட்டிருக்கிறேன்.

தாயே... என்னால் மன்னருக்கோ, மன்னரின் மகனான இராஜேந்திர சோழருக்கோ எந்த தொந்தரவும் ஏற்படாது. இயன்றவரை இந்தச் சோழதேசத்துக்கு நன்மை செய்கின்ற ஒரு வாழ்க்கையை எனக்குத் தர வேண்டும்.

என்றைக்கு ஒற்றர் படையில் சேர்ந்தேனோ, அன்றே குடும்பம் என்பதையும், குழந்தைகள் பெறுவது என்பதையும் நான் மறந்து விட்டேன். இவைகள் இருப்பவனால் சிறந்த ஒற்றனாக இருக்க முடிவதில்லை.

இவையற்று தனியே திரிகின்ற எனக்கு தாயே... நீயே துணை. நீயே ஆறுதல். அடுத்து நான் செய்யும் காரியங்களில் எனக்கு அருகேயிருந்து என்னை ஆசீர்வதிக்க வேண்டும். வாழ்க சோழ தேசம். வாழ்க சோழமன்னர் இராஜராஜர். வாழ்க இளவரசர் இராஜேந்திரத் தேவர். அம்மா மருவூர் மாயா... நீயும் வாழ்க..." நெடுஞ்சாண்கிடையாய் விழுந்து வணங்கினான். வாசலுக்கு வந்தான். படகோட்டி தொலைவில் மரத்தடியே நிற்பது தெரிந்தது. அவனை நோக்கி நடக்கத் துவங்கினான்.

தன்னை நோக்கி கடுவன்காரி வந்ததும், படகோட்டி தோப்புக்குள் நுழைந்தான். இருவரும் சற்று அமைதியான இடத்திற்குப் போனதும் அருகருகே நின்றுகொண்டார்கள்.

"என்ன விஷயம்..." கடுவன்காரி கேட்டான்.

"எல்லோரிடமும் சொல்லிவிட்டேன். மொத்தம் முப்பத்தி ஆறு பேர். அனைவரும் உங்களைப் பார்க்க ஆசையாக இருக்கிறார்கள்...." கடுவன்காரியின் வினாவுக்கு படகோட்டி பதிலளித்தான்.

"எல்லோரும் நமது ஒற்றர்கள்தானா?"

"ஆமாம் ஐயா... சந்தேகத்திற்கிடமில்லாமல் நமது ஒற்றர்கள்தான்."

“வேறு எவரேனும் இடையில் புகுந்திருக்க வாய்ப்பிருக் கிறதா?”

“இல்லையென்று அடித்துச் சொல்ல என்னால் இயலாது. இப்பொழுது யார் ஒற்றர், யார் சாமான்யர், யார் எவருக்கு ஒற்றர் என்பதைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். இருப்பினும், நமது வேலைகள் எதுவும் சோழதேசத்திற்கு எதிராக இல்லை என்கிற தைரியத்தால் இந்தக் கூட்டத்தைக் கூட்டியிருக்கிறேன். தாங்கள் எப்பொழுது வருகிறீர்கள்?”

“கூட்டம் எங்கே...” கடுவன்காரி கேட்டான்.

“தஞ்சையின் எல்லைப்புறத்தில் கருந்தட்டார்குடி ான்றழைக்கப்படும் கம்மாளருடைய கிராமப் பகுதியில்...”

“அப்படியா... பக்கத்தில் அக்ரஹாரம் ஏதும் இருக்கிறதா?”

“இல்லை. கருந்தட்டார்குடியைச் சுற்றி வேளாளர்களும், போர்வீரர்களும் இருக்கிறார்களே தவிர, அந்தணர்கள் யாரும் இல்லை. எனவேதான் அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தேன்.

“நல்லது. அந்தணர்களை ஒருபோதும் நம்பாதே... அவர்கள் அனேகமாய் பிரம்மராயரின் ஆட்களாகத்தான் இருக்கிறார்கள். பிரம்மராயரின் ஆட்கள் மன்னருடைய ஆட்கள் என்றும் சொல்வதற்கில்லை. அவர்கள் தனிவழியில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சிலசமயம் மன்னருக்கு எதிராகவும் முடிவுகள் எடுக்கிறார்கள். எனவே, நம்முடைய விஷயங்களில் அந்தணர்கள் ஒருபோதும் இல்லாமல் இருப்பதே நல்லது.”

“நீங்கள் எப்பொழுது வரப்போகிறீர்கள்?”

“இன்று இரவு கருந்தட்டார்குடியில் சந்திக்கிறேன். நீ படகைக் கவிழ்த்துவிட்டு முன்னதாக அங்கு போய்விடு...” கடுவன்காரி படகோட்டிக்கு விடைகொடுத்தான்.

முப்பத்தி ஆறு ஒற்றர்கள். இராஜேந்திர சோழரால் சோழதேசத்தையும், மாமன்னரையும் வேவு பார்க்க அனுப்பப் பட்டு, வெவ்வேறு பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிற வர்கள். இன்று ஒன்றுகூடி கடுவன்காரியிடம் பேசப் போகிறார்கள்.

என்ன நடக்கிறது திருவொற்றியூரில்... இராஜேந்திர சோழரின் எண்ணம் என்ன... மாமன்னர் இராஜராஜர் கோயில் கட்டுவதைப் பற்றி என்ன அபிப்ராயம் கொண்டிருக்கிறார்... தொடர்ந்து கோயில் கட்டுகின்ற ஒரு காரியம் நடக்க ஆரம்பித்தால், தஞ்சையினுடைய மாற்றங்கள் எப்படி இருக்கும்... இது சரியா, தவறா என்று அடிக்குரலில் விவாதிக்கப் போகிறார்கள். இந்த விஷயத்திற்குக் கருந்தட்டார்குடி எத்தனை பத்திரமான இடம் என்று தெரியவில்லை.

திருவையாறுக்கும், கருந்தட்டார்குடிக்கும் நடுவே நான்கு ஆறுகளும், மூன்று கால்வாய்களும் இருக்கின்றன. வண்டிகள் வரும் ராஜப்பாட்டை தவிர, மற்றெல்லா இடங்களும் பசுமை யாய்க் கிடந்தன.

நெல்வயல்களில் முழங்கால் சேறு இருந்தது. இந்தச் சேறுதான் சோழதேசத்தின் ஆதாரம். மக்களின் பலம். பரம்பரையின் கலாச்சாரம். ஆட்டமும், பாட்டமும், கல்வியும், கேள்வியும் இந்த விளைநிலங்களால் வளர்க்கின்றன.

ஒற்றன் கடுவன்காரி, தொலைவே நடந்து போகும் படகோட்டியைப் பார்த்துத் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

## 32

இந்தப் படகோட்டி நீலன் மிக கெட்டிக்காரன். அவனும் எழுதப்படிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறான். இளவரசர் இராஜேந்திரர், அவனுடைய கெட்டிக்காரத்தனத்தைக் கண்டு வியந்து, அவனைக் காஞ்சிபுரத்திற்கு அனுப்பி, அவன் வேளாள இளைஞன் என்று சொல்லி, அவனுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்து, மறுபடியும் இங்கே படகோட்ட வைத்திருக்கிறார். இந்தப் படகோட்டிக்கு எழுதப் படிக்கத் தெரியும் என்று சோழ தேசத்தில் யாராலும் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.

இந்தப் படகோட்டி மட்டுமல்ல; இதுபோன்று பலரை இராஜேந்திரர் தயார் செய்திருக்கிறார். இராஜேந்திரரைச் சுற்றி இளமையும், திறமையும், நன்றியும், நம்பிக்கையும் மிக்க ஒரு பட்டாளம் இருக்கிறது. ஏனோ அந்தப் பட்டாளத்தில் ஒரு அந்தணர்கூட இல்லை.

இராஜேந்திர சோழருக்கு அந்தணர்களை அவ்வளவாகப் பிடிப்பதில்லை. அந்தணர்களை அருகே சேர்க்காமலும், அதேசமயம் வெறுப்பை வெளிக்காட்டாமலும் இராஜேந்திர சோழர் ஒரு தன்மையோடு நடந்து கொண்டிருக்கிறார். அவ் விதமே நடந்துகொள்ள வேண்டுமென்று தன் வீரர்களுக்கும் உத்தரவிட்டிருக்கிறார்.

மாமன்னர் இராஜராஜர் அந்தணர்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது இளவரசர் இராஜேந்திரருக்குச் சற்று வருத்தமாக இருக்கலாம்.

அல்லது மாமன்னர் இராஜராஜர் கொடுக்கும் சலுகை களை அதிக அளவில் பயன்படுத்திக் கொண்டு, மற்றவர்களைக் காட்டிலும் தங்களை உயர்வாக நினைக்கின்ற அந்தணர்களின் போக்கு பிடிக்காமல் அவர்கள் மீது கோபமாக இருக்கலாம்.

அல்லது இளவரசர் ஆதித்த கரிகாலனுடைய மரணத் திற்குக் காரணம் உடையார் குடியைச் சேர்ந்த அந்தணர்கள் தான், சேர தேசத்திலிருந்து சோழ தேசத்திற்குக் குடியேறிய அதர்வண வேதம் கற்ற முன் குடுமிச் சோழியர்கள்தான் காரண மென்பதால், அந்தணர்களுக்கு அரசியல் முக்கியத்துவம் அதிகரித்து விட்டது என்ற நிலைமை கண்டு வேதனைப்பட்டு, அவர்கள் ஆயுதங்கள் எடுத்துப் போராடத் துவங்கி விட்டார்கள் என்பதைக் கவனித்து, இதைச் சற்று அடக்கி வைக்க வேண்டும் என்ற காரணமாகவும் இருக்கலாம்.

சேர தேசத்து அந்தணர்களை மாமன்னர் இராஜராஜர் உடையார் குடியிலிருந்து நிலம் பறித்துத் துரத்தி அனுப்பி, பிறகு காந்தளூரில் வைத்து அவர்களைச் சர்வநாசம் செய்த பிறகும் கூட அந்தணர்களைப் பற்றிய வெறுப்பு அரச குடும்பத் தாரிடையே குறையவில்லை.

குறிப்பாய் அரசியலில் ஈடுபடும் அந்தணர்களை அவர்கள் சந்தேகத்தோடே பார்த்தார்கள். அப்படிப் பார்த்தால், இன்று அரசியலில் பிரகாசமாக இருக்கின்ற அந்தணர் இராஜராஜரின் சேனாதிபதியான கிருஷ்ணன்ராமன் என்கிற பிரம்மராயர். அமண்குடியைச் சேர்ந்த அந்த அந்தணர் பெரும் சொத்துக்காரர். மிகத் திறமையானவர். சோழ தேசத்திற்காகப் பல தியாகங்கள் செய்தவர். ஆனாலும் சமீபத்திய அந்தணர் எதிர்ப்புப் போக்கு அவர்மீதும் படிந்து, அவரையும் மக்களில் ஒரு பகுதியினர் வெறுக்கத் துவங்கியிருக்கிறார்கள். 'எங்கள்

ஆதித்த கரிகாலனைக் கொன்று விட்டீர்களே பாவிகளா' என்று இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

மருவூரிலிருந்து கடுவன்காரி மெல்ல நடந்து தஞ்சாவூர் ராஜபாட்டையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். கருந்தட்டார்குடியை நோக்கி நடக்கத் துவங்கினான்.

இளவரசர் இராஜேந்திரருக்கு அந்தணர்களைப் பிடிக்காதது, மட்டுமல்ல; கம்மாளர்களை மிகவும் பிடிக்கும். கருந்தட்டார் குடியில் கைதேர்ந்த கம்மாளர்கள் பலநூறு பேர் வாழ்கிறார்கள். சோழ தேசத்தின் ஆயுதங்கள் மொத்தமும் அந்தக் கருந்தட்டார் குடியில்தான் தயாராகின்றன.

கம்மாள்ர்களில் பலபேர் ஒற்றர்களாக இருக்கிறார்கள். இராஜேந்திர சோழருக்கு உண்மையாக இருப்பதாய் நெருப்பின் மீது சத்தியம் செய்திருக்கிறார்கள். அந்தக் கம்மாளர்கள் கூட்டத்தில் இராஜேந்திர சோழர் பற்றியும், அவரது அடுத்த அரசியல் திட்டங்கள் பற்றியும், கோயில் கட்டுவது பற்றி அவர் அபிப்ராயம் பற்றியும் கவனமாகப் பேச வேண்டும். அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும்.

சோழ தேசத்தின் பாதுகாப்பிற்கு எந்தவித பயமுமில்லை. இராஜேந்திர சோழர் வடக்குப் பக்கம் அரணாக நிற்கிறார். அவரைத் தாண்டி எந்த எதிரியும் உள்ளே வர முடியாது.

தெற்கே இருக்கின்ற பாண்டியர்கள் வலுவிழந்து கிடக்கிறார்கள். சேரர்கள் சோர்ந்திருக்கிறார்கள். எனவே, எந்த பயமுமின்றி சோழ மக்கள் தங்களுடைய வேலைகளைக் கவனித்து வரலாம்' என்று அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.

'அப்படியானால் கோயில் கட்டுவதும் நல்லதல்லவா' என்று எவரேனும் ஒரு கெட்டிக்காரன் கேள்வி கேட்பான். கோயில் கட்டுகிற நேரத்தில், அந்தக் கவனம் திரும்புகின்ற நேரத்தில் அதைப் புரிந்துகொண்டு எதிரிகள் ஊடுருவினால் என்ன செய்வது?

ஒரு தேசத்தில் கோயில் கட்டுவது தவறல்ல; ஆனால் மாமன்னர் இராஜராஜர் கேட்டிருக்கிற வரைபடம், மனதிலே போட்டிருக்கிற கோயில் மிக மிகப் பிரம்மாண்டமானது. ஐந்து பனை உயரம் கொண்டது. ஐந்து பனை உயரம் கொண்ட கற்றளியை எழுப்ப எத்தனை ஆயிரம் ஆட்கள் தேவைப்படும்... இவர்களை எங்கிருந்து, எங்கே கொண்டு வருவது... யார்

உணவிடுவது... எப்படி இது நடக்கும்... எத்தனை வருடங்களாகும் என்று கணக்குப் போட்டுப் பார்க்கிறபோது, எதிரிகள் வசம் நாமே எளிதில் சிக்கிக் கொள்ளக்கூடிய விஷயமாகத்தான் இந்தக் கோயில் கட்டும் பணி இருக்கிறது.

இவையெல்லாவற்றையும் கவனித்து, ஆழ்ந்து யோசித்து, பிறகே 'இது தேவையா' என்று இராஜேந்திரர் அஞ்சுகிறார். மன்னர்பால் இராஜேந்திரர் கொண்ட அன்பும் மரியாதையும் சற்றும் குறைவில்லை. மன்னரைப் பற்றி இடையறாது தகவல்கள் அவருக்குப் போய் கொண்டிருக்கின்றன. மன்னரைச் சுற்றியுள்ளோர் நலன்கள் குறித்தும் அவர் விசாரித்துக் கொண்டிருக்கிறார். நடுவே குளிர்காலத்தில் இராஜேந்திர சோழர், மன்னரை நேரில் பார்ப்பதற்காக வரவும் கூடும். அந்தச் சந்திப்பு அநேகமாய் தஞ்சையில் நிகழும். அப்படி நிகழும்போது, உங்கள் நடுவேயும் வெகு நிச்சயமாய் இராஜேந்திர சோழர் அமர்ந்து பேசி விட்டுத்தான் போவார் என்று சொல்லலாம்.

இதைக் கேட்டவுடன் கம்மாளர்கள் எகிறிக் குதிப்பார்கள். மார்பில் அடித்துக் கொள்வார்கள். 'சோழம், சோழம்' என்று உரக்கக் கூவுவார்கள். கம்மாளர்களுடைய அன்பு மிகப் பெரியது. இராஜேந்திர சோழர் அதில் முங்கி முங்கி நனைந்திருக்கிறார்.

அவர் வடக்கேயும், மேற்கேயும் தலைமையேற்று பல போர்கள் நடத்தியபோது, இரவு பகலாய் உழைத்து, அனல் வீசுகின்ற நெருப்பிலே இரும்பைக் காய்ச்சியடித்து, கேடயங்களும் வாட்களும், நூதனமான விற்பொறிகளும் இந்தக் கம்மாளர்கள் செய்து கொடுத்திருக்கிறார்கள்.

எந்த அரசரும் செய்யாத ஒரு விஷயத்தை, இராஜேந்திர சோழர் ஒரு போரின் வெற்றிக்குப் பிறகு செய்தார். தன் கூடவே வந்து ஆயுதங்களைச் செப்பனிட்ட, பதினாறு கம்மாளர்களைக் கட்டித் தழுவி, கழுத்தில் தங்கச் சங்கிலி அணிவித்தார். அன்றிலிருந்து தங்கச் சங்கிலி அணியாத கம்மாளர்கள் எவருமே இல்லை. அதைத் தங்களுடைய பிறப்புரிமையாகக் கம்மாளர்கள் எடுத்துக் கொண்டு விட்டார்கள். இது குறித்து சிலர் முகம் தூக்கினாலும், வாய் திறந்து சொல்ல எவருக்கும் தைரியமில்லை.

கம்மாளர்களும் இராஜேந்திர சோழரை மிகவும் நேசித்தார்கள். 'இன்னும் என்ன செய்ய வேண்டும்; உத்தரவிடுங்கள், காத்திருக்கிறோம்' என்கிறார்கள். 'இந்த இரும்புத் தொழிலாளர்

களுக்குத் தங்களுடைய வேலை வேறு திசைக்கு மாற்றப்பட்டு விடுமோ என்ற பயமிருக்கிறது. ஒருவேளை கோயில் கட்டத் துவங்கினால், நிறைய உளிகளும், சுத்தியல்களும், பாறைகளைப் பிளக்கின்ற இரும்பு ஆணிகளும், கடப்பாறைகளும், வண்டிக்ளுக்கான அச்சுகளும், சக்கரத்தைச் சுற்றியுள்ள இரும்புப் பட்டைகளும் செய்யும்படி ஆகிவிடும். அப்படிச் செய்யத் துவங்கிவிட்டால், இராஜேந்திர சோழரோடு அந்நியப்பட்டு விடும்படியாய் நேரிடும். யுத்த களத்திற்குப் போவது தவிர்க்கப் பட்டு விடும்.

கோயில் வேலையைவிட, போருக்கான வேலை செய்வது சந்தோஷமாக இருக்கிறது. போரின் ஒரு பகுதியாக இருப்பது கம்பீரமாக இருக்கிறது. கோயில் வேலை செய்யக்கூடாது என்பதில்லை. ஆனால் வாழ்க்கை முழுவதும் கோயில் வேலைதான் என்று முடிவாகிவிட்டால் என்ன செய்வது, என்று கம்மாளர்கள் கவலைப்படுகிறார்கள். கோயில் வேலை வேண்டாமே என்று சொல்லுமளவுக்குச் சில கம்மாளர்கள் தயாராகி விட்டார்கள்.'

கடுவன்காரி யோசித்துக் கொண்டே நடந்தான்.

'எல்லா பக்கத்திலிருந்தும், எல்லா வகையினரிடமிருந்தும் எதிர்ப்பு கிளம்பிக் கொண்டிருக்க, அரசர் மட்டும் கோயில் கட்டுவதில் உறுதியாக நிற்கிறார். இன்னும் அதிக வேகத்தோடு செயல்படுகிறார்.

சோழ தேசத்தில் ஏதோ ஒரு மாறுதல் இப்போது ஏற்படப் போகிறது. அது நல்லதா, கெட்டதா என்று தெரியவில்லை. கோயில் கட்டுவது வேண்டாம் என்று யார் சொன்னாலும் மன்னர் கேட்கமாட்டார்.

இராஜேந்திர சோழர் கோயில் பற்றிய விஷயம் பேச ஆரம்பித்து தன் கருத்தைச் சொல்ல, மன்னர் மிகவும் கோபமாகி, 'அப்படியானால் நீ என்னோடு இருக்க வேண்டிய அவசியமில்லை. விலகிப் போ' என்று கூச்சலிட்டதாகவும் ஒரு செவி வழிச் செய்தி மக்களிடையே புழங்கி வருகிறது. இதனாலேயே இராஜேந்திரர் தந்தையிடமிருந்து சற்று தள்ளி, திருவொற்றியூரில் பாடியமைத்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார் என்று பேசப்படுகிறது. இந்தச் சண்டை உண்மையா, பொய்யா என்று தெரியவில்லை.

ஆனால், இரண்டு பேருக்கும் நடுவே மன்னரின் நான்காவது மனைவியான பஞ்சவன்மாதேவி சமாதான மேற்படுத்த முயற்சி செய்து கொண்டிருக்கிறார். இருவரின் கோபத்தையும் தணித்து, சுமுகமான உறவு ஏற்படுத்த தீவிரமாய் ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறார் என்றும் பேசப்படுகிறது.

பஞ்சவன்மாதேவிக்கு அருகே ஒரு ஒற்றரை வைக்க இராஜேந்திர சோழரால் முடியவில்லை. ஆனாலும் இப்போது வந்த தேவரடியார் கூட்டத்தில் எவரேனும் ஒரு பெண் இராஜேந்திர சோழரின் ஒற்றராக இருக்கலாம்' என்ற சந்தேகம் கடுவன்காரிக்கு வந்தது.

அந்த ஒற்றர்தான் யாரென்பதை இன்னும் கடுவன் காரிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. 'இந்தக் கூட்டத்தோடு போ' என்று கடுவன்காரிக்கு இராஜேந்திர சோழர் நேரடியாய் உத்தரவிட்ட போதே இந்தக் கூட்டத்திற்குள் யாரோ இராஜேந்திர சோழரின் ஒற்றர் ஆள் இருக்கிறார்கள் என்பது தெரிந்து விட்டது.

யாரென்று விசாரிக்கின்ற தைரியம் கடுவன்காரிக்கு இல்லை. தெரிய வேண்டிய அவசியம் வரும்போது, ஒற்றரே தன்னை வெளிப்படுத்தி, முத்திரை மோதிரம் காட்டி சைகைகளை செய்து, சங்கேத வார்த்தைகளால் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார்.

ஆனாலும், இன்னார் ஒற்றராக இருக்கக்கூடும் என்ற ஒரு எண்ணம் கடுவன்காரிக்கும் இருக்கிறது. அந்த திருவக்கரைப் பெண் தேவரடியார் இராஜராஜீ. இராஜேந்திர சோழரின் ஒற்றர்படையைச் சேர்ந்தவளாக இருக்கலாம் என்று ஒரு சந்தேகம் இருக்கிறது. அவள் கெட்டிக்காரத்தனமும், பிரம்மராயரை அவள் பார்த்த விதமும், பேசிய விதமும் அவள் ஆட்டம், பாட்டம் தாண்டி பல்வேறு விஷயங்களை தெரிந்தவள் என்பதை வெகு எளிதாக வெளிப்படுத்தி விட்டன.

ஏழு நாட்கள் அவளோடு தொடர்ந்து நடந்த போது, அவளையே பார்த்துக் கொண்டு பயணப்பட்ட போது இதுவரை மனதில் தோன்றாத உணர்வுகள் கடுவன்காரிக்குத் தோன்றின.

முப்பத்தி நாலு அகவை முடிந்தும் திருமணம் பற்றிய எண்ணம் இல்லாமல், இருந்தது. இருபது வயதில் வாள் உருவி,

சாளுக்கிய தேசம் நோக்கி வலங்கை வீரனாக நுழைந்த போது, இராஜேந்திரர் கடுவன்காரியின் போர் பார்த்துவிட்டு வியக்க, மாமன்னர் இராஜராஜத் தேவர் கடுவன்காரியை வலங்கையி லிருந்து பிரித்து இளவரசர் இராஜேந்திரரிடம் அனுப்பினார்.

இராஜேந்திர சோழர் எழுதப் படிக்கத் தெரியுமா என்று கேட்டார். 'தெரியாது' என்றதும், தமிழ் ஆசான்களிடம் எழுதப் படிக்கப் பயிற்சியும், தன் நேரடிப் பார்வையில் ஒற்றர் பயிற்சியும் கொடுத்தார்.

ஒரு ஒற்றன் திருமணம் செய்து கொள்வதை எவரும் தடுப்பதில்லை. ஆனால் கவனமாக இருக்கச் சொல்வார்கள். குடும்பத்தோடு இருக்கிறவர்களுக்கு முதன்மையான வேவுப் படை அதிகாரத்தைத் தர மாட்டார்கள்.

கடுவன்காரிக்கு முதன்மையான வேவுப்படை அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதே நேரம், என்றுமில்லாமல் திருவக்கரை தேவரடியார் ராஜராஜீயிடம் இன்று மனம் பேதலித்துக் கிடக்கிறது. 'இவளோடு தஞ்சையின் செழிப்பான கிராமத்தில் காவல்படை வீரனாய் உத்தியோகம் பார்த்து, சிறிதளவு நிலம், நீச்சோடு குடித்தனம் நடத்தி குழந்தைகள் பெற்றால் எப்படி இருக்கும்.'

கடுவன்காரி சிறிது நேரம் கற்பனையில் மிதந்தான். சட்டென்று நிமிர்ந்து தலை உதறினான்.

ஆசை ஒரு பக்கமும், கடமை ஒரு பக்கமும் அவனை அலைக்கழித்தன. மத்திம வயதில் காதலிப்பவர்கள் எல்லோருமே மனம் பேதலித்தவர்களாகவே இருக்கிறார்கள். அவர்களால் காதலைத் தவிர வேறு எதிலும் முழுமையாய் ஈடுபட முடிவதில்லை.

கடுவன்காரி கருந்தாட்டார்குடி கம்மாளர் குடியிருப்பை அடைந்த போது இருட்டத் துவங்கி விட்டது.

## 33

**உ**டையாளூரில் கருவூர்த்தேவர் வீட்டு வாசலில் இரண்டு அகல் விளக்குகளும், படியிறங்கி தெருவின் ஓரத்தில் ஒரு எண்ணெய் தீப்பந்தமும் எரிந்து கொண்டிருந்தன.

அரையிருட்டில் மெல்ல நடந்து மும்முடிச்சோழ பிரம்மராயர் கிருஷ்ணன்ராமன் வீட்டு வாசலில் கால் வைத்ததும், கருவூர்த்தேவர் கூடத்திலிருந்து விலுக்கென்று எழுந்து வேகமாய்ப் பிரம்மராயரை நோக்கி நடந்து வந்தார். இரண்டு கைகளையும் விரித்தார்.

"வரவேண்டும். வரவேண்டும். சோழ தேசத்தின் தலைமைக் காவல் அதிகாரியே, உங்கள் வரவு நல்வரவாக வேண்டும். இந்த ஏழையின் குடிசையைத் தேடி நான்கு வேதமும் அறிந்த, அர்த்த சாஸ்திரம் தெரிந்த, லட்சோப லட்சம் சோழ மக்களை வாள் வலிமையால் பாதுகாக்கின்ற மகத்தான மனிதர் வந்தது கண்டு சந்தோஷப்படுகிறேன். இது இறையருள். வருக. உள்ளே வருக..."

அவர் மிகப்பணிவோடு விரித்த கையைக் கூப்பி சேனாதிபதியை வரவேற்க, அதுவரை மேலே போட்டிருந்த துண்டைச் சட்டென்று உருவி, இடுப்பில் சுற்றி இறுக்கிக் கொண்டு கிருஷ்ணன்ராமன் கைகூப்பினார்.

இடுப்பிலே துண்டு போட்டு இறுக்கிக் கொண்டதும் அவர் என்ன செய்யப் போகிறார் என்று அங்குள்ளவர்களுக்குப் புரிந்து விட்டது. ஒரு அடி நடந்து வந்து வெற்றி நிலம்பட கருவூர்த்தேவர் முன்னே விழுந்து தன் சிரசைக் கருவூர்த்தேவர் காலில் வைக்க கருவூர்த்தேவர் பதறினார்.

"ஐயனே, இது தகாது. நீர் செய்வது தர்மத்திற்கு புறம்பானது. என்னை நீர் வணங்க வேண்டிய அவசியமில்லை. தயவு செய்து எழுந்திரும்" என்று குரலில் லேசான கடுமையை ஏற்றி கட்டளையிட்டார்.

"இது தகுமய்யா. நீங்கள் வர்ணாசிரம தர்மம் பேசுகிறீர்கள். நான் வாழ்கை அனுபவத்திலிருந்து இந்த வணக்கத்தைச் செய்கிறேன். நீங்கள் ஞானி, பிரம்ம ஞானி, சோழ தேசத்தை நான் ஏதோ காவல் செய்வது போல நீங்கள் சொல்கிறீர்கள் என்னை ஆசீர்வதியுங்கள் ஐயா. காவல் காப்பது நீர்..." என்று தரையில் படுத்தபடியே பேசினார்.

"சகல செளபாக்கியங்களைப் பெற்று குடும்பத்துடன் நீடூழி வாழ வேண்டும். உலக வரலாற்றிலேயே உங்கள் பெயர் சந்திராதித்தர் உள்ள வரை அசையாது நிற்க வேண்டும் என்று

இறைவனை உளமார வேண்டுகின்றேன். எழுந்திருமைய்யா... என்று கருவூர்த்தேவர் குனிந்து பேசினார்.

கிருஷ்ணன்ராமன் எழுந்து நிற்க கனிவோடு கருவூர்த்தேவர் அவரைப் பார்த்தார்.

கருவூர்த்தேவரின் கண்களில் மின்னும் கனிவு, பிரம்மராயருக்கு ஜீரணிக்கக் கஷ்டமாக இருந்தது. அந்த வெண் தாடியும், விரிந்த வெண் சிகையும், வெண்மையான புருவமும், முகத்தில் விழுந்த சுருக்கமும், மெல்லிய கைகளும், உள்ளங் கையின் சிவப்பும் அவரைப் பரவசப்படுத்தின.

“ஐயா, உங்களை மறுபடியும் சந்திப்பதற்கு நான் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும். உங்களைப் பார்ப்பது அந்தக் காலத்து முனிவர்களைப் பார்ப்பது போல் இருக்கிறது” கிருஷ்ணராமன் கைகூப்பினார்.

கருவூர்த்தேவர் அந்தக் கனிவான பார்வையை மும்முடிச் சோழ பிரம்மராயரிடமிருந்து எடுக்கவே இல்லை. அவர் சொன்னது காதில் விழாதது போலவே இருந்தார்.

“சற்று பருத்து விட்டீர். கண்களில் கலவரமிருக்கிறது. கண்ணுக்குக் கீழே கோபமிருக்கிறது. யார் மீதோ ஆத்திரம் இருக்கிறது. அசைவுகளில் படபடப்பு இருக்கிறது. விஷயங்கள் சட்டென்று ஒரு முடிவுக்கு வரமாட்டேன் என்கின்றனவே என்று தாபமிருக்கிறது. பிரச்சினைகள் அதிகமிருக்கின்றன. இல்லையா...”

ஒரு வயது முதிர்ந்த தகப்பன். தன் பொறுப்பான மகனிடம் பேசுவது போல ஆழ்ந்த அன்போடு பேசினார்.

“ஆமாம்” பிரம்மராயர் தலையசைத்தார்.

“உள்ளே வாரும் சோழ தேசத்தை நானும் காப்பாற்ற வில்லை. நீயும் காப்பாற்றவில்லை. நிசும்ப சூதனி காப்பாற்று கிறாள் ஐயா. அவளுடைய ஆட்சிதான் சோழ தேசத்தில் நடந்து கொண்டிருக்கிறது.

சோழ தேசத்தில் வெளிப்படையாக சைவ சமயம் செழித்தோங்கி வந்தாலும், இந்த தேசத்தின் அடிவேரில் சாக்தம்தான் உயிரோட்டமாக இருக்கிறது. சக்தி வழிபாடுதான் முதன்மையாக இருக்கிறது. பெண்களுக்கு மதிப்பு கொடுத்து பெண்களை உயர்வாக அவர்கள் கருதுவதால்தான் ஆண்கள் வளமாக வளர்க்கப்படுகிறர்கள். ஆண்கள் வளமாகவும்,

கெட்டிக்காரத்தனமாகவும் வளர்க்கப்படுவதால்தான், அந்த மூன்று வயதுக்குள் – பல்வேறு விதமான போஷாக்குகள் அவர் களுக்குக் கிடைப்பதால்தான் வீரம் செறிந்தவர்களாக, விவேகம் மிக்கவர்களாக, தந்திரமும் கெட்டிக்காரத்தனமும் கொண்டவர் களாக இருக்கிறார்கள்.

அந்தக் கெட்டிக்காரத்தனத்தை, விவேகத்தை பெண்கள் வளர்ப்பில் ஆண்கள் காட்ட, பெண்கள் ஆண்களுக்கு மிகப் பதவிசாய், அனுசரணையாய் இருக்கிறார்கள். பெண்கள் ஆண்களை அண்டி அனுசரணையாக இருப்பதால் மழை நன்கு பெய்கிறது.

மும்முடிச் சோழ பிரம்மராயரே இதுதான் வாழ்க்கையின் சுழற்சி, இது எப்போது மீறப்பட்டாலும் பிரச்சினை வரும். பெண்களைத் தாங்குவது என்பது ஆண்களின் கடமை. தன்னைத் தாங்கும் ஆண்களுக்குப் பணிவிடை செய்து, அவனைக் காரியங்கள் செய்யச் செய்வது பெண்களின் கடன்.

இது இரண்டிற்கும் அடிப்படை அன்பு. பரஸ்பரம் மதிப்பு. இந்தச் சோழ தேசத்தில் இது இருக்கும்வரை எந்தக் கொம்பனும் எதுவும் செய்துவிட முடியாது. இந்த வளர்ச்சியை, இந்தத் தன்மையை நிசும்பசூதனி இடைவிடாது சோழ மக்களுக்குப் பரப்பிக் கொண்டிருக்கிறாள். நிசும்ப சூதனியின் வழிபாடு சோழ தேசத்தில் நடக்கும் வரை, சாக்த வழிபாடு சோழ தேசத்தில் இருக்கும் வரை எந்தப் பிரச்சினையும் இருக்காது.

சாக்த வழிபாட்டை பல பேர் தவறாகக் கையாளு கிறார்கள். சாக்த வழிபாட்டை சிலபேர் அதீதமாய் பயன்படுத்துகிறார்கள். இது மிகப்பெரிய தவறை ஏற்படுத்தும். இந்தச் சூட்சுமம் சில அந்தணர்களுக்குக்கூட புரியவில்லையே என்பதுதான் என் வருத்தம்.

என்ன சாப்பிடுகிறீர்கள்... முத்தான பொன் தங்கை... பால் கொடு. சூடாகக் கொடு. பிரம்மராயர் சூடாகக் குடிப்பவ அமருங்கள் பிரம்மராயரே' ஆசனம் போட்டு அ'ரை: சொன்னார்.

பிரம்மராயர், அமருவதற்கு முன்பு மறுபடியும் இடுப்பில் துணியை இறுக்கிக் கொண்டார். என்ன என்பது போல் கருவூர்த் தேவர் பார்த்தார்.

"சோழ தேசத்தின் சேனாதிபதியாக உங்களுக்கு நமஸ்கரித்தேன். நீங்களும் ஆசீர்வாதம் செய்தீர்கள். இப்பொழுது என்னுடைய மகனுக்குத் தகப்பனாய் உங்களை நமஸ்கரிக்க விரும்புகிறேன்.

என் வேண்டுகோளை ஏற்று, அவனை நீங்கள் பக்குவப்படுத்தி வருகிறீர்கள் என்பதைக் கேள்விப்பட்டு மிகவும் சந்தோஷமாகிறேன். இதற்கெல்லாம் காசு கொடுத்து நன்றியைத் தெரிவிக்க முடியாது. காசு வாங்குபவரும் அல்ல நீர், எனவே, ஒரு தந்தை என்ற முறையில் என்னுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்களை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன்."

கிருஷ்ணன்ராமன் வைஷ்ணவ சம்பிதாயப்படி அவர் முன்பு பலமுறை விழுந்து எழுந்தார். நீண்ட நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்குவது, எழுந்து நின்று கைகூப்புவது என்று எட்டுமுறைக்கு மேலும் செய்ய, கருவூர்த் தேவர் பதறினார்.

"என்ன இது. ஏன் இந்தப் பிடிவாதம். நிறுத்துங்கள். போதும். என்னுடைய மனப்பூர்வமான ஆசீர்வாதம். நிறுத்துங்கள் ஐயா..." என்று பதற,

"எனக்குப் போதும் என்று தோன்றும் வரையில் நமஸ்கரிக்க அனுமதியுங்கள்..." என்று பன்னிரண்டு முறை நமஸ்கரித்தார்.

ஞானிகளுக்கும், மிகப்பெரிய மகான்களுக்கும், குருவுக்கும் பன்னிரண்டு முறை நமஸ்கரிக்க வேண்டுமென்பது வைணவ சம்பிரதாயம். இது மனிதருக்கு மனிதர் கொடுக்கும் மிக உயர்ந்த மரியாதை.

பல லட்சக்கணக்கான பேர் வணங்கி, நடுங்கி விலகி நிற்கும் சேனாதிபதி பிரம்மராயர் பன்னிரண்டு முறை, வியர்வை கொப்புளிக்க, பருத்த சரீரத்தோடு விழுந்து வணங்குவது கண்டு கருவூர்த் தேவரின் சீடர்கள் வாய் பொத்தி நின்றார்கள்.

அருண்மொழி தொலைதூரத்திலிருந்து அப்பாவைப் பார்த்தான். அப்பாவின் மீது அவனுக்கு இரக்கம் பொங்கியது. சந்தோஷம் ததும்பியது. 'என் அப்பா' என்று பெருமிதமாகச் சொல்லிக் கொள்ளத் தோன்றியது.

முத்தான பொன்நங்கை பால் கொண்டு வர, உண்டு முடித்ததும் மேல் துண்டால் வாய் துடைத்துக் கொண்டார். துண்டால் உடம்பு போர்த்திக் கொண்டார்.

"பிரம்மராயரே, வீட்டில் பேசலாமா... வெளியே போய் விடலாமா..." கருவூர்த்தேவர் ரகசியமாகப் பேசினார்.

"நீங்கள் இப்போது ரகசியமாகப் பேசுவதைக்கூட தொலை தூரத்திலுள்ள உங்கள் சீடனால் உங்கள் வாயின் அசைவை வைத்துக் கண்டு பிடித்துவிட முடியும். அப்படிக் கூட கண்டு பிடிக்க முடியாதபடி நாம் பேச வேண்டும்."

"நல்லது. வெளியே போய் விடுவோம்."

கருவூர்த்தேவர் எழுந்து நிற்க, அவருடைய சீடர்கள் வாசலுக்கு விரைந்தார்கள்.

மூங்கில் கழிகளைப் பாதுகாப்புக்காக எடுத்துக் கொண்டார்கள். முன்னால் இரண்டு பேரும், பின்னால் இரண்டு பேரும் அவர்களை நடுவே நடக்கவிட்டு பாதுகாப்பாய் நடந்தார்கள்.

உடையாளூரின் சிவன் கோயிலுக்கு எதிரே ஒரு பால்குளம் இருக்கிறது. அந்தப் பால்குளத்தின் மறுபக்கம் பெரிய புல்வெளி இருக்கிறது. அந்தப் புல்வெளியைத் தாண்டி வயல் இருக்கிறது. அந்தப் புல்வெளிக்கு நடுவே உள்ள திட்டில் அவர்கள் நிற்க, அருண்மொழி சற்று உயரமான மர ஆசனங்கள் கொண்டு வந்து போட்டான்.

"அருண்மொழியினுடைய கெட்டிக்காரத்தனத்தைப் பார்த்தீர்களா... நாம் வெகுநேரம் நின்று பேச முடியாது என்று அவனுக்குத் தெரியும். எனவே, உட்கார ஆசனம் கொண்டு வந்துவிட்டான். அருண்மொழி. ஆசனம் போட்டால் மட்டும் போதாது. புகையும் போடு..." என்று சொல்ல... அருண் மொழி இடுப்பிலிருந்து கற்களும், கற்பூரம் தடவிய சருகுகளும் எடுத்து தரையில் வைத்தான்.

சுற்றும் முற்றும் பார்த்து காய்ந்த சுள்ளிகளை உடைத்துக் கொண்டு வந்து போட்டான்.

வேறு சில சீடர்களும் எங்கிருந்தோ சுள்ளி கொண்டு வந்து போட, நெருப்பு கொளுத்தப்பட்டது. மெல்லப் பற்றிக் கொண்டது. தகதகவென்று தணலாக எரிந்தது.

தணல் எரிவது கண்டு அந்தப் பக்கம் ஜனங்கள் என்ன என்று வேடிக்கை பார்த்தார்கள். அங்கே கருவூர்த்தேவரும், மும்முடிசோழ பிரம்மராயரும் இருப்பது அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. 'ஓ'வென்று குரல் கொடுத்தார்கள்.

கருவூர்த்தேவர் பிரம்மராயருக்கு அவர்களைச் சுட்டிக் காட்டினார். பிரம்மராயர் எழுந்து போய், குளக்கரையில் நின்று கைகளை உயரே தூக்கி அவர்களை வணங்க, அவர்களும் அவ்வாறே வணங்கினார்கள்.

'வருகிறேன் இருங்கள்' என்று சைகை செய்ய, சரியென்று தலையசைத்தார்கள். மறுபடியும் பிரம்மராயர் ஆசனத்திற்கு வந்து அமர, மக்கள் கலைந்து போனார்கள்.

"என்ன விஷயம்..." - கருவூர்த் தேவர் நேரடியாகக் கேள்வி கேட்டார்.

"மன்னருக்கு உடல்நலமில்லை..."

'எப்போதிலிருந்து?"

"நான்கு நாட்களுக்கு முன்னமிருந்து..."

"என்ன கோளாறு?"

"அஜீரணம்..."

"எதனால்?"

"தெரியவில்லை..."

"எப்படித் தெரிந்தது..."

"வாயிலெடுத்தார்..."

"எப்போது?"

"நேற்று காலை..."

"நான்கு நாட்களாக என்று சொன்னீர்..."

"உணவு உட்கொள்ளல் சரியில்லை. செரிமானமாக வில்லை என்று மன்னர் சொல்லிக் கொண்டிருந்தார்.

"யார் மன்னரோடு இருப்பது?"

"பஞ்சவன்மாதேவி..."

"பிறகு?"

"பஞ்சவன்மாதேவியின் சீடர்கள்..."

"மெய்க்காவல் படையில் எத்தனை பேர் இருக்கிறார்கள்?"

"வழக்கம்போல நூற்றியோரு பேர்..."

"என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள்?"

"மன்னரை மிக கவனமாகப் பாதுகாத்து வருகிறார்கள்..."

"இதைத் தவிர வேறு யார் இருப்பது?"

"நானும் என்னுடைய சீடன் கமலக் கண்ணனும் மன்னருக்கு அருகே போக முடியும். மற்றபடி வேறு எவரும் போக முடியாது."

"மன்னர் எங்கே போகிறார்."

"நேற்று இரவு பழமர்நேரி போனார். திருவொற்றியூரி லிருந்து சில தாசிகளும், திருவக்கரையிலிருந்து வரை படங்களும் வந்திருக்கின்றன. மிகப்பெரிய கூட்டமொன்று தஞ்சைக்கு நகர்ந்து கொண்டிருக்கிறது. அதில் பலபேர் தேவரடியார்கள். சிலர் காவலாளிகள்..."

'திருவொற்றியூரிலிருந்தும், திருவக்கரையிலிருந்தும், காஞ்சி புரத்திலிருந்துமா... எல்லாமும் இராஜேந்திர சோழன் பலமாகக் காலூன்றியிருக்கும் இடங்கள். அங்கிருந்து வந்த அத்தனை பேரும் இராஜேந்திர சோழனின் ஆட்களாகத்தான் இருப்பார்கள்." – கருவூர்த் தேவர் சொன்னார்.

"இராஜேந்திர சோழருக்கு மாமன்னர் இராஜராஜர் கோவில் கட்டுவது சற்றும் பிடிக்கவில்லை. எல்லை இன்னும் பதட்டமாக இருப்பதாகவே இராஜேந்திரர் நினைக்கிறார். இப்போது கோவில் எதற்கு என்று எனக்கும் ஓலை அனுப்பியிருக்கிறார்..." பிரம்மராயர் அடிக்குரலில் பேசினார்.

"அவரிடமிருந்து ஆட்கள் வந்தால் எதற்கென்று நீங்கள் விசாரிக்க வேண்டாமா..." கருவூர்த்தேவர் கேட்டார்.

"தொடர்ந்து போக ஆட்கள் அனுப்பியிருக்கிறேன். மன்னரையேனும் நான் விசாரித்து விடமுடியும். இளவரசர் இராஜேந்திரரை நான் விசாரிப்பது அவ்வளவு நல்லதல்ல, இராஜேந்திரருக்கு என்னை அதிகம் பிடிப்பதில்லை.

எதனால் என்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. ஒன்று நான் வயதானவன். இரண்டாவது நான் அந்தணன் என்று பல்வேறு சிக்கல்கள் இருக்கின்றன.

நான் விசாரிக்கின்றேன் என்று தெரிந்தால், அவர் உபசேனாதிபதிகளை அனுப்பி விசாரிப்பை நிறுத்தச் சொல்லி கட்டளைகள் அனுப்புகிறார். ஒருமுறை தள்ளி நின்று வேடிக்கை பார்க்கும்படி எனக்கு முத்திரை ஓலையே அனுப்பினார். நான் என்ன செய்வது... தகப்பனுக்காக வேலை செய்வதா... பிள்ளைக்காகப் பயந்திருப்பதா என்று அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

இந்த வேலை வேண்டாம் என்று உதறிவிட்டு, வைஷ்ணவ கோயில்களுக்குக் கற்றளி உபயம் செய்யலாமா என்றுகூடத் தோன்றுகிறது. வெறும் பிரபந்தங்கள் பாடுகின்ற சாத்துமுறை ஆளாக இருந்து விடலாமே என்று தோன்றுகிறது.

வைஷ்ணவ திரிதண்ட சந்நியாசியாய் சகலமும் உதறி, க்ஷேத்திராடனம் போகலாம் என்று தோன்றுகிறது. ஆனால் பழக்க தோஷம். ஒவ்வொரு பிரச்சினை வரும்போதும் நான் சோழ தேசத்தை இறுக்கிக் கட்டிக் கொள்கிறேன். இதுவும் வேதனையாகத்தான் இருக்கிறது...'' பிரம்மராயர் நீண்ட பிரசங்கம் செய்து முடிக்க கருவூர்த்தேவர் வாய்விட்டுச் சிரித்தார்.

## 34

**பா**ற்குளத்தின் அருகே புல் தரையில் போடப்பட்ட மர ஆசனத்தில் பிரம்மராயர் அசைந்து உட்கார, ஆசனம் சற்று மண்ணில் இறங்கிப் பதிந்தது. கருவூர்த்தேவர் பிரம்மராயரின் மேனி வளப்பம் பார்த்துப் பேசினார்.

"துறவியான எனக்கே சோழ தேசத்தை விட்டு விலக முடியவில்லையே சேனாபதியான நீர் எப்படி விலகிப் போக முடியும்.

பிரம்மராயரே... அரசருக்குச் சமைப்பது யார். என்ன சமைக்கிறார்கள். அவருக்குச் சமைப்பதை யார் ருசி பார்க்கிறார்கள். என்றெல்லாம் சற்று நாம் வேவு பார்க்க வேண்டும். அடிக்கடி ஆட்களை மாற்றிக் கொண்டிருக்க வேண்டும்.

பஞ்சவன்மாதேவிக்கு கவனம் போதாது என்பது என்னுடைய அபிப்பிராயம். பஞ்சவன்மாதேவிக்குப் பக்கத்தில் மிகச் சரியான ஒரு பெண்மணியை அனுப்ப வேண்டும்.

பஞ்சவன்மாதேவி அன்புள்ளவர். ஆனால், அவருடைய திறமை பற்றி வர வர எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அரசரைச் சுற்றிச் சுற்றி வருவதில், அரசருக்கு அடுத்தபடியாக இருக்கின்ற இரண்டாவது வளையத்தை அவர் கவனிப்ப தில்லை. அதைத் தன் சேடிகளிடம் ஒப்படைத்து விடுகிறார். அந்தச் சேடிகளுக்குப் பொறுப்பு போதவில்லை. எனவே,

அவர்கள் பார்த்துக் கொடுப்பதை அரசர் உண்ணும்படியாக நேரிடுகிறது. அந்த இடத்தில் கூட விரல் நீட்டி, என்ன நடக்கிறது. ஏது நடக்கிறது. யார் நடத்துகிறார்கள் என்று கேள்வி கேட்க ஆட்கள் வேண்டும். இது குறித்து உங்கள் எண்ணமென்ன?"

"நான் ஏற்பாடு செய்கிறேன். ஆனால் எப்படி இளவரசர் இராஜேந்திரரை என்னால் சமாளிக்க முடியவில்லையோ, அதே போல பஞ்சவன்மாதேவி சிலசமயம் தூக்கி எறிவதையும் என்னால் ஜீரணிக்க முடியவில்லை.

அரசருக்கு முன்பு என்னோடு இருந்த நெருக்கம் மெல்ல மெல்லக் குறைந்து வருகிறது. நானும் வயதின் தளர்வினால், சரி விட்டால் போதும் என்று விலகி நிற்கிறேனே தவிர, விவேகமாய் முன் நின்று அதட்டி அந்தக் காரியத்தைச் செய்வதில் முனைப்பு காட்டுவதில்லை. இந்தப் பதவியை வேறு யாருக்கேனும் கொடுத்து விடலாமா என்று நினைக்கிறேன். உள்ளுக்குள் இது பற்றி ஒரு ஆசை இருக்கிறது..." என்று பிரம்மராயர் சொல்ல.

"எனக்குத் தெரியும். உங்கள் ஆசை என்னவென்று எனக்கு நன்கு தெரியும். அருண்மொழியை பிரம்மராயராக மாற்ற வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுகிறீர்கள் – இல்லையா..."

"ஆமாம். இராஜராஜசோழருக்கு மட்டுமல்ல, இராஜேந்திர ருக்கு அருகிலும் அருண்மொழிதான் இருக்க வேண்டும். அருண்மொழியைத் தவிர வேறு யாரும் இருக்கக்கூடாது.

"ஏன்... இது பரம்பரைச் சொத்தாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா?"

"ஆமாம் அரச பதவி எப்படி பரம்பரைச் சொத்தோ அதேபோல சேனாதிபதி விஷயமும் பரம்பரைச் சொத்தாக இருந்தால் நல்லது. அது ஒரு பக்குவமான விஷயமென்று கருது கிறேன். இந்த சேனாதிபதி என்கிற பதவியின் சூட்சுமத்தை ஒரு தகப்பன் தன் மகனுக்குச் சொல்லிக் கொடுப்பதுபோல, மற்ற எவரும் சொல்லிக் கொடுத்துவிட முடியாது.

இது கற்றுக்கொண்டு வருவதல்ல. அனுபவத்தின்பால் ஏற்படுவது அல்ல. பிரம்மராயராக இருப்பதற்குப் பயிற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அந்தப் பயிற்சியை ஒரு தகப்பன்தான் தன் மகனுக்குத் தரமுடியுமே தவிர, வேறு எவ்விதமாகவும் ஒருவன் அதை அடைய முடியாது.

அருண்மொழியை பிரம்மராயராக மாற்ற வேண்டும் என்பதற்காகவே காந்தளூர் கடிகைச் சாலையில் யுத்தப் பயிற்சி பெற அனுப்பி வைத்தேன். அது தவிர, உலகியல் கற்றுக் கொள்ள வேண்டும் என்று உங்களிடம் அனுப்பினேன்.

இத்தனை நாள் அருண்மொழி இங்கிருக்கிறான் என்ப தாலேயே அவன் இதற்குத் தகுதியானவன் என்பதை நிரூபித்து விட்டான்.

அவன் தகுதியானவனாக இல்லையெனில், மூன்றாம் நாள் நீங்கள் அவனை என்னிடம் திருப்பி அனுப்பியிருப்பீர்கள். அ.வன் அவ்வாறு வரவில்லையென்பது எனக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது. உங்கள் மனதில் அவன் இடம்பிடித்து விட்டான் என்பது தெரிந்தது.

கருவூர்த்தேவரே... அதிகாரமும் செல்வமும் எங்களுக்குப் பரம்பரையாக வரவேண்டும் என்பதற்காகவே நான் இதைச் செய்யவில்லை. சோழ தேசத்திற்கு நான் கடன்பட்டிருக்கிறேன். என்னுடைய செல்வாக்கும், அதிகாரமும், என் குடும்ப சுகமும் மாமன்னர் ராஜராஜரால் எனக்குக் கொடுக்கப்பட்டவை. அவர் கொடுத்தற்கு நான் பதில் கொடுத்தேன். நிறையவில்லை. இன்னும் பாக்கியிருக்கிறது.

அவர் என்னை உயரே தூக்கி வைத்ததற்கு ஈடாக நான் எதுவும் செய்யவில்லை. எனவே, என்னைக் கொடுத்ததுபோல, என் மகனையும் கொடுத்தால்தான் அது நல்லது என்று நினைக்கிறேன். சோழ தேசத்தைக் கட்டிக் காப்பதற்கு, வாழ வைப்பதற்குத் திறமையான ஒரு சேனாதிபதியை நான் தயார் செய்வதைவிட, மிக முக்கியமான பணி வேறு என்ன இருக்க முடியும்..."

"அற்புதமாய் பேசுகிறீர் பிரம்மராயரே. அமண்குடி தேவதை உங்கள் நாக்கிலே இருக்கிறாள். அமண்குடிக்குப் போய் வந்தீரா..."

"இல்லை போக வேண்டும் என்ற தாபமிருக்கிறது. உங்களைப் பார்த்துவிட்டு அமண்குடிக்குப் போகலாம் என்று இருக்கிறேன்...

"நானும் அருண்மொழியும் போன பௌர்ணமிக்கு அமண்குடி போய் வந்தோம். என்ன அழகு, என்ன அழகு... எட்டுக் கைகளும், செழித்த முகமும், சிங்கத்தின் மீது தூக்கி

வைத்த காலும்... அடேயப்பா... அந்தக் கம்பீரம் எப்படிப் பரவசப் படுத்துகிறது. அந்த இடத்தில் ஒரு சூடு பரவி உடம்பு முழுவதும் தாக்குகிறது.

மறுபடி சொல்கிறேன்-சாக்த உபாசத்தை, சக்தி வழி பாட்டை மிக மிக அழகாக, மிக மிக நேர்மையாக நீங்கள் செய்திருக்கிறீர்கள். அதனால்தான் அந்த தேவதை அங்கே குடியிருக்கிறாள். அந்த தேவதை அங்கு குடியிருப்பதால்தான் உங்கள் குலமும், உங்கள் செல்வாக்கும், உங்கள் வீரமும் கொடி கட்டிப் பறக்கின்றன. உங்களை அவள் கண்ணின் இமைபோல காக்கிறாள். உங்களுக்காக சோழ தேசத்தையும் காக்கிறாள்..."

"மன்னரின் உடல்நிலை பற்றி எனக்கு எப்போது கவலை வந்ததோ, அப்போதே இது வெறும் உடல் நிலைக் கோளாறு அல்ல... வேறு ஏதோ விஷயம் என்று உள்ளுணர்வு தட்டியது..."

"தட்டும். உங்களைப் போன்ற சக்தி வழிபாட்டார்களுக்கு உள்ளுணர்வு அதிகம் பேசும். அது சரியாகவும் இருக்கும். நீங்கள் யோசித்தது சரி. மாமன்னர் இராஜராஜரைக் குறி வைத்துப் பல்வேறு விதமான தாக்குதல்கள் இருக்கின்றன. கொல்லி மலையிலிருந்து ஒரு கூட்டம் தவறான விஷயங்களை மன்னரை நோக்கி அனுப்பிக் கொண்டிருக்கிறது. மன்னனுக்குத் துணை யாக இருப்பவர்களை நோக்கியும் அனுப்பிக் கொண்டிருக்கிறது. என்னை நோக்கியும் வந்தது..." கருவூர்த்தேவர் சொல்லி நிறுத்தினார்.

"என்ன அது..." பிரம்மராயர் கேட்டார்.

"இரவு சொல்கிறேன். பகலைவிட இரவு நேரத்தில் தவறான விஷயங்களின் உக்கிரம் அதிகமாக இருக்கும்..."

"தவறான விஷயங்கள் என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"துர்தேவதைகளின் நடமாட்டத்தைச் சொல்கிறேன்..."

"கருவூர்த்தேவர் இருக்குமிடத்தில் துர்தேவதைகள் இருக்குமா?"

"ஏவுவார்கள். ஏவிப் பார்ப்பார்கள். அவர்களுக்கென்ன... ஏதாவது செய்து இராஜராஜரையும், இராஜேந்திரரையும் குப்புறக் கவிழ்க்க வேண்டும். சோழ தேசத்தில் மீன் கொடி பறக்க வேண்டும்."

"இது நடக்குமா?"

"நடக்க விடமாட்டேன்..." கருவூர்த்தேவர் ஓங்கி தொடையில் அடித்துக் கொண்டார். பல் கடித்தார்.

"கருவூர்த்தேவர் கோபப்பட்டு நான் பார்த்ததில்லையே..."

"இது மனிதர்கள் மீதுள்ள கோபமல்ல. மனிதர்களைக் கருவியாக்கி... சில ஹடயோகிகள் செய்கின்ற அபத்தம். அரசைக் கவிழ்க்க பேய், பிசாசங்களை நாடுகின்ற துர்குணம்...."

"யார் அந்த ஹடயோகி..." பிரம்மராயர் ஆவலோடு கேட்டார்.

"ரவிதாஸனுடைய மகன்..."

"ரவிதாஸன் மகனா... இன்னும் அவர்கள் அடங்கவில்லையா..." பிரம்மராயர் கவலையோடு கேட்டார்.

"பெருத்து விட்டார்கள். பெரிய கூட்டமாய் மறுபடியும் திரண்டு விட்டார்கள்."

கருவூர்த்தேவர் கவலையோடு சொன்னார்.

பிரம்மராயரின் மனது இப்போது ரவிதாஸன் மகன் எப்படி இருப்பான் என்று தேடியது.

அவர்கள் இருவரும் அமைதியாய் தரை பார்த்துக் கொண்டிருந்தார்கள். அருகிலுள்ள குளத்து நீரிலிருந்து மெல்லிய தாய் கொப்புளங்கள் கிளம்பின.

சேறு நிரம்பிய நீர் நிலையும், முள் நிறைந்த காடும், பாழடைந்த மண்டபமும், பராமரிக்கப்படாத கோயில் வளாகமும், இடுகாடும், சுடுகாடும், வெட்ட வெளியும் தீய சக்திகள் வந்து இறங்குவதற்கு வசதியான இடங்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றன.

"கருவூர்த்தேவரே... இத்தனை வயது வாழ்ந்து, பல யுத்தங்களில் பங்கு பெற்று, இந்த தேசத்தின் பல மூலை முடுக்குகளில் பயணம் செய்து, இரவும் பகலும் மனிதர் தங்க முடியாத இடங்களில் தங்கி பல அனுபவங்களை நான் பெற்றிருந்தாலும், நீங்கள் இப்போது பேசிக் கொண்டிருக்கிறீர்களே பேய், பிசாசு என்று... அவைகளை நான் சந்தித்ததே இல்லை. இது அறிவுள்ளவர்களின் சூழ்ச்சி என்று எனக்குத் தோன்றுகிறது.

பாமரர்களைப் பயமுறுத்த, தன் வழிக்குக் கொண்டுவர, தன்னை மற்றவர்களை விட அறிவாளி என்று காட்டிக்கொள்ள, யாரோ இந்தப் பேய்க்கதைகளை விதம் விதமாகப் பரப்பிக்

கொண்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. காலம் காலமாகப் பரப்பப்பட்ட இந்தச் செய்தி கண், காது, மூக்கு முளைத்து ஒரு உருவமாக நம்மிடையே நடமாடிக் கொண்டிருக்கிறது. அனுபவமின்மையாலும், அறிந்து கொள்ளும் ஆசையாலும் கேட்கிறேன். பேய்கள் உண்டா...” பிரம்மராயர் கேட்டார்.

கருவூர்த்தேவர் பிரம்மராயரின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் தலை குனிந்து உட்கார்ந்திருந்தார். பிரம்மராயர் பற்றி யோசித்தார்.

“வாழ்வு தாண்டி, இந்தப் பிரபஞ்சம் பற்றி மனிதன் அதிகம் அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதில் எல்லா மனிதர்களும் ஈடுபடாமல் சில மனிதர்கள் மட்டும், சில இனத்தார் மட்டும் குறிப்பாக இந்தக் கேள்வி விசாரணைகளில் ஈடுபட்டு மெல்ல மெல்லத் தெளிந்து கொண்டு வருகிறார்கள். மிக நல்ல தெளிவுக்கும் வந்துவிட்டார்கள். அப்படிப்பட்ட மனிதர்களை அந்தணர்கள் என்று உலகத்தார் அழைக்கிறார்கள்.

ஆனால், இங்கு ஒரு அந்தணன் அந்தத் தெளிவு பற்றி எந்தவித ஞானமுமில்லாமல், க்ஷத்திரியனைப் போல உலகத்தின் பல பக்கமும் நகர்ந்து, வாள் உருவிப் போர் செய்துவிட்டு, இப்பொழுது பேய் உண்டா என்று கேட்கிறான். ஒரு குலம் தன்னுடைய அடிப்படையான வேலையை விட்டு வேறு இடத் திற்குத் திசை மாறி, சக்தி வழிபாட்டை முழுமையாய் செய்யாது, அங்குமில்லாமல் இங்குமில்லாமல் இரண்டுங்கெட்டானாக மாறிவிட்டது.

மும்முடிச் சோழ பிரம்மராயர் மிகுந்த கெட்டிக்காரர், போர்க்களத்தில் பெரும் சாமர்த்தியம் காட்டியவர். இவரால் சோழ தேசத்திற்கு மிகப் பெருமை.

ஆனாலும், பல்வேறு விஷயங்களில் இவர் சரியான முடி வெடுக்காது, அந்த முடிவுகளால் சோழ தேசம் நஷ்டப்படும்படி செய்திருக்கிறார். காரியங்களை வேகமாக முடிப்பதற்குத் தடை செய்திருக்கிறார்.

இன்னும் பொறுத்துப் பார்ப்போம் என்று க்ஷத்திரிய குணத்திற்கு எதிரான அந்தண குணத்தைப் போரில் பிரயோகம் செய்திருக்கிறார். அந்தத் தாமதத்தால் ஒரு உயிருக்குப் பத்து உயிராக இழப்பு ஏற்பட்டிருக்கிறது.

பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று ஒரு பேராவல் இவருக்கு இருக்கிறது. அரசவைப் பெண்டிருக்கு அதிக முக்கியத்துவம் முதலில் கொடுத்தது, பிரம்மராயர்தான். இதனால் அந்த வீட்டுக்குள்ளே, அரசரின் அரண்மனைக் குள்ளே பல சிக்கல்கள் ஏற்பட்டன.

குந்தவைதேவி சகலமும் அறிந்தவள்போல் நடப்பதும், நிற்பதும், பேசுவதுமாக இருக்கிறாள். அவள் அறிவுள்ள பெண்தான். ஆனால், ஒரு ஆணின் அனுபவம் ஒருக்காலும் ஒரு பெண்ணுக்கு வராது.

வாளெடுத்துப் போர் செய்து, முகத்தில் வெட்டு வாங்கி, வலியில் துடித்து, முகத்தில் ரத்தம் வழிய ஆக்ரோஷத்துடன் குதிரையேறி, போர்க்களத்திற்குள் புகுந்து, தன்னை வெட்டிய வனைத் தேடி, துரத்தித் துரத்தி வெட்டுகின்ற ஆக்ரோஷம் ஒரு பெண்ணுக்கு வராது. இது வராத வரையில் ஒரு பக்கத்து அனுபவம் இருட்டாகத்தான் இருக்கும்.

வாழ்க்கை வன்முறையானது. வாழ்க்கையின் எல்லா வளர்ச்சியும் வன்முறையைச் சார்ந்தது. உயிரினங்கள் பலதும் வன்முறையையே வாழ்க்கையின் அடிநாதமாகக் கொண் டிருக்கிறபொழுது, இங்கே மென்மை பற்றிப் பேசுவது முட்டாள்தனம்.

பெண்களின் மென்மை பல இடங்களில் உதவாது. இது இந்த அந்தணருக்குத் தெரியவில்லை. பெண்களை உற்சாகப் படுத்துகிறேன் என்று அரண்மனைப் பெண்டிரோடு அரசியல் பேச, இங்கே குழப்பங்கள் ஏற்பட்டு வருகின்றன. அரண்மனைப் பெண்டிரிடம் அரசியல் பேசியது போலவே இங்கும் பேய் பற்றித் தெரியாது என்று பேசுகிறார். கேட்கவே பரிதாபமாக இருக்கிறது.

என்ன செய்வது, இந்த இடம் நாற்றமெடுத்துக் கொண்டிருக்கிறது. இறுக்கமாகிக் கொண்டிருக்கிறது. ஒரு பரபரப்பு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு மெல்லிய வெப்பம் படர்ந்து கொண்டிருக்கிறது.

இங்கு மறுபடியும் ஏதோ ஒரு ஏவல் வேலை நடைபெறப் போகிறது. அந்த ஏவல் வேலை யாரை நோக்கி என்று தெரிய வில்லை. ஆனால் தன்னால் வர முடியும் என்று அகங்காரமாய் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். என்ன செய்து விடுவாய் என்று

இறுமாப்பாய்க் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதுவரை எதுவும் செய்யவில்லை.

ஆனால், செய்ய வேண்டும். அப்படிச் செய்வதற்கு முன்பு, இப்படிச் செய்வார்கள் என்று அரசாங்கத்தின் உச்சிக் கிளையிலுள்ள இவரைப் போன்றவர்களாவது தெரிந்து கொள்ள வேண்டும். நல்லது அப்படித்தான் நடக்க வேண்டும் என்றால், இந்த அந்தணருக்குப் பேய் பற்றியும் கற்றுக் கொடுக்கலாம்.

கருவூர்த்தேவர் நிமிர்ந்து நாலாபக்கமும பார்த்தார். அந்த இடத்தை மெல்லச் சுற்றி வந்தார். பாற்குளத்திற்கு அருகே வெப்பம் அதிகமாகியது.

'நீர் நிலைக்கு அருகே வரும்பொழுது, இடம் குளுமை யாகத்தானே மாற வேண்டும். ஏன் வெப்பம் ஏற்படுகிறது' என்று நீர்நிலையின் மேற்பரப்பை உற்றுப் பார்க்க கொப்புளங்கள் அதிகமாயின. சட்டென்று திரும்பி பிரம்மராயரைப் பார்த்தார்.

பிரம்மராயர் ஆலமர ஆசனத்தின்மீது அமர்ந்து, கால் மீது கால் போட்டு, வலக்கை சுண்டு விரலால் பல்லிடுக்கில் சிக்கிக் கொண்டிருக்கிற ஏதோ, உணவுப் பொருளை எடுக்க முயற்சிப் பதைப் பார்த்து, 'அடடே, தவறல்லவா செய்து கொண்டிருக் கிறார் என்ற கருவூர்த்தேவர் பதறினார்.

## 35

'பல்லிடுக்கில் கை வைத்து கை விரல்களை எச்சில் செய்து கொள்வது, சிறுநீர் கழித்து கால் அலம்பாமல் வருவது, மூக்குச் சளி உடம்பின் மீது படுவது, கண்ணிலுள்ள ஈளை கை நகங்களில் தங்கிவிடுவது போன்றவை பீடையான அறிகுறி களாகும். பீடையான அறிகுறிகள் உள்ள இடத்தில் தீய சக்திகள் கடுமையாய் தாக்கும்.

இதோ பிரம்மராயர் வாங்கிக் கொள்ளப் போகிறார். இந்தப் பக்கம் ஏதோ ஒன்று எழும்பப் போகிறது. எழும்புகிற வேகம் பார்த்தால் மிக உக்கிரமாக இருக்கும் போலிருக்கிறது. பிரம்மராயரைச் சுற்றி கோடு போட்டு, அது அவரைத் தாக்க விடாமல் செய்துவிடலாம். ஆனால் பிரம்மராயர் அனுபவம்

வேண்டுமென்று சொல்கிறாரே, என்ன செய்வது... ஒரு அந்தணருக்கு அனுபவம் தருவது நல்லதல்லவா.

அதுவும் அரசபதவியில் உயர்நிலையிலிருக்கின்ற ஒருவருக்கு இப்படியும் உலகத்தில் ஆட்கள் இருக்கிறார்கள் என்று வேறு ஒரு விஷயமும் தெரியவைப்பது நல்லதல்லவா... அவர்களை அடக்க நான் போக முடியுமா. பிரம்மராயர்தானே வாளேந்தி கொல்லிமலை நோக்கிப் போக வேண்டும்.

கருவூர்த்தேவர் மறுபடியும் சுற்றும்முற்றும் பார்த்தார். தொலைவில் அருண்மொழி கைகட்டி நின்றிருந்தான். இன்னும் சற்று தூரத்தில் கருவூர்த்தேவரின் சீடர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கருவூர்த்தேவர் அவர்களை நோக்கிக் கைதட்டினார். அவர்கள் ஓடி வந்தார்கள்.

"என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்..."

"ஐயா. எங்களுக்குள் பேசிக் கொண்டிருக்கிறோம்."

"மாலை நெருங்கி விட்டது. அந்தி நேரத்தில் செய்ய வேண்டிய ஜபதபங்களைச் செய்யுங்கள்." என்று கட்டளை யிட்டார்.

குளத்தில் கை, கால்களைக் கழுவிக் கொள்ள ஒருவன் இறங்க, அவனைத் தடுத்தார்.

"வேண்டாம். மந்திரத்தாலேயே உடம்பைச் சுத்தம் செய்து கொள். நீரற்ற இடத்தில் குளிக்க வேண்டும் என்று சொன்னால், எப்படிக் குளிப்பது என்று சொல்லிக் கொடுத்திருக்கிறே னல்லவா... மந்திரத்தால் உன் உடம்பைச் சுத்தம் செய்து கொண்டு மந்திரஜபம் இடைவிடாமல் செய்யத் துவங்கு" என்று சொன்னார். அருண்மொழியை நோக்கிக் கைகாட்டினார்.

அருண்மொழி சட்டென்று திரும்பி ஓடிவந்தான். 'ஐயா' என்று பணிவாகக் கைகூப்பினான்.

கருவூர்த்தேவர் அவன் தலையைத் தடவிக் கொடுத்தார் நெஞ்சை நீவினார்.

"இங்கு எது நடந்தாலும், இந்த இடத்தைவிட்டு ஒரு பொழுதும் அசையக் கூடாது."

"ஐயா..."

"இது என் கட்டளை. இங்கு எது நடந்தாலும், ஒரு பொழுதும் இந்த இடம்விட்டு நீ அசையக்கூடாது."

"உத்தரவு ஐயா..." அவன் மறுபடியும் கைகூப்பினான்:

நீர்க்கொப்புளம் அதிகமாகியது.

"என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்."

பிரம்மராயர் திரும்பினார். நீரின் மேற்பரப்பையே பார்த்துக் கொண்டிருக்கிற கருவூர்த்தேவருக்கு அருகில் வந்து நின்றார். பிரம்மராயர் கையில் இன்னும் எச்சில் இருந்தது.

பளிச்சென்று நீர் தளத்திலிருந்து ஒரு வேகம் பொங்கி, மேலெழும்பி, தடேரென்று தரையில் சிதறியது. யாரோ உள்ளிருந்து எழும்பி வெளியே வந்ததுபோல் கணநேரம் ஒரு தோற்றம் ஏற்பட்டது.

இப்பொழுது தோன்றியது ஒரு பெண். பெரிய முலைகளும், கோரமான முகமும் நிர்வாணமுமான ஒரு பெண்.

அந்த இடத்தில் சட்டென்று மிக மோசமான ஒரு நாற்றம் ஏற்பட்டது. அந்த உருவம் சூட்சுமமாய் இருந்ததால், கருவூர்த் தேவருக்கு மட்டுமே அது தெரிந்தது.

பிரம்மராயர் சற்று கலவரமாகி, கருவூர்த்தேவரையும், நீர் நிலையையும் மறுபடி பார்க்க, அவர் கையைப் பளிச்சென்று அந்தப் பிசாசு இழுத்து நீருக்குள் போட்டது. பிரம்மராயர் குளத்தில் தலைகுப்புற விழுந்தார்.

அகன்ற மார்பும், பலமான இடுப்பும், உறுதியான் தொடைகளும், புஜங்களும் உள்ள கனமான பிரம்மராயரை நல்ல வலுவுள்ள மனிதன் இழுத்துப் போடுவது கூட கடினம். வர்மக்கலை தெரிந்தவர்கள் மட்டுமே பலவீனமான நேரத்தில், பலவீனமான இடத்தில் தாக்கி, நெம்புகோல் தந்திரத்தைப் பயன்படுத்தி இப்படி ஒரு ஆளைப் புரட்டிப் போட முடியும்.

எதிரே எவருமில்லாமல், சட்டென்று கால் விரிய மேலே பறந்து தலைகுப்புற தண்ணீரில் தான் விழுந்ததைப் பார்த்து, பிரம்மராயர் திகைத்துப் போனார். நீருக்குள் தலைகுப்புற இறங்கி தரை தொட்டார்.

திரும்ப முயற்சிக்கிறபோது, காலை தரைக்குக் கொண்டு வர முடியாவண்ணம், அவரை அப்படியே யாரோ

பிடித்திருந்தார்கள். உதற முயற்சிக்க, மூச்சுத் திணறியது. உடம்பை ஆட்ட, நீரலைகள் எழும்பின.

ஆனால் என்ன செய்தும் உடம்பை நேராக்க முடியவில்லை. தலையை மேல்பக்கம் கொண்டு வர முடியவில்லை. காலை உதைத்தால் தானே மேலே போக முடியும்.

அவர் சேற்றில் கையூன்றி உதறி எழுந்திருக்க முயற்சிக்கிற போது, இன்னும் சேற்றுக்குள் அழுத்தப்படுவது தெரிந்தது. 'ஹரி' என்று கத்த வாயெடுத்தபோது, வேறு யாரோ வந்து கூர்மையான ஆயுதத்தால் சட்டென்று எதையோ அறுத்தார்கள்.

இப்படித்தான் அதை உணர முடிந்தது. தன்னைச் சுற்றியிருந்த ஏதோ ஒன்றை இரண்டு, மூன்று வீச்சுகளில் யாரோ வெட்டி வீழ்த்துகிறார்கள் என்று உணர முடிந்தது. அப்படி வெட்டி வீழ்த்திய பிறகு, உடம்பு நீருக்குள் போனதும் சாதாரணமாய் தானாகத் திரும்புமே – அப்படித் திரும்பியது. நேராகியது.

பிரம்மராயர் காலை உதறி ளியே வந்தார். தலை தூக்கினார். நீர் மட்டத்துக்கு மேல்வந்து ஆழ்ந்து சுவாசித்தார்.

கண்களை நீர் மறைத்தது. எதிரே என்ன நடக்கிறது என்று தெரியவில்லை. தலையைச் சிலுப்பினார். நகர்ந்து கரை நோக்கிப் போனார். கண் திறந்து பார்த்தார்.

எதிரே கருவூர்த்தேவர் வாளைக் கையில் ஏந்தியவர் போல கைகளை விரித்துக் கொண்டு, மிகுந்த கோபத்தோடு கர்ஜித்துக் கொண்டிருப்பது கேட்டது. அந்த ஹுங்காரம் – வெட்டி நாசம் செய்துவிடுவேன் என்று தெரிவித்தது. ஆனால் யாரிடம் தெரிவிக்கிறார் என்று புரியவில்லை.

கருவூர்த்தேவர் படியிறங்கினார். கைநீட்டினார். அவர் நீட்டிய கையை பிரம்மராயர் பற்றிக் கொள்ள, மேலே இழுத்து வந்தார். கரைபக்கம் சேர்த்தார். அவருடைய உதவியாளர்கள் முன்னே ஓடி வந்தார்கள். அவர்களை உலர்ந்த துணிகள் கொண்டு வரச் சொல்ல, தலைதெறிக்க ஓடினார்கள்.

ஒருவன் தன்னுடைய மேல்துணியால் பிரம்மராயரின் முதுகிலும், மார்பிலும் உள்ள நீரைத் துடைக்கத் துவங்கினான்.

"என்ன நடந்தது..." – பிரம்மராயர் குரலில் ஒரு பயத்தோடு கேட்டார். பிரம்மராயருக்கு இது மனுஷ சக்தி அல்ல; அமானுஷ்ய சக்தியின் வேலை என்பது புரிந்தது. ஆனால் அதை நம்பவும் அவர் மனம் தயாராக இல்லை.

"என்ன நடந்தது ஏன் இப்படி விழுந்தேன்..." பிரம்மராயர் மீண்டும் கேட்டார்.

"நான் உங்களுக்குச் சொன்ன விஷயம்தான் பிரம்மராயரே. நேரடியாக யுத்தத்துக்கு வர முடியாதவர்கள். அதர்வண வேதம் தெரிந்ததாலேயே தீய சக்திகளை அரசன் மீது ஏவுவதற்கு முன்பு பழையாறையிலும், உடையாளூரிலும் இருப்பவர்களை மிரட்டிப் பார்க்கிறார்கள். அப்பாவி மக்களுக்கும், அதிகாரிகளுக்கும் தொந்தரவு கொடுக்கிறார்கள். ஊர் கலவரமாகட்டும் என்று நினைக்கிறவர்கள். 'உடையாளூரில் கருவூர்த்தேவர் இருக்கிறார். இருந்தாலுமென்ன, நம்மால் பிரயோகிக்க முடியாதா' என்று மமதையில் செயல்படுகிறார்கள்."

"என்னை நீரில் தள்ளியது பைசாசமா?"

"ஆமாம்..."

"இப்படி செய்ய இயலுமா?"

"இயலும்..."

"ரவிதாஸன் மகனா இதைச் செய்கிறான்?"

"ஆமாம். ஓரளவு இங்கு நடந்த விஷயம் பற்றி எனக்குச் சந்தோஷம். சோழ அதிகாரிகளில் மிக முக்கியவரான உங்களுக்கு இது கண்ணெதிரே தெரிந்துவிட்டது. இது பற்றி உங்களுக்கு ஒரு அனுபவம் ஏற்பட்டு விட்டது. இதன் அடிப்படையான விஷயங்களை நான் இப்போது கற்றுக் கொடுக்க முன் வந்தால் நீங்கள் மனமாரக் கற்றுக் கொள்வீர்கள். இதை எப்படி எதிர்ப்பது என்று நான் உங்களுக்குச் சொல்லித் தந்தால், நீங்கள் அதை மிக எளிதாகப் புரிந்து கொள்வீர்கள். நம்பிக்கையில்லாதவரால் இதை எதிர்க்க எப்படிக் கற்றுக் கொள்ள முடியும். இப்போது இந்த விஷயம் உண்மை என்று உங்களுக்கு ஒரு அபிப்ராயம் ஏற்பட்டு விட்டதல்லவா?"

"ஆம்..." பிரம்மராயர் அமைதியாகச் சொன்னார். கருவூர்த் தேவரை நோக்கிக் கைகூப்பினார்.

"என்னை நீங்கள்தான் காப்பாற்றினீர்கள் என்பது நீருக்குள் மூழ்கிக் கொண்டிருக்கும்போதே தெரிந்துவிட்டது. வெளியே நீங்கள் கையில் வாள் ஏந்திய பாவனையோடு இருந்ததைப் பார்த்தபோது, என்னைச் சுற்றி கத்தி வீசி விடுவித்தீர்கள் என்பது புரிந்துவிட்டது. உங்களுடைய மகத்தான சக்தியை நான் கண்ணார அனுபவித்தேன். என்னைக்

காப்பாற்றியதற்கு நன்றி. மறுபடியும் என் சார்பாகவும், என் மகன் சார்பாகவும் உங்களை நமஸ்கரிக்க விழைகிறேன்."

"வேண்டாம், வேண்டாம்..." கருவூர்த்தேவர் கை நீட்ட, பிரம்மராயர் அதைப் புறக்கணித்துவிட்டு, தனது நெற்றியை கருவூர்த்தேவரின் காலில் வைத்தார். எழுந்து நின்றார்.

"அந்தணன் என்பவன் யாரையும் வணங்க வேண்டிய அவசியமில்லை என்று சொல்வார்கள். அது தவறு. ஞானி களையும், குருமார்களையும் ஒரு அந்தணன் வணங்கி, மரியாதை செய்யத்தான் வேண்டும். அந்தப் பைசாசம் ஏன் என்னைத் தாக்கியது."

"சொல்லியிருப்பார்கள். யார் அங்கு முக்கியமானவரோ - அவரை அடி என்று..."

"இங்கு முக்கியமானவர் நீங்கள் இல்லையா?" பிரம்மராயர் தனது கேள்வி வித்தையால் கருவூர்த்தேவரை சந்தேகத்துடன் வினவினார்.

"இல்லை. நான் முக்கியமில்லை. நான் அவர்களால் தொடப்பட முடியாதவன். என்னை அசைக்க முடியாது என்று அவர்களுக்குத் தெரியும். அவர்கள் எனக்கு அருகே இருப்பவர் களை அசைத்துப் பார்ப்பார்கள். என் வீட்டு ஓடுகளை நகர்த்த முயற்சி செய்வார்கள். எனது வேலைக்காரியை, பணியாட்களை, சீடர்களைத் தாக்குவதற்கு முயற்சி செய்வார்கள் என்று நான் நினைத்தேன். ஆனால், என் விருந்தாளியான உங்களைத் தாக்கி விட்டார்கள். நான் இதற்குப் பதில் சொல்லாது விடமாட்டேன். இந்த நேரம் பிரம்மராயரைப் புரட்டிவிட்டதாக அங்கே அவர்கள் கொக்கரித்துக் கொண்டு இருப்பார்கள்."

"இதை அறவே தடுப்பது எப்படி?"

"எங்கிருக்கிறார்களோ அங்கு போய் தாக்கி, அவர் களுடைய இடத்தைச் சின்னாபின்னப்படுத்த வேண்டும். அவர்கள் பூஜையைக் குலைக்க வேண்டும்."

"இந்நேரம் அரசரிடமும் போயிருப்பார்களோ?"

"அரசரிடம் போக முடியாது. அவரிடம் மந்திர தீக்ஷை பெற்ற ஒரு அரைஞாண் கயிறு இருக்கிறது. அதுவும் தவிர, அரசர் சிவன் கோயில் கட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் மிகுந்த நியதிகளோடு வாழ்கிறார். விரதமிருப்பதுபோல் தினமும் பஞ்சாட்சரம் ஓதி, தன்னைச் சுற்றி திக்கு கட்டிக் கொண்டே இருக்கிறார்.

இதைச் செய்யும்படி அவருக்கு நம்பியாண்டான் நம்பி சொல்லியிருக்கிறார். தேவார, திருவாசகங்களை சிதம்பரத்தி லிருந்து கண்டு பிடித்துக் கொண்டு வந்தபோது, நம்பி யாண்டான் நம்பியோடு பல மாதங்கள் மன்னர் இராஜராஜர் தங்கியிருந்திருக்கிறார். பல்வேறு விஷயங்களை நம்பியாண்டான் நம்பி சொல்லக் கற்றுக் கொண்டிருக்கிறார்.

மந்திர ஜபங்களும், மூச்சுப் பயிற்சியும், குண்டலினி யோகமும், ஹடயோகமும் செய்வதால்தான் அவருடைய எண்ணங்கள் உயர்வாகப் போய்க் கொண்டிருக்கின்றன. கடந்த ஆறு வருடங்களாக நம்பியாண்டான் நம்பியின் தொடர்பு இன்னும் வலுவாகி விட்டது.

நம்பியாண்டான் நம்பி சொல்வது போல அவருக்குத் திருத்தொண்டர் புராணக் கதைகள் சொல்ல வேறு எவரும் கிடைக்கவில்லை. பண்டிதர்கள் சொன்னால் அரசருக்கு அது சுவையாக இல்லை.

கண்களில் நீர் வழிய, உளமுருகி சிவனடியார்களின் புராணத்தை நம்பியாண்டான் நம்பி சொல்லும்போது, அரசர் நெகிழ்ந்து விடுகிறார். ஒரு நல்ல சத்சங்கம் அங்கு ஏற்பட்டு அரசரை வலுவாக்கியிருக்கிறது.

இப்போது அரசர் மனைவியைத் தவிர வேறு எந்தப் பெண்களோடும் கூடுவதில்லை. இந்த மாதிரி ஒழுக்க நெறிகளாலும் பைசாசங்கள் அவரை அண்டுவதில்லை.

ஆனாலும் ரவிதாஸன் குடும்பம் இடையறாது வீழ்த்த முயற்சி செய்யும். எங்கு தவறு நடக்கும் என்று காத்திருந்து, தவறை ஏற்பட வைத்து தடுமாற வைக்கும்…” கருவூர்த் தேவர் சொன்னார்.

“நான் என்ன தவறு செய்திருக்கிறேன். அந்தணனான என்னை எப்படி பைசாசம் தீண்டியது?”

“நீங்கள் ஜபதபங்கள் செய்வதில்லை பிரம்மராயரே. மனம் ஒருமித்து உட்காருவதில்லை. நாலாபக்கமும் அலை பாய்ந்து சிந்திக்கிறீர்கள். அதுதவிர, கண்ட இடங்களில் சாப்பிடுகிறீர்கள். சுத்தம் போதவில்லை. அதனால் மிக எளிதில் பைசாசம் உங்களைத் தாக்கிவிட்டது. மிக வலுவான பைசாசம் அது உங்களைப் பலிவாங்கியிருக்கும். ஆனால் வருமென்று தெரிந்து

நான் கவனமாக இருந்ததால், அதனால் எதுவும் செய்ய முடியவில்லை.

உங்களுக்குச் சரியாக வழிகாட்ட எவரும் இல்லை பிரம்மராயரே. உங்களை உயரத்தில் வைத்து, எல்லோரும் விலகி விடுகிறார்கள். நீங்கள் தனி ஆளாய் தவித்துக் கொண்டிருக் கிறீர்கள்.

மனம் வலுப்பட்டு இன்னும் அதிகமாக பக்தி விஷயத்தில் ஈடுபட்டு உங்களை வலுப்படுத்திக் கொள்ள வேண்டிய நேரம் இது. நீங்கள் அப்படி இருந்தவர்தான். இடையே பல்வேறு பிரச் சினைகளால் உங்கள் ஒழுக்கங்களை நழுவவிட்டு விட்டீர்கள். ஒழுக்கம் குறைந்தவர்களை பைசாசம் எளிதில் தாக்கும்.

அதோ, அருண்மொழியைப் பாருங்கள். நான் ஒரு கோடு கிழித்து, 'நகராதே' என்று சொன்னேன். இந்தக் கணம் வரை அவன் நகரவே இல்லை.

ஒரு நல்ல விஷயம் சொல்லட்டுமா. சோழ சமுதாயத்திற்கு ஒரு பிரம்மராயர் கிடைத்துவிட்டார். நீங்கள் ஆசைபட்டது போல உங்கள் மகன் வெகுநிச்சயம் சோழ சமுதாயத்தில் பிரம்மராயராக வருவான். சேனாதிபதியாய் பதவி ஏற்பான். பிரம்மராயர் என்கிற பட்டமும், சேனாதிபதி என்கிற பதவியும் அவனுக்கு நிச்சயம் கிடைக்கும். அவன் உங்களைவிட இன்னும் பல போர்களில் ஈடுபட்டு, உங்களைவிட நிறைய உன்னதங்களை அடைந்து. வெகுநலமே அவன் வாழ்வான்."

"ஹப்பா... கேட்கவே சந்தோஷமாக இருக்கிறது. ஆயுசும் பூரணமாக இருக்கிறதல்லவா?"

"இருக்கிறது" கருவூர்த்தேவர் இழுத்தாற்போல் சொன்னார்.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் கருவூர்த்தேவரே?"

"மத்திய வயதில், நாற்பத்தைந்து நாற்பத்தாறு வயதில் ஒரு கண்டம் இருக்கும். அப்போது அருண்மொழி மரணமடைய லாம். அல்லது துறவறம் பூணலாம். அருண்மொழி நாற்பத்தைந்து வயதில் துறவறம் பூண்டு விடுவான் என்று நான் நினைக்கிறேன்..."

"உயிரோடு இருந்தால் போதுமானது..." நெடுமூச்செறிந்து பிரம்மராயர் பேசினார். மறுபடியும் கருவூர்த்தேவரை நோக்கிக் கைகூப்பினார். உலர்ந்த துணிகள் வர, கட்டிக் கொண்டார்.

"நீங்கள் இன்று இரவு இங்கு தங்கிவிட்டு, நன்கு தூங்கி விட்டு நாளை காலை விடியும் நேரத்தில் அருண்மொழியோடு பயணப்பட்டு விடலாம். அருண்மொழிக்கு நான் சில விஷயங்கள் சொல்லிக் கொடுத்திருக்கிறேன். அருண்மொழியின் வாழ்க்கை இனிதாக இருக்கும். அது பற்றிக் கவலைப்பட வேண்டாம்.

அரசரை நீங்கள் இருவரும் கண்ணின் மணிபோல் பாது காக்க வேண்டும் என்பது என்னுடைய விருப்பம். நீங்கள் நகர்ந்த ஒரு நாள் கழித்து, நானும் உங்களைத் தொடர்வேன். போவதற்கு முன்பு உங்கள் ஊரான அமண்குடிக்குப் போய், அங்கு அம்பிகையைத் தரிசித்துவிட்டு, அவளுக்குப் பசியாற அன்னபலி கொடுத்துவிட்டு பிறகு உங்கள் பயணத்தைத் தொடருங்கள். நீங்கள் அரசரைச் சந்தித்த இரண்டு நாளில் அரசர் இருக்குமிடத்திற்கு நானும் வந்துவிடுவேன்.

பிரம்மராயரே... இன்னும் ஒரு முக்கியமான விஷயம். இந்த பௌர்ணமிக்குள் ஒரு பெரிய அரச குடும்ப சாவு நிகழ இருக்கிறது. அநேகமாய் அது செம்பியன் மாதேவியாக இருக்கும். அதற்கும் தயாராக இருங்கள்.

செம்பியன்மாதேவி தனக்கென்று ஒரு குழுவை எப்போதும் தயார் நிலையில் வைத்திருக்கிறார். அந்தக் குழு என்ன செய்யும் என்று தெரியவில்லை. அழுது, அலம்பல் செய்து ஏதேனும் அபத்தமாக நடந்து கொள்ளப் போகிறது. அப்படி நடப்பதற்கு முன்பே அடக்கி விடுங்கள். அங்கே வன்முறை காட்டவும் தயங்க வேண்டாம்."

"கருவூர்த்தேவர் பிரம்மராயரின் கைப்பிடித்து தன் வீட்டிற்கு அழைத்துப் போனார். "அருண்மொழி வா..." என்று கட்டளையிட்டார்.

அருண்மொழி பின் தொடர்ந்தான். அவனது மனசு ஆடிக் கிடந்தது.

# 36

இதற்குமேல் அவரால் நெஞ்சு வலியைப் பொறுத்துக் கொள்ள முடியும் என்று தோன்றவில்லை. முதுகு முழுவதும் முள் குத்துவது போல் வலி படர, செம்பியன்மாதேவி தாங்க மாட்டாமல் அலறினார்.

பல்லக்கு நிறுத்தப்பட்டது. தரையிறக்கப்பட்டது. சுற்றி சகலரும் உட்கார்ந்து, 'என்ன' என்று விசாரித்தார்கள்.

“என்னால் முடியவில்லை. நான் இறங்கிக் கொள்கிறேன். என்னைச் சற்று நேரம் பூமியில் படுக்க வையுங்கள். இந்தப் பல்லக்கில் குறுக்கி உட்காருவது எனக்கு கஷ்டமாக இருக்கிறது. கால் நீட்டி நெஞ்சில் கை வைத்து நான் படுக்க விரும்புகிறேன். என்னால் இனி தொடர்ந்து பயணப்பட முடியும் என்று தோன்ற வில்லை. நான் முடியப் போகிறேன். என் வாழ்க்கை அஸ்தமன மாகப் போகிறது. இந்த சோழ தேசத்தைவிட்டு நான் வேதனை யோடு போகப் போகிறேன். தயவுசெய்து என்னைத் தரையில் படுக்க வையுங்கள்.” திணறித் திணறிப் பேசினார்.

அவர்கள் மூன்று பேராய்ச் சேர்ந்து செம்பியன் மாதேவியை தரையில் படுக்க வைத்தார்கள். சாம்பான் அவருக்கு அருகே வந்தான். அவர் முகத்தை உற்றுப் பார்த்தான். எழுந்து நின்றான். சுற்றும் முற்றும் பார்த்தான். உதடு பிதுக்கினான்.

“என்ன சொல்கிறீர்கள்...”

“ஆரம்பத்திலிருந்தே நல்ல சகுனங்கள் எனக்குத் தோன்ற வில்லை. எதற்காக வந்தோமோ அதை வெற்றிகரமாக முடிப் போமா என்று எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. நான் பயந்தது போலவே நிகழ்ந்து விட்டது.” மருவூர் சாம்பான் தலையைக் குனிந்து கொண்டு உரக்கப் பேசினான்.

“செம்பியன் மாதேவியாரைக் கொல்லிமலைக்கு அழைத்துப் போக முடியாதா?”

“போய் எந்தப் புண்ணியமுமில்லை. இவள் சோழ தேசத்தைவிட்டு வருவதற்கு முடியாமல் மனம் தடுமாறி மரண மடையப் போகிறாள். அங்கேயே திருவக்கரையிலேயே ஹோமங்கள் செய்து இவள் உயிரைக் கட்டி இழுத்திருக்க வேண்டும்.

ஆனால் திருவக்கரையிலிருந்தால் இவள் எப்போது மரணமடைவாள் என்பது நமக்குத் தெரிந்திருக்காது. இந்தப் பிரயாணம் இவள் உடம்பை நிலை குலைத்து விட்டது. இருதயத்தைப் பாதித்துவிட்டது. இன்னும் கூடுதலாய் ஒரு மாதம் திருவக்கரையில் இருந்திருப்பாள்.

இப்படிப் பயணப் பட்டதால், பயணம் தாங்காமல் இருதயம் வேலையை நிறுத்தப் போகிறது. இவளை சூட்சுமமாய் கட்டிக்கொண்டு போக நம்மால் ஆகாது. கண்டுபிடித்து விட்டார்கள் என்றால் வாழ்க்கை முழுவதும் சோழதேசத்துக் காராகிரகத்தில்தான் கழிக்க வேண்டியிருக்கும்.

ரவிதாஸனுடைய சபதங்கள் எதுவும் நிறைவேறாமல், அவையெல்லாம் வெறும் கூச்சலாகவே போக வேண்டி யிருக்கும். இப்போதும் ஐயன் ரவிதாஸனுடைய சபதங்களை நிறைவேற்ற நம்மால் முடியுமா என்று சந்தேகமாகவே இருக்கிறது."

மலையனூர் சாம்பான் சப்பணமிட்டு செம்பியன் மாதேவிக்கு அருகில் அமர்ந்து கொண்டான். அவர் மார்பில் வலக்கை வைத்தான். இடக்கையால் உச்சி தடவினான்.

"மன்னித்து விடுங்கள் அம்மா. உங்கள் உடலுக்கு உபாதை கொடுத்து விட்டோம். உங்கள் மகன் இருக்கிறார் என்று உங்களிடம் பொய் சொல்லி விட்டோம். உங்கள் மகனைத் தேடித்தானே இவ்வளவு தூரம் வந்தீர்கள்.

உங்கள் மகன் எங்களோடு இல்லை. உங்களை வரவழைக்க நாங்கள் சொன்ன பொய் அது. உங்கள் மகன் உங்களுக்கு முற்றிலும் மாறாய், புத்த சந்நியாசியாய் எங்கோ அலைந்து கொண்டிருக்கிறார். சைவ மதத்தைவிட, நீங்கள் சொல்லிக் கொடுத்த சிவன் நெறியைவிட புத்தம் உத்தமமானது என்று புத்த துறவியாகிவிட்டார்.

உங்கள் கடைசிக் காலத்தில் உங்களிடம் பொய் சொன்ன தற்காக நான் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். இதற்கு என்ன தண்டனை கொடுத்தாலும் சந்தோஷமாக ஏற்றுக்கொள்கிறேன்.

இது அரசியல். நீங்கள் இதில் எத்தனை சூதாடியிருக் கிறீர்கள். எவ்வளவு வேகமாய் காய்களை நகர்த்தியிருக்கிறீர்கள். எத்தனை தந்திரங்கள் செய்திருக்கிறீர்கள். உங்கள் மகனைப் பதவிக்குக் கொண்டு வர வேண்டும் என்று எவ்வளவு படாதபாடு பட்டிருக்கிறீர்கள். அந்தப் பாடுதான் நானும் பட்டுக் கொண்டிருக்கிறேன்.

என் பாடு என்ன என்று உங்களுக்குப் புரியும். சூட்சும உருவத்தில் எழுந்து என்னைக் கோபமாய் அதட்டுவதை விட்டு, சிவனோடு ஐக்கியமாக முயற்சி செய்யுங்கள். உங்களுக்கு உதவ

நானும் முயற்சிக்கிறேன். உங்களுக்குப் பிடித்தமான சிவன் நாமத்தை நான் உங்கள் காதுகளில் சொல்ல, உள்ளுக்குள் வாங்கிக் கொள்ளுங்கள். நமச்சிவாயம்...நமச்சிவயாம்... நமச்சிவாயம்..."

மலையனூர் சாம்பான் இடது கையைத் தலையிலும், வலது கையை அவர் மார்மீதும் வைத்து, அவர் காதுகளில் கடைசி நேரத்து மந்திரம் போல் இறைவன் நாமம் சொல்ல, செம்பியன் மாதேவி பளிச்சென்று விழித்துப் பார்ததார். அவர் முடிவு அவளுக்குத் தெரிந்து விட்டது.

"என் மகன் இல்லையா..."

"இங்கு இல்லை..."

"எங்கிருக்கிறான்..."

"தெரியாது. ஏதோ ஒரு இடத்தில் புத்த சந்நியாசியாய் இருக்கிறார்.

"தெரியும் என்று சொன்னாயே?"

"உங்களை அழைத்து வர பொய் சொன்னேன்..."

"எதற்காக?"

"சோழ சாம்ராஜ்யத்தைச் சரித்து வீழ்த்துவதற்காக... இராஜராஜ சோழனைப் பழிக்குப் பழி வாங்குவதற்காக..."

"இந்தக் கிழவியை அழைத்து வந்து ஒரு அரசனை எப்படிப் பழிவாங்க முடியும்...?"

"நான் உங்களை உடல் ரூபமாகப் பார்க்கவில்லை. உங்கள் ஆன்மாவின் மூலம், உங்கள் சூட்சும சக்தியின் மூலம் இந்த தேசத்தைச் சிதறடிக்க முயற்சி செய்தேன்..."

செம்பியன்மாதேவி யோசித்தார். கண்களை மூடிக் கொண்டார். மறுபடி திறந்தார். 'செய்' என்று சொன்னார். அவர் புலன்கள் பளிச்சென்று உள் வாங்கி நெஞ்சில் குவிந்தன. நாடித் துடிப்பு மெல்ல மெல்ல அடங்கியது.

"நமச்சிவாயம்... நமச்சிவாயம்... நமச்சிவாயம்..." மருவூர் சாம்பான் இடைவிடாது சொன்னான்.

செம்பியன்மாதேவியின் உயிர் பளிச்சென்று பிரிந்தது. கழுத்தில் ஒரு சின்ன அசைவு இருந்தது. கண்கள் பாதி திறந்தன. வாய் சற்று பிளந்தது. சாம்பான் அவரையே பார்த்திருந்தான்.

நாடியில் கை வைத்தான். நாடி நின்று விட்டிருந்தது. இருதயத்தின் கடைசித் துடிப்பான 'டப்' கேட்டது.

சாம்பான் அவர் கண்களை வருடி மூடினான். வாயை அழுத்தினான். இடுப்பிலிருந்து துணி உருவி, வாய் மறுபடியும் திறக்காத வண்ணம் தலையோடு இறுக்கக் கட்டினான். கைகளை முன்பக்கம் வைத்து, கட்டை விரல்களைப் பிணைத் தான். கால்களை நேராக்கி, கால் கட்டை விரல்களையும் பிணைத்தான், எழுந்து நின்று கை கூப்பினான்.

"அன்பர்களே, எவ்வளவு பெரிய வாழ்க்கை எங்கு கிடக் கிறது பார்த்தீர்களா, சோழ தேசம் முழுவதும் வணங்கி எழுந்த பெண்மணி எங்கே மரணமடைந்து விட்டாள் பார்த்தீர்களா... தன் மகனை அரியணையில் ஏற்றுவதற்குப் படாதபாடுபட்ட ஒரு பெண்மணி எப்படி துயின்றாள் பார்த்தீர்களா. சிவன் நாமம் சொல்லி எத்தனையோ கோயில்களைக் கட்டி, எத்தனையோ பேருக்கு உதவி செய்தவளுக்கு மரணம் எங்கு வந்தது பார்த்தீர்களா. இவளைச் சுற்றி இவளுக்குச் சம்பந்த மில்லாத நாம்தான் இருக்கிறோம். நம்முடைய பொய் வார்த்தைகளைக் கேட்டு நமக்குப் பின்னே வரும்படி இவளுக்கு விதி இருந்திருக்கிறது. இவள் மரணம் பற்றி நெருங்கிய உறவுகளுக்குக்கூடத் தெரியாமல் இவள் முடிவு வந்துவிட்டது–

இது வருத்தமான முடிவு. வேதனையான முடிவு. இவள் மகன் ஒரு பக்கம், இவள் ஒரு பக்கம் என்று விதி இவர்களை எட்டி உதைத்துப் பிரித்துப்போட்டு விட்டது– வேறுயாரை எங்கே எப்படிப் பிரித்தாளோ தெரியவில்லை. எதனின்று பிரித் தாளோ தெரியவில்லை. இங்கு எல்லாவற்றிலும் பிரிவுபட்டு அநாதையாய் கிடக்கிறாள். இதைப் பார்க்கிற பொழுது நம்முடைய மந்திரமும், தந்திரமும், அரசியல் வேலைகளும், பழிக்குப் பழி வாங்குதலும் எந்த அர்த்தமுமற்றுப் போகின்றன.

ஆனால், நாம் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறோம்; வாக்கு கொடுத்திருக்கிறோம். வேறு வழியில்லை. நாம் நமது இலக்கை நோக்கிப் போய்த்தான் ஆக வேண்டும். வாருங்கள் போவோம்..."

"இதை விட்டு விட்டா?" ஒருவன் கை காட்டினான்.

அவன் கை காட்டியதைப் பார்த்து மலையனூர் சாம்பான் வாய் விட்டுச் சிரித்தான்.

"இதை என்று சொல்லி விட்டாயல்லவா. இவர் என்பது இது என்று மாறிவிட்டதல்லவா. அடடா, இதுதான் வாழ்க்கை. அருகே இருக்கின்ற முக்கூடல் கிராமம் போய் இந்த விஷயத்தைச் சொல்லுவோம். நாம் பரதேசிகள் என்றும் வழிப்போக்கர்கள் என்றும் சொல்வோம். பல்லக்குத் தூக்கிகளைக் காணோம் என்று சொல்வோம். அவர்கள் வருவதற்குள் நாம் வேறு ஊர் போய் விடுவோம். முக்கூடலி லேயேகூட குதிரைகள் கிடைத்தால் நல்லது. அடுத்து, நாம் விரைவாய் கொல்லிமலை நோக்கிப் போக வேண்டும்..."

அவர்கள் முக்கூடல் என்ற கிராமத்திற்குள் நுழைந் தார்கள். மக்களிடம் விசாரித்து கிராமத்து அதிகாரியை அழைத்தார்கள்.

"யாரோ ஒரு பெண்மணி. அரசவம்சம்போல் தோன்று கிறார். அவர் ஒரு மரத்தடியில் படுக்க வைக்கப்பட்டிருந்தார். அருகில் பல்லக்கு இருக்கிறது. பல்லக்குத் தூக்கிகளைக் காணோம். அந்தப் பெண்மணி மரணமடைந்து விட்டார். நீங்கள் போய் யாரென்று பாருங்கள்..."

"அப்படியா... நீங்கள் யார்?"

"நாங்கள் வழிப்போக்கர்கள். பைராகிகள்..."

"இருக்கலாம். ஆனாலும் ஒரு மரணத் தகவலைச் சொன்னதால், அதைப் பற்றி நாங்கள் விசாரிக்கிற வரையில் நீங்கள் எங்கும் போகக் கூடாது." கிராம அதிகாரி சொல்ல, மருவூர் சாம்பான் 'சரி' என்று தலையசைத்தான்.

ஒரு வீட்டின் திண்ணையில் சூலங்களைப் போட்டு விட்டுச் சரிந்து உட்கார்ந்தான். மற்றவர்கள் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கிராம அதிகாரி ஆட்களை அனுப்பினார். இவர்களுக்கு இரண்டு வாலிபர்களைக் காவல் வைத்தார். தானும் ஆட்களோடே கிளம்பிப் போனார்.

"தம்பி, போய் முக்கூடலில் குதிரை கிடைக்குமா என்று கேட்டு வா..." என்று ஒருவனை அனுப்ப, காவல் வாலிபர்கள் அவனைப் போகக்கூடாது என்றார்கள்.

"நான் இருக்கிறேனே ஐயா. அவன் போய் எங்கள் பயணத்திற்குண்டான ஏற்பாடுகளைச் செய்யட்டும்" என்று சாம்பான் சொல்ல, அரை மனதோடு அனுமதித்தார்கள்.

நான்கு குதிரைகள் வாங்கி விட்டதாகச் செய்தி கிடைத்தது. மருவூர் சாம்பான் எழுந்து வாலிபர்களை அழைத்தான்.

“இதற்குமேல் தாமதிக்க எங்களுக்கு விருப்பமில்லை. நாங்கள் நெடுந்தொலைவு போக வேண்டும். எங்களுக்கும் சோழ தேசத்து விஷயங்களுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை. நாங்கள் விடைபெற்றதாக உங்கள் தலைவரிடம் சொல்” என்று சொல்ல, அந்த இளைஞர்கள் அவனை மடக்கிப் பிடித்தார்கள்.

சாம்பான் பளிச்சென்று அவர்களைத் தட்டித் தரையில் சாய்த்தான். அவர்கள் எழுந்திருக்கும் முன்பு வேலாயுதத்தால் தலையில் அடித்தான். அவர்கள் அடி தாங்காமல் துவண்டு சுருண்டார்கள்.

சாம்பான் நிதானமாக நடந்தான். எதிர்வீட்டில் நின்றிருந்த பெண்மணி உரக்கக் கத்தினாள். மற்ற வீடுகளிலிருந்து பெண்கள் வந்து எட்டிப் பார்த்தார்கள்.

கையில் சூலத்துடனும், கமண்டலங்களுடனும் அந்தப் பைராகிகள் வடக்கு நோக்கி நகர்ந்தார்கள். ஊர் எல்லையில் நிற்க வைக்கப்பட்டிருநத குதிரைகளில் தாவி ஏறினார்கள்.

மலையனூர் சாம்பான் குதிரையேறி திரும்ப கிராமத்துக்குள் வந்தான். தரையில் சூலத்தால் பெரிய மீன் இலச்சினை வரைந்தான். போகும்போது ஊர் எல்லையிலிருந்த வேப்ப மரத்தின் கிளையை சூலத்தால் பற்றியிழுத்து உடைத்தான்.

கிராம மக்கள் கோபத்தில் வீறிட்டார்கள். சாம்பான் மற்றவர்களோடு குதிரையை வடக்கு நோக்கிச் செலுத்தினான். கொல்லி மலைக்குப்போக அவனுக்கு இன்னும் இரண்டு நாட்களாகும.

இரண்டு முழங்கை உயரத்திற்கு அமண்குடி துர்க்கை அற்புதமாக வீற்றிருந்தாள். பீடமே அரை முழம். பீடத்தின்மேல் சிம்மம். ஒரு காலை பீடத்தில் வைத்தபடி, மறுகாலைச் சிம்மத்தின் முதுகில் வைத்தபடி அமண்குடி அம்மன் மிகக் களையோடு காட்சி கொடுத்திருந்தாள். எட்டு கைகளிலும் ஆயுதம் தாங்கியிருந்தாள். மெல்லிய குறுஞ்சிரிப்பு அவள் முகத்தில் விரவிக் கிடந்தது. சந்நிதி முழுவதும் ஒரு வெம்மை படர்ந்திருந்தது.

அர்ச்சகர் தீபாராதனை செய்து தட்டு நீட்ட, மும்முடிச் சோழ பிரம்மராயரான கிருஷ்ணன்ராமன் தீபத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டார். துர்க்கைக்கு எதிரே பாய் போடச் சொன்னார். தர்ப்பைப் பாய் விரித்து போடப்பட, அதில் உட்கார்ந்து கொண்டார்.

சற்றுத் தொலைவில் நின்றபடி அமண்குடி கிராம அதிகாரி அவருக்குப் பெரிய பனை விசிறியால் விசிறத் துவங்கினான்.

உட்கார்ந்த பிரம்மராயர் மெல்ல, பஞ்சாட்சரி மந்திரம் சொல்லத் துவங்கினார். அம்மனையே பார்த்துக் கொண்டிருந் தார். 'என்னோடு பேசு' என்று உள்ளுக்குள் கெஞ்சினார். 'நான் உன்னை விட்டுவிட்டேனா. அல்லது நீ என்னை விட்டுவிட் டாயா' என்று குமுறினார்.

'பைசாசம் தள்ளும்படியாகவா நான் வாழ்ந்திருக்கிறேன். என் சக்திகள் என்னவாயின. என் பலம் என்னவாயிற்று. எனக்கு அருகே எப்போதும் துணையிருப்பேன் என்று வாக்கு கொடுத்தாயே. ஒரு பைசாசம் என்னைப் புரட்டிப் போடுகிற போது, நீ எங்கே போயிருந்தாய். உன்னை நான் முறைப்படி வணங்கவில்லை என்ற குறையா. உனக்குப் பலி தரவில்லையா. என்னையே கை விட்டு விட்டாயெனில் என் மகனை நீ எங்ஙனம் காப்பாற்றுவாய். தேவி... என்ன பிணக்கு இது. எதற்காக இந்த அவமானம். ஏன் இப்படி நெஞ்சு முழுவதும் வேதனை கொடுத்து விட்டாய். என் தொழிலில் நான் என்ன பிசகு செய்தேன். என் வாழ்க்கையில் நான் என்ன அசிங்கம் செய்தேன்' பிரம்மராயர் மனதிற்குள் வேதனையோடு பேசினார்.

அருண்மொழி கோயிலுக்கு வெளியே, நண்பர்களைச் சந்தித்து, கட்டித்தழுவி அளவளாவிக் கொண்டிருந்தான். அவன் குரல் மெல்லியதாய் பிரம்மராயருக்குக் கேட்டது-

"தேவி, ஒரு சிறிய குடிசையில் உன்னை வைத்திருக்கிறேன் என்ற கோபமா, நேரமின்மையால் இந்த வேலையைச் செய்ய முடியவில்லை. அரச காரியங்களுக்காக முன்னும் பின்னும் அலைந்து கொண்டிருக்கிறேனே தவிர, என் கிராமத்தை, என் வீட்டை நான் கவனிக்கவில்லை. உன்னையும் நான் வந்து பார்க்கவில்லை. இதனால்தான் கோபமா?

இப்பொழுது சொல்கிறேன் கேள். மன்னர் எல்லாம் வல்ல சிவனுக்குக் கோயில் எழுப்புகிறார். நான் என்னாலான

அளவிற்கு இங்கு ஒரு சிறிய கற்றளி அமைப்பேன். இந்த அமண் குடியில் உன்னை மையமாக வைத்து ஒரு சிவன் கோயில் கட்டுவேன். உன்னைச் சோழ தேசம் முழுவதும் வந்து பார்க்கும் வண்ணம் மிகச்சிறப்பாய் ஒரு வழிபாட்டுத் தலம் அமைப்பேன்.

ஆகம விதிப்படி, அற்புதமான ஒரு கோயிலை நிச்சயம் எழுப்புவேன். வெறும் கோயில் கட்டுவது மட்டும் எனக்கு என்றுமே உவப்பானதல்ல. ஊர் மக்களுக்கு நன்மை தரும் படியாய் மிகப்பெரிய குளம் ஒன்றும் அமண்குடியில் வெட்டுவேன். கேணிகளும் சிறிய கால்வாய்களும் மட்டுமே இருக்கும் இந்த இடத்தில், அந்தக் குளம் கோடைக்காலத்திலும் மக்களுக்கு வற்றாத நீரூற்றாகப் பயன்படும்.

அம்மா, உன்னை நான் மறந்து விட்டேன் என்று என்னை நீ புறக்கணித்து விடாதே. எனக்குத் துணையாக இரு. என் செயலுக்கெல்லாம் ஆதாரமாக இரு. நான் இப்போது ஏற்ற சிறிய சபதங்களையும் நீதான் நிறைவேற்றித் தர வேண்டும். சோழ தேசத்திற்காக நான் செய்கின்ற வேலைகளை ஆசீர்வதிக்க வேண்டும். என் குழந்தை அருண்மொழியை உன் பாதுகாப்பில் வைத்துக்கொள்ள வேண்டும்.

அம்மா, அரசர் கோயில் கட்டி முடிக்கட்டும். நான் அமண்குடியே கதி என்று வந்து, உன்னை மந்திரத்தால் உருவேற்றி மனம் குளிரச் செய்கிறேன். எனக்குத் துணையிரு தாயே" கைகூப்பினார். உதறி எழுந்தார். அவர் எழுந்ததும் வெளியே நிசப்தமாயிற்று. மக்கள் அவரை நெருங்கி வந்து வணங்கினார்கள். கடுவன்காரி, தொலைவிலிருந்து அவசரம் என்று எவரும் அறியாது சைகை செய்தான்.

## 37

"பேரரசே செம்மண்கரடு இந்த இடத்தோடு முடிவடைகிறது. இதற்குப் பிறகு நிலத்தின் தன்மை மெல்ல மெல்ல மாறுகிறது. தஞ்சை நகருக்குள் நிலம் வண்டல் மண்ணாகி, கருந்தட்டார்குடியைத் தாண்டுகிறபோது இன்னும் வளமாகி, ஆற்றங்கரைகளை நெருங்குகிறபோது மிக மிக வளப்பமாகி விடுகிறது. காவிரியின் தென்கரையில் கோயில் கட்ட வேண்டும் என்று நீங்கள் தீர்மானித்து விட்டீர்கள். காவிரியின் தென்கரைப் பக்க

முள்ள நிலத்தில், இந்த இடமே கோயில் கட்டுவதற்கு மிகச் சிறந்த இடமென்று நானும் என் குழுவினரும் தீர்மானித்திருக் கிறோம்.

மண் பரிசோதனைகளும், காற்றுப் பரிசோதனைகளும் செய்து முடிக்கப்பட்டுவிட்டன. திசை எபபடியிருக்கிறது என்றும் ஆராயப்பட்டது. கோயிலும், மிகப்பெரிய குளமும் இருக்கிற ஒரு இடத்தில்தான் நாம் வேறு ஒரு கோயில் கட்டப் போகிறோம். பழைய கோயிலை இடித்துவிட்டுச் செய்யப் போகிறோமோ. இடிக்காமல் செய்யப் போகிறோமா என்பது எனக்குப் புரியவில்லை. அதை நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும்...” ராஜராஜப் பெருந்தச்சர் கைகட்டி சோழ மாமன்னர் இராஜராஜருக்கு எதிரே நின்று பேசினார்.

உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குண்டான பல சாயல்களும் ராஜராஜப் பெருந்தச்சருக்கும் இருந்தன. இராஜராஜரைப் போலவே மத்திம உயரம். சற்று பருமனான உடல்வாகு. மெத்தென்ற கைகள். அழகாய் வளர்ந்த நகங்கள். கண்கள் உருளையாய், கனிவு மிக்கதாய், கூர்மையாய், பளபளப்பாய், இங்குமங்கும் அலைபவையாய் அவருக்கு இருந்தன. எதையும் விரைவாகச் செய்து முடிக்க வேண்டும் என்ற ஆவல் அவருடைய ஒவ்வொரு அசைவிலும் தென்பட்டன. சரியான தகவல்களைச் சொல்லவேண்டும் என்ற முனைப்பு பெருந்தச்சர் பேச்சில் இருந்தது.

“சரி. மேற்கொண்டு ஒரு கோயில் கட்டுவதென்றால் என்ன செய்ய வேண்டுமோ, அதைச் செய்யத் துவங்குங்கள்.” உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் மிருதுவாகப் பேசினார்.

தஞ்சை அரண்மனையில், அரண்மனை முற்றத்தில், முற்றம் சார்ந்த சபையில் மன்னர் ஒரு பெரிய சிம்மாசனத்தில் கால் மடக்கிச் சாய்ந்து உட்கார்ந்திருந்தார். இலவம்பஞ்சு அடைத்த திண்டை இடக்கை அக்குளுக்கு நடுவே அண்டக் கொடுத்திருந்தார். மன்னர் ஓய்வாக, அதேநேரம் மிக கவனமாக இருக்கும்போது அப்படி உட்காருவது வழக்கம். பஞ்சவன்மா தேவி மன்னரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

உடல்நலம் இப்போது சரியாகி விட்டது. ஆனாலும், முகத்தில் ஒரு சோர்வு இருக்கிறது. இப்படி அடிக்கடி அண்டக் கொடுத்து சரிந்து உட்காருவது அந்த சோர்வினால்கூட

இருக்கலாம். ஆனால், உடம்புதான் சோர்வாக இருக்கிறதே தவிர, புத்தி இடையறாத விழிப்புடன் – சகல விஷயங்களையும் எடை போட்டுக் கொண்டிருக்கிறது; பெருந்தச்சரைப் பலநூறு கூறுகளாக்கி, விதம்விதமாக அவருடைய பேச்சை ஆராய்ந்து கொண்டிருக்கிறது என்பதை பஞ்சவன்மாதேவி புரிந்து கொண்டாள்.

“ஆஹா... செய்து விடலாமே. அரண்மனை ஜோசியரை அழைத்து நல்ல நாள் பார்க்கச் சொல்லுங்கள். அந்த நல்ல நாளில் பூமியை நான் என் வசப்படுத்திக் கொண்டு வேலையைத் துவங்கி விடுகிறேன். இந்த நிலத்தில் கோயில் கட்டு என்கிற உத்தரவை வாய்மொழியிலும் எழுத்திலும் நீங்கள் எனக்குத் தர, ஈசான்ய மூலையில் குழி தோண்டி அந்த இடத்தில் நீர் நிரப்பி, பாலிகை விதைத்து, எல்லைகளை யானை கொண்டு ஓட்டி, யானை ஓட்டிய இடங்களிலெல்லாம் நவதானியங்கள் விதைத்து, அந்தணர்களைக் கொண்டு வேதம் ஓதச் செய்து, தேவார – திருவாசகங்கள் பாடி, அந்த இடத்தினுடைய எல்லா வித துர்வாசனைகளையும் விலக்கி வேலையைத் துவங்கி விடலாம்...” ராஜராஜப் பெருந்தச்சர் சொன்னார்.

“நீங்கள் சொல்வது நிலத்தைக் கையகப்படுத்தி, நிலமங்கையின் உத்தரவு கேட்டு, திக்குகளை வழிபட்டு, எல்லைகளைத் தீர்மானித்தல். அதன்பிறகு என்ன என்று கேட்கிறேன்...” மன்னர் இன்னும் சரிவாகச் சாய்ந்து கொண்டார்.

“தச்சர்கள் வரவேண்டும்...”

“வரவழைக்கச் சொல்லி இரண்டு மாதங்களுக்கு முன்பே உங்களுக்கு உத்தரவு போட்டு விட்டேனே...”

“பல்வேறு திக்குகளுக்கு ஓலை போயிருக்கிறது. கையிலிருக்கிற வேலையை முடித்துவிட்டுத்தான் கல்தச்சர்கள் வருவார்கள். அவசரப்படுத்தினால் ஆங்காங்கே நடந்து கொண்டிருக்கும் மராமத்து வேலைகளும், கோயில் வேலைகளும் நிற்கும். இங்கு வந்து இந்த வேலையில் ஈடுபட்டு விட்டால், அவர்கள் போய் விட்ட வேலையைத் தொடர்வதற்குப் பல வருடங்கள் ஆகும்...”

“அப்படியா... இந்தக் கோயில் கட்ட எத்தனை வருடங்கள் ஆகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். பெருந்தச்சரே...” பெருந்தச்சர் பேச்சை மன்னர் இடைமறித்தார்.

“இடையறாது உழைத்தால் நான்கு வருடங்களில் முடித்து விடலாம் என்று நினைக்கிறேன்...”

“சரி. கோயில் கட்ட உங்களுக்கு உடனடியாகத் தேவையான விஷயங்கள் என்ன...”

“கற்கள்தான். நிலப் பரிசோதனை முடித்த பிறகு, எல்லைகளைத் தீர்மானித்த பிறகு, நிலத்திலே கோடுகள் போட்டு சுவர்களுக்காக அஸ்திவாரம் தோண்ட வேண்டியிருக்கிறது. நிலத்தின் அடியிலிருந்து பாறைகள் கற்கள் அடுக்கி வரவேண்டும். ஆண் கற்கள், பெண் கற்கள் என்று மாற்றி மாற்றி துளைகளும் லிங்கமும் வைத்து வேலை செய்யவேண்டும். உறுதியான அஸ்திவாரம் எழுப்பி விட்டோமென்றால் கோயில் சந்திர, சூரியர்கள் இருக்கும்வரை நிலைத்து நிற்கும்...”

“எத்தனை ஆழம் தோண்டுவீர்கள்...” பஞ்சவன்மாதேவி கேள்வி கேட்டாள்.

“ஆறு அல்லது ஏழு முழங்கை ஆழம் தோண்டினால் போதும். இப்படிச் சொல்கிறேன். ஒன்றரை ஆள் உயரம் போதும்.”

“அப்படியா. மன்னர் மிகப்பெரிய கோயில் வேண்டுமென்றல்லவா சொல்லியிருக்கிறார். ஆறு பனை உயரமுள்ள கோயில் கட்ட, ஒன்றரை ஆள் உயரமுள்ள அஸ்திவாரம் போதுமா. உயரம் போகப் போக அஸ்திவாரம் ,பலமாக இருக்க வேண்டாமா...” - மறுபடியும் பஞ்சவன்மாதேவி கேள்வி கேட்டாள்.

“இல்லை தாயே. இதுவரை எவரும் செய்யாத ஒரு முயற்சியை, வேறு ஒரு கணக்கின் கீழ் இந்தக் கோயிலை நான் கட்டப் போகிறேன். உயரத்திற்கும், அஸ்திவார ஆழத்திற்கும் சம்பந்தமுண்டு. ஆனால் நான் கோயிலின் அடிப்பகுதியை அகலமாக்கி, மெல்ல மெல்ல குறுக்கிக் கொண்டு போய் உயரமாக எழுப்பப் போகிறேன். அடிப்பகுதியிலிருந்து பலகை பலகையாகக் கற்கள் கொண்டு போய் அடுக்கி, அந்த அடுக்கிய கற்களின் அளவைச் சிறிது சிறிதாகக் குறைத்து உச்சியில் குறுக்கப் போகிறேன். எனவே, அஸ்திவாரம் ஆழமாகத் தேவைப்படாது- ஒன்றரை ஆள் ஆழத்துக்குப் பிறகு எந்தப் பூமியில் தோண்டினாலும் நீர்க் கசிவு ஏற்படும். நீர்க்கசிவு ஏற்பட்ட பிறகு அந்த அஸ்தி வாரத்தைப் பலமுள்ளதாய் நான் நினைக்க மாட்டேன்.”

இராஜராஜரும், பெருந்தச்சரும், பஞ்சவன் மாதேவியும் பேசிக்கொண்டிருப்பதை அரசவையிலுள்ள உயரதிகாரிகள் கேட்டுக்கொண்டிருந்தனர். சுற்றியுள்ள மாடங்களிலிருந்து அரண்மனைப் பெண்டிர் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

அரசவைக்குச் சற்றுத் தள்ளி திறந்தவெளி முற்றம் இருந்தது. அந்த முற்றத்திற்கு வருவதற்கு இரண்டு பக்கமும் சிறிய வாசல்கள் இருந்தன.

அந்த வாசல்களின் வழியே, அரசவையில் மன்னர் கொலு வீற்றிருக்கிறார் என்று கேள்விப்பட்ட தஞ்சை மக்கள் சாரை சாரையாக வந்து நின்று கொண்டிருந்தனர்.

அவர்கள் நுழையும்போது சிறு சலசலப்பு ஏற்பட்டாலும், உள்ளே நுழைந்து அரசரைப் பார்த்ததும், அரசர் பேசிக் கொண் டிருக்கிறார் என்பதைக் கேட்டதும் அமைதியாய் கைகூட்டி நின்று கொண்டார்கள். மேல் துண்டை இடுப்பில் இறுக்கிக் கட்டிக்கொண்டு மிகப்பணிவோடு பார்த்தார்கள். கூட்டம் அதிகரித்துக்கொண்டே வந்து ஜனங்கள் எட்டி எட்டித் தவிப்பதை உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் பார்த்தார்.

"பெருந்தச்சரே... சற்று இருங்கள். நான் மக்களோடு பேசி விட்டு வருகிறேன்..." என்று எழுந்தார்.

மன்னர் எழுந்து மக்களை நோக்கிப் போக, பஞ்சவன் மாதேவி இடம் மாறி பெருந்தச்சருக்கு அருகே போய் உட்கார்ந்து கொண்டாள்.

அரசவைப் பெண்டிர் யாரும் வழக்கமாய் சபையில் ஆண்களுக்கு அருகே போய் உட்காருவதில்லை. ஆனால், பஞ்சவன்மாதேவிக்கு யாரும் எந்தக் கட்டுப்பாடும் விதிப்ப தில்லை.

"பெருந்தச்சரே... உடனடியாக தஞ்சையில் உங்களுக்குக் கீழ் வேலை செய்ய எத்தனை பேர் இருக்கிறார்கள். இன்னும் எத்தனை பேர் தேவைப்படும்..." என்று விசாரித்தாள்.

"அம்மா, உண்மையில் எனக்குக் கீழே வேலை செய்கின்ற நூற்று நாற்பது கல்தச்சர்கள் தவிர, எடுபிடிக்கான ஆட்கள் பத்து பேர்தான் இருக்கிறார்கள். வெறும் பத்து பேரை வைத்துக் கொண்டு எந்த வேலையும் செய்ய முடியாது. அஸ்திவாரம் தோண்ட, மண் எடுத்துக்கொண்டு போய் வெளிப்புறத்தில்

போட, உள்ளுக்குள்ளே பாறைக் கற்களை இறக்க என்று உடனடியாய் எனக்கு நானூறு ஆட்கள் தேவைப்படுகிறார்கள்…”

“நானூறு ஆட்களா?”

“ஆமாம். அரசர் சொல்கிற உயரத்திற்கு, அகலத்திற்கு, வேலைப்பாட்டிற்கு என்னுடைய புத்திக்கு எட்டியபடி நாலாயிரம் ஆட்கள் தேவை. நான் – கல்தச்சர்கள் கிடைக்க வேண்டுமே, அவர்கள் தஞ்சைக்கு வர வேண்டுமே என்று பயப் படவே இல்லை. இன்று இல்லையெனில் நாளை நிச்சயம் கல் தச்சர்கள் தங்கள் வேலை முடிந்ததும் வந்து விடுவார்கள். கூலி வேலை செய்ய, மண் தோண்ட, கல் சுமந்து கொண்டு வந்து கொடுக்க, செதுக்கிய கல்லைக் கொண்டு போய் பூமியில் இறக்க எங்கிருந்து ஆட்கள் வருவார்கள் என்பதுதான் எனக்குப் புரியாத புதிராக இருக்கிறது.

ஆனால், மன்னருடைய மனது வேறுமாதிரி. ஒரு கோடி காட்டிவிட்டால் போதும். அவருக்குப் பல்வேறு விஷயங்கள் புரிந்து விடும். எங்கிருந்து ஆட்களைக் கொண்டு வரவேண்டும் என்ற திட்டத்தை அவர் இந்நேரம் யார் மூலமாகவோ நடத்திக் கொண்டிருப்பார் என்றுதான் தோன்றுகிறது. எனவேதான் அதிகம் பதட்டப்படாமல், சகலமும் மன்னர் தலையில் போட்டு விட்டு எனக்கு ஆட்களைக் கொடுங்கள் என்று கைகட்டிக் கொண்டு நிற்கிறேன்…”

“ஆட்கள் இருக்கிறார்கள் பெருந்தச்சரே. ஆனால், அவர்கள் வருவதற்குண்டான ஓலையை மன்னர் இன்னும் அனுப்பவில்லை. அதுதான் கவலையாக இருக்கிறது.”

“எங்கிருந்து ஆட்கள் வரவேண்டும்?”

“கலிங்கத்தைச் சேர்ந்தவர்களும், சாளுக்கிய தேசத்தைச் சேர்ந்தவர்களுமான போர் அடிமை வீரர்கள் மேல்பாடியிலும், திருவொற்றியூரிலும் இளவரசர் இராஜேந்திரனுக்குக் கீழே காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

கிட்டத்தட்ட ஒரு வருடத்திற்கும் மேலாக அவர்கள் இராஜேந்திரனுக்குக் கட்டுப்பட்டு எந்தவித விலங்குகளுமின்றி சுற்றி வந்து கொண்டிருக்கிறார்கள்.

“அப்படியா… சாளுக்கிய வீரர்கள் விலங்கில்லாமல் எப்படி இருக்க முடியும்?”

“அது இராஜேந்திரனின் சாமர்த்தியம். இதை மன்ன ருடைய ஒற்றர் ஒருவர் சொல்லி, நாங்கள் கேள்விப்பட்டோம். விலங்குகள் பூட்டப்பட்டுத்தான் இருந்தனவாம். ஒருநாள் விலங்குகளையெல்லாம் அகற்றிவிட்டு, அவர்களுக்கெல்லாம் இளவரசர் இராஜேந்திரன் விருந்து கொடுத்தாராம். நீங்கள் ஊருக்குத் திரும்பலாம் என்றாராம். சாளுக்கிய வீரர்கள் திகைத்துப் போனார்களாம்...” – பஞ்சவன் மாதேவி சொல்ல, ராஜராஜப் பெரும் தச்சரும் திகைத்தார்.

# 38

மாமன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத் தேவருக்கு அன்பின் காரணமாகவும், அரசியல் காரணமாகவும் பல திருமணங்கள் நடந்தன. அப்படித் திருமணம் செய்து கொண்ட மனைவியர்களில் பலரும் தஞ்சையிலேயே இருந்தார்கள். தஞ்சை அரண்மனையில் மிகவும் விசாலமாக உள்ள அந்தப்புரத்தில் அவரவர் ஊர்க் கதைகளைப் பரிமாறிக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள்.

தனித்திருக்கும்போது கேலியும், கூச்சலுமாய் இருக்கிற இந்தப் பெண்மணிகள், மன்னர் அரண்மனைக்கு வந்ததும் முற்றிலும் அமைதியாகி விடுவார்கள். மன்னர் எதிரே பேச்சு வராமல் திகைப்பார்கள். தங்கள் விருப்பத்தை மன்னரிடம் நேரடியாகச் சொல்லத் தயங்குவார்கள். பட்டமகிஷியான உலக மாதேவி கூட மன்னரின் மனோநிலையை பஞ்சவன் மாதேவியிடம் தெரிந்து கொண்டுதான் மன்னரிடம் பேசத் துவங்குவார்.

எந்நேரமும் மன்னரோடு இருக்க மிகுந்த விழிப்போடு இருக்க வேண்டும். எப்போதும் விழிப்போடு இருக்க எப்போதும் பசியோடு இருக்க வேண்டும். எப்போதும் பசியோடு இருப்பது எலலோராலும் முடியாத காரியம்.

“மன்னர் மீது எனக்கு இருக்கும் ஆர்வம் தான் என்னைப் பசிதாங்க வைக்கிறது. தூக்கம் விலக்க வைக்கிறது’ என்று பஞ்சவன்மாதேவி கூறுவாள்.

வயது முதிர முதிர, மன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத் தேவரின் கோபம் மெல்ல குறைந்து வருகிறது. ஆயினும், எப்போதேனும், எதற்கேனும் அவர் சீறும்போது அரண்மனை ஆடிப்போகிறது. அவர் கோபத்திற்கு ஆடாது அமைதியாய் அதை எதிர்கொள்வது பஞ்சவன்மாதேவி மட்டுமே.

அதனாலேயே அரச சபையிலும் பஞ்சவன்மாதேவியால் பயமின்றி உட்கார முடிந்தது. அரச சபையிலுள்ள ஏனைய மற்றோர்களையும் அரசரின் கோபத்திற்கு ஆளாகாதவாறு அவளால் மட்டுமே காப்பாற்ற முடியும். அவளுக்குப் பிறகு இளவரசர் இராஜேந்திரரால்தான் அரசன் கோபத்தை எதிர்கொள்ள முடியும். அரசரை மட்டுமல்ல, இராஜேந்திரர் பற்றியும் பஞ்சவன்மாதேவி நன்கு அறிந்திருந்தாள்.

இராஜராஜப் பெருந்தச்சர் கைகட்டி வியக்க, இராஜேந்திரன் சளுக்கியர்களையும், கலிங்கர்களையும் தன் வசப்படுத்தியதைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தாள்.

அதிகாரிகளோடு அவள் சமமாக உட்கார்ந்து பேசுவதையும், அதிகாரிகள் பேசுவதை மறுப்பதையும், மாற்றுக் கருத்து சொல்வதையும், குறுக்கு விசாரணை செய்வதையும் அரண்மனைப் பெண்டிர் வியந்து பார்ப்பார்கள். அன்றும் பார்த்தார்கள்.

இளவரசர் இராஜேந்திரன் பேசிய தொனியிலேயே பஞ்சவன்மாதேவி ராஜராஜப் பெருந்தச்சரிடம் அந்தச் சம்பவத்தை விளக்கினாள்.

“நீங்கள் போரில் தோற்றவர்கள், சோழ தேசத்தினுடைய வீரர்கள் முன்னே, கத்தியைக் கீழே போட்டுவிட்டு அடி பணிந்தவர்கள். உங்களை நீங்கள் போர் செய்த இடத்திலிருந்து விலங்கிட்டு அடிமையாக்கி, எங்கள் தேசத்திற்குக்கெண்டு வந்திருக்கிறோம்.

இப்போது உங்களுக்கு விடுதலை. நீங்கள் உங்கள் ஊர்நோக்கிப் போகலாம். மறுபடியும் நல்ல பயிற்சி பெற்று வாளேந்தி, மீண்டும் சோழ தேசத்தை நோக்கிப் படையெடுத்து வரலாம். அல்லது – நாங்கள் படையெடுத்து வருகிறபோது, எங்கள் எதிரே வந்து நின்று சண்டைக்கு அழைத்து வெற்றிவாகை சூடி மகிழலாம். ஆனாலும் நீங்கள் ஒருமுறை தோற்று விலங்கிடப்பட்டு அடிமையாக இருந்ததும், பிறகு

அன்பினால் விடுவிக்கப்பட்டதும் உங்கள் மனதில் நிச்சயம் ஒரு வடுவாக இருக்கும். நீங்கள் ஊருக்குப் போனால், உங்கள் மகனும் மகளும்கூட நீங்கள் அடிமையாக இருந்து வந்தவர்கள்தானே என்று ஏசக்கூடும்.

எனவே, உங்களுக்கு வேறு விதமான ஒரு வாய்ப்பு தருகிறேன். கலிங்கத்தாரும், சாளுக்கியர்களும் சிவபெருமான் மேல் மிகுந்த பிரியமும், மதிப்பும் உடையவர்கள் என்று எனக்குத் தெரியும்.

மாமன்னர் உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் மிகமிகப் பெரிய ஒரு கற்கோயில் லிங்கோத்பவருக்கு எழுப்ப இருக்கிறார். அந்தப் பணியிலே சேர விருப்பமுள்ளவர்கள் எங்களோடு இருக்கலாம். அந்தக் கட்டடப் பணியிலே கருங்கல் சுமப்பதும், மண் அள்ளுவதும், மண் கொண்டு போய் போடுவதுமான வேலைகளில் ஈடுபட விரும்புபவர்கள் எங்களோடு தஞ்சைக்கு வரலாம். விருப்பமில்லாதவர்கள் போய்விடலாம்.

நீங்களும், நானும் வேவ்வேறு தேசமாக இருந்தாலும் ஒரே மதம். ஒரே கடவுளை வழிபடுபவர்கள். கழுத்திலே லிங்கம் மாட்டி பூஜை செய்கிற சாளுக்கியர்களை நாங்கள் துன்புறுத்துவதில்லை. மாறாய், அவர்கள் பூஜை செய்வதற்குண்டான சகல வசதிகளையும் செய்து தருகிறோம். அவர்களுடைய கைகளைப் பிணைப்பதில்லை.

மாமன்னர் இராஜராஜருக்கு சிவ வழிபாடுதான் மிக முக்கியம். சிவன் பெயரைச் சொல்வதுதான் அவர் வாழ்க்கையின் உன்னதமான லட்சியம். சிவனுக்குக் கோயில் எழுப்புவதுதான் அவரின் உயிர் மூசசு.

உங்களை விலங்கிட்டு அடிமையாக நடத்தாமல், வெறுப்பாகப் பார்க்காமல் – ஒரு உன்னதமான சிவன் பணியில் ஈடுபட உங்களைக் கைகூப்பி அழைக்கிறேன். விருப்பமுள்ளவர் வாருங்கள். விருப்பம் இல்லாதவர் மெல்ல நடந்து அவரவர் தேசத்திற்குப் போகலாம்.

இன்று மாலை சூரிய அஸ்தமனத்திற்கு முன்பு உங்கள் முடிவுகளைச் சொல்லி விடுங்கள்...” என்று தெரிவிக்க, ஆயிரத்து அறுநூறு போர் வீரர்களில் நாற்பத்தேழு பேர் மட்டுமே திருவொற்றியூரிலிருந்து கலிங்கம் நோக்கிப் போயிருக்கிறார்கள்.

மேல்பாடியிலுள்ள கைதிகளிடமும் இவ்விதமே ஒரு உரை நிகழ்த்த, அங்கிருந்த இரண்டாயிரம் பேரில் நானூறு பேர் மட்டுமே மேலைச் சாளுக்கியம் நோக்கி நகர்ந்திருக்கிறார்கள். விருப்பத்தோடு வேலை செய்கிற ஆட்கள் எல்லைகளிலே இருக்கிறார்கள். உங்களுடைய வரைபடங்கள் தயாரானதும் அவர்கள் இங்கே வந்து விடுவார்கள்."

"அம்மா, நான் போட்ட வரைபடங்கள் என்னிட மிருக்கின்றன. ஆனால், மன்னர் அதில் திருப்தி அடையவில்லை. காஞ்சியிலிருந்து பழைய ஓலைச் சுவடிகளைப் பார்க்கச் சொல்லி, அங்குள்ள அந்தணர்களைக் கலந்து ஆலோசித்து, கல் தச்சர்களையும் பொற்கொல்லர்களையும் பார்த்துப் பேசி, விமானம் போன்ற அமைப்புடைய ஒரு விஷயத்தை வரைபடமாகத் தயாரித்து அனுப்பியிருக்கிறார்கள். நான்கு பக்கமும் கோபுரம். நடுவே சிறிய விமானம் என்றுதான் இன்றுவரை கோயிலில் இருந்தது.

ஆனால், ஒரே ஒரு விமானம், வெட்ட வெளியில் மிகமிகப் பெரிய உயரத்துடன் எழும்பி நிற்க வேண்டும் என்பது மன்னருடைய ஆசையாக இருக்கிறது. இப்படி ஒரு கற்பனை அவருக்குள் ஏன் வந்தது என்று எனக்குப் புரியவே இல்லை.

'விமானம் மட்டுமே பெரிதாக இருக்கட்டும். கோபுரங்கள் சிறியனவாக இருந்தால் நல்லது' என்பது மன்னருடைய விருப்பம். சுற்று மதில்களும், கோபுரங்களும் இல்லாமல் இருந்தாலும் நல்லது என்பது அவருடைய எண்ணம். ஆனால் பிரம்மராயர், 'கோபுரம் இருக்கத்தான் வேண்டும். நான்கு பக்கமும் சிறிய அளவிலாவது கோபுரம் இருக்க வேண்டும்' என்று விரும்பினார். சபையில் அவர் பேச்சும் எடுபட்டு விட்டது.

எனவே, சிறிய கோபுரத்தோடு மிகப் பெரிய விமானம் அதாவது ஆறு பனை உயரமுள்ள விமானம் கட்டுவதற்கு அடித்தளமும், குமுதப்பட்டையும், தூணோடு கூடிய சுற்று மதிலும் இப்போது ராஜராஜீ என்கிற தேவரடியாரின் மூலம் வந்திருக்கிறது. விமானம் எப்படியிருக்க வேண்டும் என்பது பற்றிய வரைபடம் இன்னும் வரவில்லை.

மன்னர் காஞ்சிபுரத்திலுள்ள பண்டிதர்களுக்கெல்லாம் தனித்தனியே காசு கொடுத்து, மாதிரிப் படங்கள் வரைந்து அனுப்பச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறார். அந்த மாதிரிப்

படங்கள் எல்லாவற்றையும் சேர்ந்து, அவரவர் பெயர், விலாசம் எழுதி, ஒரு பெட்டியில் வைத்து அடுத்த மாதம் அனுப்புவதாக எனக்குத் தகவல் வந்திருக்கிறது.

பூமிக்கு கீழே சுவரின் அகலமும் ஆழமும் என்ன, பூமிக்கு மேலே கட்டடத்தின் திண்மை என்ன, அதற்கு மேலே மதிர்சுவர்களின் கனம் என்ன, அதற்கு மேலே விமானத்தின் அமைப்பு என்ன என்கிற விஷயங்கள் இனிமேல்தான் வரும். ஆறு பனை உயரமுள்ள விமானம் கட்டினால் அதற்கு என்ன செய்ய வேண்டுமோ, அதற்கான அடிப்படைத் திட்டங்கள் மட்டுமே இப்போது வந்திருக்கின்றன.

இப்படிப் பல்வேறு விஷயங்கள் பாதி பாதியாக நிற்க, மன்னர் பூமி பூஜை பற்றிப் பேசுகிறார். எனக்குப் பயமாக இருக்கிறது தாயே. எந்தத் திசை நோக்கிப் பயணப்படுகிறோம் என்ற தெளிவு இல்லாமல் பயணப்படுகிறோமோ என்கிற கவலை ஏற்படுகிறது. இதை மன்னரிடம் நான் எப்படிச் சொல்வது?" – ராஜராஜப் பெருந்தச்சர் பஞ்சவன்மாதேவியை நோக்கி கவலையோடு கேட்டார்.

பஞ்சவன்மாதேவி தோள் முழுவதும் போர்த்திக் கொண்டு பெருந்தச்சரின் ஆசனத்திற்கு அடுத்த ஆசனத்தில் குறுகி உட்கார்ந்தபடி தொலைதூரம் யோசித்தாள். எந்தப் பெண்மணியும் அரசவையில் இவ்விதம் உட்காருவதில்லை. பஞ்சவன்மாதேவி, பல நேரங்களில் தன்னை மறந்து, ஆழ்ந்த சிந்தனையில் அந்தப்புரத்திலிருக்கிற ஒரு எண்ணத்தோடு உட்கார்ந்து விடுவாள்.

ஆனால், இது பற்றி எவரும் கேள்வி எழுப்புவதுமில்லை. விநோதமாய் பார்த்ததும் இல்லை. ஆரம்பத்தில் சில அதிகாரிகளும், பொதுமக்களும் அதிர்ந்து போனார்கள். அதே நேரம் பஞ்சவன்மாதேவி ஒரு பிரச்சினையின் அடிவேரைப் புரிந்து கொண்டு, பளிச்சென்று அதற்குத் தீர்வு சொல்வதைக் கண்டு வியந்து போய் ஆர்ப்பரித்தும் இருக்கிறார்கள்.

பொதுமக்களிலிருந்து ஒருவன் உண்டி எடுத்துக் கொண்டு மன்னரைத் தேடி வந்தான்.

"அய்யா, நீங்கள் வந்து தரிசனம் தந்தது மிகவும் சந்தோஷம். ஆனால், பஞ்சவன்மாதேவியைத் தயவு செய்து எங்கள் பகுதிக்கு வரச் சொல்கிறீர்களா, எங்களுக்கு அவரால் சில காரியங்கள் ஆக வேண்டியிருக்கின்றன."

"அப்படியா, என்ன அது, என்ன காரியம் என்று என்னிடம் சொல்லுங்களேன்..."

"உங்களுக்குப் பல வேலைகள் இருக்கின்றன. மாமன்னரே... நாங்கள் பஞ்சவன்மாதேவி அவர்களிடம் விஷயத்தைச் சொல்லி எங்கள் குறைகளை நீக்கிக் கொள்கிறோம்..."

"என்ன பிரச்சினை என்று சொல்லுங்கள்..."

"எங்கள் ஊரில் மூன்று பாம்புப் புற்றுகள் இருக்கின்றன. பாம்புகளின் நடமாட்டம் ஏகமாக இருக்கிறது. இதுவரை யாரையும் தீண்டியதில்லையென்றாலும், என் துணி என் மீது படும்போதும், என் கை என் மீது படும்போதும், என் மனைவியின் கை என் முதுகைத் தொடும்போதும் பாம்போ என்று அலறி பயந்து விடுகிறேன். எதைத் தொட்டாலும், எது நம்மீது பட்டாலும் பாம்பு தீண்டியது போல் இருக்கிறது என்ற நினைப்பு வாழ்க்கையின் சுகத்தைக் கெடுத்து விடுகிறது ஐயா..." என்று அவன் சொல்ல, ஊர் மக்கள் சிரித்தார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் சிரிக்கவில்லை. திரும்பி, தொலை தூரத்திலுள்ள பஞ்சவன்மாதேவியைப் பார்த்தார். அருகில் வரச்சொன்னார்.

மன்னர் கூப்பிடுகிறார் என்று சொல்லியபடி பஞ்சவன் மாதேவி துள்ளி எழுந்து மன்னரை நோக்கி விரைய, தன்னைத்தான் இராஜராஜர் அழைக்கிறாரென்று பெருந்தச்சர் தவறாக நினைத்துக் கொள்ள, சற்று தொலைவே மக்களுக்கு நடுவே நின்றிருந்த மன்னரிடம் இரண்டு பேரும் விரைந்து போனார்கள்.

"அடடே, நான் உங்களை அழைக்கவில்லை. பஞ்சவன் மாதேவியை அருகே வரச்சொல்லி அழைத்தேன். சோழ தேசத்தின் மிக உயர்ந்த சிற்பியை, கணிதமேதையை, சகல கலா வல்லவனை ஒரு நாளும் இந்த ராஜராஜன் சைகை செய்து கூப்பிட மாட்டான்..." மன்னர் மன்னிப்புக் கேட்பது போல் ராஜராஜப் பெருந்தச்சரின் தோளில் கைவைத்தார்.

"ஏன் அழைத்தாலென்ன... அழைப்பது மன்னரல்லவா. இதில் என்ன தவறு இருக்க முடியும். நீங்கள் எங்கு அழைத்தாலும், எப்படி அழைத்தாலும் வரவேண்டிய கடமை

எனக்குண்டு. என்ன விஷயம் சொல்லுங்கள்...” ஆர்வத்தோடு பெருந்தச்சர் மன்னருக்கு அருகே வந்தார்.

“இந்த மனிதரை நான் சிறு வயதிலிருந்து அறிவேன். பெயர் ஞாபகமில்லையே தவிர, முகம் மறக்கவில்லை. இவர் ஊரில் பாம்புப் புற்றுகள் மூன்று இருக்கின்றனவாம். பாம்புகள் நடமாட்டமும் அதிகமாம். உங்களுக்கு வேலைகள் பல இருக்கும். பஞ்சவன்மாதேவியிடம் இதைச் சொல்லிவிட்டால், அவள் தகுந்த நடவடிக்கை எடுப்பாள்' என்கிறார்கள். அதனால் பஞ்சவன்மாதேவியை அழைத்தேன்.”

“யாரது அப்படிச் சொன்னது. இதென்ன அதிகப் பிரசங்கித்தனம். பிரச்சினையைச் சொல்லிவிட்டு கைகூப்பி இருக்கத் தெரியாதா. அது யாரால் தீர்க்கப்பட வேண்டும் என்பதையும் நீங்களே சொல்வீர்களா. இதற்குப் பெயர்தான் சோழ தேசத்துத் திமிர். மிக மோசமான குசும்புத்தனம். மன்னருக்கே வழிகாட்டிய அந்த மனிதர் யார்?” –சீறலுடன் பஞ்சவன்மாதேவி கூட்டம் நோக்கிக் குரல் கொடுத்தாள்.

“ஒரே ஊரில் மூன்று பாம்புப் புற்றுகளா... எந்த ஊரில் இருக்கின்றன?” – ராஜராஜப் பெருந்தச்சர் மன்னரைத் தாண்டி மக்கள் கூட்டத்தை அணுகினார்.

“கோயிலுக்குச் சுண்ணாம்புச் சாந்து கலக்க புற்றுமண் தேவை. ஒரே ஊரில் மூன்று புற்றுகள் இருக்கின்றதென்றால் அந்த ஊர் முழுவதும் தேவை...” பெருந்தச்சர் சந்தோஷக் கூச்சலுடன் பேசினார்.

பஞ்சவன்மாதேவி மனசுக்குள் ஒரு சின்ன திகைப்பு ஏற்பட்டது. கோயில் கட்டுவதற்கான சௌகரியங்கள் மனித புத்திசாலித்தனம் மீறி, தானாகவே ஏற்படுவதுபோல தோன்றுகிறது. கடவுளின் வழிகாட்டல் இருக்கிறதென்று மாமன்னர் நம்புவதால்தான் தன்னைக் காட்டிலும், மற்றவரைக் காட்டிலும் அமைதியாக இருக்கிறார் என்று ஒரு எண்ணம் வந்தது.

மாமன்னர் உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் கூட்டத்தில் வேறு யாரையோ பார்த்து முன்னேறி, நலமா என்று விசாரித்தார்.

கருந்தட்டார்குடி மக்கள் கும்பலாய் வந்திருப்பதை பஞ்சவன்மாதேவி அப்போதுதான் பார்த்தாள்.

# 39

"**பா**ம்புகளா... பல்லாயிரக்கணக்கிலா... கிராமம் எங்கும் ஊர்கின்றனவா... இப்படி ஒரு செய்தி இதுவரை நான் கேள்விப் படவே இல்லையே... ஏன் என்னிடம் சொல்லவில்லை..." - அவர் வேகமாகத் திரும்பி பஞ்சவன்மாதேவியைப் பார்த்துக் கேட்டார். பஞ்சவன்மாதேவியும் இந்தச் செய்தி தனக்கு அதிசயம் என்பதுபோல் முகம் வைத்துக்கொண்டு ஊர்மக்களை உற்றுநோக்கினாள்.

யார் முகமும் தெரிந்ததுபோல் படவில்லையே என்று கூர்ந்து கவனிக்க, அவள் கவனிப்பதைப் பார்த்துவிட்டு கிராமத்தின் வயசாளிகள் இளசுகளைத் தள்ளிக்கொண்டு முன்னே வந்து, வணக்கம் சொன்னார்கள். வணக்கம் சொன்னவர்களை அவள் அடையாளம் கண்டுகொண்டாள்.

"மன்னரே, இது சமீபத்தில் நடந்த விஷயம். ஒரே ஒரு புற்று கிராமத்திலிருந்து விலகி ஒரு கோயிலுக்கு அருகே இருந்திருக் கிறது. ஆனால், அதனால் அதிக தொந்தரவுகள் இல்லை. எப்போதேனும் புற்று தாண்டுகிறபோது சிறிய சலசலப்பு கேட்கும். சிலர் அதைக் கேட்டிருக்கிறார்கள்.

ஆனால், சமீபமாய் மிகச் சமீபமாய் அவைகள் பல்கிப் பெருகி விட்டன. பெரிய தாழம்புதருக்கு நடுவே பூப்பறிக்கப் போனபோது, மார் உயரத்திற்குப் புற்று இருப்பதைப் பார்த்துவிட்டு, திகைத்துப் போய் பெண்கள் வந்து சொல்ல, அந்த தாழம்புதரை அகற்ற முற்பட்டபோது, நூற்றுக்கணக்கில் பாம்புகள் வெளியே வந்தன..

என்ன செய்வதென்று தெரியாமல், அப்படியே வந்து விட்டோம். அடித்துக் கொல்வதும் தவறு என்று தோன்றுகிறது. ஏனெனில், இதுவரை அந்தப் பாம்புகள், ஊர் மனிதர் அல்லது விலங்குகள் என எதையும் தீண்டியதில்லை. அதேநேரம் ஒரு இனம்புரியாத கலவரத்தை அந்தப் பாம்புகள் ஊர்மக்கள் எல்லோருக்கும் கொடுத்துவிட்டன.

உண்மையைச் சொல்வதென்றால் அருகே படுத்துக் கொண்டிருக்கிற மனைவி இரவில் புரண்டு படுத்து மார்பில் கைவைத்தால், 'ஐயோ பாம்பு' என்று எழுந்திருக்கிற ஆண்கள் அதிகம்." ஒரு முதியவன் சொல்ல, இளைஞர்களும்,

கேட்டுக்கொண்டிருந்த அரண்மனைச் சேவகர்களும் வாய்விட்டுச் சிரித்தார்கள். சோழ தேசத்தின் தலைசிறந்த சிற்பியான ராஜராஜப் பெருந்தச்சரும் வாய்விட்டுச் சிரித்தார்.

ஆனால், மாமன்னர் இராஜராஜர் சிரிக்கவில்லை. இராஜராஜர் மௌனமாக இருப்பது கண்டு, உள்ளெழுந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு பஞ்சவன்மாதேவி மௌனமாக இருந்தாள்.

"என்ன உதவி வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்..." – இராஜராஜர் மக்களைப் பார்த்துக் கேட்டார்.

"தெரியவில்லை மன்னரே, பாம்புகளை அழிப்பதா, அப்புறப்படுத்துவதா, அல்லது அப்படியே இருக்கட்டும் என்று வாழ்வதா என்பது எங்களுக்குப் புரியவில்லை. ஆனால், ஏதேனும் செய்தாக வேண்டும்."

"எத்தனை வீடுகள் இருக்கின்றன..."

"முந்நூறு வீடுகள் இருக்கின்றன..."

"அடேயப்பா.. நான் சென்றவருடம் வந்தபோது அத்தனை வீடுகள் பார்த்ததாய் நினைவில்லையே..."

"அம்மா, சமீபத்தில் எதிர்ப்பக்கம் ஆறு திரும்பி வெள்ளம் வந்துவிட, அந்தப் பக்கமுள்ளவர்கள் எல்லோரும் இந்தப் பக்கம் வந்து வீடுகள் அமைத்துக் கொண்டனர். இரண்டு கிராமங்கள் ஒன்றுசேர்ந்து ஒரே கிராமமாக வெகு சமீபத்தில் மாறி யிருக்கிறது."

"இந்த மாறுதலினால் இந்த விளைவு ஏற்பட்டிருக்குமா?"

"நாங்கள் அவ்விதமாகவும் நினைத்தோம். மக்கள் குடி பெயர்ந்ததுபோல ஆறுதாண்டி பாம்புகளும் குடிபெயர்ந்து விட்டதோ என்ற கவலை எங்களுக்கு இருக்கிறது. மக்கள் குடிபெயர்ந்தபோது அந்த ஊர்க் கோவிலிலிருந்து தேவதையையும் கொண்டு வந்து ஊரின் மறு எல்லையில் வைத்தார்கள். ஒரு எல்லையில் எங்கள் கோவில் இருக்க, மறு எல்லையில் அவர்கள் கோவில் இருக்க, அவர்கள் கோவில் வந்ததிலிருந்து இந்த மாறுதல் ஏற்பட்டிருக்குமோ என்ற சந்தேகமிருக்கிறது. ஆனால் உறுதியாகச் சொல்வதற்கில்லை".

"நண்பரே, இப்போது காரணம் முக்கியமில்லை..." மாமன்னர் இராஜராஜர் கவலையாக அந்த மக்களைப் பார்த்துச் சொன்னார்.

“என்ன செய்வது என்பதுதான் முக்கியம். பாம்புகளை அப்புறப்படுத்துவதா… அல்லது ஊர் மக்களை வேறிடத்திற்கு மாற்றுவதா என்பது தான் கேள்வி…” – ராஜராஜர் சொல்ல, ஊர் மக்கள் திகைத்துப் போனார்கள். அவசர அவசரமாகக் கைகளை உயர்த்தி மன்னரிடம் பேச முற்பட்டார்கள்.

“பல ஆண்டு காலங்களாக நாங்கள் வாழ்ந்து வரும் இடம் அது. வண்டல்மண் மிக்க பிரதேசம் அது. எங்கள் முன்னோர்கள் அங்கு வாழ்ந்து மறைந்ததற்கு அடையாளமாக பல நடுகற்கள் இருக்கின்றன. அந்த நடுகற்களை நாங்கள் இன்றளவும் பூஜை செய்து வருகிறோம். எங்கள் மண் மிகச் செழுமையாக இருக்கிறது. எது போட்டாலும் நன்கு விளைகிறது. எனவே, எங்களை அப்புறப்படுத்துவது என்ற விஷயத்தில் மாமன்னர் நன்கு யோசிக்க வேண்டும்.” – முதியவன் ஒருவன் கைகட்டிப் பேசினான்.

“பாம்புகளை அப்புறப்படுத்துவது எங்ஙனம் என்று உங்களுக்கு ஏதேனும் தெரியுமா…” மாமன்னருக்குப் பதிலாக பஞ்சவன்மாதேவி முன்வந்து பேசினாள்.

“இல்லை. தெரியாது. என்ன செய்வதென்று தெரியாமல் தான் நாங்கள் உங்களிடம் வந்திருக்கிறோம்..” – அந்தக் கிழவன் மறுபடியும் பேச, அந்த இடத்தில் ஒரு மௌனம் கவிழ்ந்து கொண்டது.

ராஜராஜப் பெருந்தச்சர் தொண்டையைச் செருமிக் கொண்டு பேசத்துவங்கினார்.

“பாம்புகளை அப்புறப்படுத்துவதென்பது இயலாத காரியம். வேண்டுமென்றால் தீயிட்டு அழித்துவிடலாம். ஆயிரக்கணக்கான பாம்புகள் பல்வேறு இடங்களில் முட்டை யிட்டுக் குஞ்சு பொரித்துக் கொண்டிருக்கும். ஒரு பருவம் தாண்டி அதிலிருந்து பாம்புக்குட்டிகள் வெளிவரும். அந்தப் பாம்புக்குட்டிகள் ஓரிரு வருடத்திலே நல்ல நீளம் வளர்ந்து, மறுபடியும் முட்டையிடும்.

இவைகளை மகுடி ஊதி அழைத்தோ வேர் வைத்துப் பிடித்தோ – விரட்ட இயலாது. நீங்கள் சொல்வதைப் பார்த்தால் இரண்டு, மூன்று வருடங்களாகவே பாம்புகள் அங்கு குடிபெயர்ந்து, இப்போது வெளியே உலாவத் துவங்கிவிட்டன. புற்றுக்கள் இடநெருக்கடியாலும், உணவுக்காகவும் அவை

உங்களை நோக்கி வரத் துவங்கியிருக்கலாம். அந்தப் பாம்பு களை நகர்ந்துவதென்பது எளிதானதல்ல என்பதை தயவுசெய்து புரிந்து கொள்ளுங்கள்."

"என்ன பெருந்தச்சரே, நிச்சயமாகவே அகற்ற முடியாதா.." மாமன்னர் கவலையோடு கேட்டார்.

"மன்னா, பாம்புகளுக்கு மிகப் பிடித்தமான உணவு எலி. எலிகள் அதிகம் வாழும் இடம் வயல். வயல்களையெல்லாம் சுத்தமாக அழித்து, வெறும் கட்டாந்தரையாக பலகாலம் வைத்திருந்தால் பாம்புகள் வேறு இடம் குடிபெயர்வதற்கு வாய்ப்புண்டு.. இவர்கள் தங்கள் நிலங்களை கட்டாந்தரையாக மூன்று வருடம் வைத்திருப்பார்களா..."

எதிரே உள்ள ஊர்மக்கள் பலமாகத் தலையசைத்தார்கள். 'முடியாது' என்று சிலபேர் உரத்துச் சொன்னார்கள்.

"இது முடியாது என்று எனக்குத் தெரியும். ஆனால், இதைக் காட்டிலும் சரியான வழி எனக்குத் தென்படவில்லை."

"பாம்புப் பிடாரர்கள் நாற்பது ஐம்பது பேரைத் திரட்ட முடியாதா..."

"பாம்புப் பிடாரர்கள் அதிகமிருப்பது சேரதேசம். சேரதேசத்திலிருந்து அவர்களை இதற்காக வரவழைக்க வேண்டும். என்ன முயற்சி செய்தாலும், பத்து இருபது பாம்புகள் தங்கி விடலாம். மீண்டும் அந்தப் பத்து, இருபது பாம்புகள் ஒரே வருடத்தில் நூறு, இருநூறு பாம்புகளாக மாறும். மறுவருடத்தில் ஆயிரம் பாம்புகளாக வளரும். பிறகு மீண்டும் நீங்கள் பாம்புப் பிடாரர்களை வரவழைக்க வேண்டியிருக்கும். எனவே இது நிரந்தரத் தீர்வாக இருக்காது." பெருந்தச்சர் உரத்துச் சொன்னார்.

மக்கள் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டார்கள்.

"பிறகு என்னதான் வழி..." மாமன்னர் கேட்க, பெருந்தச்சர் நிலத்தை ஆழமாகப் பார்த்திருந்தார். கண்களைச் சுருக்கி தொலைதூரம் பார்த்தார். சட்டென்று மன்னரிடம் திரும்பி கைகூப்பினார்.

"ஒரு முறை நான் போய் அந்த கிராமத்தைப் பார்த்து விட்டு வருகிறேன் ஏன் அப்படி நிகழ்கிறது என்று எனக்கு ஏதாவது தோன்றுகிறதா என்று பார்க்கிறேன். இதைத் தவிரவும் ஒரு முக்கியமான எண்ணம் என் மனதில் ஓடுகிறது."

"என்ன அது.." மன்னர் கேட்க, கூட்டத்திலிருந்து பெருந்தச்சர் விலகிப் போய் நின்றார். அவர் தனியே பேச விரும்புகிறார் என்பதை அவர் விலகி நிற்பதிலிருந்து மன்னர் தெரிந்து கொண்டார். பஞ்சவன்மாதேவியையும் 'வா' என்று அழைத்துக் கொண்டு பெருந்தச்சரின் அருகே போய் நின்றார். "என்ன..." என்று கேட்டார்.

பெருந்தச்சர் மன்னரின் காதோரம் குனிந்து கொண்டார். மக்களுக்கு முதுகு காட்டி நின்றார்.

"இது ஒரு நல்ல வாய்ப்பு.."

"எதற்கு..."

"பாம்புப்புற்று நமக்குத் தேவைப்படும்..."

"எப்போது... ஏன் தேவை..."

"கோவில் கட்டுவதற்கு மென்மையான மண் வேண்டும். புற்றும்மண் என்பது மிக உயர்ந்த பொடிசான ஒரு மண். சுண்ணாம்புக் கலவையோடு இந்த மண் கலக்கப்பட, மிக நெருக்கமாக அந்தக் கலவை அமைந்து விடுவதுண்டு.

"மூன்றே மூன்று புற்று இருக்கிறது. ஒரு பக்க கோட்டைக் கதவு கட்ட முடியும் ஒரு சிறிய கோபுரம் கட்ட முடியும். அவ்வளவுதானே. அதற்காகவா இந்த மூன்று புற்றும் நமக்குத் தேவைப்படும்."

"இல்லை அந்தப் புற்றுகள் மட்டுமில்லை. அந்த ஊர் மொத்தமுமே மண் நன்றாக இருக்கிறது என்று அர்த்தம். அந்த மண்ணில் பாம்புகள் குடியேறுகிறதென்றால் அந்த மண்ணில் ஒரு சூடு இருக்கிறது அது பாம்புகளுக்கு இதமாக இருக்கிறது என்று பொருள். அந்த மண் இருக்குமிடத்தில் எறும்புகள் அதிகம் இருக்கின்றன. சிறிய மண் துணுக்குகளை அந்த எறும்புகள் எடுத்துக் கொண்டு போய் புற்றுகள் கட்ட, பாம்புகள் எளிதில் அங்கு வந்து குடியேறுகின்றன. என் அபிப்ராயத்தில் இந்தப் புற்றுகள் ஆழமாக இருக்கும். மூன்று புற்றுகளில் ஆயிரக்கணக்கான பாம்புகள் இருக்க முடியும். இன்னும் பல்வேறு இடத்தில் மறைமுகமாய் புற்றுகள் புதர்களுக்கு நடுவே இருக்கக் கூடும். நாம் போய் ஆராய்ந்தால் அது தெரிந்து விடும்"

"சரி. அப்படித் தெரிந்துகொண்டு என்ன செய்வதாக உத்தேசம்?"

"அந்தக் கிராமத்தை நாம் சுவீகரித்துக் கொள்ள வேண்டும்."

"என்ன பேசுகிறீர் பெருந்தச்சரே?"

"நமக்கு அந்த மண் மிக அவசியம் தேவை... இது பற்றி பிறகு சொல்கிறேன் மன்னா.. ஆகவே, அந்த மக்கள் அந்த இடத்திலிருந்து வெளியேற வேண்டும்." பெருந்தச்சர் அழுத்தமாகப் பேசினார்.

"சரி.. அதை இங்கே பேச வேண்டாம்." – பஞ்சவன் மாதேவி இடைமறித்தாள்.

தொலைவிலுள்ள கிராமத்து மக்கள் மன்னரையும் பஞ்சவன்மாதேவியையும், பெருந்தச்சனாரையும் கவலையோடு உற்றுப்பார்த்துக்கொண்டு பதிலுக்குக் காத்திருப்பது அவளுக்குப் புரிந்தது. அவர்களுக்கு எந்தச் சந்தேகமும் ஏற்படுக்கூடாது என்று அவள் விரும்பினாள்..

'புற்றுமண் தேவை என்று வந்து விட்டால் ஊர் வெளியேறத்தான் வேண்டும். ஆனால் அது மன்னரின் கட்டளையாக ஒருபோதும் இருக்கக்கூடாது. அது மக்களின் வெறுப்பைச் சம்பாதிப்பதாக ஆகிவிடும். இப்போதிருக்கிற நிலையில் எவர் வெறுப்பையும் இராஜர்ாஜத்தேவர் சம்பாதித்து விடக்கூடாது."

அவள் விரைவாகச் சிந்தித்து தெளிவான முடிவுக்கு வந்தாள். மன்னரையும், பெருந்தச்சரையும் சபைக்குப் போகச் சொல்லிவிட்டு, ஊர் எதிரே வந்து நின்றாள்.

"இது ஒரு சிக்கலான விஷயம்.. பாம்புகளைக் கொல்வது ஒருபோதும் நல்லதல்ல. அது அரசாங்கத்திற்குத் தீமை பயக்கும். அரசருக்கு அதனால் தீது உண்டாகுமென்று பெருந்தச்சர் சொல்கிறார்.. இப்படி ஒரு சூழ்நிலையில் நாம் பாம்புகளைக் கொல்லப் போகிறோமா?" – பஞ்சவன்மாதேவி கேட்க, மக்கள் பதறினார்கள். 'இல்லை, இல்லை' என்று சொன்னார்கள்.

"பாம்புகளைக் கொல்லப்போவதில்லை. அவற்றைக் கையிலெடுத்துக் கொண்டுபோய் வேறிடத்தில் விடுவதற்குப் பாம்புகள் சம்மதிக்குமா. கடும் விஷம் தீண்டி பலர் மரணமடைய நேரிடும். இது சாத்தியமே இல்லை. மந்திரம், தந்திரங்கள் தெரிந்த, பாம்புகளைப் பற்றி நன்கு விவரங்கள் அறிந்த ஒரு மனிதரை மன்னர் வரவழைக்கப் போகிறார்"

"யாரம்மா, கருவூர்த்தேவரா..." ஒரு இளைஞன் துடிப்போடு கேட்டான்.

பஞ்சவன்மாதேவி சட்டென்று விழித்துக்கொண்டாள்.

"ஆமாம், கருவூர்த்தேவர்தான்." என்று சொன்னாள். திரும்பி அவளுக்கு வழிகாட்டிய அந்த இளைஞனை பிரியத்தோடும் நன்றியோடும் பார்த்தாள். "உன் பெயர் என்ன..." என்று கேட்டாள்.

"பொன்னன்..." என்று அவன் பதில் சொன்னான்.

"பொன்னா, உங்கள் ஊர்ப் பெரியவர்களிடம் பேசி, அவர்களை மெல்ல ஊருக்கு அழைத்துப்போ. மன்னர் அங்கு வருவதோ, பெருந்தச்சர் அங்கு வருவதோ அல்லது கருவூர்த்தேவரோடு நாங்கள் எல்லோரும் வருவதோ என்று ஏதோ ஒன்று விரைவில் நடக்கும்.

உங்கள் பிரச்சினையை நீங்கள் மன்னரிடம் சொல்லி விட்டீர்கள். மன்னர் இது குறித்துப் பலரிடம் பேசி ஒரு முடிவுக்கு வருவார். எனவே, எந்தக் கவலையுமின்றி நீங்கள் ஊருக்குப் போகலாம். இன்னும் சில நாட்களில் இந்தப் பிரச்சினை முழுவதுமாக களையப்பட்டு விடும் என்று நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன்." பஞ்சவன்மாதேவி கைகூப்பினாள்.

முதியோர்களும், இளைஞர்களும், குழந்தைகளும் நெடுஞ்சாண்கிடையாக பஞ்சவன்மாதேவியின் காலில் விழுந்து நமஸ்கரித்தார்கள்.

மன்னர் அந்தக் கூட்டம் நமஸ்கரிப்பதை ஆவலோடு பார்த்தார்.

"என்ன சொன்னாள், எப்படிச் சொன்னாள், மக்கள் கூட்டம் இவ்வளவு வேகமாகக் கட்டுப்பட, இவள் என்ன தந்திரம் வைத்திருக்கிறாள்' என்று புன்சிரிப்போடும், வியப்போடும் அவளைப் பார்த்துக் கொண்டிருக்க, பெருந்தச்சர் மாமன்னருக்குச் சற்று அருகே வந்து நின்றார்.

"சட்டென்று என் மனதிலே ஒரு எண்ணம் உதிக்கிறது. அதை உங்களோடு பகிர்ந்து கொள்வதற்கு அனுமதிக்க வேண்டும். என் எண்ணம் தவறாக இருந்தாலும் நீங்கள் மன்னிக்க வேண்டும். பிரச்சினை உங்களுடையது என்னுடையது அல்ல. ஆயினும், இதில் லாபம் எனக்கு

இருக்கிறதென்பதால் உங்களிடம் காதோரமாக ஒரு விஷயம் சொல்ல ஆசைப்படுகிறேன்."

"சொல்லுங்கள் பெருந்தச்சரே..." - அவருக்கு வாட்டமாகக் காது கொடுத்து இராஜராஜத்தேவர் சாய்ந்து கொண்டார்.

## 40

"இந்தக் கிராமத்தை ஒட்டுமொத்தமாகக் காலி செய்து, அந்த நிலத்தை நாம் ஆக்ரமித்துக் கொள்வது நல்லது." - ராஜராஜப் பெருந்தச்சர் சொல்ல,

"ஏன்..." - இராஜராஜத்தேவர் பதட்டமின்றிக் கேட்டார்.

"அந்தக் கிராமம் முழுவதுமே மெல்லிய மண் நிரம்பி யிருக்கலாம். இடுப்பு உயரப் புற்றுகள் மூன்று எழுந்திருக்கு மெனில், அந்தக் கிராமம் முழுவதும் நல்ல மெல்லிய மண் கிடைக்குமென்று எனக்குத் தோன்றுகிறது. அந்த விதமான மண் நமக்குத் தேவை.

எங்கெங்கே அவ்விதம் மண் இருக்கிறதோ, அதை நோண்டி எடுத்து தனியே குவித்து, சற்று நீர் தெளித்து ஆற வைத்து, மறுபடியும் லேசாக அரைத்து சுண்ணத்தோடு கலந்து ஒரு கலவை தயாரித்து, இரண்டு பாறைகளுக்கு நடுவே பூசப்படின், இரும்பைக் காய்ச்சி ஊற்றி இறுக்குகிறது போலிருக்கும்.

எனக்கு உடனடியாக அந்தக் கிராமத்திற்கு போய் அந்த மண்ணைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும் என்று ஆசை எழுகிறது. நான் போய் பரிசோதித்து, அந்த மண் வேண்டுமென்று சொன்னால் அந்த மக்கள் என்ன செய்வார்கள் என்று எனக்கு தெரியவில்லை.

அவர்கள் சொல்வதுபோல காலம் காலமாக வாழ்ந்து வந்த பூமியை விட்டு அவர்களை வெளியேறச் சொல்ல முடியுமா என்பது எனக்குப் புரியவில்லை. அந்த உத்தரவை நீங்கள் தான் பிறப்பிக்க வேண்டும். அப்படி ஒரு உத்தரவை நீங்கள் பிறப்பித்தால், அவர்கள் உங்களை எவ்விதம் நேசிப்பார்கள், எப்படி மதிப்பார்கள், எந்தவிதமாய்

எதிர்ப்பார்கள் என்றும் எனக்குப் புரியவில்லை. உங்களுக்கு அது இழுக்கு தரக்கூடுமோ என்ற அச்சமும் எனக்கு ஏற்படுகிறது.

ஆனால் அந்த மண் வேண்டுமென்ற ஆசையை என்னால் தணித்துக் கொள்ள முடியவில்லை. நீங்கள் எந்த முடிவும் எடுப்பதற்கு முன்பு, நான் என்னுடைய ஆட்களை அங்கே அனுப்பி, இரண்டு கூடை மண் கொண்டு வரச்செய்யப் போகிறேன். என் எண்ண ஓட்டங்கள் சரிதானா மன்னரே..." பணிவோடு கேட்டார்.

மாமன்னர் இராஜராஜத்தேவர் கண்மூடிக் கொண்டார்.

"ஒரு கோயில் கட்டுகிறபோது இப்படிப்பட்ட இடைஞ்சல்கள் ஏற்படத்தான் செய்யும். உங்களுக்கு அந்தக் கிராமம் அவசியம் தேவையெனில், அதை நான் நிச்சயம் செய்து கொடுப்பேன். அந்த மண் மிக உயர்ந்ததெனில் அந்த மக்களை நிச்சயம் அங்கிருந்து அப்புறப்படுத்துவேன்.

எத்தனை காலம் அவர்கள் வாழ்ந்த பூமியாக அது இருப்பினும், அந்த மண் நமக்குக் கோயில் கட்டத்தேவை யெனில், அந்த மக்கள் அந்த இடத்தை விட்டுக் குடிபெயரத் தான் வேண்டும். வேறிடத்தில் நாம் அவர்களைக் குடியேற்றுவோம். கவலை வேண்டாம். நீங்கள் போகாது, உங்கள் ஆட்களை பாம்புப் பிடாரர்கள்போல் வேடமணியச் செய்து அனுப்புங்கள். மண் எடுத்து வரச் சொல்லுங்கள். பரிசோதித்து முடிவு சொல்லுங்கள்." மன்னர் கட்டளையிட, பெருந்தச்சர் விலுக்கென்று எழுந்தார். குனிந்து வணங்கினார். வேகமாக அரசவையைக் கடந்தார். முற்றம் தாண்டினார். குறுகிய வாசல் வழியே வெளியேறினார்.

வெளியே மிகப்பெரிய திடல் ஒன்று இருந்தது. அந்தத் திடலுக்குப் போய், அங்கிருந்த குதிரை லாயத்தில் தன் குதிரையைத் தேடி தாவி ஏறினார். வேமாகச் செலுத்தினார்.

அவர் வேகமாகப் போவதை அந்த ஊர் மக்கள் பார்த்தார்கள். அவர்களுக்கு முகம் கொடுத்துப் பேசாத பெருந்தச்சரின் போக்கு அந்த மக்களுக்குப் பிடிக்கவில்லை. அவரால் தங்கள் ஊருக்கு ஏதேனும் ஆபத்து வரக்கூடுமென்று அவர்கள் உள்ளுணர்வு சொல்லியது.

ஊர் மக்கள் கலைந்து போய்விட, கடுவன்காரி அரசவை முற்றத்திலேயே இருந்தான். ஒரு ஆள் மட்டும் குத்திட்டு

தரையில் உட்கார்ந்து கொண்டிருப்பதை காவலாளி பார்த்து விசாரிக்க, அவன் பஞ்சவன்மாதேவி உட்காரச் சொன்னதாய் பதில் பகன்றான்.

"எங்களிடம் அப்படிச் சொல்லவில்லையே..."

"என்னிடம் சொன்னார். அவருக்குச் செய்தி கொண்டு வந்திருக்கிறேன். ஓய்வான நேரத்தில் அவர் என்னை வந்து சந்திப்பதாகச் சொல்லியிருக்கிறார்..."

"அப்படியா – நான் விசாரிக்கட்டுமா?"

"செய்யுங்கள்..."

காவலாளி உள்ளே போனான். பஞ்சவன்மாதேவியின் சேடிகளைத் தேடினான். கூப்பிட்டு விஷயம் சொன்னான். சேடிகள் மூலமாக பஞ்சவன்மாதேவிக்கு விஷயம் தெரிவிக்கப் பட்டது.

"அவன் பெயர் என்ன..." என்று பஞ்சவன்மாதேவி கேட்க, யாரும் பெயர் கேட்காமல் வந்திருப்பது தெரியவந்தது. அவள் மேல்மாடத்திற்கு வந்து எட்டிப் பார்த்தாள். கடுவன்காரி எழுந்து நின்று கைகூப்பினான்.

"எங்கிருந்து வருகிறார் என்று விசாரித்துச் சொல்." கீழுள்ள காவலாளிக்கு உரக்கச் சொன்னாள்.

கடுவன்காரி நின்ற இடத்திலிருந்து, 'புலிக்குட்டி' என்று உரக்கக் கூவினான். அருகிலுள்ள காவலாளி அம்மனிதன் தன் பெயரைச் சொல்வதாய் நினைத்துக் கொண்டான்.

பஞ்சவன்மாதேவி துணுக்குற்றாள். வேறு யாரேனும் தங்களைப் பார்க்கிறார்களா என்று சுற்றும் முற்றும் பார்த்தாள். யாருமில்லை என்று தெரிந்தவுடன், உதட்டின் மீது விரல் வைத்து 'அமைதி' என்று சொன்னாள்.

புலிக்குட்டி என்றால் இராஜேந்திரசோழர் என்று அர்த்தம். ஆனால், இராஜேந்திர சோழரிடமிருந்து வந்த அந்த மனிதரை உடனடியாகப் பார்க்க முடியாது.

இப்போது கீழிறங்கினால் எதற்கு என்ற கேள்வி வரும். மன்னரும் விசாரிப்பார். மன்னர் அந்த ஊர் பற்றிய கவலையில் இருக்கிறார். வேறு என்ன செய்வது, வேறு எந்த இடத்தில் அந்த மக்களுக்கு இடம் கொடுப்பது என்ற யோசனையிலிருக்கிறார். இப்போது அவருக்கு அருகே இருப்பதுதான் அழகு.

அதுவும் தவிர, வந்திருந்த வரைபடங்களை விரித்துப் பார்க்கவே இல்லை. அதுவும் பார்க்கவேண்டியிருக்கிறது. அதையும் தவிர, அந்தப்புரத்திலுள்ள மற்ற அரசியர்கள் மன்னரோடு பேசி வெகு நாளாயிற்று என்ற குறையும் சொல்கிறார்கள். இன்று பிற்பகல் அவர்களோடு உட்கார்ந்து பேசுவதாக ஒரு ஏற்பாடு இருக்கிறது.

இந்த நேரத்தில் அந்தத் தூதுவனைப் போய்ப் பார்த்தால், இந்த வேலைகள் மொத்தமும் கெட்டுவிடக்கூடும். எனவே, அவனை நாளை வரை இருக்கச் சொல்ல வேண்டும் என்று நினைத்து, அவனை கோட்டைக்கு வெளியே காத்திருக்கச் சொல்லி செய்தி அனுப்பினாள். கடுவன்காரி அரண்மனை முற்றத்தை விட்டு வெளியேறினான்.

மன்னர் பகலுணவு உண்ண உட்கார்ந்தார். அவரைச் சுற்றி அரசிகள் உட்கார்ந்தார்கள். சேடிப் பெண்கள் பரிமாற ஆரம்பித்தார்கள்.

"நீங்கள் கோயில் கட்ட விரும்புவதாக எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள். எங்களிடம் இதுவரை நேரே உங்கள் மனதிலுள்ள கோயில் என்ன என்பதை நீங்கள் சொல்லவே இல்லை. தயவுசெய்து எங்கள் எல்லோருக்காகவும் என்ன விதமான கோயில் கட்ட போகிறீர்கள்; ஏன் இந்தக் கோயில் கட்டும் ஆவல் எழுந்தது என்று நீங்கள் சொல்ல வேண்டும். எங்களோடு இந்தப் பிற்பகல் முழுவதும் பேச வேண்டும். உங்களோடு பேசி இரண்டு மாதமாகிவிட்டது." - வானவன் மாதேவி சொல்ல, மன்னர் ஒருகை சோறு எடுத்து, அதில் பொறித்த காயை வைத்து அவளிடம் நீட்டி, 'சாப்பிடு' என்று சொன்னார். வானவன்மாதேவி சந்தோஷமாக வாங்கிக் கொண்டாள்.

"விலகி உட்கார்ந்திருக்கிறீர்களே, இன்னும் சற்று நெருங்கி வட்டமாக உட்காருங்கள்." என்று மற்றவர்களைப் பார்த்துச் சொல்ல, அங்கிருந்த ஆறு மனைவியரும் நெருங்கி வட்டமாக மன்னரைச் சுற்றி உட்கார்ந்தார்கள்.

தொலைவிலிருந்து பார்த்த பஞ்சவன்மாதேவிக்கு, அந்தக் காட்சி மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது.

"எனக்கு ஏன் கோயில் கட்ட வேண்டும் என்று தோன்றியது தெரியுமா. அதற்கு ஒரு நல்ல காரணம் உண்டு.

நீங்கள் யாரேனும் திருத்தொண்டர் புராணக் கதைகள் கேட்டிருக்கிறீர்களா. எவருக்கேனும் தெரியுமா. என்ன கதை தெரியும் என்று சொல்லுங்கள் பார்க்கலாம்...” இராஜராஜ சோழர் வினவ, அவர் மனைவியர்கள் மௌனமாக இருந்தார்கள்.

“எனக்கு இரண்டு கதைகள் தெரியும்...” வானவன் மாதேவி சொல்ல,

“பல கதைகள் இருக்கின்றன வானவன்மாதேவி. பல நூறு கதைகள் இருக்கின்றன. அதில் வெகு சிலவே தொகுப்பாகி யிருக்கின்றன. பல கதைகள் மறைந்தும் வருகின்றன. அவற்றினுள், கண்ணப்ப நாயனார் பற்றிய கதை என் நெஞ்சை உலுக்கிவிட்டது தேவி.” – மன்னர் சொன்னார்.

“என்ன கதை...” ஒரு இளம் மனைவி மன்னரை விசாரித்தாள்.

“அருகே வா...” மன்னர் அவளைக் கையசைத்துக் கூப்பிட்டார்.

அவள் அருகே வந்து, மன்னருக்கு நெருங்கி உட்கார்ந்து கொண்டாள். மன்னர் அவள் மீது மெல்ல சாய்ந்து கொண்டார். இரண்டு பிடி அன்னம் அவளுக்கும் கொடுத்தார். தானும் சாப்பிட்டார்.

“இந்த ஆர்வம் முக்கியம். இப்படி ஆர்வப்படுபவர்களை எனக்குப் பிடிக்கும். கண்ணப்ப நாயனாரின் கதையை உங்களுக்குச் சொல்கிறேன் கேளுங்கள்.” – மன்னர் ஒரு பாடசாலை ஆசிரியரைப்போல சொல்ல, மற்ற மனைவிகள் அதை ஆசையோடு கேட்க, பஞ்சவன்மாதேவி கடுவன்காரியை நோக்கி போகலாமா என்று யோசித்தாள். அவளுக்கு கண்ணப்ப நாயனார் கதை மன்னரால் ஏற்கெனவே சொல்லப்பட்டிருந்தது.

இதற்கு முன்பே அரசரால் ஒரு முறையும், கருவூர்த்தேவர் ஒரு முறையும், நம்பியாண்டார் நம்பி அவர்களிடம் இரண்டு முறையும் கண்ணப்ப நாயனார் கதை கேட்டு பஞ்சவன்மாதேவி கண் கலங்கியிருக்கின்றாள். இப்போதும் குளிர்காற்று வீசுகின்ற அந்தப்புரத்துக்கு நடுவே பஞ்சணையில் சரித்து உட்கார்ந்து, முழு ஈடுபாட்டுடன் மன்னர் அந்தக் கதையைச் சொல்ல உட்கார்ந்து கேட்க வேண்டும் என்ற ஆவல் மீண்டும் பெருகிற்று. மற்ற அரசிகள் அந்தக் கதையை எப்படி உணர்கிறார்கள்.

அவர்கள் முகபாவம் எப்படி மாறுகிறது என்று பார்க்க வேண்டும் என்று ஆவலும் ஏற்பட்டது.

ஆனால் இராஜேந்திரனிடமிருந்து கடுவன்காரி வந்திருப்பதை புத்தி அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டே இருந்தது. வெறும் ஓலையாய் செய்தி அனுப்பாமல், ஆள் மூலம் செய்திகள் அனுப்பியிருக்கிறான் என்றால், இராஜேந்திரனுக்கு ஏதோ பதில் தேவை என்பதும் முக்கியமாகிறது.

கடுவன்காரி கேள்விகள் கேட்க, தஞ்சையின் இன்றைய அரசியல் பற்றி அவனுக்கு விளக்கிச் சொல்லி, மன்னர் மனோநிலை பற்றி, இராஜேந்திரனுக்குத் தெளிவாகப் புரியும் வண்ணம் விவரம் சொல்லி அனுப்ப வேண்டும்!

"மன்னா எனக்குச் சில வேலைகள் இருக்கின்றன. நான் அரண்மனையை விட்டு வெளியே போய் வரலாமா..." பஞ்சவன்மாதேவி மன்னரின் அருகே போய் காதோரம் கேட்டாள்.

"நீ கண்ணப்ப நாயனார் கதை கேட்க விரும்ப வில்லையா?"

மன்னர் இதைவிட முக்கியமான வேலை உனக்கு வேறு என்ன இருக்கிறது என்பதுபோல் கேட்க, பஞ்சவன்மாதேவி தயங்கினாள். மன்னரை ஊடுருவிப் பார்த்தாள். மன்னர் அவள் பார்வையைச் சிறிது நேரம் கவனித்தார்.

"சரி; இதைக்காட்டிலும் மிக முக்கியமாக வேலை வேறு ஏதோ ஒன்று இருக்கிறது. என்னுடைய வேலையைத்தான் நீ மும்முரமாகச் செய்து கொண்டிருக்கிறாய் என்று எனக்குத் தெரியும். போய் வா. இது வரை சொல்லப்படாத ஒரு கதையைக் கூட நான் இங்கு சொல்லலாம் என்று நினைத்திருந்தேன். கண்ணப்பநாயனார் கதை சொல்லும்போது திருத்தொண்டர் மாக்கதையிலிருந்து ஒரு புதிய கதை சொல்கிறேன். உனக்கு ஆளனுப்பி அழைத்துக் கொள்கிறேன். நீ வந்த பிறகு செல்கிறேன். போய் வா. உன் வேலையைக் கவனி" என்று மன்னர் சொல்ல அவள் எழுந்து மன்னர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து கை கூப்பினாள்.

'மனிதர்களைப் புரிந்து கொள்வதில் உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவருக்கு நிகர் வேறு எவருமில்லை. முடிவுகள் எடுப்பதில் அவர் காட்டும் அமைதி வேறு எவரும் காட்டுவ

தில்லை. அவர், 'இரு, பிறகு போய்க்கொள்ளலாம்' என்று சொல்லிவிட்டால் எவரும் நகர முடியாது.

ஆனால் 'என் வேலையைத்தானே நீ செய்கிறாய், போய் வா' என்று அவர் சொன்னது மிகப்பெரிய உற்சாகத்தைத் தருகிறது. இந்த உற்சாகப்படுத்தல்தான் மன்னருடைய வெற்றிக்குக் காரணம். இந்தக் கோயில் வேலையை நோக்கி எத்தனை எதிர்ப்புக்கள் வந்தாலும், தனித்தனியே மனிதர்களை உற்சாகப்படுத்தி, கோவில் வேலையை நோக்கி அவர்களை மன்னர் நகர வைத்து விடுகிறார்.

இந்தக் கண்ணப்ப நாயனார் கதை இங்கே என் அந்தப்புரத்தில் இப்போது பேசப்படுவதுகூட – கோயிலை நோக்கி அரசிகளை நகர்த்துவதை நோக்கமாகக் கொண்டுதான் செய்யப்படுகிறது.

சிவனைப் பற்றிப் புரிந்து கொள்ளுங்கள். சிவநெறியைப் பற்றி அறிந்து கொள்ளுங்கள் என்று வீட்டிலிருந்து தன் வேலையைத் துவங்குகிறார். மன்னருடைய மனைவிகள் அதை உள்வாங்கிப் புரிந்து கொண்டால் குடும்பத்தோடு கோயில் கட்டும் வேலையில் இறங்கினால், அவர்களைச் சுற்றியுள்ள உறவுகளும் இந்த வேலைக்கு உடன்படுவார்கள்.

அவர்கள் உடன்பட, அந்தந்த அரச குடும்பத்து அதிகாரிகளும் வேலையாட்களும் களமிறங்குவார்கள். இவ்வாறு ஒரு மிகப்பெரிய கூட்டம் கோயில் கட்ட வந்துவிடும் என்று தான் மன்னர் இன்றைக்கு எல்லா வேலைகளையும் ஒதுக்கி விட்டு, மனைவியருக்கு நடுவே அமர்ந்து கண்ணப்ப நாயனார் கதை சொல்ல ஆரம்பித்திருக்கிறார்.

இங்குள்ள ஒவ்வொரு அரசியரும் மிகப்பெரிய அரசியல் பின்புலம் கொண்டவர்கள். அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அந்த அரசிகளிடம் சிவநெறியை ஊட்ட, இவர்கள் தங்கள் ஊர்களுக்குப் போய் அங்கு சிவநெறியைப் பேசி, மன்னரின் விருப்பம் சொல்லி – சீராகவும், கொடையாகவும் ஆட்களை யும், கட்டுமானப்பணிக்கரன உபகரண.ங்களையும், நடனமாந்தர் களையும், அவசியப்பட்டால் பொன்பொருள்களையும் கொண்டு வந்து குவித்து விடுவார்கள்.

'மிகப்பெரிய இறைபணி நடக்கிறது. அங்கு போவோம்' என்று அந்த அரசியின் குடும்பத்தினர் தானே முன் வந்து

நேரடியாய் உதவி செய்ய தஞ்சைக்கு வந்து விடுவார்கள்' பஞ்சவன்மாதேவி யோசித்துக்கொண்டு படியிறங்கினாள்.

வாசற்பக்கம் போகாமல், ஒரு ஆள் விட்டு கடுவன்காரியை அரண்மனைக்குள் வரவழைத்தாள். அரண்மனையின் மத்தியில் கடுவன்காரியை எதிர்க்கொண்டு 'வா' என்ற ஒற்றைக் குரலால் வரவேற்று, பின்கட்டு நோக்கி நடந்தாள்.

கடுவன்காரியும் அவளைத் தொடர்ந்து பின்கட்டு நோக்கிப் போனான். கட்டடத்தின் அடுத்த பகுதிக்குப் பஞ்சவன்மாதேவி படியேற, கடுவன்காரி பின் தொடர்ந்தான்.

மேல் தளத்தில் தொட்டி வைத்து மாதுளைக் கொடிகள் வளர்க்கப்பட்டிருந்தன. அவள் அதற்கு நடுவே போய் அமர்ந்துகொள்ள, எதிரே மந்தாரைச் செடி நிழலில் கடுவன்காரி நின்று கொண்டான்.

"என்ன விஷயம் சொல்..." என்று பஞ்சவன்மாதேவி விசாரிக்க, கடுவன்காரி தொண்டையைச் செருமிக்கொண்டான். சொல்ல ஆரம்பித்தான்.

## 41

"சந்தித்தவுடன் அன்னைக்கு என் சாஷ்டாங்க நமஸ் காரங்களைத் தெரிவித்துவிடு என்று இளவரசர் இராஜேந்திரர் உங்களிடம் தெரிவிக்கச் சொன்னார். என்னை நமஸ்கரிக்கச் சொன்னார். நான் நமஸ்கரிப்பதை அவர் நமஸ்கரிப்பதாகவே பாவித்து அங்கீகரிக்கச் சொன்னார்." – பஞ்சவன்மாதேவியை விட பத்து வயது மூத்தவனான கடுவன்காரி கைகூப்பி, நெடுஞ்சாண்கிடையாய் பஞ்சவன்மாதேவியின் காலில் விழுந்து நமஸ்கரித்தான். அசையாது தரையில் கிடந்தான்.

"என் சிவனே..." – பஞ்சவன்மாதேவி கூவினாள்.

"போதும் எழுந்திருங்கள்..." என்றாள்.

ஆனால், கடுவன்காரி எழுந்திருக்கவில்லை. "உங்களை ஆசீர்வாதம் செய்யச் சொன்னார்..." என்று படுத்தபடியே உரக்கப் பேசினான்.

"என் மனப்பூர்வமான ஆசிர்வாதங்கள். எழுந்திருங்கள் கடுவன்காரி..." – கட்டளையாக பஞ்சவன்மாதேவி சொன்னாள்.

கடுவன்காரி எழுந்து நின்றான்.

"நான் இளவரசரைச் சந்தித்து பத்து தினங்கள் ஆகி விட்டன. ஆயினும், அதற்குப் பின் உண்டான ஒவ்வொரு நாள் தகவலையும் எனக்கு இளவரசர் ஆளனுப்பி சொல்லிக் கொண்டிருக்கிறார்.

முக்கியமாக – மூன்று தகவல்களை உங்களிடம் சொல்லச் சொன்னார். மன்னருடைய சமீப உடல் நிலையையும், அவர் வாயிலெடுத்து அவஸ்தைப் பட்டதையும், அவருடைய சமையலுக்குக் கட்டுக் காவல்கள் அதிகப்படுத்தப்பட்டதையும் நான் ஆள் மூலம் செய்தியாக அனுப்பி விட்டேன்.

காஞ்சிபுரத்திலிருந்து வரைபடங்களின் ஒரு பிரதி ராஜேந்திரருக்கும் போயிருக்கிறது. இராஜேந்திரர் அதைப் பார்த்துவிட்டுப் பிரமித்துப் போய் இருக்கிறார். பகல் முழுவதும் எதுவும் பேசாமல் தனியே உலவிக் கொண்டிருந்தார். மாலை நேரம் எங்களைப் போன்ற ஒற்றர்கள், தளபதிகள் நான்கு பேரை அழைத்து மிகுந்த கவலையோடு பேசினார்.

'மன்னரின் மனோநிலை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.. இவ்வளவு பெரிய கோயில் எதற்கு என்று தெரியவில்லை. வரைபடத்தில் கோயிலுடைய விமானம் வரைந்து உயரம் காண்பிப்பதற்காக, மனித உருவமும் வரையப் பட்டிருந்தது. அநேகமாய், மனித உருவமும் ஒரு புள்ளியாகத் தான் இருந்தது. முதல் தளமே மூன்று ஆள் உயரத்திற்கு இருக்கிறது என்கிறபோது என்னால் அதைக் கற்பனைகூட செய்து பார்க்க முடியவில்லை' என்று ஆதங்கத்தோடு தெரிவித்தார்.

ஏழு நாட்கள் தீவிரமாய் யோசித்து, பலரோடு கலந்து பேசி, கோயில் கட்டுவதற்காகப் பளு தூக்கும் ஆட்களை விரைவில் அனுப்ப முடிவு செய்தார். மிகப்பெரிய சொற்பொழிவு ஒன்றை நிகழ்த்தி, எவருக்குக் கோயில் கட்டுவதில் ஆர்வமிருக்கிறதோ, அவர்கள் தஞ்சைக்குப் போகலாம் என்று, பிடித்து வைத்திருந்த அந்நிய தேசத்துப்போர் வீரர்களிடம் பேசினார். மற்றவர்களை விடுதலை செய்வதாகச் சொன்னார்.

ஆனால், அந்த விடுதலை உங்களுக்கு மரியாதை அல்ல என்றும் பேசினார். மற்றபடி, கோயில் கட்ட உழைப்பு தருவதாகச் சொன்ன போர்வீரர்களை சோழ தேசம் மிகுந்த மரியாதையாக நடத்தும் என்று வாக்குறுதி கொடுத்தார்.

அவர்களிடம் பேசிவிட்டு எங்களிடம் வந்து, 'ஒரு இளவரசர் என்கிற முறையில் இவர்களை இழித்துப் பேச மாட்டேன். பழித்துப் பேசமாட்டேன், என்று நான் உத்தரவாதம் கொடுத்து விட்டேன்.

ஆனால் சோழ தேசம் இந்த உத்தரவாதத்தைக் கொடுக்குமா, சோழ மக்கள் அப்படி நடந்து கொள்வார்களா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. எகத்தாளத்திற்குப் பெயர் போன சோழ தேசத்து மக்கள், இவர்களைப் பார்த்தவுடனேயே இழிவாகத்தான் நடத்தத் துவங்குவார்கள்.

இவர்களை இழிவாக நடத்தத் துவங்கினால், இந்த வீரர்கள் மனம் கொதித்துப் போய் கலவரத்தில் ஈடுபட வாய்ப்பிருக்கிறது. ஆனால் இவர்களைவிட வலுவான வீரர்கள் நம்மிடம் உண்டு. கலவரத்தை ஆரம்பத்திலேயே அடக்கி விடலாம் என்றாலும், மனம் கொதித்துப் போய் இந்த வீரர்கள் கலவரத்தில் ஈடுபடுவதை, இந்தத் தஞ்சைத் தரணி தாங்குமா என்பது சந்தேகம். மன்னருக்கு இதனால் ஆபத்து ஏற்படுமோ என்று நான் அஞ்சுகிறேன்' என்று சொன்னார். தன் கவலையை உங்களிடமும் சொல்லச் சொன்னார்."

கடுவன்காரி பேச்சுக்கு நடுவே ஆசுவாசப்படுத்திக் கொண்டான்.

"எத்தனை வீரர்கள் வருவார்கள்." பஞ்சவன்மாதேவி கேட்டாள்.

"பத்தாயிரம் வீரர்கள் முதல் பகுதியாக வருவார்கள். அவர்களை தஞ்சைத் தரணி எப்படி நடத்துகிறது என்று பார்த்து, அடுத்தபடி ஆள் அனுப்பலாம் என்பது இளவரசர் இராஜேந்திரன் திட்டம். இந்தப் பத்தாயிரம் வீரர்களை நடத்திக் கொண்டு வர, சோழ தேசத்து ஐந்நூறு குதிரைப்படை வீரர்கள் வருவார்கள்.

'அரசர் சொன்னால் போதாது. பஞ்சவன்மாதேவி அவர்கள் கைப்பட ஓலை எழுதி அனுப்பினால்தான் அந்தப் பத்தாயிரம் வீரர்கள் திருவொற்றியூரிலிருந்து நகரத் துவங்கு

வார்கள்' என்று இராஜேந்திரர் கட்டளையிட்டிருக்கிறார். உங்களுடைய உத்தரவை, எழுத்துப் படியை அவர் ஆவலோடு எதிர்பார்க்கிறார். பிரச்சினையைப் புரிந்துகொண்டு நீங்கள் பதில் சொல்வீர்கள் என்று நினைக்கிறார்."

"பிரச்சினை என்ன இருக்கிறது..."

"அடிமையாக்கப்பட்ட வீரர்கள், தஞ்சைத் தரணிக்குள் நுழையப் போகிறார்கள். கோயில் கட்ட பாறை தூக்கும் கூலி வேலைகள் செய்யப்போகிறார்கள். அவர்களுக்குத் தங்குமிடம், உணவு, இன்னும் பல வசதிகள் செய்து தரப்பட வேண்டும். அப்படி வெறுமே வசதிகள் மட்டும் செய்வதோடு நில்லாமல், அவர்களுக்கு மரியாதையும் தரப்பட வேண்டும் என்று இராஜேந்திரர் விரும்புகிறார். இல்லையெனில் கலவரம் நடக்குமென்று நினைக்கிறார்."

"அவ்வளவுதானே. இதற்கு நான் உத்தரவாதம் தருகிறேன். கலவரம் நிகழாது. நிகழ்ந்தால் அடக்கப்படும். மற்றபடி இராஜேந்திரர் வேறு என்ன சொன்னார்?" – பஞ்சவன்மாதேவி கடுவன்காரியைக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டு கேட்டாள்.

"கோயில் கட்ட ஆரம்பிப்பதற்கு முன்பு – தஞ்சையையும், தஞ்சையைச் சுற்றியுள்ள ஊர்களையும் நம்முடைய வேவுப் படையை வைத்து, ஊரில் யார் யார் இருக்கிறார்கள்... அவர் களுக்கும் அந்த ஊருக்கும் என்ன சம்பந்தம். யாரேனும் தவறான ஆட்கள் ஊருக்கு நடுவே இருப்பதற்கு வாய்ப்பிருக்கிறதா... சதிகார கும்பல்கள் சிதறியிருக்கிறார்களா என்று ஒரு முறை சோதித்துப் பார்த்துக் கொள்ளச் சொன்னார். கொல்லிமலையி லிருந்து ஒரு கூட்டம் சோழ தேசத்திற்குள் ஊடுருவிப்பதாக அவருக்குச் செய்தி வந்தது என்பதையும் தங்களிடம் தெரிவிக்கச் சொன்னார்."

"சரி; இது நல்ல யோசனை. செய்துவிடலாம். பிறகு?"

"இராஜராஜீயை உங்களுக்குத் துணையாக அனுப்பியிருக் கிறார். இராஜராஜீ பல்வேறு விதங்களில் பயிற்சிகள் பெற்றுத் தயாரானவள். அவளுக்குத் தற்காப்புப் பயிற்சியும், தரப் பட்டிருக்கின்றன."

"ஏன்?"

"இராஜராஜீ தேவரடியார் அல்ல. அவள் மாமன்னரைப் போல உடையார் வம்சத்துப் பெண். சோழ தேசத்திற்காக சூல

இலட்சினை இட்டுக்கொண்டு தன்னை தேவரடியாராக மாற்றிக் கொண்டாள். அப்படி மாற்றிக் கொள்ளும்படி இராஜேந்திரர் வேண்டிக் கொள்ள இது நடந்தது.

குறிப்பாய், உங்களுக்குப் பாதுகாப்பு வேண்டுமென்றும், இப்படிப்பட்ட திறனுள்ள ஒருவர் மன்னருக்கு அருகே இருப்பது நல்லதென்றும் இராஜேந்திரர் கருதுகிறார். எனவே இராஜராஜீயை அங்கீகரித்து, முழு நம்பிக்கையோடு அவளிடம் பழகலாமென்றும் உங்களிடம் சொல்லச் சொன்னார்."

பஞ்சவன்மாதேவி மெல்லச் சிரித்தாள்.

"அதைத் தவிர, இராஜராஜீ இங்கு என்ன நடக்கிறதென்று ரகசியமாய் இளவரசருக்கு ஓலையும் அனுப்புவாள் அல்லவா..." என்று சிரித்தபடி கேட்டார்.

"அப்படியும் ஒரு உத்தரவு இராஜராஜீக்கு இருக்கலாம். அது எனக்குத் தெரியாது. ஆனால், அப்படி ஒரு கட்டளை இராஜராஜீக்குக் கொடுக்கப்பட்டிருந்தால் அது உங்கள் நலனுக்காக, மன்னர் நலனுக்காக, சோழ தேசத்தின் நலனுக்காகத்தான் இருக்குமே ஒழிய, ஒரு பொழுதும் உங்களுக்கு எதிரானதாக இருக்காது."

"இராஜேந்திரனின் அன்புக்கு நன்றி. என் மனப்பூர்வமான ஆசீர்வாதம். இங்கு நடப்பவைகளை எந்த ஒற்றர் மூலமும் இராஜேந்திரன் அறிய வேண்டிய அவசியமில்லை. இங்கு என்னென்ன நடக்கிறது என்று நானே உனக்குச் சொல்லி விடுகிறேன். நீ தகுந்த ஆட்கள் மூலம் இதை இராஜேந்திரனுக்குச் சொல்லிவிடு. இராஜேந்திரனுடைய ஆவல், மன்னரைச் சுற்றி நடக்கின்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ளத் துடிக்கின்ற வேகம் எனக்குப் புரிகிறது. ஆனால், இங்கு ரகசியமாக எதுவுமே நடைபெறவில்லை என்பதையும் இராஜேந்திரன் புரிந்து கொள்ளட்டும்.

அந்தப் பத்தாயிரம் வீரர்களை உடனே புறப்படச் சொல். எவ்வளவு சீக்கிரம் அவர்கள் தஞ்சைத் தரணிக்கு வந்து சேர்கிறார்களோ, அவ்வளவு நல்லது. மன்னர் இதற்கான உத்தரவை எப்போதோ சொல்லிவிட்டார். தங்குமிடங்களை நான் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். அந்த வீரர்கள் மிக மரியாதையுடனும், கம்பீரத்துடனும் நடத்தப்படுவார்கள்.

இங்கு வந்த பிறகு அவர்களுக்கு ஏதாவது மரியாதைக் குறைவு நடந்தால் அவர்கள் இங்கிருந்து தங்கள் தேசத்திற்குப் போய் விடலாம். அவர்கள் உடனடியாக விடுதலை செய்யப் படுவார்கள். வேறு ஏதேனும் செய்தி உண்டா காரி?"

- பஞ்சவன்மாதேவி கம்பீரமாகக் கேட்டாள்.

"இல்லை தாயே..." கடுவன்காரி கைகூப்பினான்.

"கேள்விகள் சில எனக்குண்டு காரி..." - சற்று புருவம் நெரித்து, கடுவன்காரியை பஞ்சவன்மாதேவி உறுத்துப் பார்த்தாள்.

கடுவன்காரி அந்த உறுத்தல் தாங்காமல் கண்களை மூடிக் கொண்டான்.

"கேளுங்கள் தாயே..."

"கம்மாளர் குடியிருப்பில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தீர்களாமே?"

"ஆமாம்..."

"அங்கு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?"

"என்னுடைய நண்பர்கள் சிலர் அங்கு உண்டு. சந்தித்துப் பல நாட்கள் ஆகிவிட்டன. அவர்களோடு பேசிக் கொண்டிருந்தேன்."

"என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள், அரசியலா?"

"வீட்டு நடப்பு பேசி முடித்த பிறகு, நாட்டு நடப்பைப் பற்றிய பேச்சு வரத்தான் செய்யும். கம்மாளர்கள் கவலையோடு என்ன நடக்கிறது என்று கேட்டார்கள். அதற்கு நான் பதில் சொல்லிக் கொண்டிருந்தேன்."

"அந்தக் கம்மாளர்கள் இராஜேந்திரனிடம் மிகுந்த விசுவாச முள்ளவர்களா?"

"ஆமாம் தாயே..."

"இளவரசர் இராஜேந்திரனிடம் விசுவாசமாக இருப்ப தாலேயே, மன்னர் உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரிடமும் இணக்கமாக இருப்பார்கள் என்று ஏதேனும் உண்டா... எதிர்க்கும் மனோபாவம் வந்துவிடாதா..."

"இல்லை தாயே. அங்கு ஒரு உயிர்கூட மன்னருக்கு எதிராக அசையாது. இது சத்யம்..."

"ஆனால், எதற்குக் கோயில் கட்டுகிறார் என்று தலையிலடித்துக் கொள்ளுவார்கள். அப்படித்தானே..." சீறலோடு பஞ்சவன்மாதேவி கேட்டாள்.

"இந்த வேவுக்காரனையே வேவு பார்த்திருக்கிறீர்கள் என்று புரிந்து கொண்டேன் தாயே..."

"உலகத்திலுள்ள அத்தனை உயிர்களையும் மன்னர் இராஜராஜர் வேவு பார்ப்பார் என்பதை தயவுசெய்து நீயும், இராஜேந்திரனும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். மன்னருக்குத் தெரியாமல் இந்தச் சோழ தேசத்தில், ஒரு துரும்புகூட அசையாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். சிரிப்பாய், இதமாய், மிருதுவாய் மன்னர் இருப்பதாலேயே அவர் ஏமாளியாய் இருக்கிறார் என்று கணக்குப் போட்டால் அது மிகப் பெரிய தவறு என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள்.

இங்குள்ள கம்மாளர் கூட்டம் இராஜேந்திரனைத் தங்களுடைய தலைவனாக நினைத்துக் கொண்டு இராஜேந்திர வழிபாடு செய்து கொண்டிருக்கிறது என்பது எங்களுக்குத் தெரியும். அதை மன்னர் பெருந்தன்மையோடு அனுமதித்திருக் கிறார்.

நாளைக்கு அரசராகப் போகிறவரை இன்றே கொண்டாடு கிறார்கள். இதில் என்ன தவறு என்று கேட்கிறார். ஆனால், இராஜேந்திரரைக் கொண்டாடுகின்ற வேகத்தில், மன்னர் செய்கின்ற காரியங்களை விமரிசித்து கம்மாளர்கள் பேசுகிறார் கள் என்றும் நான் கேள்விப்படுகிறேன்.

இன்னொரு முறை வெளிப்படையாக மக்களுக்கு நடுவே கம்மாளர்கள் மன்னருடைய காரியங்களை விமர்சித்துப் பேசினால், நான் கடுமையாக இருப்:பன் என்று அந்த கம்மாளர் கூட்டத்துக்குச் சொல்லி விடுங்கள்."

பஞ்சவன்மாதேவியை இத்தனை கோபமான முகத்தோடு அந்த அரண்மனையில் எவரும் பார்த்ததில்லை.

## 42

"அம்மா... பிரச்சினை என்னவென்று நான் சொல்லி விடட்டுமா?" கடுவன்காரி கைகூப்பினான்.

"எனக்குத் தெரியும். போர் நடந்தால்தான், போர்க்கருவிகள் செய்தால்தான் கம்மாளர்களுக்கு வாழ்க்கை வசதி உயரும். போர் நடக்காத சமாதான காலங்களில் அவர்களுக்கு வேலையிருக்காது. வேலை இல்லையெனில் வருமானம் இருக்காது. வருமானமில்லையெனில் வாழ்க்கை சந்தோஷமாக இருக்காது என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

கோயில் கட்டுவதற்குக் கருவிகள் வேண்டும் என்று அவர்களுக்கு ஏன் புரியவில்லை. இதை வெறும் கடப்பாரையாலும், மண் வெட்டியாலும், உளி, சுத்தியலாலும் மட்டுமே செய்யப் போவதில்லை. வேறு சில புதுவிதமான உபகரணங் களை இவர்கள் செய்ய வேண்டியிருக்கும். மிக கவனமாகப் பணியாற்ற வேண்டியிருக்கும். எனவே, போர்க்கருவி செய்ய முடியவில்லையே, வருமானம் வரவில்லையே என்று அவர்கள் வெளிப்படையாகப் புலம்புவதை உடனடியாக நிறுத்தச் சொல்லுங்கள்.

தஞ்சைத் தரணிக்கு அருகே இருந்து கொண்டு ஒரு கூட்டம் மன்னருடைய நடவடிக்கைகளை எதிர்த்துப் புலம்பி னால், அது மக்களிடையே வேறுவிதமான விளைவை உண் டாக்கும். மன்னருக்கு எதிராக ஒரு சிறு குரல்கூட எழும்புவதை நான் விரும்பவில்லை. இப்படி ஒரு குரலாக எழுப்புகின்ற விஷயங்கள், நாளடைவில் பெருத்துப் பே.־ய் மிகப் பெரிய எதிர்ப்பாக மாறும் என்பதை நான் அறிந்திருக்கிறேன்.

எனவே, கம்மாளர்கள் எந்த அபிப்ராயமும் இல்லாமல் அமைதியாக இருக்க வேண்டும் என்பதை மன்னர் உத்தரவாக அவர்களுக்குச் சொல்லி விடுங்கள். அவர்களுக்கு நடுவே நின்று, 'ராஜேந்திர சோழர் தன் அன்பைத் தெரிவிக்கச் சொன்னார். நட்பைத் தெரிவிக்கச் சொன்னார்' என்று பொற்கிழி கொண்டு போய் கொடுப்பதை நீங்களும் தயவுசெய்து நிறுத்துங்கள். இது நல்லதல்ல. மிகக் கெடுதல்.

இது மன்னரிடம் இன்னும் போகவில்லை. இதை எப்படிச் சொல்வது என்று தெரியாமல் நான் மருகிக் கொண்டிருக்கிறேன். மன்னர் வசிக்கின்ற அரண்மனைக்கு அருகே ஒரு ஊர். அதிலே ஒரு பகுதி, அந்தப் பகுதியில் இளவரசரை ஆதரிக்கின்ற ஒரு தனிக்கூட்டம் இருக்கிறது என்று இருப்பின், இந்த தஞ்சைத் தரணியின் தலையெழுத்து என்னவாகும். இது சரிதானா...

நியாயம்தானா. இதைச் செய்வதற்கா காஞ்சிபுரத்திலிருந்து நீங்கள் நடையாக நடந்து இங்கே வந்திருக்கிறீர்கள். நான் சொல்வது புரிகிறதா கடுவன்காரி..." – கோபத்தோடு பஞ்சவன் மாதேவி கேட்டாள்.

"பழுதற வேவு பார்த்திருக்கிறீர்கள் என்பது புரிகிறது. நீங்கள் அறியாமல் இந்த தேசத்தில் எதுவும் நடக்காது என்பது எனக்கு நன்கு தெரியும். ராஜேந்திரரும் உணர்ந்திருக்கிறார். ஆனால், நீங்கள் நினைப்பதுபோல மன்னருக்கு எதிராகவோ, சோழ தேசத்திற்கு எதிராகவோ அங்குள்ள கம்மாளர்கள் எந்தக் காரியத்தையும் செய்யவில்லை என்பதை தயவுசெய்து தாழ்மை யோடு நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

பிழைப்பு போயிற்று என்பது மட்டுமல்ல; அவர்கள் ஊருக்கு மன்னர் ஸ்ரீஇராஜராஜத்தேவர் வந்து மூன்று வருடங்கள் ஆகின்றன. போர் நடக்கும்போது வாரத்திற்கொரு முறை மன்னர் அங்கு விஜயம் செய்வார். கருவிகள் செப்பனிடுவதை யும், புதிதாக உருவாக்குவதையும் மேற்பார்வையிடுவார்.

மூன்று வருடங்களாக ஒரு தளபதி கூட நுழையாத அந்தக் கிராமத்திற்குள் நான் நுழைந்தபோது, மக்கள் சற்று ஆவேசமாகப் பேசத் துவங்கிவிட்டார்கள் என்பது உண்மை. ஆனால், அவர்கள் எவரும் விரோதிகள் இல்லையென்பதை நான் மறுபடியும் கூறிக்கொள்ள விரும்புகின்றேன்."

"தவறான பேச்சு ஆரம்பித்திருக்கிறது. தவறான பேச்சு தவறான வழிக்குக் கொண்டுபோய் விடும் என்பது கடுவன்காரி... உனக்கு புரியவில்லை..."

"புரிகிறது தாயே. நான் கண்டித்து வைக்கிறேன்..."

"கடுவன்காரி..."

"அம்மா... சொல்லுங்கள்..."

"எனக்கு வேவுக்காரனாக சிறிது நேரம் நீ பணியாற்ற வேண்டும்...."

"உத்தரவிடுங்கள் அம்மா. நான் சோழ தேசத்தின் நாய். சோழ தேசத்தின் நலனுக்காக எவருக்கு வேண்டுமானாலும் கைகட்டிப் பணிவேன்..."

"ராஜேந்திர சோழனின் தனிப் படைத் தளபதியான உன்னை நான் வேலை வாங்குவது நல்லதல்ல. இருப்பினும், எனக்கு வேறு வழி தெரியவில்லை. என்னுடைய ஆட்களை

அனுப்பினால் அது சரியாக வராது. எனவே, நீ போய் எனக்குச் சில தகவல்கள் சேகரித்துத் தரவேண்டும்.

"சொல்லுங்கள்..."

"அருகிலே ஒரு கிராமத்தில், பாம்புகளின் நடமாட்டம் அதிகமிருக்கிறது என்று சொன்னார்கள். அந்தக் கிராமத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு வரவேண்டும். அங்கிருந்து ஒரு கூடை மண் அள்ளிக்கொண்டு வர வேண்டும். அந்த மண் கோயில் கட்டுவதற்கு உபயோகமாகுமென்று ராஜராஜப் பெருந்தச்சர் சொல்கிறார்.

அப்படி அந்த மண் உபயோகமாகுமென்றால், அங்கிருந்து அந்தக் கிராம மக்களைக் குடிபெயரச் செய்து, வேறு ஒரு இடத்தில் வீடு கட்டிக் கொடுத்து குடியேற வைக்க வேண்டியிருக்கும்.

அந்த வேளாளர்கள் அதற்கு ஒத்துக்கொள்வார்களா என்று தெரியவில்லை. யார் சொன்னால் அவர்கள் இதை ஏற்றுக் கொள்வார்கள் என்பதை எனக்குக் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும். அந்த மக்கள் என்னவிதமாக எதிர்ப்பார்கள் என்று அவர்களிடம் பேசி எனக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும்.

இப்போது கண் முன் நிற்கிற உடனடியான பிரச்சினை, அந்த மண் வேண்டுமென்று பெருந்தச்சர் உத்தரவிட்டு விட்டால் அது எப்படியாவது மக்களுக்குத் தெரிந்து விடும். தங்களை கிராமம் விட்டு அனுப்பப் போகிறார்கள் என்று சொன்னால், மக்கள் எதிர்ப்புத் தெரிவிப்பார்கள். மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தால் அது நல்லதல்ல.

கோயில் கட்ட ஆரம்பிக்கும்பொழுதே இப்படி ஒரு எதிர் முழக்கம் வரக்கூடாது என்று நான் விரும்புகின்றேன். மிகச் சமாதானமாகப் பேசி, மிக உயர்ந்த இந்தக் காரியத்தில் அவர்களது பங்கினைச் சொல்லி, அவர்களை அப்புறப்படுத்து வது எப்படி என்பதை நான் யோசிக்க வேண்டும். அதற்கான வழி முறைகளை நீ கண்டறிந்து எனக்குச் சொல்ல வேண்டும்..."

"நிச்சயம் செய்கிறேன் தாயே..."

"ராஜேந்திர சோழன் தருகின்ற பண முடிப்புகள் தவிர்த்து, இதற்காக உனக்குத் தக்க சன்மானம் வழங்கப்படும்..."

"நான் வாங்கிக்கொள்ள மாட்டேன் அம்மா..."

"ஏன்..."

"ராஜேந்திர சோழர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். 'அன்னை பஞ்சவன்மாதேவி ஏதேனும் வேலை கொடுத்தால், அங்கேயே தங்கி நன்கு செய்து முடித்துவிட்டுப் பிறகு வந்தால் போதும்' என்று எனக்கு உத்தரவாகியிருக்கிறது..."

"அடடா, ராஜேந்திர சோழன் என்னையும் வேவு பார்க்க ஆள் அனுப்பியிருக்கிறானா?"

"ஏன் தாயே இப்படிப் பேசுகிறீர்கள். உங்களை வேவு பார்த்து என்ன ஆகப்போகிறது...?" கடுவன்காரி பணிவுடன் பேசினான்.

"இது அரசியலில் சகஜம்தான். தந்தை மகனை வேவு பார்ப்பதும், மகன் தந்தையை வேவு பார்ப்பதும் சாதாரண விஷயம்தான். இது குறித்து எனக்கு எந்தக் கவலையும் இல்லை. என்னைப் பற்றிய செய்திகளையும், நீ அவ்வப்போது திருவொற்றியூருக்கோ, காஞ்சிபுரத்துக்கோ அனுப்பிக் கொண்டிருக்கலாம். ராஜராஜீயும் அதற்குத்தானே எனக்கு அருகே நியமிக்கப்பட்டிருக்கிறாள்..." என்று பஞ்சவன்மாதேவி சிரித்தபடி சொல்ல, அதுவரை இறுகின முகத்தோடு இருந்த கடுவன்காரியும் வாய்விட்டுச் சிரித்தான்.

"தாயே... உங்களைப் போன்ற ஒருவர் அரசருக்கு அருகே இருக்கும்போது, அரசரை யாரும் எதுவும் செய்ய முடியாது..."

"இல்லை. அந்தக் கர்வம் எனக்கில்லை. அப்படிச் செய்து விட்டார்கள் என்று ஒரு சின்ன வலி, வேதனை, தோல்வி மனப்பான்மை எனக்கு வந்துவிட்டது கடுவன்காரி. இன்னும் காவலைப் பலப்படுத்தவேண்டும். அதேநேரம் மக்கள் நெருங்கி வருவதையும் தடுக்காதிருக்க வேண்டும். பாண்டிய நாட்டு ஆபத்துதவிகள் அதிகமாகி விட்டார்கள். உள்ளுக்குள்ளே ஊடுருவிவிட்டார்கள் என்று நானும் கேள்விப்பட்டேன். எப்படிக் கண்டுபிடிப்பது என்று எனக்குத் தெரியவில்லை..."

"அதற்கு நான் உதவியாக இருக்கிறேன். நீங்கள் கட்டளையிட்டால் இராஜேந்திரருக்குச் செய்தி அனுப்பி, வருகின்ற இந்தப் படையோடு பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளைக் கண்டு பிடிக்கின்ற ஒற்றர் படையையும் நான் இராஜேந்திரரை அனுப்பச் சொல்கிறேன்...."

"புரியவில்லையே..." பஞ்சவன் மாதேவி முகம் சுருக்கிக் கேட்டாள்.

"சோழ தேசத்து ஆளாக வராது, கல் தூக்குகிற கூலி ஆட்களாக, அண்டை நாட்டுப் படை வீரர்களாக, அடிமைகளாய்ப் பிடித்து வைக்கப்பட்டிருப்பவர்களாக, சோழ ஒற்றர் படையினர் பத்து பேர் அந்தக கூட்டத்தோடு வருவார்கள். தாங்கள் அதிகம் பாதிக்கப்பட்டதாய் நடிப்பார்கள். அண்டை நாட்டு ஆபத்துதவிகளைப் புகழ்ந்து பேசுவார்கள். அதன் மூலம், பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளுக்கு வலை விரிப்பார்கள். இது செய்யலாமா என்று யோசித்துச் சொல்லுங்கள். நான் விரிவாய் இளவரசருக்குச் செய்தி அனுப்புகிறேன்..." கடுவன்காரி பணிவோடு சொன்னான்.

பஞ்சவன்மாதேவி, தலைக்குமேல் படர்ந்திருந்த மாதுளங் கொடியை மெல்ல வருடிக் கொடுத்தாள். இலையைக் கிள்ளி முகர்ந்து பார்த்தாள். இதமான இனிப்பு வாசனையடித்தது.

"அனுப்பச் சொல். அந்தப் பத்து பேர் யாரென்று எனக்குத் தெரிய வேண்டும். அவர்கள் தனியே என்னை வந்து பார்க்க வேண்டும். பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளைத் தடுப்பதற்காக வருகின்ற ஒற்றர்களைக் கூலி ஆட்களோடு கலந்து அனுப்பச் சொல். நான் வேறு வழியிலும் முயற்சிக்கிறேன் என்பதைத் தெரிவி..."

"வேறு ஏதும் வேலைகள் உண்டா தாயே...." கடுவன்காரி கைகூப்பினான்.

இடுப்பு மறைப்பிலிருந்து முப்பது பொற்காசுகள் கொண்ட பையை எடுத்து கடுவன்காரியிடம் பஞ்சவன்மாதேவி நீட்டினாள்.

"இது முதல் தொகை. அடிக்கடி இவ்விதம் தரப்படும். கடுவன்காரிக்குக் குடும்பமில்லை என்று அறிகிறேன். இருப்பினும் நீ சந்தோஷமாக இருப்பதற்கான செலவுகள் அனைத்தும் சோழ அரண்மனை கவனித்துக் கொள்ளும். போகலாம்..." என்று உத்தரவிட்டாள்.

உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரைக்கும் சகல செய்திகளும் பஞ்சவன்மாதேவிக்குத் தெரிந்திருக்கின்றன என்று புரிந்து கொண்ட கடுவன்காரி, மறுபடியும் அவள் காலில் விழுந்து வணங்கினான்.

“எதற்கு...” - பஞ்சவன்மாதேவி பதறினாள்.

“நீங்கள் வாழ்வாங்கு வாழ வேண்டும் தாயே. நீங்கள்தான் சோழ தேசத்தின் அச்சாணி என்பதைப் புரிந்து கொண்டு நமஸ்கரிக்கிறேன். உங்களை என்னால் இயன்றவரை பாதுகாப் பேன்...” - கடுவன்காரி கைகூப்பினான். விடை பெற்றான்.

கருவூர்த்தேவர் அவர் சீடர்களோடு தஞ்சையின் எல்லைக்கு வந்து நின்றார். குடமுருட்டி ஆற்றில் சம்மணமிட்டு உட்கார்ந்து கொண்டார். அவரைச் சுற்றி மீன்கள் எகிறி எகிறிக் குதித்தன. வாயால் நீர் முகர்ந்து, முழு பலத்தோடு பீய்ச்சினார். வாய் முழுவதும் நீர் வைத்துக் கொண்டு கண்களை நீரால் அடித்துக் கொண்டார். நீருக்குள் வயிறை எக்கி எக்கி அழுத்தினார். கரையேறி புதர் மறைவில் அமர்ந்து கொண்டார். வயிறு சுத்தம் செய்தார்.

மறுபடியும் ஆற்றில் இறங்கி, இடுப்பளவு ஜலத்தில் உட்கார்ந்து மூச்சையடக்கி, ஆசனவாய் வழியே காற்றை இழுத்தார். வேகமாய் ஓடுகின்ற ஆற்றுநீர், குதம் வழியே குடலுக்குப் போயிற்று.

குடல் முழுவதும் நீர் நிரம்பிய பின்னர், வேறொரு புதர் மறைவிற்குப் போனார். மூச்சுத் திசை மாற்றி வயிறு எக்கி, நீரை வெளியே பீய்ச்சினார். குடலும், ஆசன வாயும் துணி போட்டுத் துடைத்ததுபோலச் சுத்தமாயின.

ஆற்றின் நடு மையத்திற்குப் போய், முங்கிக் குளித்தார். கரையேறி உடம்பு துவட்டிக் கொண்டார். அவரது சீடர்கள் கொய்யாப் பழங்களையும், வாழைப்பழங்களையும் அவருக்குச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்து உண்ணக் கொடுத்தார்கள்.

“நீங்களும் ஏதாவது பழங்கள் எடுத்துக் கொள்ளுங்கள் துக்கச் செய்தி வரப்போகிறது. தகனம் நடக்க இரண்டு நாட்களாகும். எதுவும் சாப்பிட முடியாது...” சொல்லிவிட்டு கருவூர்த்தேவர் மேற்கு பார்த்து ஜபம் செய்ய உட்கார்ந்தார்.

அவர் சீடர்கள் அவரைப் போலவே குடல் சுத்தம் செய்து கொண்டார்கள். பழங்கள் எடுத்துக் கொண்டார்கள்.

கருவூர்த்தேவர் தஞ்சையை நோக்கிப் போகிறபோது, ஐயாறு தஞ்சை ராஜபாட்டையில் ஒரு பெரிய குதிரைப்படை அவரைத் தாண்டிப் போயிற்று.

"செம்பியன் மாதேவி இறந்துவிட்டார்கள் தெரியுமா..." கருவூர்த்தேவர் சீடர்களிடம் பேச, அவர்கள் மௌனமாய்க் கேட்டுக் கொண்டார்கள்.

## 43

"எங்கே போய்விட்டாய் பஞ்சவன்மாதேவி மன்னர் அந்தப்புரத்தில் இருக்கும்போதுகூட உனக்கு அரசாங்க வேலைதானா. அவரோடு இருக்கமாட்டாயா. மன்னர் நீ வரவில்லையென்பதற்காக கண்ணப்ப நாயனார் சரித்திரம் சொல்லாமல் ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிறார். வேறு இரண்டு நாயமன்மார்களின் கதையைச் சொல்லி முடித்து விட்டார்... 'எங்கே பஞ்சவன்மாதேவியைக் காணோம்' என்று வாசல் பக்கமே பார்த்துக் கொண்டிருக்கிறார். தயவுசெய்து என்னுடன் வா. எந்த வேலையாக இருந்தாலும் இரண்டு நாழிகைக்குப் பிறகு செய்து கொள்ளலாம். விநோதினி, எச்சமி... நீங்கள் இரண்டு பேரும் அந்தப்புரத்திற்குள் எதுவும் நுழையாத வண்ணம் தடுத்து நிறுத்துங்கள்..." என்று வானவன் வெளியே வந்து பஞ்சவன்மாதேவியைக் கையோடு அழைத்துக் கொண்டு உள்ளே போனான். வாசலில் இருக்கும் பணிப்பெண்களுக்குக் கடுமையாய் காவலிருக்க உத்தரவிட்டாள்.

வானவன் மாதேவி கொடும்பாளூரின் இளவரசி. பிறந்தவுடனேயே இவள் இராஜராஜருக்குத்தான் என்று தீர்மானமாகி வளர்க்கப்பட்ட பெண். பரம்பரை பரம்பரையாக ஆட்சி செய்து கொடிகட்டிப் பறந்த குடும்பம். வீரத்திற்கும் விவேகத்திற்கும் பெயர் போன பரம்பரை.

அந்தப் பரம்பரையிலிருந்து வந்த வானவன் மாதேவி ஓடி வந்து கைப்பிடித்துக் கொண்டு ஒரு தேவரடியாரை அழைத்துக் கொண்டு போகிறாளென்றால், மன்னரின் நான்காவது மனைவியை 'வா' என்று கூட்டிக் கொண்டு போகிறாளென்றால், இது எவ்வளவு பெரிய கொடுப்பினை. மன்னர் பஞ்சவன்மாதேவிக்கு அளித்திருக்கிற எவ்வளவு பெரிய உயர்வு.

நடந்து கொண்டே இருக்கும்போது பஞ்சவன்மாதேவிக்கு வயிறு கலங்கியது.

"அக்கா... திருவொற்றியூரிலிருந்து ஒற்றன் வந்திருந்தான். அவனை விசாரித்து வருவதற்காகப் போயிருந்தேன்..."

"இந்த அரண்மனைக்கு வேறு யார் வருவார்கள். ஒற்றர்கள், படை வீரர்கள், சேனாதிபதிகள், மந்திரிமார்கள், கிராமத் தலைவர்கள் என்றுதான் யாராவது மாற்றி மாற்றி வந்து கொண்டிருப்பார்கள். நல்ல மனிதர்கள் இங்கு வந்து வெகு நாட்களாகி விட்டது என்று உனக்குத் தெரியுமா பஞ்சவன்மாதேவி.

ஆறேழு வருடங்களுக்கு முன்பு நம்பியாண்டார் நம்பி ஒரு பகல் பொழுது இருந்து உடனே கிளம்பிவிட்டார். அதற்குப் பிறகு சொல்லிக் கொள்ளும்படி இந்த அரண்மனைக்கு யாருமே வரவில்லை. எவரோடும், எதுவும் பேசமுடியவில்லை.

மன்னர் அரசியலைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக் கிறார். எங்களுடைய நிலைமை எவ்வளவு அபத்தமாக இருக்கிறது தெரியுமா. அரசியல் தெரிந்தால் பேசலாம். இல்லை யென்றால் வெறுமே முகத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தி ருக்கலாம் என்று முட்டாள் தனமாய் போய்விட்டது.

யார் செய்த புண்ணியமோ இன்றைக்கு கண்ணப்ப நாயனார் சரித்திரம் சொல்லுகிறேன் என்று மன்னர் உட்கார்ந் தார். அவரோடு கலகலப்பாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டிருக் கிறோம். மாமன்னரோடு இப்படிப் பேசியே கிட்டதட்ட ஏழெட்டு மாதங்கள் ஆகிவிட்டது. அவருடைய பிறந்த நாளன்று ஏதோ ஒரு படையெடுப்பைப் பற்றிச் சொல்ல, நாங்களெல்லாம் வாய் திறக்காமல் கேட்டுக் கொண்டிருந்தோம்.

இப்போது பேசப்போவது, நாயன்மார்களின் சரித்திரம் என்பதால், அவரவருக்கு ஏற்பட்ட சந்தேகங்களை அரசரிடம் கேட்கிறோம். அரசரும் பதில் சொல்கிறார். கேள்வி கேட்டு பதில் பெற்று புருஷனோடு சல்லாபிப்பது எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா. அடியே, நிறைய எனக்கு கிடைத்திருக்கிறது. மற்ற பெண்களுக்கு எவ்வளவு ஏக்கம் இருக்கிறது தெரியுமா.

'ஐயோ அரசர் பேசுகிறார் அக்கா' என்று ஒரு பெண் வாய்விட்டுக் கூவினாள். எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அரசியலைக் கவனிப்பதுபோல, அரண்மனையைக் கவனிப்பது போல, நீ தயவுசெய்து அந்தப்புரத்திலுள்ள மற்ற பெண்டிர்

களையும் கவனிக்கத் துவங்கு. இது மிக முக்கியமான விஷயம்...” வானவன்மாதேவி கட்டளையிடுவது போல் பஞ்சவன்மாதேவியிடம் பேசினான்.

“சரி அக்கா... அப்படியே செய்கிறேன்.” பஞ்சவன் மாதேவி சொன்னாள்.

“கோயில் எழும்பத் துவங்கிவிட்டால் மன்னர் எங்கும் நகர மாட்டார். இங்கேயே நாள் முழுவதும் இருப்பார். ஓய்வெடுக்க அந்தப்புரத்திற்கு வந்துவிடுவார். அப்போது ஆயிரம் விஷயங்கள் பேசிக்கொள்ளலாம்.'' பஞ்சவன்மாதேவி தொடர்ந்து சொன்னாள்.

“ஆமாம். எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. விரைவில் கோயில் கட்ட ஆரம்பித்துவிட வேண்டும். இப்போதே இந்தப் பேச்சை ஆரம்பிக்கலாமா. எப்போது கோயில் கட்டுவார் என்று கேட்கலாமா...”

“மன்னர் இன்னும் அந்த முடிவுக்கு வரவில்லை. நாலைந்து நாட்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. எந்த நாளில் ஆரம்பிக்கப் போகிறார் என்று தெரியவில்லை. அதை மன்னர்தான் தீர்மானிக்க வேண்டும்.”

அவர்கள் நீண்ட நடைகளைக் கடந்து படிகள் ஏறி அந்தப்புரத்திற்குள் போய், விசாலமான அந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

மன்னருக்கு எதிரேயுள்ள பஞ்சணையில் பஞ்சவன் மாதேவி உட்கார, அவளை மன்னர் என்ன என்பதுபோல் பார்த்தார். ஏதுமில்லை என்று கண்களாலேயே பஞ்சவன் மாதேவி சொன்னாள். பஞ்சவன்மாதேவிக்குச் சற்று வியர்த்திருந்தபடியால் அவளுக்கு விசிறிவிட இரண்டு பணிப் பெண்கள் ஓடி வந்தார்கள். அதில் ஒரு பணிப்பெண்ணைத் தடுத்துவிட்டு மன்னரின் ஒரு மனைவி பஞ்சவன்மாதேவிக்கு விசிறத் துவங்க, பஞ்சவன்மாதேவி திரும்பி ‘வேண்டாம்’ என்று கண்களால் மெல்ல கடிந்து கொண்டாள்.

“பணிப்பெண்கள் விசிறட்டும். மன்னருக்கு அருகே போய் உட்கார்...” என்று கட்டளையிட, அவள் மன்னருக்கு அருகே போய் உட்கார்ந்து கொண்டாள்.

“இன்னும் கண்ணப்ப நாயனார் கதை சொல்லவில்லை அல்லவா..?” ஆவலோடு பஞ்சவன்மாதேவி கேட்டாள்.

"இல்லை. உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்..."

"வேறு யாரைப் பற்றிச் சொன்னீர்கள்?"

"சுந்தரரைப் பற்றி சிறிது சொல்லிக் கொண்டிருந்தேன். பிறகு திருமூலரைப் பற்றி விளக்கினேன். கதையாக கண்ணப்ப நாயனாரைப் பற்றி இனிமேல்தான் ஆரம்பிக்கவேண்டும். உனக்காகத்தான் நாங்கள் காத்திருந்தோம்." என்று மாமன்னர் இராஜராஜத்தேவர் சொல்ல, "நான் சித்தமாயிருக்கிறேன்." என்று பஞ்சவன்மாதேவி கைகூப்பினாள்.

"கடவுள் என்பதற்கும், படிப்பிற்கும் சம்பந்தமுண்டா. கடவுள் என்பதற்கும், அறிவிற்கும் சம்பந்தமுண்டா. கடவுள் என்பதற்கும் குலத்திற்கும் சம்பந்தமுண்டா. நல்ல குலத்தில் பிறந்து, நன்கு படித்து அறிவுடையவனாய் இருப்பவனுக்கு மட்டும்தான் கடவுள் என்கிற விஷயம் கைக்கெட்டுமா.

நாம் வேதமறிந்த அந்தணர்களை வணங்குகிறோமே அவர்கள் படித்தவர்கள் என்பதாலா. ஞானிகளை, சாதுக்களை நமஸ்கரிக்கிறோமே - அவர்கள் கூர்மையான புத்தி உடையவர்கள் என்பதாலா. தேவாரம் திருவாசகங்கள் பலதும் மனனம் பண்ணிய பெரியோர்களை, தமிழ்ப் புலவர்களை வணங்குகிறோமே - அது அவர்கள் படிப்புக்குக் கொடுக்கும் மரியாதையா. நானூற்றைம்பது பாடல்கள் தெரியும் என்பதாலேயே அவருக்கு மரியாதை தருகிறோமா. ஒரு வகையில் ஆமாம்.

ஆனால், கடவுள் என்கிற விஷயம் இவர்களிடம் மட்டுமே இருப்பதாக நினைத்தோமானால் அது பெரும் பிசகு. கடவுள் எங்கும் நிறைந்தவர். எல்லாவற்றிலும் இருப்பவர். எங்கு வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் தோன்றுபவர். அவரைப் பிடிப்பதற்கு எது முக்கியம். அன்புதான் முக்கியம். சரணடைதல்தான் முக்கியம். அன்பு உள்ளவர்களாலேயே கடவுளை எளிதாகச் சரணடைய முடியும்.

சரணடைதல் என்றால் என்ன - உனக்குத் தெரியுமா வானவன் மாதேவி. தன்னுடையது என்று எதையும் வைத்துக் கொள்ளாமல், தான் முக்கியம் என்று கருதாமல், தன் உடல் வலிவு, பணம், அதிகாரம் எதையும் லட்சியம் செய்யாமல் சகலமும் இறைவனால் தரப்பட்டவை.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு நொடியும் இறைவன் நம்மை நகர்த்திக் கொண்டிருக்கிறான். என்னை அரசனாக, அவனை சேவகனாக, இவனை குதிரையோட்டியாகச் செய்து கொண்டிருக்கிறான். என்னை ஆணாக, உன்னைப் பெண்ணாகப் படைத்திருக்கிறான்.

இது அவனுடைய ரூபம். அவன்தான் இங்கு நானாய், நீயாய், நாயாய், நரியாய், சகலமுமாய் பரவியிருக்கிறான். இந்த பிரபஞ்சம் முழுவதும் கடவுளால் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது. கடவுளின் இருப்பு தவிர, வேறெதுவுமே இங்கு இல்லை. அதாவது, ஒரு மகத்தான சக்தியின் பல்வேறு ரூபங்கள்தான் இந்த உலகம்.

அப்போது நான் என்னை அரசனென்று நினைத்துக் கொள்வது என்ன. மிகப்பெரிய மயக்கம். நீ உன்னை பட்டமகிஷியாய் நினைத்து, கால் மேல் கால் போட்டு அமர்ந்திருக்கின்ற கர்வம் என்ன. அது உன்னுடைய மயக்கம்.”

பட்டமகிஷி தன் கால்களை நேராக்கிக் கொண்டாள். அரசர் சிரித்தார். பஞ்சவன்மாதேவி அவரைக் கூர்மையாகக் கவனிக்கத் துவங்கினாள்.

“கடவுள் எங்கும் தோன்றுவார். எவருக்கும் ஆட்படுவார். அவருக்கு இன்னார், இனியார் என்கிற பேதமில்லை. அவரை அறிந்து கொள்ள வேதபாடங்கள் முக்கியமல்ல. இவையேது மில்லாமல் அவர் உன்னிடம் சிக்குவார். அவரிடம் சரணடையக் கூடிய மனம் உனக்கு இருக்கிறதா என்பதுதான் முக்கியம். தானற்று இருப்பதே சரணடைதல்.

தான் ஒரு உடம்பு. தான் ஒரு வடிவு என்பதை மறந்துவிட்டு, தன்னை தன் நினைப்பை ஒதுக்கிவிட்டு, அவனாய் உணரத் துவங்கும் போது உள்ளுக்குள் இருக்கிற கடவுள் சக்தி, எதிரே இருக்கிற கடவுள் சக்தியோடு கலந்து, உலக மாயை உடைபட்டு, கடவுள் தன்மை நிறைந்து விடுகிறது.

நான் சொல்வது புரியவில்லை அல்லவா. கடினமாக இருக்கிறதல்லவா. கதையாய்ச் சொல்லுகிறேன். இந்தத் தத்துவம் எளிதில் புரியும்.

கண்ணப்ப நாயனார் ஆதியில் ஒரு வேடன். வேட அரசனின் மகன் இளவரசன். பெயர் திண்ணன். திண்ணென்று வலுவோடு இருந்ததால் திண்ணன், அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி, புதிய வாளும், வில்லும், அம்பும் கொடுத்து,

அவனுக்கென்று நல்ல உண்மையான துணைவர்களை நியமித்து, 'இன்று முதல் இந்தக் கானகத்தின் இளவரசன் நீ. அடுத்த வாரிசு நீ. இதைத் தெளிவாக அறிவித்துவிட்டேன். எனவே, உன்னுடைய முதல் வேட்டையை இப்போதே துவங்கு' என்று தலைவன் சொல்ல, பெண்கள் குலவை போட, புலித்தோலும் மேலே மான் தோலும் அணிந்திருந்த அந்த இளைஞன், ஆயுதங்களோடு ஓட்டமாக அடர்ந்த கானகம் நோக்கிப் போனான். அவனை அவனுடைய பாதுகாவலர்கள் பின் தொடர்ந்தார்கள்.

கானகத்திலேயே வளர்ந்த பிள்ளையல்லவா. அதன் ஒவ்வொரு மூலையும் தெரிந்த வாலிபனல்லவா. வெகு எளிதில் மலைகளில் ஏறி, காடுகளைக் கடந்து, முட்புதர்களை வெட்டிச் சாய்த்து, வழி ஏற்படுத்திக் கொண்டு ஒரு இடத்திற்குப் போக, பன்றியின் உறுமல் சத்தம் கேட்டது.

அவன் நண்பர்களோடு பதுங்கிப் பார்க்க, மிகக் கொழுத்த ஒரு காட்டுப் பன்றி சீறலோடு அந்தப் பகுதியில் சுற்றி வந்தது. மனித வாசனையை நுகர்ந்து விட்டதால், தாக்குதலுக்குத் தயாராக உடம்பைச் சிலுப்பிக் கொண்டு நாலா பக்கமும் அலைந்தது.

பன்றியைக் கண்ட அந்தக் கானகத்து இளைஞன் சந்தோஷமடைந்தான். வாள் உருவிக்கொண்டு அருகே போனான். வேகமாய்த் தாக்கினான். பன்றியும் மண் கிளறி வேகமாய் அவனைத் தாக்கியது. நண்பர்கள் அதனை மடக்கி கழியால் ஓங்கி அடித்தார்கள். ஒன்றுக்கு நான்கு முரட்டு வாலிபர்கள் சுற்றியிருப்பதைப் பார்த்த பன்றி, இங்கே தாக்குப் பிடிக்க முடியாது என்பதைத் தெரிந்து, புதர்கள் தாண்டி தப்பி ஓடிற்று.

'இது முதல் வேட்டையாயிற்றே. இதைக் கொல்லாமல் விடக் கூடாது' என்று அவர்கள் கோபமானார்கள். பன்றியைத் துரத்தினார்கள். பன்றி மிக வேகமாக ஓடியது. உறவுகள் பாராட்ட வேட்டையாடுகின்ற இளவரசனும், உயிருக்குப் பயந்து ஓடுகின்ற பன்றியும் பல மைல் தூரம் ஓடினார்கள். இதில் பன்றி வெகுவேகம் காட்டியது. இளவரசனை நெருங்க விடாமல் அலைக்கழித்தது. நண்பர்கள் பின் தங்கிவிட, இளவரசன் விடாது பன்றியை நோக்கி ஓடினான். பன்றி ஒரு புதரில் இளைப்பாறிக் கொண்டிருப்பது கண்டு மடக்கினான்.

பன்றிக்கும், கானக இளவரசனுக்கும் மிகப்பெரிய யுத்தம் நடந்தது.

ஈட்டியால் பன்றியின் முதுகைத் துளைத்து, இருதயம் வரை ஆழ ஊன்றி, அதை அசையாமல் இடுப்பு ஒடித்து நிற்க வைத்து, துடிக்கத் துடிக்க இளவரசன் கொன்றான். வெற்றி மிதப்பில் பெரிதாய் ஊளையிட்டான். உரக்க தகப்பன் பேர் சொன்னான்.

'இது என்ன இடம்' என்று சுற்றிப் பார்க்க முற்பட்ட போது, தான் ஒருமலையேறி வந்திருப்பது தெரிந்தது. இன்னும் சற்று மலைக்கு மேலே போக, அந்த இடத்திலிருந்து ஒரு நறுமணம் வந்தது.

அந்த நறுமணம் புதிதாக இருக்கிறதே என்று அதே திசையில் போக, ஒரு திடல் தெரிந்தது. அந்தத் திடலுக்கு நடுவே ஒரு சிவலிங்கம் இருந்தது. சிவலிங்கத்தைப் பார்த்ததும், அந்த இளவரசனுக்கு உடம்பு சிலிர்த்தது..." மன்னர் பேச்சை நிறுத்தினார்.

பட்டமகிஷிகள் அமைதியாய் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நாடகம்போல் மன்னர் சொன்ன செய்திகள் அவர்களுக்கு முன்னே மெல்ல மெல்ல அரங்கேறிக் கொண்டிருந்தன.

## 44

"கடவுளைச் சந்தித்தல் முன் ஜென்மவினையின் பலனாய்த்தான் ஏற்படும். அவன் பார்த்தது ஒரு சிவலிங்கத்தை. ஒரு கல் சிலையை. ஆனால் அந்த இளவரசன் அதைப் பார்த்ததும் திகைத்துப் போனான்.

'எப்போதோ பார்த்ததுபோல இருக்கிறதே. இந்த உருவம் மனதுக்கு மிக நெருக்கமானதாய் இருக்கிறதே. இதன் கண்கள் என்னைக் கருணையோடு பார்க்கின்றனவே. இதன் உதடுகள் என்னை வா என்று கூப்பிடுவதுபோல் இருக்கின்றனவே. இந்த கூர்த்த நாசியை நான் எங்கேயோ பார்த்திருக்கிறேன்' என்று சந்தேகப்பட்டான். தயங்கி அருகே போனான். மண்டியிட்டான்.

அந்த சிவலிங்கத்தின் முகத்தில் வெள்ளியால் கண்கள் வரையப்பட்டிருந்தன. கூர்த்த நாசி .பதிக்கப்பட்டிருந்தது. உதடுகள் வரையப்பட்டிருந்தன. தேர்ந்த சிற்பியால் செய்யப் பட்டிருந்ததால், அதில் ஒரு உயிரோட்டம் இருந்தது. கலையைத் தாண்டி இடையறாத பூஜையால், அந்தச் சிலையில் ஒரு ஈர்ப்பு சக்தி இருந்தது. அதையும் தாண்டி அந்த இடம் பிரகாசமான தாய் மாறியது.

மண்டியிட்ட இளவரசன் தன்னை மறந்து கைகூப்பினான். 'நலமா' என்று கேட்டான். ஏன் அப்படிக் கேட்டோம் என்று இளவரசனுக்குத் தெரியவில்லை.

இந்தக் கானகத்தில், இப்பேற்பட்ட சூழ்நிலையில் காட்டு மிருகங்களோடு தனியே அமர்ந்திருக்கிறீர்களே. அவைகளால் எதுவும் அபாயமில்லாமல் இருக்கிறதா... வேறு யாரும் பயமுறுத்தாமல் இருக்கிறார்களா..' என்று வினவினான். மறுபடியும் நலமா என்று கேட்டான்.

வானவன் மாதேவி, எப்போதேனும் கோயிலுக்குப் போய், இறைவனைப் பார்த்து, நலமா என்று கேட்டிருக்கிறாயா. வெட்கப்படாதே வானவன் மாதேவி. நானும் கேட்டதில்லை. வேடன் கண்ணப்பர் இப்படிக் கேட்டார் என்று தெரிந்த பிறகு நான் போய்க் கேட்டால் அது நாடகமாகப் போய் விடுகிறது என்பதால் இந்தக் கதை தெரிந்த பிறகும் கேட்கவில்லை. ஆனால், அந்த வேடுவ இளைஞன் மண்டியிட்டு, கைகூப்பி, தனியே காட்டில் அமர்ந்திருக்கீரே. கடவுளே நீர் நலமா' என்று கேட்டான்."

யாரோ, ஒரு இளவரசி மெல்ல விசும்பத் துவங்கினாள். மற்ற பல பேருக்குள்ளே ஒரு அடர்த்தியான சோகம் படர்ந்தது.

"சிவனே, எத்தனை நாட்கள் இப்படி இருக்கிறீர்களோ. உங்கள் மேனியிலெல்லாம் ஏதோ வாடிய பூக்கள் இருக்கின்றன. உங்களைச் சுற்றி இலைகளையெல்லாம் போட்டிருக்கிறார்கள். சே, என்ன இது. உணவு அருந்தினீர்களா. நீர் குடித்தீர்களா. குளித்தீர்களா. அதற்கு ஏற்பாடு செய்யட்டுமா' என்று சொல்லி அந்த இடத்திலுள்ள பூக்களை, அர்ச்சனை செய்யப்பட்ட வில்வ இலைகளை விரைவாக இரண்டு கையால் விலக்கிவிட்டு உணவுக்கு என்று ஓடி வந்தான். ஓடி வரும்போதுதான் என்ன உணவு கொடுப்பது என்று சிந்தனை எழுந்தது.

'அட, காட்டுப் பன்றியைக் கொன்று போட்டிருக்கிறோமே. அந்த மாமிசம் கொழுப்பு நிறைந்ததாயிற்றே. அதைக் கொடுக்கலாமே' என்று எண்ணம் தோன்றியது. சட்டென்று திசை திரும்பினான். காட்டுப் பன்றிக்கு அருகே போனான். கத்தி எடுத்தான். வெட்டினான். துண்டுகளாக்கினான். வதக்கினான். ஒரு இலையில் போட்டுக் கொண்டு வந்தான்.

'குளித்தீர்களா என்று கேட்டோம். குளித்ததாய்த் தெரியவில்லை. குளிப்பதற்கு நீர் எடுத்துக்கொண்டு வரலாமா. குடுவைகூட கொண்டு வரவில்லையே. நண்பர்களிடம் அல்லவா சிக்கிக் கொண்டுவிட்டது. என்ன செய்வது. தண்ணீர் எங்கே இருக்கிறது. மலைக்குக் கீழ் ஆற்றில் இருக்கிறது. அந்தத் தண்ணீர் எடுத்து வரலாமா. எப்படி அங்கிருந்து எடுத்து வருவது. எந்தப் பாத்திரமும் இல்லை. கையில் ஏற்கெனவே சமைத்த கறி இருக்கிறது. வேடன் திகைத்தான்.

அவன் ஆற்றில் அப்படியே மூழ்கி, வாயால் நீரை உறிஞ்சிக் கொண்டான். முடிந்த அளவு தேக்கிக் கொண்டான். வாயை உப்பிய வண்ணம், கையில் கறியைத் தூக்கிய வண்ணம் வேகமாக மலை மீது ஏறினான். இறைவனைப் பார்த்தான். 'குளித்து விடும்' என்று மனதினுள் நினைத்து, வாயிலுள்ள நீரை சிவலிங்கத்தின் மீது துப்பினான்.

சிவலிங்கத்தின் உச்சியில் அவன் கொப்புளித்த நீர்பட்டு வழிந்தது. அவரெதிரே மாமிசத்தை வைத்தான்.

'ஐயா. உண்ணுங்கள். நன்கு சாப்பிடுங்கள். தேவைப்பட்ட கறியை எடுத்துக் கொள்ளுங்கள். இன்னும் வேண்டுமென்றாலும் சொல்லுங்கள். உடனே போய் அறுத்து வதக்கி வருகிறேன். பதம் நன்றாக இருக்கிறதா பாருங்கள். இதோ, இந்தக் கறி அருமையாக இருக்கும்' என்று துண்டுகளை வரிசைப்படுத்தினான். சிவபெருமான் மௌனமாக இருந்தார்."

அரசர் சுற்றி தன்னுடைய மனைவிகளைப் பார்த்தார். அவர்கள் கதையில் ஆழ்ந்து போயிருந்தார்கள்.

தஞ்சை அரண்மனையின் வாசலில் கருவூர்த்தேவர் வந்து நின்று கைகூப்பினார். "நான் வந்திருப்பதாகத் தெரிவி..." என்று சொன்னார்.

தூதர்கள், வாயிற்காவலர்கள் படபடத்தார்கள். அவரை வரவேற்று தனியிடம் கொடுத்தார்கள். விழுந்து நமஸ்கரித்து கால் கழுவ முயற்சித்தார்கள்.

"நமஸ்கரித்தது போதும்..." என்று கருவூர்த்தேவர் கையுயர்த்தினார்.

வாயிற்காவலர்கள் வேகமாய் அரண்மனைக்குள் நுழைந்தார்கள். அந்தப்புரத்தில் போய் நின்று கருவூர்த்தேவர் வருகையைச் சொன்னார்கள்.

"இன்னும் இரண்டு நாழிகைக்கு எவர் வந்தாலும் உள்ளே வரக்கூடாது என்பது பட்டமகிஷியின் கட்டளை. மன்னர் தன்னுடைய மனைவிகளோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார். எவர் வரினும் உள்ளே போவதற்கு இல்லை. எந்தச் செய்தியும் சொல்வதற்கு இல்லை. இரண்டு நாழிகை பொறுத்து முயற்சிக்கிறோம்..."

"அம்மா... வந்திருப்பது கருவூர்த்தேவர்..."

"யாராயினும் சரி. இது தெளிவான கட்டளை. மீறுவதற்கு இல்லை..." என்று சொல்லிவிட்டார்கள்.

வாசலில் உட்கார்ந்திருந்த கருவூர்த்தேவருக்கு இந்தப் பேச்சு மனதில் ஒலித்தது. அவர் சிரித்துக் கொண்டார். கண்ணப்ப நாயனார் சரிதமா... நடக்கட்டும்' என்றார். அவர் என்ன பேசுகிறார் என்று பக்கத்திலிருந்தவர்களுக்குத் தெரியவில்லை.

மாமன்னர் உடையார் ஸ்ரீராஜ ராஜத்தேவர் கண்ணப்ப நாயனார் சரிதத்தைத் தொடர்ந்தார். அவருடைய மனைவிகள் அசையாது கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"நான் இருப்பதால் உணவு உண்ண கூச்சப்படுகிறீர் போலும். சரி; நான் போய் விடுகிறேன். எனக்கும் பசிக்கிறது.' என்று சொல்லி சிவலிங்கத்தைத் தனியே விட்டு, மலையடிவாரம் போய் பன்றியை அறுத்து, வதக்கி, உண்ணத் துவங்கினான் வேடுவ இளவரசன் திண்ணன்.

தினசரி அந்த மலைக்கோயிலுக்கு வந்து, ஒரு வேளை பூஜை செய்கிற அந்தணர் மெல்ல ருத்ரம் சொல்லியபடி படியேறி, கோயிலுக்குள்ளே நுழைய, அங்கு இறைச்சிகள் வைக்கப்பட்டிருப்பதும், சிவன் தலையில் ஏதோ நீர் ஊற்றப் பட்டிருப்பதும் பார்த்து அருவெறுப்பானார்.

'யார் இந்த மகாபாதகத்தைச் செய்தது. எதற்கு இப்படி ஒரு அட்டூழியம் செய்கிறார்கள். இந்த வேடர்களுக்குக் கொழுப்பு அதிகமாகி விட்டது. இவர்களுக்கு உண்பதற்கு

இடமா இல்லை. இந்தச் சந்நிதிதானா கிடைத்தது' என்று சொல்லியபடி, அந்த மாமிசங்களை அவ்விடத்திலிருந்து நீக்கி, அந்த இடத்தைச் சுத்தம் செய்தார். பூக்கள் போட்டார். லிங்கத்திற்கு அர்ச்சனை செய்தார். வணங்கி விடை பெற்றார்.

உணவு முடித்து மறுபடி மலைக்கு வந்த வேடுவ இளவரசன் திண்ணன் மீண்டும் இலைக் குப்பைகளும், பூ குப்பைகளும் இருப்பது பார்த்துக் கோபமானான்.

'யார் இந்த வேலையைச் செய்வது. அவருக்கு எவ்வளவு திமிர். இந்த இடம் முழுவதும் ஏன் இலையால் குப்பையாக்கு கிறார்கள். நான் கொடுத்த உணவு எங்கே' என்று தேடினான். 'இறைவன் உண்டுவிட்டாரா' என்று ஆசையாய் வினவினான். 'இன்னும் பசிக்குமே. கொண்டு வரட்டுமா' என்று கேட்டான். மறுபடியும் கீழே போனான். பன்றி மாமிசம் அறுத்தான். வதமாக்கினான்.

'நான் இருந்தால் உண்ண மாட்டீர் அல்லவா. கிளம்புகிறேன்' என்று விடைபெற்றான். கீழிறங்கினான்.

மறுநாள் காலை, அந்தணர் மறுட'டியும் மேலே வந்தார். மாமிச இலையைப் பார்த்தார். 'சண்டாளப் பாவிகளா' என்று உரக்கக் கத்தினார்..."

அரசர் ஒரு அந்தணர் போலக் கத்த, அவருடைய மனைவிகள் வாய் விட்டுச் சிரித்தார்கள். "அந்த அந்தணர் அந்த இடத்தைச் சுத்தம் செய்தார். பூக்கள் போட்டார். வில்வ இலையால் அர்ச்சனை செய்தார்..."

'இறைவனே உன்னைத் தயவு செய்து காத்துக் கொள்ளும். இப்படிப்பட்ட சண்டாளர்களைக் கடுமையாகத் தண்டியும்' என்று வேண்டினார். வேண்டுவதைத் தவிர அந்தணரால் வேறெதுவும் செய்ய முடியவில்லை.

மறுபடியும் வேடுவ இளவரசன் ஓடி வந்தான். 'அடடே, இன்றும் குப்பையா, என்று கோபமானான். மறுபடியும் வேட்டைக்குச் சென்று இன்னொருவித மாமிசம் அவருக்குப் படைத்தான்.

இப்படியே தொடர்ந்து மாறி மாறி நடந்தது. அந்தணர் கோபமானார். 'யார் இந்த அநியாயத்தைச் செய்வது' என்று தெரிந்து கொள்ள விரும்பினார். விடியலுக்கு முன்பே கோயிலுக்குப் போய் ஒளிந்திருந்து பார்க்கும்பொழுது, அங்கே

ஒரு வேடுவ இளைஞன் இலை முழுவதும் பறவைக் கறி பரப்பி, 'உண்ணுக உண்ணுக' என்று வேண்டிக் கொண்டிருப்பது தெரிந்தது.

அந்த வேடுவ இளைஞன் முகத்தில் மிகப்பெரிய பொலிவு இருந்தது. அவன் இறைவனோடு பேசுவது பார்த்தால், இறைவன் கைநீட்டி எடுத்து உண்டு விடுவான் என்று அவருக்குத் தோன்றியது.

'இப்படிப் பேசுகிறானே. இவ்வளவு வாஞ்சையோடு உபசரிக்கிறானே. இப்படி நானும்கூட செய்ததில்லையே. இவன் சாதாரண இளைஞனாகத் தோன்றவில்லையே' என்று அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்த நேரம், அந்த அந்தணருக்கு இந்த வேடுவ இளைஞனின் மகிமையைத் தெரிவிக்க இறைவன் விரும்பினான். சிவனுடைய ஒரு கண் சிவந்தது. சிவந்த கண்ணை அந்த வேடுவ இளைஞன் உற்றுப் பார்த்தான்.

'என்ன இது. ஏன் கண் சிவக்கிறது உமக்கு' என்றான். சிவந்த கண்ணிலிருந்து ரத்தம் வழிந்தது. இளைஞன் பதறிப்போனான்.

அந்தணரும் ஆவலாகப் பார்த்தார். அவருடைய உள்மனது 'பொறு... இங்கு ஏதோ நடக்கிறது. அமைதியாய் இரு.' என்று கட்டளையிட்டது. அவர் அசையாமல் அந்த இளைஞனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

'ஐயனே, உமக்குக் கண்வலியா. ரத்தம் வருகிறதா. இதற்கு என்ன மருந்து?'

பச்சிலைகளைக் கொண்டு வந்து பிழிந்தான். ரத்தம் நிற்க வில்லை. கட்டுப்போட்டான். ரத்தம் பாய்ந்து பெருகியது.

'என்ன செய்வது. இந்தக் கண் பழுதடைந்திருக்கிறதே. பழுதடைந்த கண்ணுக்கு மாற்றுக்கண் பொருத்தினால்தான் நிற்க முடியும். இன்னொரு கண் எங்கே கிடைக்கும்' என்று யோசிக்க, சட்டென்று அவனுக்குத் தன்னுடைய கண் ஞாபகத்திற்கு வந்தது. கையில் அம்பை எடுத்தான். இடக் கண்ணில் சொருகினான். வெளியே எடுத்தான். ரத்தம் வருகின்ற கண்ணில் அந்தக் கண்களை அப்பினான்.

அந்தணர் துடித்துப் போனார். வாயிலிருந்து எழுந்த பெருங்கூச்சலைத் துணியால் அழுத்தி அடக்கிக் கொண்டார். இறைவனின் கண்ணிலிருந்து ரத்தம் வருவது நின்றது.

'அடேயப்பா நல்ல மருந்து கண்டுபிடித்து விட்டேன். நல்ல வேளை, இதுதான் மருந்து என்று என் உள்ளுணர்வில் கலந்து எனக்குத் தெரிவித்து விட்டீர். ரத்தம் நின்றுவிட்டது. வலியும் குறைந்து விட்டதல்லவா' – தன் வலியைப் பற்றி யோசிக்காமல், அந்த வேடுவ இளைஞன் சிவலிங்கத்தைத் தடவியபடி கேட்டான்.

சிவலிங்கத்தின் அடுத்த கண்ணும் சிவந்தது. வேடுவ இளைஞன் பயந்தான். அதிலிருந்தும் ரத்தம் வரத் துவங்கியது. அந்தணர் ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார்.

'என் சிவனே, இன்னொரு கண்ணிலிருந்தும் ரத்தம் வருகிறதே. என்ன செய்வேன் தெரியவில்லையே. அட, இன்னொரு கண் இருக்கிறது. அந்தக் கண்ணையும் எடுத்து அப்பி விடலாம். ஆனால், என் கண்ணை எடுத்துவிட்டால் உமது கண் இருக்கின்ற இடம் எனக்கு எப்படித் தெரியும். ஏதேனும் அடையாளம் வைத்துக் கொள்ளவேண்டுமே. எப்படி வைப்பது. கையை வைத்துக் கொள்ளலாம் என்றால், கண்ணை நோண்ட கை வேண்டுமே. சரி; காலை அடையாளமாக வைத்துக் கொள்வோம்'. அவன் செருப்புக் காலைத் தூக்கி, அவருடைய ரத்தம் வரும் கண்ணில் நிலை நிறுத்தினான். வலக்கண்ணை நோண்டுவதற்குக் கூரிய அம்பு எடுத்து, விரலால் அந்தக் கூர்மை பார்த்து வலக்கண்ணுக்கு அருகே வைத்தான்.

சட்டென்று சிவலிங்கத்திலிருந்து ஒரு கை நீண்டது. அம்பு சொருக இருக்கும் அவன் கையை இறுகப் பற்றிக்கொண்டது, 'நில்லு கண்ணப்ப' என்று அசரீரியாய் வாக்குத் தோன்றியது. அந்த இடம், மிகப் பிரகாசமாய் மாறிற்று. கண்ணப்பன் இறைவனால் தொடப்பட்டான். இறைவன் அவனை நோக்கிப் பேசினார். அவனுடைய இயற்பெயரான திண்ணனை விட்டு விட்டு 'கண்ணப்பா' என்று கனிவோடு அழைத்தார்."

அரசர் தழுதழுத்த குரலில் பேச, எல்லா அரசிகளின் கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தது.

"பஞ்சவன்மாதேவி... என்ன அற்புதம் பார்த்தாயா. 'நில்லு கண்ணப்ப' என்று இறைவன் சொல்லியிருக்கிறார். புதிதாய் ஒரு

பெயரும் சூட்டியிருக்கிறார். எந்தப் பிரதிபலனும் எதிர்பார்க்காது, இறைவனுக்கு ஏற்பட்ட நோயைத் தீர்ப்பதற்காக, தன் கண்ணை நோண்டிக் கொடுக்க சித்தமாயிருக்கிறவனின் கையைப் பற்றி, 'நில்லு கண்ணப்ப' எனும் இறைவன் தொட்டிருக்கிறார். தானே முன்வந்து அவன் கையை இறுகப் பற்றியிருக்கிறார்.

இறைவனைத் தேடித்தேடி இந்த ஜன சமூகம் அலைந்து கொண்டிருக்கிறபோது, அந்த வேடுவனை நோக்கி இறைவன் வந்து, அவனைத் தொட்டிருக்கிறாரென்றால் அந்த வேடன் செய்த பாக்கியம் என்ன. இந்தச் சரணாகதி எவ்வளவு உயரமான விஷயம். தனக்குக் கண் வேண்டியதில்லை என்று சொல்லி, இறைவனுக்குத் தன் உடலை, தன் கண்ணை, தன்னை அர்ப்பணிக்கின்ற அந்த அற்புதம் வேறு எந்த மதத்திலாவது, வேறு எந்த தேசத்திலாவது நடந்திருக்கிறதா பஞ்சவன்மாதேவி.

என்ன புத்தம், என்ன சமணம், இரக்கம், அன்பு, கருணை என்று தானே சொல்கிறார்கள். இதைவிட அன்பு, இதைவிட இரக்கம், இதைவிட கனிந்த ஒரு மனநிலை வேறு ஏதேனும் உண்டா..."

அரசர் கண்களிலிருந்து மெல்ல கண்ணீர் வழிந்தது. அவர் பஞ்சணையில் சாய்ந்து கொண்டார். அரசிகள் அவருக்கு அருகே போய் அவரின் முதுகு தடவினார்கள். அரசர் நிமிர்ந்து உட்கார்ந்தார். சிரித்தார்.

## 45

"நான் இங்கே நெகிழ்ந்து போகிறேன். திரும்பத் திரும்ப அந்தக் கதையை யோசித்து வியந்து போகிறேன். 'நில்லு கண்ணப்ப' என்ற சத்தம் என் காதில் இடையறாது கேட்டுக் கொண்டிருக்கிறது. 'சைவ சமயமே சமயம், சேர வாரீர் ஜெகத்தீரே' என்று கூவத் தோன்றுகிறது. சிவன் ருத்ரனல்ல. ரௌத்திரமுடையவன் அல்ல. கோபமானவன் அல்ல. அவன் அன்பே வடிவானவன். அன்பே சிவம் என்பது பல்வேறு கதைகளால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது."

"பிறகு என்ன ஆயிற்று. கதையைத் தொடருங்களேன்..." ஒரு அரசி கேட்க, அரசர் தலைநிமிர்ந்தார். உடம்பு உதறிக் கொண்டார்.

"அந்தணர் வாயடைத்துப் போய் இறைவன் தோன்றியதைப் பார்த்தார். 'கண்ணப்ப' என்ற வார்த்தையைக் கேட்டார். ஓடி வந்து கண்ணப்பனின் காலில் விழுந்து வணங்கினார். கண்ணப்பன் இறைவனால் தீண்டப்பட்டவுடன் இரண்டு கண்களும் பெற்றவனானான். 'நீர்தான் பூஜை செய்கின்ற அந்தணரோ, இது குப்பை என்று நினைத்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்' என்று கைகூப்பினான். அந்தணர் பார்க்க, இறைவனோடு ஜோதியில் இரண்டறக் கலந்தான்.

அந்தணர் மலையிலிருந்து கீழே இறங்கி வந்து, அந்த வேடுவ இளைஞன் கண்ணப்பன் என்று பெயர் பெற்றதை அவர்கள் கூட்டத்திற்கும், ஊருக்கும் சொல்ல, இன்றைக்கும் அந்த ஊர் சிவனின் புகழைச் சொல்லிக் கொண்டு விளங்கி வருகிறது. கண்ணப்பர் கதையைப் பேசி வருகிறது.

இப்படிப்பட்ட சிவனுக்கு நாம் கோயில் எழுப்ப வேண்டாமா. ஒரு உயர்ந்த இருப்பிடத்தை என் வாழ்நாளிலேயே அமைத்துத் தர வேண்டாமா. 'ராஜராஜசோழன் சிறந்த சிவபக்தன். சைவ சமயம் தழைக்கப் போராடியவன்' என்று தமிழ் கூறும் நல்லுலகம் சொல்ல வேண்டாமா. சைவ சமயம் உலகெங்கும் பரவ வேண்டாமா. எனவேதான், நான் எல்லாம் வல்ல இறைவனுக்கு என்னால் எவ்வளவு பெரிதாய் கோயில் கட்ட முடியுமோ, அவ்வளவு பெரிதாய் கோயில் கட்ட விரும்புகின்றேன். அவன் மிகப் பெரியவன். சொல்லுக்கு அடங்காத அளவுக்குப் பெரியவன். எனவே, என்னால் முடிந்த அளவுக்கு உயரமாய் ஒரு விமானம் கட்ட விரும்புகின்றேன்.

அன்புள்ளவர்களே, உங்கள் ஆதரவு தேவை. உங்கள் குடும்பத்தார் ஆதரவு தேவை. உங்கள் ஊருக்கு நீங்கள் போய், உங்கள் குடும்பத்தாருக்கு இவைகளைச் சொல்லி, அவர்களால் இயன்ற அளவு மனித பலமும், பொருள் பலமும் எனக்கு வழங்க வேண்டும் என்று நீங்கள் வேண்டிக் கொண்டு வர வேண்டும். இதில் எந்தக் கட்டாயமுமில்லை. கொடுக்கச் சம்மதமில்லையெனில், தர வேண்டிய அவசியமில்லை. எனவே, யாசகமாக மன்னர் இராஜராஜர் கேட்கிறார் என்று மட்டும் கேளுங்கள். இது கட்டளையில்லை என்று தெளிவாகச் சொல்லிவிடுங்கள்

நீங்களும் கடுமையாகப் பேசாதீர்கள். வெகு நிச்சயமாய் உங்கள் ஊர்களிலிருந்து மனமுவந்து பல்வேறு பொருட்கள் அளிப்பார்கள். எத்தனை வந்தாலும் நான் நினைத்துக் கொண்டிருக்கிற கோயில் கட்டுவதற்குச் செல்வம் போதாது. ஆள் படைகள் மிக அதிகம் வேண்டும். எனவே, எல்லாம் வல்ல சிவனுக்கு நாம் எல்லோரும் சேர்ந்து கோயில் கட்டுவதற்குண்டான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இது என் அன்பான கோரிக்கை..." மன்னர் கைகூப்பினார்.

அரசிகள் துடித்துப் போனார்கள்.

"என்ன இது, கட்டளையிட வேண்டிய நீங்கள் கோரிக்கை என்று சொல்கிறீர்களே..."

"கட்டளை வேறு விஷயத்தில் இடலாம். இங்கே இடுவது தகாது. எனவேதான், இதைக் கோரிக்கை என்று சொல்கிறேன். பணபலம் ஆள்பலம் மட்டுமில்லாமல், சேவை செய்வதற்கு நிறைய பெண்களும் வேண்டும். நடனமாதர்கள் வேண்டும். சமைப்பதற்கான ஆட்கள் வேண்டும். உற்சாகமூட்ட வாத்தியக்காரர்கள் வேண்டும். காவலர்கள் வேண்டும். கயிறு நூற்பவர்கள் வேண்டும். கம்மாளர்கள் வேண்டும்.

எனவே, இவர்களையும் உங்கள் ஊர்களிலிருந்து நீங்கள் கொண்டு வாருங்கள். அவர்களுக்கு முடிந்த வசதிகளைச் செய்து தருகிறேன். நல்ல வசதிகள் கிடைக்குமென்று அவர்கள் எதிர்பார்க்க வேண்டாம். இது கோயில் பணி என்பதால், கிடைத்த வசதிகளை வைத்துக் கொண்டு எல்லோரும் உழைக்க வேண்டும் என்று கைகூப்பிக் கேட்டுக் கொள்கிறேன்..." என்று மன்னர் சொல்ல, மற்ற அரசியார்கள் எழுந்து நின்றார்கள். 'கோயில் கட்ட மன்னருக்கு உறுதுணையாய் இருப்போம்' என்று பிரதிக்ஞை செய்தார்கள்.

பஞ்சவன்மாதேவி வாசல் பக்கமுள்ள காவல் பெண்கள் கால் மாற்றித் தவிப்பதை உணர்ந்தாள். எழுந்து அருகே போனாள்.

"கருவூர்த்தேவர் வந்திருக்கிறாராம். வந்து ஒன்றரை நாழியாகி விட்டதாம். வாசலில் உட்கார வைத்திருக்கிறார்களாம். நீங்கள் யாரையும் உள்ளே விடவேண்டாம் என்றதால் அனுப்பவில்லை"

"அடிப்பாவிகளா, இது மற்றவருக்குப் பொருந்துமே தவிர, கருவூர்த்தேவருக்குப் பொருந்துமா. சட்டென்று உள்ளே அனுப்பாமல் வாசலில் உட்கார வைத்தீர்களே. மன்னருக்குத் தெரிந்தால் சீற்றம் கொள்வாரே. என்னடி முட்டாள் பெண்களே, இப்படிச் செய்து விட்டீர்கள்..." என்று படபடத்தாள். சட்டென்று சமாதானமானாள். உள்ளே போனாள்.

தஞ்சையிலுள்ள பிரம்மராயரின் ஆள் ஒருவன் வந்திருப்பதாக அடுத்ததாக ஒரு தகவல் வந்தது. என்ன என்று அந்த அந்தண வீரனிடம் விசாரித்தாள்.

"அம்மா. நடுநாட்டைச் சேர்ந்த கூடலூரிலிருந்து ஆட்கள் வந்திருக்கிறார்கள்."

"சொல். என்ன விஷயம்?"

"ஏதோ துக்கச் செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்..."

"அப்படியா. யார் அவர்கள்?"

"பிரம்மராயரைத் தேடினார்கள். அவர் இல்லையென்றதும் உங்களைப் பார்க்க ஆசைப்படுகிறார்கள். மிக மோசமான செய்தி என்று சொல்கிறார்கள்..."

"நடுநாடா. யாராக இருக்கும்?" பஞ்சவன்மாதேவி வேகமாகச் சிந்தித்தாள்.

யாரை முதலில் உள்ளே வரச்சொல்வது என்று தடுமாறினாள்.

"கருவூர்த்தேவரை வரச்சொல்..." என்று கட்டளையிட்டாள். படியில் இறங்கி, அரண்மனை வாசல் நோக்கி அவளே ஓடினாள். அவளுக்கு முன்னால் ஆட்கள் ஓடினார்கள்.

ஆட்கள் ஓடிவருவதைப் பார்த்து கருவூர்த்தேவர் எழுந்தார். பின்னே பஞ்சவன்மாதேவி ஓடி வருவதைப் பார்த்து அறையை விட்டு வெளியே வந்தார். நடந்து அவளை நோக்கி நின்று, 'வாழ்க பஞ்சவன்மாதேவி' என்று கையுயர்த்தினார். பஞ்சவன்மாதேவி அவர் காலடியில் விழுந்து வணங்கினாள்.

மன்னர் கண்ணப்ப நாயனார் சரித்திரத்தில் மௌனமாய் உட்கார்ந்திருக்க, அவரைச் சுற்றியுள்ள அரசிகளும் அதே விஷயத்தில் மனம் தோய்ந்து உட்கார்ந்திருந்தார்கள்.

கருவூர்த்தேவருக்குப் பின்னால் வெகு தூரத்தில் நான்கு வீரர்கள் நின்றிருந்தார்கள். அவர்கள் கையில் குத்தீட்டிகள்

இருந்தன. அரசியார் தங்களைப் பார்ப்பதைத் தெரிந்து கொண்டார்கள். அவர்களில் வயது முதிர்ந்த ஒருவன், தன் கையிலிருக்கிற குத்தீட்டியைத் தலைகீழாய்ப் புரட்டிக் காட்டினான். அதற்கு துக்கச் செய்தி என்று பொருள்.

கருவூர்த் தேவருக்குக் கண் பின்னாலும் இருந்தது. ஈட்டி திருப்பப்படுவதை அவரும் உணர்ந்தார். "அம்மணி. உள்ளே போகலாம் வா. மன்னரை நான் உடனே சந்தித்தாக வேண்டும்." என்று சொன்னார்.

பஞ்சவன்மாதேவியும், கருவூர்த் தேவரும் அந்தப்புரம் நோக்கி நடக்கத் துவங்கினார்கள்.

ஒரு திருப்பத்தில் ஒரு சேடிப்பெண் பஞ்சவன் மாதேவியை அணுகினாள். குடிக்க நீர் கொடுத்தாள். குடிக்கும் போது செம்பியன்தேவிதான் துக்கச் செய்தி. கூடலூரில் மரணம் என்றாள். பஞ்சவன்மாதேவிக்கு விக்கிற்று. நன்றி என்றாள்.

சிறு எக்காளம் முழங்கப்பட்டது. பறை அதிர்ந்தது. கருவூர்த்தேவரின் வருகை அரண்மனையிலுள்ள எல்லோருக்கும் சொல்லப்பட்டது.

உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவர் பேசுவதை நிறுத்திவிட்டுத் துள்ளி எழுந்தார். உடனிருந்த அவர் மனைவிகளும் எழுந்து நின்றார்கள். வாசல் பக்கம் காவல் காத்துக் கொண்டிருந்த எச்சுமி ஓடி வந்தாள்.

"கருவூர்த்தேவர் வருகிறார். பஞ்சவன்மாதேவி அவர்கள் அழைத்து வருகிறார்கள்."

"என் சிவனே, என் சிவனே... -மன்னர் கை கூப்பினார். வானம் பார்த்தார்.

"கண்ணப்ப நாயனார் சரிதம் சொல்லிக் கொண்டிருக்கும் போது நான் கருவூர்த்தேவரைத்தான் நினைத்தேன். அவரைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். எப்போது மனதில் ஆசை பொங்கி வழிகிறதோ, அப்பொழுதெல்லாம் கருவூர்த் தேவர் எனக்கு அருகே வந்து விடுகிறார்" என்று சொன்னார்.

"எதற்கு கருவூர்த்தேவரைப் பார்க்க ஆசைப்பட்டீர்கள்..." பட்ட மகிஷி ஆவலோடு கேட்டாள்.

அவளுக்கு மன்னரைப் பற்றி மெல்லியதாய் ஒரு பயம் தொற்றிக் கொண்டது. மன்னர் அதிகமாய் சிவகாரியங்களில் ஈடுபட்டு, உலக வாழ்க்கையை மறந்து, எங்கேனும் துறவு மேற்கொண்டு விடுவாரோ என்ற பயம் சில மாதங்களாக அவளுக்கு ஏற்பட்டிருந்தது. மன்னரைத் திசை திருப்ப வேண்டும் என்ற எண்ணம் ஒன்று முளைவிட்டுக் கொண்டே இருந்தது. பஞ்சவன்மாதேவியிடம் இதைப்பற்றிப் பேசலாமா வேண்டாமா

என்று ஆலோசித்துக் கொண்டிருந்தாள். எனவே, மன்னருடைய மனநிலையை அறிய அவள் தொடர்ந்து கேள்வி கேட்டாள்.

"கண்ணப்ப நாயனாரின் மனநிலை போல என்னால் ஆக முடியாதா என்று கேட்கத்தான் நான் கருவூர்த்தேவரைச் சந்திக்க விரும்பினேன். ஒரு வேடனுக்கு இறை பக்தி, அசைக்க முடியாத நம்பிக்கை எப்படி வந்தது. இறை உணர்வு வருவதற்குக் காரண மென்ன... அது புத்தியா, மனமா... அதற்குக் காரணம் பூர்வ வினையா, அல்லது முயற்சியா என்று தெரிந்து கொள்ள எனக்கு ஆவலாக இருக்கிறது."

"இதெல்லாம் தெரிந்து என்ன செய்யப் போகிறீர்கள்..." பட்ட மகிஷி கேட்க, மன்னர் சட்டென்று திரும்பினார்.

"ஏன் உனக்கென்ன பயம்... அரசர் உலக மாதேவியின் மனப்போக்கைத் தெரிந்து கொண்டு கேள்வி கேட்டார்.

"அரசர் அரசராகவல்லவா இருக்கவேண்டும். நீங்கள் மாறி வருகிறீர்கள் என்ற ஒரு கவலைதான்..."

"என்ன விதமாக மாறுகிறேன்..."

"அதிகம் கடவுள் விஷயத்தில் ஈடுபடுகிறீர்கள். நீங்கள் கோயில் கட்டுவது என்பதுகூட சாதாரணமாக ஒரு பெருமைக்காக, ஒரு கம்பீரத்துக்காக, மற்றவர்கள் புகழ வேண்டும் என்பதற்காகக் கட்டவில்லை. உங்களுக்குள் ஒரு தாபம் இருக்கிறது. உங்களுக்குள் ஒரு ஆவல் இருக்கிறது. எதையோ அடைய வேண்டும் என்று எண்ணி நீங்கள் கோயில் கட்டுகிறீர்கள்."

"மிகச் சரியாகச் சொன்னாய் இவ்வளவு திறமையாக நீ பேசி நான் கேட்டதே இல்லை. மிக்க நன்றி. உள்ளே ஏதோ ஒன்றை அடைய வேண்டும் என்ற ஆவல் காரணமாகத்தான் காலத்தால் அழிக்கமுடியாத, என் மனம் நிரம்பக்கூடிய, மனக்கு மேன்மை தரக்கூடிய, என்னை உயரே உயரே கூட்டிக்கொண்டு போகக் கூடிய ஒரு விஷயத்தில் நான் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேன். இதைச் செம்மையாய்ச் செய்து முடிக்கிறபோது, மிக உயர்வான இடத்தை நான் அடைந்து விடுவேன் என்று நினைக்கிறேன்."

"மிக உயர்வான இடமென்றால் என்ன மன்னரே..." உலக மாதேவி மறுபடியும் கவலையோடு கேட்டாள்.

"இறைவனுடன் இரண்டறக் கலப்பது..."

"இறைவனுடன் இரண்டறக் கலப்பது என்றால், இறந்து போவதா மன்னரே..." உலக மாதேவி உடனே கேள்வி எழுப்பியபோது, அவள் குரல் கம்மி, மறத் துவங்கியிருந்தது.

"அரசி, மரணம் சகலருக்கும் வரும். உனக்கும் வரும். உன் தகப்பனுக்கும் வரும். உன் பிள்ளைக்கும் வரும். எனக்கும் வரும். எதிரே இருக்கிறவர்களுக்கும் வரும். இனி வரப்போகிறவர் களுக்கும் வரும். மரணம் கண்டா பயப்படுகிறாய். போர் செய்யும் மறவர் குலத்தில் பிறந்துவிட்டு, இறப்பதற்காகக் கவலைப்படுகிறாய். உனக்கு வயதாகி விட்டது வானவன்மா தேவி. வயதாக வயதாக வாழ்க்கையை இறுக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டும். இன்னும் அனுபவிக்க வேண்டும் என்று உனக்குத் தோன்றி விட்டது. புருஷனோடு கட்டிக்கிடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாய். இது பற்றி நாம் பிறகு விரிவாகப் பேசலாம்." மன்னர் பட்டமகிஷியைத் தாண்டி வாசல் நோக்கி விரைவாக நடந்தார். மேல்மாடப் படிகளின் பக்கம் போய் கீழிறங்கினார். அந்தப்புரத்தின் வாசலிலிருந்த மெய்க்காவல் படையினர் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"அவசியமில்லை. சற்று விலகி நில்லுங்கள். கருவூர்த்தேவர் வருகிறபோது இத்தனை வீரர்கள் தேவையில்லை." மன்னர் கட்டளையிட்டார்.

ஆனால், அவர் கட்டளையை மெய்க்காவல் படை கேட்கவில்லை. கூடவே வந்தது.

"தயவுசெய்து சொல்கிறேன். இரண்டு பேர் போதும். மற்றவர்கள் சற்று பின்னால் வரலாம்..." மன்னர் சொல்ல, மெய்க்காவல் படைத் தலைவர்கள் போலிருந்த இரண்டு வீரர்கள் மன்னரைப் பின் தொடர்ந்தார்கள். மற்ற வீரர்கள் சற்றுப் பின்னால் வந்தார்கள்.

கருவூர்த்தேவர் அரண்மனை வாசலைத் தாண்டி உள்ளே வர, மன்னர் அவரை எதிர்கொண்டு வரவேற்றார். நேரே போய் அவர் பாதங்களில் நெடுஞ்சாண் கிடையாய் விழுந்து வணங்கினார்.

கருவூர்த்தேவர் மன்னரை அள்ளி எடுத்துக்கொண்டு, ஒரு குழந்தையைப் பார்க்கிற பரிவோடு ஆவலாகப் பார்த்தார்.

மன்னரால் அந்தப் பார்வையைத் தாங்க முடியவில்லை. கண்களை மூடிக்கொண்டார். கண்களை மூடிக் கொள்கிற

போதே மனம் மொத்தமும் கழற்றி, குருவின் காலடியில் வைத்தார்.

மன்னர் தானற்று தன் எதிரே நிற்பது கருவூர்த்தேவருக்குப் புரிந்தது.

"என் சிவனே, என் சிவனே. நீ நீண்ட நெடுங்காலம் வாழ்ந்து சந்திர, சூரியர்கள் உள்ளவரை இந்த உலகத்தில் கொடி கட்டிப் பறக்க வேண்டும் ஐயா..." என்று தலையில் கை வைத்து ஆசீர்வதித்தார்.

அடிவயிற்றிலிருந்து குரல் எழுப்பி,'மாமன்னர் உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவர் வாழ்க' என்று உரக்கக் கத்தினார் உடனிருந்த மெய்க்காவல் படையினரும், கருவூர்த்தேவரின் சீடர்களும், மற்ற வேலைக்காரர்களும் தொடர்ந்து, அவர் வாக்கை எதிரொலித்தார்கள்

## 46

"உங்களுக்கு முன்னே நான் மன்னனில்லையே ஐயா. உங்களுடைய ஒரு சாதாரண சீடன்..."

"இராஜராஜன் எப்படி சாதாரணனாக முடியும். சதய நட்சத்திரத்தில் பிறந்தவன் எப்படி வெறும் ஆளாய் நிற்க முடியும். கையிலே சங்கும், சக்கரமும் தரித்தவன் எப்படி சாமான்யனாக முடியும். விஷ்ணுவைப்போல் அகன்ற மார்பும், பிரம்மனைப்போல் குறுகிய இடுப்பும், சிவனைப்போல் செஞ்சடை கலந்த ரோமமுமுடைய தலையைக் கொண்டவன், எப்படி ஏதுமற்றவனாக இருக்க முடியும். நீ கடவுளின் பிரதிநிதி. அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் இருக்கும் இறையின் ஒரு வடிவம். இறை விரும்பி வடிவெடுத்து, இங்கே இராஜ ராஜனாக வந்திருக்கிறது."

"இல்லை ஐயா. எனக்கு அப்படித் தோன்றவில்லை. நீங்கள் வெறுமே புகழ்கிறீர்கள். நான் பல்வேறு குழப்பத்தில் ஆழ்ந்திருக் கிறேன்."

"இது வெறும் மாயை. இந்த மாயை ராமபிரானுக்கும் இருந்தது. சீதையைத் தேடி, 'எங்கே, எங்கே' என்று காடுகளெல் லாம் அலைந்து, மரங்களுக்கு முன்பெல்லாம் விழுந்து, 'மானே,

நீ சீதையைப் பார்த்தாயா. யானையே, நீ சீதையைப் பார்த்தாயா. அன்னமே, என் மனைவியைப் பார்த்தாயா' என்று அழுது அரற்றி புலம்பினார்.

கடவுள் அழுவாரா ராஜராஜா. மனைவி எங்கே என்று தேடியலைவாரா ராஜராஜா... அது மாயை. தனக்குத்தானே கண்களை மூடிக்கொண்டு விளையாடுகின்ற தீராத விளையாட்டு. மற்றவர் தனக்கு அருகே வந்து, தன்னைப் புரிந்து கொள்ள வேண்டுமென்று அவரே செய்த திட்டம். நல்லதை உணர்த்துகின்ற ஒரு கதை வேண்டுமென்பதற்காக, கெட்டதை விட்டு தன் மனைவியைத் தூக்கி வரச்செய்து, பிறகு தான் போய் சம்ஹாரம் செய்திட்ட ஒரு திட்டம்.

அதே விஷயம்தான் இங்கேயும் நடக்கிறது. இறைவன் உன் உருவில் வந்து, தனக்கு ஒரு இருப்பிடம் அமைத்துக்கொள்ள முடிவு செய்துவிட்டது. இந்தப் பூமியின் ஒரு முக்கிய நரம்பில், மிகத் துடிப்பான நாடியில் குடியிருக்க விரும்பி விட்டது." கருவூர்த்தேவர் சொன்னார்.

"ஐயா, குருதேவரே, கோயில் கட்டலாம் என்று நீங்கள் சொல்கிறீர்களா?"

"வேறு எதற்காகவும் நீ இங்கு பிறக்கவில்லை ராஜராஜா. நீ செய்கிற எல்லா காரியமும் இதை நோக்கித்தான் நகர்ந்திருக்கிறது. இப்போது அதற்கான வேளை வந்துவிட்டது..."

"ஆனால் குருதேவரே. சூழ்நிலை சரியாகவே இல்லையே..."

"மிகச் சரியாக இருக்கிறது ராஜராஜா. உன்னை வேகப் படுத்தத்தான் பல காரியங்கள் உன்னைச் சுற்றி நடந்து கொண்டிருக்கின்றன. உன்னைக் கால் இடற வைக்கின்ற பல காரியங்களும் முன்னிலும் துரிதப்படுத்தவே முயன்று கொண்டிருக்கின்றன. நீ யார் என்று எனக்குத் தெரியும். பிறர் தடுக்கிறபோது, மறுக்கிறபோது, முடியாது என்று சொல்கிற போது, இயலாது என்று நினைக்கிறபோது, இது நம்மால் இயலும் என்று நினைக்கக் கூடியவன் நீ. செய்யவேண்டும் என்ற ஆவல் கொண்டவன் நீ. அடுத்த முகூர்த்தத்திலேயே கோயில் கட்ட கால்கோள் விழா நடக்கட்டும். மண் தோண்டி, நீரூற்றி, கல் நட்டு நாம் கோயில் வேலலயைத் துவங்கி விடலாம்..."

"இதைச் சொல்லவா இவ்வளவு விரைவாக வந்தீர்கள்..."

"ஆமாம் ராஜராஜா..."

"அப்படியென்றால் சொல்லுங்கள். எப்பொழுது வேலையைத் துவங்கலாம்?"

"இன்றே. இப்பொழுதே வேலையைத் துவங்கலாம்..." கருவூர்த்தேவர் மிகப்பெரிதாய் புன்னகை செய்தார். மன்னர் அவரை வியப்போடு பார்த்தார். அவர் மனதில் மெல்ல ஒரு சஞ்சலம் புகுந்தது.

"ஐயா. நான் விரதம் ஏதும் அனுஷ்டிக்கவில்லையே. கங்கணம் ஏதும் கட்டிக்கொள்ளவில்லையே..."

"தேவையில்லை. பரிசுத்தமானவர்களுக்கு எதற்கு விரதம். மனதுக்குள் எப்போதும் சிவனைப் பற்றியே சிந்தனை தோன்று கிறவர்களுக்கு எதற்காக நியம நிஷ்டைகள். நீ இறைவனோடே இருக்கின்ற இறையம்சம். உனக்கு இவையெல்லாம் தேவை யில்லை."

"இவ்வளவு அவசரமாகச் செய்யச் சொல்வதற்கு ஏதேனும் காரணம் இருக்கிறதா..." ராஜராஜர் கேட்க, கருவூர்த்தேவர் மௌனமாக இருந்தார்.

பஞ்சவன்மாதேவி சட்டென்று பேசினாள்.

"காரணம் இருக்குமென்று நான் நினைக்கிறேன். இப்போது நாம் கிளம்பலாமா. தஞ்சையின் தெற்குப் பகுதியில் நீங்கள் நிலம் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறீர்கள். மேடான புல்வெளி தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறீர்கள். அங்கு போய் நின்று, கருவூர்த்தேவர் என்ன சொல்கிறாரோ அதைச் செய்வோம்..."

"நான் தயார்" கருவூர்த்தேவர் கிளம்ப ஆயத்தமானார்.

"நான் போய் குளித்துவிட்டு வரட்டுமா..." ராஜராஜர் கேட்டார்.

"தேவையில்லை ராஜராஜா. எதற்காகக் குளியல்?"

"இல்லை. அந்தப்புரத்தில் மனைவிகளோடு உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தேன்..."

"எது பற்றிப் பேசிக் கொண்டிருந்தாய்?"

"கண்ணப்ப நாயனார் சரித்திரம்..."

"அப்படியென்றால் அது நீ ஆயிரம் முறை குளித்தற்குச் சமானம். உன் மனைவியரும் குளிக்கவேண்டாம். வரச்சொல்

அனைவரையும். பட்ட மகிஷியும் நீயும் தேரில் ஏறிக்கொள்ளுங்கள். மற்றவர்கள் வேறு தேர்களில் பின்தொடரட்டும். பஞ்சவன் மாதேவி குதிரையேறி முன்னால் போகட்டும். எனக்கு ஒரு யானை கொடு. நான் மக்களைப் பார்த்தபடியே வரவேண்டும்..."

"அடடா... முக்கியமான நேரத்தில் அமைச்சர் பிரம்மராயர் ஊரில் இல்லையே..."

"அதனாலென்ன... மற்றவர்கள் இருக்கிறார்கள் அல்லவா. பிரம்மராயர் விரைவில் இங்கு வந்து கலந்து கொள்வார். கவலை வேண்டாம். ஆனால், பஞ்சவன்மாதேவி... இங்கு அதிகாரிகள் யார் இருக்கிறார்கள். திறமையானவர்கள் எவர் இருக்கிறார்கள். அவர்களை உடனே இங்கே வரச்சொல். இப்போது கோட்டைக்குக் காவல் யார்..." என்று கருவூர்த்தேவர் வேகமாகக் கேட்டார்.

"உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவருக்குக் காரியம் செய்கின்ற பொய்கை நாட்டுக் கிழவர் ஆதித்தன் சூரியன். அவரை நாங்கள் மூவேந்த வேளாளன் என்று அழைப்போம்."

"ஆஹா. பார்த்திருக்கிறேன். உயரமாய், மெல்லிய உடம்பாய், நீண்ட மீசையாய் இருப்பாரே. அவர்தானே. அவர் மிக கெட்டிக்காரப் பெரியவராயிற்றே... வரச்சொல். அவரைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்?"

"சிறுதனத்துப் பெருந்தரம் கோவன் அண்ணாமலையான். அவரை நாங்கள் கேரளாந்தக விழுப்பரையன் என்று அழைப்போம்..."

"ஆம். அந்த இளைஞனும் கெட்டிக்காரன்தான். அவனுக்குச் சமீபமாய் திருமணமாயிற்றல்லவா. நல்லது. அவனும் வரட்டும். பிறகு?"

"காஞ்சிபுரத்திலிருந்து இங்கு வந்திருக்கிற உதயன் திவாகரன். இவரை நாங்கள் ராஜராஜ மூவேந்த வேளாளர் என்று அழைப்போம்..."

"நான் பார்த்ததில்லை. வரச்சொல். உதயன் திவாகரன் என்ற பெயர் நன்றாக இருக்கிறது. வரச்சொல்." – கருவூர்த் தேவர் கட்டளையிட்டார்.

"என்னுடைய ஊரைச் சேர்ந்த வடுகன் என்பவர் இங்கே அதிகாரியாக இருக்கிறார்."

"அவரை எப்படி அழைப்பீர்கள்..."

“நித்த விநோத வளநாட்டு நல்லூர் நாட்டுப் பஞ்சவன்மா தேவி சதுர்வேதி மங்கலத்து வடுகன்.”

“உன்னுடைய ஊர்க்காரனா. நல்லது – வரச்சொல். வேறு யார் உண்டு?”

“ராஜராஜத்தேவர் பெருந்தனம் கத்தி அரையன் மகன் கண்டையன் என்கிற ஒரு அதிகாரி இருக்கிறார். இவர் இளைஞர். இவரை ராஜராஜ கத்தி அரையன் என்று அழைப்போம்...”

“நமக்கு இளைஞர்கள் தேவைப்படுகிறார்கள். இவரையும் வரச்சொல். இறையினுடைய விளையாட்டு இது. இவர்களுக்குத் தான் கோயிலில் முக்கியப் பங்கு இருக்கப் போகிறது. அதனால் தான் இவர்கள் இங்கே ராஜராஜருக்கு அருகே இருக்கிறார்கள். இவர்கள் ஐவரையும் நான் இப்பொழுதே பார்த்தாக வேண்டும். ஆளனுப்பி உடனே வரச்சொல்...” – கருவூர்த்தேவர் பரபரத்தார்.

மன்னர் உள்ளே போனார். ஈரத்துணியால் அவர் முதுகையும், முகத்தையும் துடைத்தார்கள்.

மெல்லிய கிரீடம் அமைத்தார்கள். அரசிகள் வேறு உடை கொடுக்க, மன்னர் உடுத்திக் கொண்டார். நீலப் பட்டு வேட்டியை இடுப்பில் கட்டி, பின்பக்கம் சொருகி, மஞ்சள் பட்டை அதன்மேல் இறுக்கிக் கட்டி, மேலே வெண்பட்டு அணிந்து, இடது கையில் சிகப்புத்துணி சுற்றிக் கொண்டார். நெற்றியில் திருநீறிட்டுக் கொண்டார். மார்பிலும், கழுத்திலும், முதுகிலும், தோளிலும் சந்தனம் பூசிக்கொண்டார். வேறு சில வாசனைத் திரவியங்களும் அவருக்குப் பூசப்பட்டன. மெல்லிய குங்குமம் நெற்றியின் நடுவே தீட்டினார்கள்.

“பெண்டுகளே. நீங்களும் சீக்கிரம் தயாராகுங்கள். எங்கே வானவன் மாதேவி. விரைவில் அவள் தயாராக வேண்டும். என்னோடு தேரில் வரவேண்டும்.”

அரசிகள் பல்வேறு திக்கில் ஓடினார்கள். நிறைய உத்தரவுகள் அங்கே போடப்பட்டன. மெல்லிய கூச்சல்கள் எழுந்தன. ஒரு பரபரப்பு அங்கே பற்றிக் கொண்டது.

பஞ்சவன்மாதேவியும், கருவூர்த்தேவரும் தனித்து விடப் பட்டார்கள்.

“குருதேவர் எது செய்தாலும் சரியாக இருக்குமென்று எனக்குத் தெரியும். ஆனால் ஒரு மாலைப் பொழுதில் திடுமென

வந்து உள்ளே நுழைந்து, 'இன்றே, இப்போதே பூமிபூஜை' என்று சொல்கிறீர்களே இதுதான் புரியவில்லை. வாசலில் துக்கச் செய்தியோடு வேறு சிலர் நின்றிருக்க, இப்போது இந்த பூமி பூஜை எந்தவிதமாய் நடக்குமென்று எனக்குத் தெரியவில்லை..." பஞ்சவன்மாதேவி கீழ் குரலில் பேசினாள்.

"உன்னுடைய மனக்கலக்கத்திற்குக் காரணம் புரியவில்லை. இது ஆசீர்வாதம். ஒரு நல்ல விஷயம் நடக்கும்போது, மிகப்பெரிய தடை உண்டாவது ஒரு ஆசீர்வாதம். அவர்கள் வேறு எங்கும் போகாமல், இங்கிருந்து இந்த வேலையைச் செவ்வனே செய்வார்கள்..."

"செம்பியன்மாதேவியா செவ்வனே செய்யப் போகிறார். அதுவும் இராஜராஜர் காரியத்தையா ஆசீர்வதிக்கப் போகிறார்..."

"உடம்பாக இருக்கிறவரைதான் தூஷணைகள். உடம்பு போன பிறகு அவர்களுக்குச் சகலரும் சமம். நீ அவரை இன்னும் அரச குடும்பப் பெண்ணாக நினைக்காதே. அது முடிந்து விட்டது. இனி அவர் தெய்வரூபம்..."

"எப்படி இறந்தார். எங்கு இறந்தார் எதுவும் தெரியவில்லை. அதை விசாரிக்கவே இல்லை. வெறுமே வாசலில் நிற்க வைத்திருக்கிறேன்..." பஞ்சவன்மாதேவி சொல்ல.

"இப்போது விசாரிக்க வேண்டாம். அவர்களை நீ உன்னோடு அழைத்துப் போய் விடு. எங்கு இந்த பூமி பூஜை நடக்கிறதோ – அந்த இடத்தில் போய் தெற்குப் பக்கம் அவர்கள் வரிசையாய் நிற்கட்டும். இந்த பூஜை முடிந்த பிறகு, அவர்களை நோக்கி நான் மன்னரை அழைத்து வருகிறேன். அப்போது அவர்கள் செய்தியைச் சொல்லட்டும். அதுவரை மற்றவர் எவரோடும் பேசவேண்டாம் என்று அவர்களுக்குக் கட்டளையிட்டு விடு."

பஞ்சவன்மாதேவி குருதேவரை வணங்கி எழுந்தாள். "இது மிகப் பெரிய காரியம். இதை நீங்கள்தான் செவ்வனே நடத்தி வைக்க வேண்டும். மன்னருடைய வேகம் பார்க்கும் பொழுதும், அவர் இரவெல்லாம் தூங்காமல் அலைவது பார்க்கும் பொழுதும் மிக வேதனையாக இருக்கிறது" என்று வேண்டிக் கொண்டாள்.

"பஞ்சவன்மாதேவி, நீ சொன்னது போல இது மிகப்பெரிய காரியம். எளிதில் நடக்கக்கூடிய விஷயமல்ல. இது வேதனைப் படாமல் நடந்து முடியாது. பிரசவம்போல் வலியும், அவஸ்தையும், தவிப்பும் அடைந்துதான் ஆகவேண்டும். அப்படி நடப்பதுதான் சிறப்பு. வலியற்று பிள்ளை பெற்றால் பாசம் வருமா. அதனால்தான் சொல்கிறேன். எது குறித்தும் கவலைப்படாதே.

இறை தன்னை இங்கே நிலை நிறுத்திக் கொள்ள முடிவு செய்துவிட்டது. மொத்தமும் இறைவனிடமும் ஒப்படைத்து விடு. மிகப்பெரிய விஷயம் ஒன்றும் உருவாகப் போகிறது. காலத்தால் அழிக்க முடியாத ஒரு சரித்திரச் சின்னம் இங்கே நிறுவப்படப் போகிறது. ராஜராஜனின் புகழ், உன் புகழ், உலக மகாதேவியின் புகழ், இங்குள்ள அரசிகளின் புகழ், மந்திரிகளின் புகழ், சேனாபதிகளின் புகழ், என் புகழ் கடைசி வரை இந்த பூமியில் நிலைத்து நிற்கப் போகிறது.

நாம் மிக முக்கியமான ஒரு கால கட்டத்தில் இருக்கிறோம். கிரகங்களின் சேர்க்கை மிக அற்புதமாக இருக்கிறது. எனவே, இது நம்மால் முடியுமா என்ற ஒரு கேள்வியை அறவே தூக்கிப் போட்டுவிட்டு, இறைவன் இங்கே ஏதோ நடத்திக் கொண்டிருக்கிறான் என்ற எண்ணத்தோடு செயல்படு. இல்லையெனில் சிக்கிக் கொண்டு மனவேதனைப்படுவாய். நான் சொல்வது புரிகிறதா, வேறு எவருக்கும் இது புரியாமல் இருக்கலாம். உனக்குப் புரிய வேண்டும் பஞ்சவன்மாதேவி. புரியாதவர்க்கு நீ சொல்லித் தர வேண்டும்."

கருவூர்த்தேவர் வேகமாகவும், சற்று கோபமாகவும் பேசினார்.

பஞ்சவன்மாதேவி அவரைப் பார்த்துக் கைகூப்பினாள்.

"முடிந்த அளவில் இதைப் புரிந்து கொள்ள முயற்சிக் கிறேன். அப்படியே நடக்க பிரயத்தனம் செய்கிறேன். ஆனால், என்னை மீறி குழந்தைபோல நான் சில சமயம் தடுமாறி விடுகிறேன்..."

"அப்போது இந்தக் கிழவனின் பெயரைச் சொல் பஞ்சவன்மாதேவி. கருவூரா, கருவூரா என்று கூவு. நான் வந்து நிற்பேன். அப்படிக் கூவும்படியான வேதனை ஏதும் உனக்கு நேராதிருக்கட்டும்..." கருவூர்த்தேவர் பஞ்சவன்மாதேவியை ஆசீர்வதித்தார்.

## 47

உடையார் ஸ்ரீ இராஜராஜத் தேவர் மாளிகையை விட்டு வெளியே கிளம்புகிறார் என்பது எக்காளமாக ஊதப்பட்டு பொதுமக்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஒரு சிறிய முரசு எருதின் மேல் வைத்து, அதை ஒரு இளம் வீரன் வேகமாய் முழக்கிக் கொண்டு போனான். பெரிய முரசுகளை யானை மீது வைத்து பூமி அதிர வேகமாய் அடித்தார்கள்.

அப்பொழுது எழுந்த ஒலியால் குதிரைகள் மிரண்டு, கனைத்து காலைத் தூக்கி அட்டகாசம் செய்தன. அங்கே அருகே நின்று பேசிக் கொண்டிருந்தவர்கள் கூச்சலிட்டு விலகி ஓடினார்கள். அந்தக் கூச்சலால் பெரியவர்களும், பெண்களும் திரும்பிப் பார்த்து என்ன, ஏது என்று அறிவதற்கு அரண்மனை வாசல் பக்கம் குழுமினார்கள்.

வீட்டிற்குள் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் சாளரங்கள் வழியே எட்டிப் பார்த்தார்கள். அரசு அதிகாரிகளின் உறவினர்கள் அலங்கரித்துக் கொள்ளவும், மேல்துணி அணிந்து கொள்ளவும் பரபரத்தார்கள்.

அந்தப்புர சுவர் நிழலில் உட்கார்ந்தும், படுத்தும், கால் நீட்டியும் கிடந்த அரசரின் மெய்க்காவல் படை திடுக்கிட்டு எழுந்து கொண்டது. என்ன என்று விசாரித்தது.

அரசர் தெற்கு நோக்கி உள்ள புல்வெளிக்குப் போகிறார். அங்கே தளிக்குளத்தார் ஆலயத்திற்கு அருகே புதிய கோயிலுக்குக் கல் நடும் வேலையைச் செய்யப் போகிறார் என்று புரிந்துகொண்டு வேகமாய் அந்தப்படை செயல்படத் துவங்கியது. முதலில் வரிசையாக நின்றது அதில் இருப்பவர்கள் பத்துப் பத்தாகப் பிரிந்தார்கள். தளிக்குளத்தார் கோயில் நோக்கி ஒரு சிறிய உதிரிப்படை விரைந்தது. வழியில் நிற்பவரை ஒழுங்கு பண்ண இன்னொரு படை விரைந்தது. அரசரைச் சுற்றி நிற்பதற்கும், எதில் போகப் போகிறார் என்று பார்க்கவும் இன்னொரு படை பரபரத்தது. இப்படி அரசர் வெளியே வந்து விட்டால் கோட்டையை யார் காப்பது என்பதைத் தீர்மானம் செய்தது.

பழக்கத்தின் காரணமாய் மிகச் சில விநாடிகளுக்குள் கட்டளைகள் நிறைவேறி, அவர்கள் சமமாகப் பிரிந்து கொண்டு

பல்வேறு இடங்களுக்கு வேகமாய் நகர்ந்தார்கள். அப்படி நகரும்போது குறுக்கே யார் வருகிறார்கள். எதற்கு வருகிறார்கள் என்று பார்க்காமல் கடும் துரிதத்தோடு செயல்பட்டார்கள்.

எதனாலும் அரண்மனை வாசலிலும், முற்ற வெளியிலும், அரண்மனைக்கு வெளியேயும் பரபரப்பு ஏற்பட்டது. பத்து குதிரை வீரர்கள் தலை தெறிக்க தெற்கு நோக்கிப் போவதைப் பார்த்துவிட்டு, வீடுகளில் உள்ள ஆண்கள் என்ன என்று நின்றார்கள்.

அடுத்தபடியாக வந்த சிறிய படை அவர்களுக்கு விவரம் சொன்னது. "அரசர் இவ்வழியே வரப்போகிறார். தெற்கிலுள்ள புல்வெளியில் தளிக்குளத்தாருக்கு அருகே புதிய கோயில் கட்டு வதற்கு அடிக்கல் நாட்டப் போகிறார். விலகி நில்லுங்கள்."

"இது பற்றி முன்னமே பறையறிவிக்கவில்லையே..." என்று பெரியவர் கேட்க.

"ஏன் உமக்குச் சொல்லிவிட்டுத்தான் எதுவும் செய்ய வேண்டும் என்ற எண்ணமா. இது மன்னருக்கே கூட தெரியாது என்று நினைக்கிறேன்..."

"கருவூர்த்தேவர் வந்தார். உடனடியாகச் செய்யச் சொல்லி யிருக்கிறார். எனவே, இந்த வேலை அவரின் கட்டளையால் துரிதமாக நடைபெறுகிறது."

"அப்படியா. கருவூரார் சொன்னால் ஏதோ காரணம் இருக்கும்" என்று பெரியவர் பின் வாங்கிக் கொண்டார்.

மக்கள் குதிரைப்படையினர் ஒழுங்கு படுத்தாமலேயே தாங்களாகவே ஒழுங்காக நின்றனர். மன்னரை வரவேற்பதற்கு என்ன செய்வது என்று வேகமாகப் பேசினார்கள்.

"அருகிலுள்ள வேதியர் குடிக்குப்போய் அரசர் இந்த வழியே வருகிறார். அவரை வரவேற்கும் மங்கள வார்த்தை களைச் சொல்வதற்காக இங்கு உடனே அந்தணர்களை வரச்சொல்லுங்கள்." என்று ஊர்ப்பெரியவர்கள் கட்டளை யிட்டார்கள்.

தஞ்சையிலுள்ள முக்கியமான வீதிகளில் குடியிருக்கும் வேதியர்கள் ராஜவீதியின் ஒரு திருப்பத்தில் நின்று கொண்டார்கள். தோரணம் கட்ட முயற்சித்தபோது மெய்க்காவல் படையினர் தடுத்து விட்டார்கள்.

"தேவையில்லை. அவசரமாய் செய்கிற எந்த வேலையும் ஆபத்தாய் முடியும். அரசர் யானையில் வருவார் என்று நினைக்கிறேன். அப்படி வந்தால் அந்த உயரத்திற்கு இந்தத் தோரணங்கள் சரியாக வராது. இடைஞ்சலாகப் போகும். அரசரே அகற்றும்படியாகும். எனவே, தோரணங்கள் இல்லாது வேறு எந்தவிதமாக வரவேற்க முடியுமோ அதைச் செய்யுங்கள்..." என்று சொல்ல, வீட்டுப் பெண்கள் கிணற்றில் நீர் சேந்தி எடுத்துவர, வாலிபர்கள் அதை வாங்கி தெரு முழுவதும் தெளித்தார்கள்.

தெருவின் புழுதி அடங்கி ஒரு குளுமை பரவியது. பெண்கள் பெரிதாக அரிசி மாவில் கோலங்கள் போட்டார்கள். பூக்களைப் பறித்து வந்து அந்தக் கோலத்தின் மீது வைத்தார்கள். வீட்டு வாசலுக்குத் தோரணங்கள் கட்டினார்கள். பூக்கள் வைத்தார்கள். அரசர் மீது தூவுவதற்காக சில கூடை பூக்களை வைத்துக் கொண்டார்கள்.

ஒரு மெய்க்காவல் ஆள் இறங்கி அந்தப் பூக்கூடையை ஒரு முறைக்கு இருமுறை புரட்டிப் பார்த்தான்.

"பூக்கள்தானய்யா... ஏன் சந்தேகப்படுகிறீர்கள்."

"இது பூக்கள் என்று எனக்கும் தெரியும். உங்கள் மீது எனக்குச் சந்தேகமில்லை. அவசரத்தில் பூக்களில் உள்ள பூச்சி களோடு அரசர் மீது தூக்கிப் போட்டு அரசருக்கு அரிப்பு ஏற்படுத்தப் போகிறீர்கள் என்று அச்சப்படுகிறேன். அதனால் தான் உங்கள் பூக்கூடையைச் சந்தேகிக்கிறேனே தவிர, உங்களைச் சந்தேகிக்கவில்லை" அந்தப் பூக்கூடையை மறு படியும் சோதித்துவிட்டு நன்றாக இருக்கிறது என்று கையில் கொடுத்தான்.

"அரசரின் மெய்க்காவல் படையை யாராலும் எதுவும் செய்ய முடியாது. அவர்கள் புத்திசாலித்தனத்திற்கு பிரம்மராயர் கூட பணிந்துதான் போக வேண்டும்" – ஒரு பெண்மணி உரக்கச் சொன்னாள். அந்த வீரன் உதட்டின் மீது விரல் வைத்து அமைதியாக இரு என்று எச்சரித்தான்.

அந்த மெய்க்காவல் படையிடம் ஒரு கண்டிப்பு இருந்தது. மெல்லிய கனிவும் இருந்தது. ஒரு மேன்மாடத்தை மெய்க்காவல் படைத்தலைவர் சுட்டிக் காட்டினார். ஒரு மெய்க்காவல் படை வீரன் உடனே தாவி ஏறினான். அந்த வீட்டின் மேன் மாடத்தில்

மூன்று இளைஞர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அரசர் வருவதை வேடிக்கை பார்க்க ஆவலாக இருந்தார்கள். அவர்கள் மூவரையும் நெட்டித்தள்ளி அந்த வீரன் கீழே கொண்டு வந்தான்.

“எதற்காக... என் வீடு. நான் அரசரைப் பார்க்க விரும்பு கிறேன். நீங்கள் யார் மறுப்பதற்கு...” அந்த இளைஞர்கள் எகிறினார்கள். அவர்கள் மெய்க்காவல் படைத்தலைவரிடம் கொண்டு வரப்பட்டார்கள்.

“அங்கே போய் நிற்கக்கூடாது என்று போனமுறையே எச்சரித்தேன். உங்கள் வீடு பழைமையான வீடு. அது சிதிலமாக இருக்கிறது. அங்கே போய் நின்று நீங்கள் ஆவலில் எட்டிப் பார்க்க, அங்கிருந்து கல் உருண்டு ஓடி முதற்கூரையில் விழுந்து, முதற்கூரையிலிருந்து இரண்டாம் கூரைக்குத் தாவி, அங்கிருந்து மக்கள் தலையிலோ அல்லது அரசருடைய குதிரையிலோ – அல்லது பின்னால் வரும் பல்லக்கிலோ அடிபடலாம். இது வீண் கலவரத்தைக் கொடுக்கும். உங்கள் மேன்மாடத்தைப் பூட்டி சாவியை என்னிடம் கொடுங்கள். செப்பனிடப் போகிறீர்கள் என்று தெரிந்தாலொழிய நீங்கள் யாரும் மேன்மாடத்தில் ஏறக் கூடாது என்பது என்னுடைய கட்டளை. மீறி ஏறினால் நான் கடுமையாகத் தண்டிப்பேன். இதைப் போன முறையே நான் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.”

இப்படி மெய்க்காவல் படைத் தலைவர் அதட்ட, அந்த வீட்டின் மேன்மாடம் பூட்டி அவர்களிடம் கொடுக்கப்பட்டது. சாவி கொடுக்க வரும்போது, வீட்டின் தலைவரிடம் ஒரு மெய்க் காவல் படை ஆள் இதமாகப் பேசினான்.

“எங்கள் தலைவர் பேசி விட்டாரே என்பதற்காக நீங்கள் வருத்தப்பட வேண்டாம். அரசருடைய நன்மைக்காகவும், உங்களுடைய நன்மைக்காகவும்தான் அவர் அப்படிச் சொன்னார். போன முறை சொன்னபோது நீங்கள் சரியென்று ஏற்றீர்கள். உடனே செப்பனிடுவதாகச் சொன்னீர்கள். இதுவரை இடவில்லையென்பதால்தான் இம்முறை அவர் உங்களிடம் கடுமையாகப் பேசினார்.

செப்பனிடுவதற்குண்டான அனைத்து ஆயத்தங்களையும் செய்துவிட்டு உடனே என்னிடம் வாருங்கள். மேல் மாடத்தின் சாவி என்னிடம்தான் இருக்கும். நானே வந்து திறந்து

கொடுக்கிறேன்." என்று அந்த வீரன் இதமாகப் பேசினான். அந்த வீட்டின் சொந்தக்காரர் தலையசைத்தார்.

மேன்மாடத்தில் போய் நின்ற இளைஞர்களைக் கடிந்து கொண்டார். 'உங்களால்தான் எனக்குக் கெட்டபெயர்' என்று கோபித்துக் கொண்டார்.

அந்த இளைஞர்களை மெய்க்காவல் படை வீரன் தள்ளிக் கொண்டு போய் மிகச் சரியான இடத்தில் நிற்க வைத்தான்.

"இந்த இடத்திலே நின்று கொள்ளுங்கள். அரசர் வெகு நிச்சயமாக சில விநாடிகள் தாமதிப்பார். அவசியமானால் இன்னும் அதிக நேரம் கூட நிற்பார். இன்னும் அவசியமானால் இந்த மண்ணைத் தொட்டு விட்டு நமஸ்கரித்து விட்டுப் போவார்.

மிக முக்கியமான காரியங்களுக்குப் போகும் பொழுது, போருக்குப் போகும்பொழுது, அல்லது வேறு சில விஷயங் களுக்குப் போகிறபோது – அரசர் இந்த இடத்தை வெறுமனே தாண்டுவதே இல்லை என்பது உங்களுக்குத் தெரியாதா..." என்று கேட்க, அவர்கள் விழித்தார்கள்.

"அதோ அந்தக் கல்லை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா" கட்டிக் காட்டினான்.

"ஆமாம். குதிரைகளை நாங்கள் அந்தக் கல்லில்தான் கட்டுவோம்."

"என்ன செய்வது. இது காலத்தின் கோலம். இப்போது அது குதிரை கட்டுகிற கல்லாக மாறிவிட்டது. உண்மையில் அது குதிரைகள் கட்டுகிற கல் இல்லை நண்பனே. அது ஒரு நடுகல். தன்னைத்தானே பலியிட்டுக் கொண்ட ஒரு போர்வீரனின் நடுகல்."

"அப்படியா? அம்மாதிரி அதில் ஒன்றும் எழுதப்பட வில்லையே."

"எழுதப்பட்டது பூமிக்கு அடியிலே புதைந்து போய் இருக்கிறது. வெள்ளத்திலும், மழையிலும் மண் ஏறி ஏறி மூடிவிட்டது. அகற்றிப் பார்த்தால் நிச்சயம் தெரியும். ராஜ ராஜருக்கு அந்தக் கல் மேலே மிகுந்த பிரியம் உண்டு. அவர் நின்று அந்தப் போர்வீரனை வணங்கி விட்டுத்தான் போவார்."

"எப்பொழுது அந்தப் போர் வீரன் தன்னைப் பலியிட்டுக் கொண்டான்."

"வெகு காலத்திற்கு முன்பு" என்று மெய்க்காவல் படை வீரன் அந்த வீட்டிற்கு அருகே நின்று அந்த இளைஞர்களோடு பேசினான்.

"வெகுகாலம் என்றால் எப்போது..." - அந்த இளைஞர்கள் அவனைச் சுற்றிக் கொண்டு கேட்டார்கள்.

"விஜயாலயச் சோழன் என்ற ஒரு மன்னர் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு சோழ தேசத்தை ஆண்டு வந்திருக்கிறார். இன்றைய சோழதேசத்தின் சிறப்புக்கு அவர்தான் காரணம். விஜயாலயச்சோழன் பல்லவர்களோடு சேர்ந்து சாளுக்கியர்களை திருப்புறம்பியம் என்ற இடத்திலே எதிர்த்துப் போர் செய்து அவர்களை வெற்றி கொண்டார்.

அப்படி போருக்குக் கிளம்புகிறபோது, ஒரு வீரன் விஜயாலயச் சோழன் புகழ்பெறவேண்டுமென்றும், இந்தச் சோழ பரம்பரை பெரும்பரம்பரையாக விளங்க வேண்டும் என்றும், வெகுகாலம் நீடித்து நின்று உலக சரித்திரத்திலே இடம்பெற வேண்டும் என்றும், சந்திர சூரியர்கள் உள்ளவரை இந்தச் சோழ பரம்பரை மறக்கப்படக்கூடாது என்றும், அதன் மன்னர்கள் பேசப்படவேண்டும் என்றும் காளியிடம் பிராத்தனை செய்து கொண்டு தன்னைப் பலியிட்டுக் கொண்டான்." - பையன்கள் அவன் பேச்சை ஆவலாய் கேட்டார்கள்.

"தன்னைப் பலியிட்டுக் கொள்வது எப்படி என்று நீங்கள் அறிந்திருக்கிறீர்களா..."

அவர்கள் இல்லை என்று சொன்னார்கள்.

"ஒரு மெல்லிய மூங்கிலை பூமியில் நட்டு விடுவார்கள். அந்த மூங்கிலின் நுனியில் அந்த வீரன், தன் குடுமியை முடிந்து கொள்வான். பிறகு மண்டியிட்டு உட்கார்ந்து கொள்வான். அப்பொழுது மூங்கில் வளைந்து முடியை இறுகப் பிடித்துக் கொள்ளும். அந்த வீரன் கத்தியை உருவி விஜயாலயச் சோழன் நெருங்குகிறபோது தன் கழுத்திலே வேகமாக வீசிக்கொள்வான். கத்தி கழுத்தை வெட்டித் துண்டித்துப் போடும். அந்த மூங்கிலில் குடுமி, தொங்குகின்ற தலை நாலாபுறமும் வீசி ஆடி ரத்தத்தைத் தெறிக்கும். சில சமயம் அது மன்னர் மீதும், மன்னரின் குதிரைகள் மீதும் தெறிக்கும் என்று சொல்வார்கள் அப்படி ரத்தம் தெறித்தால் நல்ல சகுனம் என்று சொல்வார்கள். இந்த வீரன் தன்னை வெட்டிக்கொண்டபோது, அந்த ரத்தம் எகிறி

விஜயாலயச் சோழன் நெற்றியிலே பொட்டாக விழுந்ததென்றும், சுற்றியுள்ள வீரர்கள் முகத்தில் விழுந்ததென்றும், வெற்றி நிச்சயம் என்றும் கோஷமிட்டார்கள். விஜயாலயச் சோழன் தன்னைப் பலிகொண்ட அந்த வீரனின் குடும்பத்திற்கு நிறைய நிலங்கள் அளித்தார் என்றும், பொற்கழஞ்சுகள் கொடுத்தார் என்றும், அவருடைய குழந்தைகளுக்குப் பதவிகள், பட்டங்கள் கொடுத்தாரென்றும் சொல்லப்படுகிறது. விஜயாலயச் சோழனின் வெற்றிதான் சோழ சாம்ராஜ்ஜியத்தின் அஸ்திவாரம்.

பல்லவர்களுக்காக விஜயாலயச் சோழன் போரிட, பல்லவர்கள் சோழ தேசத்தை விஜயாலயச் சோழனிடம் கொடுத்து விட்டுப் போனார்கள். அதற்குப்பிறகு பராந்தகர் ஆட்சி செய்தார். அதற்குப் பிறகு ஆதித்த சோழர் ஆட்சி செய்தார். அதற்குப் பிறகு பராந்தகர். பராந்தகருக்கு மூன்று மகன்கள். முதல் மகன் ராசாதிராசன். இரண்டாவது மகன் கண்டராதித்தர். பிறகு மூன்றாவது அரியணை ஏறியது அரிஞ்சயர்.

அரிஞ்சயருடைய மகன் சுந்தர சோழர். சுந்தர சோழருக்குப் பிறகு கண்டராதித்தருடைய மகன் மதுராந்தகன் என்கிற உத்தம சோழர் ஆட்சி செய்ய, இபபோது சுந்தர சோழருடைய மகனான அருண்மொழி என்னும் ராஜராஜர்... உங்களுக்கு சோழசரித்திரம் புரிகிறதா...” என்று பிரியமாய் கேட்க, அந்த இளைஞர்கள் ‘ஆம்’ என்று தலையாட்டினார்கள்.

“எங்களுக்கு ஏற்கெனவே மனப்பாடமான விஷயந்தான். ஆனால் நீங்கள் சொன்னபோது மிக சந்தோஷமாக இருக்கிறது. இந்த நடுகல்லைப் பற்றி நீங்கள் சொன்னதும் மிக நல்ல விஷயம். நாங்கள் ஒன்று செய்யலாமா... இந்த நடுகல்லை நன்றாக நீர்விட்டு அலம்பி, சந்தனம் பூசி, குங்குமமிட்டு, ஒரு மாலை அணிவித்து விடட்டுமா.”

அந்த வீரன் தயங்கினான். “சரி, செய்யுங்கள்.” என்று சொன்னான்.

அந்த இளைஞர்கள் வீட்டிற்குள் ஓடினார்கள். மாடத்தில் நின்ற இளைஞர்கள் ஏன் வீட்டிற்குள் ஓடுகிறார்கள் என்று பெரியவர்கள் திகைக்க, தொலைவே எக்காளம் ஒலித்தது. மன்னர் புறப்பட்டு விட்டார் என்று அந்த எக்காளம் சொல்லிற்று.

எக்காளத்தாலும் சிறு முரசாலும் தெரிந்தால் போதாது. மன்னர் கிளம்பிவிட்டது தெரியவேண்டும் என்பதற்காக இரண்டு குதிரை வீரர்கள் வேகமாக வந்து தெருவில் நிற்கும் வீரர்களை எச்சரிக்கை, எச்சரிக்கை என்று கூவி உற்சாகப்படுத்தினார்கள்.

குதிரையிலுள்ள வீரர்கள் தங்களுடைய வாட்களை இறுக்கக் கட்டிக்கொண்டு, ஈட்டிகளை உயர்த்திப் பிடித்துக் கொண்டு மன்னரின் வருகைக்காகக் காத்திருந்தார்கள். மக்கள் அதிகமாக தெருவை அடைத்துக் கொண்டிருந்ததால் விலகிப் போகும்படி வேகமாய் எச்சரித்தார்கள்.

முதலில் ஒரு சிறிய குதிரைப் படை நாலாபக்கமும் மும்முரமாய் பார்த்துக் கொண்டு வந்தது. தெருவில் நிற்பவர்களை ஊடுருவிப் பார்த்தது. தெரியாத முகங்கள் ஏதேனும் இருக்கிறதா என்று சோதனையோடு நடந்தது. சட்டென்று யாரோ ஒரு பைராகியைப் பிடித்து யார், எந்த ஊர் என்று விசாரித்தது. பைராகி என்று தெரிந்ததும் 'இங்கே நிற்க வேண்டாம்; போ' என்று துரத்தியது. 'மன்னரைப் பார்க்க விரும்புகிறேன்' என்று அந்தப் பைராகி சொன்னதும், அருகிலுள்ளவர்களை, 'இந்தப் பைராகியின் மீது ஒரு கண் வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டு தொடர்ந்து நகர்ந்தது. அங்கே காவல் நிற்கின்ற போர்வீரன் அந்தப் பைராகியை அருகே நிற்க வைத்துக் கொண்டான்.

படை சிறிய சலசலப்புகள் ஏற்படுத்திக் கொண்டு போக, அடுத்தபடி மூன்று யானைகள் ஒரு சேர அணிவகுத்து வந்தன. ஒரு பாதையை அந்த யானைகள் ஏற்படுத்தின. மக்கள் முன்னே வரும்போது, அந்த யானைகளின் வருகையினால் பின்னே போகும்படி நேரிட்டது. மக்கள் கூட்டம் ஒருவர் மீது ஒருவர் அழுந்த ஓரம் நின்று கொண்டது. மூன்று யானைகள் போகக்கூடிய அகலத்தை அந்த ஊர்வலம் ஏற்படுத்திக் கொள்ள, அதற்குப் பிறகு இன்னொரு சிறிய குதிரைப்படை போயிற்று. இந்தப் படை முன்னே நகர்ந்தாலும், அடிக்கடி பின்னே திரும்பி மன்னருடைய அசைவை, வருகையைக் கவனித்துக் கொண்டிருந்தது.

மன்னர் அதற்கடுத்தபடியாக உள்ளான தேரில் நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார். அவருக்கருகே பட்டமகிஷி உட்கார்ந்து கொள்ள, அவருக்கு இடப்புறத்தில் சற்று கீழே ஓர்

ஆசனத்தில், பஞ்சவன்மாதேவி உட்கார்ந்திருந்தாள். அவளின் ஒரு கால், தேரின் ஒரு படியில் இருந்தது. எப்பொழுது வேண்டுமானாலும் இறங்கக்கூடிய தயார் நிலையில் பஞ்சவன்மாதேவி உட்கார்ந்திருந்தாள். தேரோட்டியது கேரளாந்த விழுப்பரையர் என்று பார்க்கும் போதே தெரிந்தது. அவருடைய மீசையும் தலைப்பாகையும் கம்பீரமாக இருந்தன.

மன்னர் பொற்கிரீடத்துடன், பட்டு உடைகளுடன் மிக கம்பீரமாய் மக்களைப் பிரியமாகப் பார்த்துக் கொண்டபடி போனார்.

“மக்களை என் பின்னே தளிக்குளத்தார் ஆலயம் நோக்கி வரச் சொல்லுங்கள்...” என்று கட்டளையிட, அங்குள்ள வீரர் களுக்கு அவை தெரிவிக்கப்பட, அவர்கள் மன்னர் தாண்டியதும், “அவசியமெனில் நீங்கள் மன்னரின் பின்னே போகலாம். தளிக்குளத்தார். ஆலயத்திற்கருகே உங்களை மன்னர் வரச் சொல்லியிருக்கிறார்...'' என்று சொல்ல, மக்கள் மன்னரைப் பின் தொடர்ந்தார்கள்.

மன்னரின் தேருக்குப் பிறகு நான்கு தேர்கள் வர, அந்தத் தேர்களிலும் அரசிகள் அமர்ந்திருந்தார்கள். அந்தத் தேர்களுக்குப் பிறகு யானைகள் வர, அந்தத் தேர்களை மக்கள் நெருங்க முடியவில்லை.

யானைகளுக்குப் பிறகு இன்னொரு மெய்க்காவல்படை, குதிரை வீரர்கள் வர, ஒரு கட்டுப்பாடான ஊர்வலம் தெற்கிலிருந்து புல்வெளியை நோக்கி நகர்ந்தது. மக்கள் அதற்குப் பின்னே பேசியபடியே போனார்கள்.

அந்த நடுகல் இடம் வந்ததும் சட்டென்று திரும்பி வலப்பக்கம் பார்த்தார் மன்னர். அந்த நடுகல் சந்தனம் மெழுகப்பட்டு, குங்குமம் இடப்பட்டு, திருநீறு சார்த்தப்பட்டு ஒரு தாமரைப் பூமாலை போடப்பட்டிருந்தது. அதற்கருகே மூன்று இளைஞர்கள் கைகட்டி நின்றார்கள்.

மன்னர் திகைத்தார். தேரை நிறுத்தச் சொன்னார். கீழிறிங்கிப் போய் அந்த நடுகல்லைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டார். நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். “யாரிதற்கு மாலைகள் இட்டது...” என்று கேட்டார்.

அந்த இளைஞர்கள் ‘நாங்கள்தான்’ என்று கை கூப்பினார்கள்.

"மிக்க சந்தோஷம். இது என்ன என்று அறிவீரா..." என்று அவர் விசாரித்தார்.

அவர்கள் விஜயாலயச் சோழனின் காலத்தில் நடந்த கதையைச் சொன்னார்கள்.

மன்னர் சந்தோஷமானார். அவர்களைத் தடவிக் கொடுத்தார். ஆளுக்கொரு பொற்காசு கொடுக்கச் சொன்னார். "தினமும் இந்த நடுகல்லுக்குச் சந்தனம் தடவி மலர் வைத்து வணங்கி வாருங்கள். உங்களுக்கு நல்லது நடக்கும்..." என்று வாழ்த்தினார். தேர் ஏறினார். உட்கார்ந்து கொண்டார். மக்கள் கூட்டம் பின்னே சுணங்கித் தவித்தது.

"என்ன போகிற பாதையில் சட்டென்று இறங்கி விட்டீர்கள்..." என்று பஞ்சவன்மாதேவி சொல்ல,

"எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. வேகமாகக் கிளம்பி விட்டோம். இந்த நடுகல்லுக்கு எதுவும் செய்யாமல் வருகிறோமே என்று நெருங்கும்போது தவித்தேன். ஆனால் அந்த நடுகல் தன்னைத்தானே அலங்கரித்துக் கொண்டு விட்டது. நான் செய்யப் போகும் காரியம் ஜெயமாகும் என்று எனக்குத் தெரிந்து விட்டது." மன்னர் உற்சாகமாய் பேசினார்.

சந்தனம் தடவிய இளைஞரில் ஒருவன், தன் தலையை மன்னருக்காய் கொய்து கொண்டால் என்ன என்று யோசித்தான்.

## 48

தளிக்குளத்தார் ஆலயத்தின் முன்பு ஊர்வலம் போய் சுற்றி நின்றது. மன்னர் தேர்விட்டுக் கீழிறங்க, மற்றோரும் இறங்கினார்கள்.

அங்கங்கே வேலை மண்ணில் குத்தி நட்டு, சுற்றி கயிறு கட்டி ஒரு பாதுகாப்பு வளையத்தை மெய்க்காவல் படையினர் ஏற்படுத்தியிருக்க, ஸ்ரீராஜராஜத்தேவர் அந்த வளையத்திற்குள் போக, அங்கே இருந்த ராஜராஜப் பெருந்தச்சர் அவரை வரவேற்றார். அவருக்குப் பின்னே நான்கைந்து இளைஞர்கள் நன்கு உடுத்தி கைகட்டி நின்றிருந்தார்கள். அவர்கள் அக்குளில் சுருட்டிய துணிப்பை இருந்தது. காலின் கீழ் கருவிகள் இருந்தன.

மாமன்னர் இராஜராஜர் அவர்களை நோக்கி நடக்க, அவர்கள் முன்னே வந்து இராஜராஜரின் கால்களைத் தொட்டு வணங்கினார்கள். இராஜராஜர் கைதட்டி எழுப்ப, அவர்கள் எழுந்து நின்று கும்பிட்டார்கள். பட்டமகிஷியார் வர, அவரையும் நமஸ்கரித்தார்கள்.

கருவூர்த்தேவர் கூட்டத்தின் தென்திசையைப் பிளந்து கொண்டு உள்ளுக்குள் வந்தார்.

“எந்த இடம் ராஜராஜப் பெருந்தச்சரே...” என்று கேட்க, ராஜராஜப் பெருந்தச்சர் அவர் காலைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டார். இடம் காட்டினார்.

“இது மேடான இடம். இந்த இடத்திலேயே மேடான இடம். இந்த இடத்தில்தான் கர்ப்பக் கிருகத்தின் ஈசான்ய சுவர் மூலை வரப்போகிறது. கர்ப்பக் கிருகத்தின் ஈசான்ய சுவர் மூலையில் இக்கல்லை நட்டு இங்கிருந்து துவங்கப் போகிறோம். இதற்குப் பிறகு இந்த இடத்தில் முதல் மண்டபம் - பிறகு அதோ அங்கு சிறிய கம்பு நட்டிருக்கிறேனே... அது இரண்டாவது மண்டபம் என்று விரிவாகப் போகிறது.

மண் பரிசோதனைகள் முடிந்துவிட்டன. காற்றுப் பரிசோதனைகள் முடிந்து விட்டன. நீர் பரிசோதனைகள் முடிந்துவிட்டன. நீங்கள் உத்தரவு கொடுத்தால், மன்னர் சரி என்று தலையசைத்தால் நான் வேலையைத் துவங்கிவிடுவேன்.” என்று சொல்ல, கருவூர்த்தேவர் மன்னரை நோக்கி நடந்தார். மன்னர், கருவூர்த்தேவர் கால்களைத் தொட்டு வணங்க, மன்னரை அவர் எழுப்பி அணைத்துக் கொண்டார்.

“ராஜராஜா... இந்தக் கணத்தில் நீ உன் மூதாதையர்களை நினைத்துக் கொள்ளவேண்டும். விஜயாலயச் சோழனில் ஆரம்பித்து வருகின்ற உன் பரம்பரையை மட்டும் சொல்ல வில்லை. அதற்கு முன்பு பெயர் தெரியாது பல்லவர்களுக்கெல் லாம் முன்பு ஆட்சி செய்து வாழ்ந்தார்களே... அந்த கரிகாலச் சோழர்களையெல்லாம் கூட நீ நினைவுக்குக் கொண்டு வரவேண்டும்.

இந்தத் தஞ்சைத் தரணி சிறப்பதற்காக ஆட்சி செய்த மன்னர்களை, அவருக்குத் துணையாக இருந்த மந்திரி மார்களை, தவசீலர்களை, இந்தத் தஞ்சை மண்ணை விட்டுப் பிரியாமல் இங்கேயே சுற்றிக் கொண்டிருக்கின்ற அந்தச் சூட்சும

உணர்வுகளை நீ தியானித்துக் கொள்ளவேண்டும். இந்தக் காரியம் தஞ்சை மண்ணைப் பெருமைப்படுத்த நடத்தப்போகிற காரியம். தமிழ் கூறும் நாகரிகத்தை உலகுக்குச் சொல்லப்போகிற காரியம். கணிதத் திறமையை, கலைத்திறமையை, ஆராய்ச்சி மனப்பான்மையை, எழுத்தை, படிப்பை, நாகரிகத்தின் பேச்சை, சொல்லை, செயலை, தத்துவத்தை, கடவுள் தேடலை உலகுக்குச் சொல்லுகின்ற காரியம்.

மாமன்னா... முழுமூச்சாக இதில் இறங்கிவிடு. இதைத் தவிர வேறு எதுவுமே உனக்கு முக்கியமாக இருக்கவேண்டிய அவசியமில்லை. மிகப்பெரிய காரியம் செய்கிறபோது நடுவே சில இடைஞ்சல்கள் ஏற்படலாம். அது பற்றி எந்தக் கவலையும் கொள்ளாதே. சிவனருளால் அந்த இளைஞர்கள், உன்னைச் சுற்றியுள்ளவர்கள் தீர்த்து வைப்பார்கள். இராஜேந்திர சோழன் உனக்குத் துணையாக நிற்பான். பஞ்சவன்மாதேவி அரண்மனையைப் பார்த்துக் கொள்வாள். உன்னுடைய துணைவியார்கள் இதற்குத் துணையாக நிற்பார்கள். மந்திரிமார்கள் இறங்கி வேலை செய்வார்கள்.

எப்படிப்பட்ட கோயில் கட்டவேண்டும். என்னவிதமாகக் கட்டவேண்டும் என்கிற விஷயத்திலெல்லாம் வேகமாக முடிவுக்கு வந்துவிட்டு, அதற்குண்டான ஆட்களைத் தயார் செய்து, அவர்களுக்குண்டான வசதிகளைச் செய்து கொடுத்துவிடு. இதில் ஈடுபடுகிற எவரும் முகம் சுளிக்காமல் இருக்கட்டும். இதில் ஈடுபடுகிறது தெய்வ காரியம் என்று அவர்களுக்குச் சொல்லி விடு. இதில் சௌகரியக் குறைவு இருந்தாலும் சகித்துக் கொள்ளச் சொல். நான் செய்கிறேன் என்று கர்வப்படாமல் சகலரையும் இதில் பங்கு பெறச் செய். இது உங்களுடைய கோயில் என்று அவர்களுக்கு அறிவுறுத்து.

மாமன்னா... மனிதர்கள் கூடிவாழும் இயல்பினர்கள். அவர்கள் கூடித்தான் பெரும் காரியங்கள் செய்திருக்கிறார்கள். உன்னுடைய காலத்தில் உன்னுடைய மக்கள், உன்னுடைய மந்திரிமார்கள், உன்னுடைய மனைவிகள், உன் அரசாங்கத்து ஆட்கள் எல்லோரும் ஒன்றுகூடி மிகப்பெரிய ஒரு தொண்டை சிவனுக்காக, இறைவனுக்காகச் செய்யப்போகிறீர்கள். இது வாழ் வாங்கு வாழும். வையத்தில் வெகுநாள் நிலைத்து நிற்கும். பூமி இருக்கும்வரை இந்தப் பெருங்கோயில் இருக்குமென்று நான் உனக்கு உறுதிகூறுகிறேன்.

உன் பெயரைத் தமிழனாகப் பிறந்திருந்த ஒவ்வொருவரும் வாழ்க்கையில் ஒரு முறையேனும் சொல்லாமல் இருக்க மாட்டான். தமிழனாகப் பிறந்தவன் வாழ்க்கையில் ஒருமுறையேனும் நீ கட்டுகின்ற கோயிலுக்கு வாராமல் இருக்கமாட்டான். மிகப்பெரிய ஒரு சாதனையை நீ செய்யப்போகிறாய். செய்வதற்காகவே பிறந்திருக்கிறாய். அதைத்தான் உன் மங்களச் சின்னங்கள் சொல்லுகின்றன. எனவே, இதில் ஏற்படுகின்ற அத்தனை இடைஞ்சல்களையும் இறைவனுடைய கைகளிலே ஒப்படைத்து விட்டு, இந்த இளைஞர்களெல்லாம் உன்னை ஊக்குவிக்கவே வந்திருக்கிறார்கள் என நீ நினைத்துக் கொள்ளும் பொழுதிலே ஏழு வருடங்களில் இந்த விஷயம் நன்கு வளர்ந்து நல்லபடி முடியும். எனவே எந்தக் கவலையுமில்லாமல் இந்த வேலையில் இறங்கு.

உன்னுடைய கையால் மண்கொத்தியை எடுத்து சிற்பியிடம் கொடு. சிற்பி வெட்டுகிற குழியில் உன்னுடைய கையால் நீர் ஊற்று. நவரத்தினங்களை இடு. தங்கக்காசுகள் போடு...” என்று கருவூர்த்தேவர் கட்டளையிட்டார்.

மறுபடியும் இராஜராஜர் கருவூர்த்தேவர் காலில் பணிந்தார். அரசிகள் எல்லோரும் பணிந்தார்கள். இராஜராஜர் எழுந்து நின்று பெருந்தச்சரைப் பார்த்துக் கைகூப்பினார்.

“நான் மட்டுமே இந்தக் காரியத்தைச் செய்வதாய் நினைக்கவில்லை பெருந்தச்சரே. உங்களுடைய கலைத்திறமை, உங்களுடைய ஆர்வம், உங்களுடைய கணிதம் இவை எல்லாம் சேர்ந்துதான் இங்கே பெருங்கோயிலாக உருவாகப் போகின்றன. இந்நாட்டில் எனக்கு இணையான நண்பராய் நீர் பிறந்திருக்கிறீர் என்பது மிகப் பெருமைப்படக்கூடிய விஷயம். உங்களுக்கு எந்தக் குறையுமில்லாமல் நடக்க நான் முயற்சி செய்வேன். ஒருவேளை என்னால் ஏதும் குறையிருக்குமாயின், அதை இப்போதே மன்னித்து, அந்தக் காரியம் எனக்காகச் செய்யப்படவில்லை, இறைவனுக்காகச் செய்யப்படுகின்ற காரியம் என்பதை நீங்கள் மனதிலே தேக்கி, குறைவர முடித்துத் தருமாறு பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.” என்று கைகூப்பி உடல் குனிந்து வணங்க, மன்னரின் மனைவிகள் அனைவரும் பெருந்தச்சரை வணங்கினார்கள். பெருந்தச்சர் அதே பணிவோடு இராஜ ராஜரை வணங்கினார்.

"பெருந்தச்சனாரின் துணைவியார் வரவில்லையா. பெருந்தச்சனார் துணைவியார் வரவேண்டியது ஒரு சம்பிரதாயமாயிற்றே..."

"ஆமாம். அழைத்து வந்திருக்கிறேன்..." என்று சொல்ல, கூட்டத்திலிருந்து பெருந்தச்சரின் துணைவியர் இருவரை அழைத்து வந்தார்கள்.

இருவரும் வந்து மன்னர் இராஜராஜரைக் கால்தொட்டு வணங்க, கருவூராரை நமஸ்கரிக்க, அங்கு அவர்களுக்கு வெற்றிலை பாக்கும் பொற்கிழிகளும் தரப்பட்டன.

"அம்மா... அவர் மிகப்பெரிய ஒரு வேலையிலே தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார். அந்த வேலையிலிருந்து அவரைத் திசை திருப்பாமல், அந்த வேலையை நோக்கி அவரைத் தீவிரமாக ஈடுபடும்படியாக நீங்கள் இருவரும் செய்ய வேண்டும்." பட்டமகிஷி கேட்டுக் கொள்ள, சரி என்று நாணத்தோடு தலையசைத்தார்கள்.

மட்டம் பார்க்கும் குண்டில் இருந்த நூல்கயிறை உயரத் தூக்கி பெருந்தச்சர் பிடிக்க, அதை சிறிய கத்தியால் பட்டென்று இராஜராஜர் அறுத்தார்.

பெருந்தச்சர் வலக்கையை நீட்ட, கிட்டத்தட்ட முழங்கை நீளமுள்ள அந்தக் கயிறை அந்த வலக்கை மணிக்கட்டில் அவருடைய இரண்டு மனைவிகளும் இரண்டு விரல்களை வைக்க, அந்த இரண்டு விரல்களைச் சுற்றி, மணிக்கட்டையும் சுற்றி இராஜராஜர் கங்கணம் கட்டினார். அவர்கள் விரல்களை எடுத்துக் கொள்ள, அந்த மணிக்கட்டுக் கயிறு பெருந்தச்சனார் கையில் தொங்கியது. அந்தக் கங்கணத்தில் மன்னர் தங்கப் பூவை மாட்ட, பெருந்தச்சர் மறுபடியும் கைகூப்பினார்.

தன்னுடைய உதவியாளர்களை அருகே அழைத்தார். 'இவன் உமாபதி, அடுத்தவன் தாணுமாலயன், அதற்கடுத்து இருப்பவன் விஸ்வனாதன். இவர்கள் மூவரும் இங்கே நடக்கின்ற எல்லா வேலைகளுக்கும் முழுமுதற் பொறுப்பானவர்கள். நான் வெளியூர் போனாலும் இந்த வேலையைத் திறம்பட செய்பவர்கள். இந்த வேலையை இவர்கள் திறம்பட என்னைப் போல செய்வதற்காக, நான் அணிந்த கங்கணம்போல் அவர்களுக்கும் அணிவிக்கிறேன்." என்று சொன்னார். அருகே அழைத்தார். குண்டிலிருந்து தொங்கும் நூலை எடுத்து அவர்கள் கையை சுற்றி, கைகூப்பி நிற்க வைத்தார்.

"மாமன்னர் உடையார் ஸ்ரீராஜராஜத்தேவரின் சத்தியமாக, கருவூர்த்தேவர் கால்தூசியின் சத்தியமாக, காவிரியின் சத்தியமாக, தஞ்சை மண் மீது சத்தியமாக, எங்கள் குலதெய்வம் விராடபுருஷன் சத்தியமாக, முப்பது முக்கோடி தேவர்கள் சத்தியமாக, எங்கள் அந்தராத்மாவின் மீது சத்தியமாக இந்த வேலை முடிகிற வரையில் மது அருந்துதலோ, மாமிசம் உண்ணலோ, மங்கையரை நாடலோ எதுவுமில்லாமல் கடும் விரதமிருந்து கடவுளருளால் இந்த வேலையை முடித்துத் தருகிறோம். இது சத்தியம். சத்தியம். சத்தியம்." என்று சொன்னார்கள்.

மாமன்னர் இராஜராஜர் கவலையோடும், கருணை யோடும் அவர்களைப் பார்த்தார். மூவருமே இளைஞர்கள். செழிப்பானவர்கள். வாழ்நாளின் ஒரு முக்கிய பகுதியை, எல்லா சுகங்களையும் புறக்கணித்துவிட்டு, கோயில் கட்டுகிற வேலைக்கு ஆட்படுத்திக் கொண்டு விட்டார்கள்.

கோயில் கட்டுதல் எப்போது முடியும் என்று தெரியவில்லை. குறைந்த பட்சம் ஆறு ஆண்டுகளாவது ஆகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதற்கப்பாலும் ஆகும். ஆகிற வரையில் இவர்கள் வேறு எதுவும் செய்ய முடியாது. வாழ்க்கை யில் ஈடுபடுவதற்கு இயலாது. அப்படி ஈடுபடமாட்டேன் என்று சத்தியம் செய்திருக்கிறார்கள்.

மன்னர் மனம் நெகிழ்ந்தார். திரும்பி பட்ட மகிஷியைப் பார்த்தார். பட்ட மகிஷி கண் கலங்கினாள். பஞ்சவன்மாதேவி மெல்ல தலைகுனிந்து, அந்த இளைஞர்களின் மனநிலையைப் பற்றி யோசித்தாள். சற்று நேரம் அங்கு ஒரு அமைதி இருந்தது.

அரசரிடம் மண் கொத்தியை உமாபதி எடுத்துக் கொடுக்க, அந்த மண்கொத்தியை நெஞ்சில் வைத்து ஆரசர் தியானித்தார்.

"எல்லாம் நீ. உனக்காக நீ செய்து கொள்ளுகிறாய். இங்கு என் செயல் என்று எதுவுமில்லை. எனக்கு எந்தக் கர்வத்தையும் கொடுக்காமல், உன்னுடைய அடியவனாகவே இருப்பதற்கு ஆசீர்வாதம் செய். இந்த வேலையை நீ நிறைவேற்றிக்கொள். நீ முழுமையாக்கிக் கொள். உன்னை இங்கு காண்பதற்காகவே தவியாய்த் தவிக்கிறேன். உன்னை உலகத்தோருக்குக் காட்ட வேண்டுமென்பதற்காகவே இந்த முயற்சியைச் செய்திருக்கிறேன். நீ விரும்பினால் ஒழிய உன்னை எவரும் பார்க்க இயலாது. நீ சம்மதித்தால் ஒழிய இங்கே உன் உருவம் தோன்றாது. நீ, உன்

சன்னிதானம், சாந்நித்யம், இங்கே இருக்க வேண்டுமென்பதற்காக நான் உன்னை இறைஞ்சி மனமாற வேண்டிக்கொள்கிறேன். என் சிவனே. என் இறையே. வருக. வருக. இங்கு வந்து அமர்க...” என்று மனமாற வேண்டினார்.

மண்கொத்தியைக் கைநீட்டி ராஜராஜப் பெருந்தச்சரிடம் கொடுத்தார். ராஜராஜப் பெருந்தச்சர் அதை வாங்கி கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

“நான் ஒரு கருவி. இதோ இந்த மண்வெட்டியைப் போல ஒரு கருவி. இந்த மண்வெட்டியைப்போல கூர்மையாகவும், உறுதியாகவும், அமைதியாகவும் இருப்பதற்கு எனக்குக் கற்றுக் கொடு. என்னை ஆசீர்வாதம் செய். எந்த ஆரவாரமுமில்லாமல் அமைதியாக இந்தப் பணியை முழுமையாக முடிக்க நான் உன்னையே நம்பியிருக்கிறேன். என்னுடைய கணக்கும், கலைவித்தையும் நீ கொடுத்த பிச்சை. உன்னிடம் வாங்கிய பிச்சையிலேயே கோயில் கட்டுகிறேனே தவிர நான், என்னுடையது என்று எதுவுமில்லை. நீயே உன்னை நிறுவிக் கொள்.” என்று வணங்கினார். அரசரைப் பார்த்து ஆரம்பிக் கட்டுமா என்று கேட்டார். அரசர் சரி என்று தலையசைத்தார்.

மண்கொத்தியை உயரப்பிடித்து ஜனங்களுக்கெல்லாம் காட்டினார். பெண்கள் குலவை போட்டார்கள். ஆண்கள் துணிகளை மேலே விசிறினார்கள். ‘ஜெய விஜயீ பவ. ஜெய விஜயீ பவ. ஜெய விஜயீ பவ’ என்று கோஷமிட்டார்கள். அந்தணர்கள் வேதம் சொன்னார்கள். புலவர்கள் பதிகங்கள் பாடினார்கள். பைராகிகள் உடுக்கைகள் முழங்கினர். முரசுகள் முழங்கப்பட்டன. எக்காளம் ஊதப்பட்டது.

கூட்டத்தைப் பிளந்து கொண்டு தளிச்சேரி பெண்கள் ஆடி வந்தார்கள். வரிசையாய் நின்றார்கள். ‘சிவ சிவ சிவ சிவ சிவ சிவ’ என்று உரக்கப்பாடி ஆடினார்கள். தாளம் போட்டார்கள். மத்தளங்கள் முழங்கின. சங்கும் ஊதப்பட்டது. கழுத்தில் கட்டிக் கொண்ட வீணையில் வெகு துரிதமாக ஒருவர் சிவநாமத்தை வாசித்தார். மக்கள் கைகொட்டி அதேவிதமாக சிவ நாமத்தைப் பாடினார்கள். அந்த இடமெங்கும் சிவநாமம் பொங்கிப் படர்ந்தது. மன்னரும் கைகூப்பினார். ‘சிவ சிவ சிவ சிவ சிவ சிவ’ என்று அவரும் கூறினார்.

மண்வெட்டி மறுபடியும் உயர்த்தப்பட்டது. மீண்டும் குரல்கள் பலமாயின. ஓங்கி ஒரு கொத்து மண்ணில் மண்வெட்டி

கொத்தப்பட்டது. மண் புரண்டு விழுந்தது. பலமுறை கொத்தப் பட்டது. ஆழம் தோண்டப்பட்டது. ராஜராஜப் பெருந்தச்சரின் உதவியாளர்கள் களத்தில் இறங்கினார்கள். வேகமாக மண்தோண்டி வெளியே போட்டார்கள். ஒரு பொற்குடத்தில் காவிரி நீர் கொண்டு வரப்பட்டது. அந்தக் காவிரி நீரை அந்தக் குழியில் மாமன்னர் ஊற்றினார். ஊற்றும்பொழுதே அவருடைய பட்டமகிஷியார் நவரத்தினங்களைப் போட்டார். பொற்காசுகள் இடப்பட்டன.

அந்தக் குழி நிறையும் வரை மாமன்னர் ஸ்ரீராஜராஜத் தேவர் காவிரி நீரை ஊற்றினார். எல்லா அரசிகளும் பூக்கள் போட்டார்கள். மோதிரங்களைக் கழட்டிப் போட்டார்கள். ஒரு அரசி வளையலைக் கழட்டிப் போட்டாள். இன்னொரு அரசி நவரத்தின அட்டிகையை இட்டாள். சகலமும் அந்தக் குழிக்குள் அடங்கிப் போய் நின்றன.

நீர் நிரம்பும் வரை ஊற்றப்பட்டது. நிரம்பியவுடன் மன்னர் நீர் ஊற்றுதலை நிறுத்தினார். எல்லோரும் அமைதியாக அந்த நீரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நீர் அசையாமல் அவ்விதமாகவே வெகுநேரம் இருந்தது. “இது நல்ல இடம். நீர் கூடவும் இல்லை. குறையவும் இல்லை. சமமாக வாங்கிக் கொள்கிறது” என்று சொல்ல, எல்லோரும் மகிழ்ந்தார்கள்.

“வேறு ஏதேனும் போட வேண்டும் என்றால் போடலாம்” என்று சொல்ல, கருவூர்த்தேவர் தன் மடியிலிருந்து கொட்டைப் பாக்களவுள்ள சந்திர காந்தக் கல்லை எடுத்து அதற்குள் போட்டார். கேரளாந்தக விழுப்பரையன் என்கிற மந்திரி, தன் வைர மோதிரத்தைக் கழட்டிப் போட்டார். வேறு சில மந்திரி களும் தங்க ஆபரணங்களைப் போட, மக்கள் வரிசையாளர்கள். தங்கள் கையிலிருந்த செப்புக் காசுகளையும், பொற்காசுகளையும் அந்தக் குழியிலே போட்டார்கள். ஒரு பெண்மணி கழுத்திலுள்ள தங்கச் சங்கிலியைக் கழட்டிப் போட்டாள்.

இன்னொருத்தி, இடுப்பிலிருந்து அரைஞாணை மெல்ல அறுத்து அதிலிட்டாள். காது தோடுகளை பல பெண்மணிகள் போட்டார்கள். கடுக்கன்களும், மோதிரங்களும் நிறைய குழிக்குள் விழுந்தன.

இனி போடுவதற்கு எதுவுமில்லை என்கிறபொழுது, வேகமாய் மண் போட்டு அந்த இடத்தை மூடினார்கள். முக்கால் நிரம்பியதும் ஒரு மூலைக்கல்லை அழுத்தி பொருத்தினார்கள்.

அதன் மீது இன்னொரு மூலைக்கல்லை வைத்தார்கள். அரைத்த சாந்தை அந்தக் குழிக்குள் கொட்டி இறுக்கினார்கள். அந்தக் கல்மீது மலர்மாலை வைத்தார்கள்.

“மீதியை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம் அரசே. நீங்கள் போய் வரலாம்.” – பெருந்தச்சர் கைகூப்ப, மன்னர் திரும்பினார்.

அவர் தேரேறி தளிக்குளத்தார் கோயிலுக்கு அருகே போகும்போது, கருவூர்த்தேவர் அங்கு நின்றிருந்த வீரர்களை மன்னருக்குக் காட்டினார். மன்னர் யாரென்று பார்க்க, அந்த வீரர்கள் ஈட்டியைத் தலைகீழாகப் பிடித்து தரையில் குத்தினார்கள். அதற்கு துக்கச் செய்தி என்று பெயர். மன்னர் திடுக்கிட்டார். என்ன என்று கருவூர்த்தேவரைப் பார்த்தார்.

அவர்கள் அருகே வந்தார்கள். ‘யார்’ என்று மன்னர் பதட்டமாய் கேட்க, “கண்டராதித்தர் துணைவியார் செம்பியன் மாதேவியார்” என்று பதில் வந்தது. மன்னர் சட்டென்று தேரில் உட்கார்ந்தார். தலை கவிழ்த்துக் கொண்டார். அங்கே பேரமைதி நிலவியது.

பெருமழை ஒன்று பெய்வதற்காக கடும் புழுக்கம் அந்தக் காலை வேளையில் பரவியது. மக்கள் அமைதியாய் மன்னரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

“அம்மா, என் தாயே... சிவனருள் செல்வி. செம்பியன் மாதேவி... நீ போய்விட்டாயா...” என்று யாரோ ஒருவர் கதற, அங்கே கூட்டம் மடை உடைத்த வெள்ளம்போல் கதறியழத் துவங்கியது.

## 49

‘சோழ மாமன்னர் முதலாம் பராந்தகனின் மருமகளும், அவரது இரண்டாவது மகன் கண்டராதித்தனுடைய பட்ட மகிஷியும், சோழ தேசத்தைச் சிறிது காலம் ஆண்ட உத்தம சோழன் என்னும் மதுராந்தகனின் தாயாரும், சுந்தரசோழரின் பெரிய தாயும், அருண்மொழி என்று சிறுவயதில் அழைக்கப் பட்ட உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவரின் பாட்டியாருமான செம்பியன்மாதேவி கூடலூர் என்கிற சிறுகிராமத்தில் கொங்கு

தேசத்தில் ஒரு மரத்தடியின் கீழ் சிவநாமம் சொல்லியபடி உயிர்நீத்தார்.

மாமன்னர் உடையார் இராஜராஜத்தேவர் தான் கட்ட விருக்கும் பிரகதீஸ்வரர் ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டிவிட்டு, பிறகு இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு, வடமேற்கு நோக்கி சிறிய படையோடு ஈமக்கிரியைகள் செய்யப் போகிறார். அவரோடு பஞ்சவன்மாதேவியும், கருவூர்த்தேவரும் பயணப் பட்டிருக்கிறார்கள்.

கேரளாந்தகப் பழுவேட்டரையர் தலைமையில் தஞ்சை அரண்மனையும், நகரும் பாதுகாப்பாக இருக்கின்றன.

அரசரோடு ஆறு அதிகாரிகள் குதிரைப் படையோடு பின் தொடர்ந்திருக்கிறார்கள். பதின்மூன்று நாட்கள் சோழதேசம் முழுவதும் துக்கம் கொண்டாடப்படவேண்டும். எல்லா மகிழ்வான விழாக்களும் நிறுத்தப்படவேண்டும். வழக்கமான பூஜைகள் மட்டுமே செய்துவரவேண்டும்' என்று ஓலைகள் எழுதப்பட்டு, சோழதேசத்தின் முக்கிய நகரங்களுக்குக் குதிரை வீரர்கள் மூலம் அனுப்பப்பட்டது.

அதிகாரியின் மேற்பார்வையில் சோழ இலச்சினை தாங்கிய ஓலையோடு, இடைவிடாது குதிரை வீரர்கள் சிறிய மூட்டை முடிச்சுகளோடு பயணப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

செய்தி கேட்ட துக்கம் குறைவதற்காக, அரண்மனை வாசலில் ஒற்றைத் துண்டோடு அரசர் நிற்க, அவர் தலையில் காவிரி நீர் ஊற்றப்பட்டது. அரசர் ஒற்றை ஆடையோடும், நீர் சொட்டும் தலையோடும் அருகே உள்ள கல் ஆசனத்தில் அமர்ந்தார்.

அரசர் கண்களில் இருந்து கண்ணீர் வழிகிறதா, அல்லது தலையில் சொட்டிய நீர் புருவம் தாண்டி கன்னத்தில் வழிகிறதா என்று புரியாமல் மக்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அரண்மனைத் தாதிகள் தொலைவிலிருந்தபடியே சுற்றிச் சுற்றி வந்தார்கள்.

வீரர்கள் அடிக்குரலில் கெடுபிடி வார்த்தைகளை உபயோகித்தார்கள். ஒரு பரபரப்பும், அதேநேரம் ஒரு அமைதி யும் அந்த இடத்தில் இருந்தது.

மாமன்னர் உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் செம்பியன் மாதேவியைதான் முதன்முதலில் சந்தித்தது எங்கே என்று நினைவுக்குக் கொண்டுவர பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தார்.

"இந்த தேசம் மதுராந்தகனுடையதுதானே... வேறு யாருக்காவது இதில் உரிமையுண்டா..." ஒரு அரச சபையில் நின்று, கண்டராதித்தனின் மனைவியான செம்பியன்மாதேவி சுந்தரசோழரை நோக்கி விரல் நீட்டிப் பேசியதுதான் முதலில் ஞாபகம் வந்தது.

சபையில் சலசலப்பு ஏற்பட, கைதட்டி செம்பியன் மாதேவியே அமைதியாக்கினார்.

"என்ன – நான் பேசுவது உங்களுக்கு வியப்பைக் கொடுக்கிறதா அல்லது வேதனையைக் கொடுக்கிறதா... என்ன இப்படிப் பேசுகிறாளே என்று வியக்கிறீர்களா. இப்படிப் பேசி விட்டாளே என்று வேதனைப்படுகிறீர்களா. நான் இங்கு பேசா விட்டால் நாளை காலம் பேசும். அதனாலேயே நான் இப்பொழுது பேசுகிறேன். மறுபடியும் என் கேள்வியை உங்கள் முன் வைக்கறேன். இந்தச் சோழதேசம் யாருடையது. யார் அதற்கு மன்னராக வரவேண்டிய தகுதியுடையவர். மதுராந்தகனா, ஆதித்த கரிகாலனா... சபை எனக்குப் பதில் சொல்லியே ஆகவேண்டும். உங்கள் பதிலைப் பொறுத்து என் வாழ்க்கைத் திசை மாறும்..."

சோழதேசத்துப் பெண்கள் கூர்மையானவர்கள். கெட்டிக் காரர்கள். வாய்ச்சொல்லில் வல்லவர்கள். ஆனால் செம்பியன் மாதேவியைப் போல் பயமின்றி சபையில் எழுந்து பேசக் கூடியவர்கள் எவருமே இல்லை.

குந்தவை நாச்சியார் என்றும், ஆழ்வார் என்றும் மக்களால் அழைக்கப்படும் தமக்கை அருகே இருக்க, அருண்மொழி என்றழைக்கப்பட்ட இளைஞனான இராஜராஜர் செம்பியன் மாதேவியையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"பாட்டி கோபமாக இருக்கிறாரா..." என தமக்கையைக் கேட்டார்.

"இல்லை. திமிராக இருக்கிறார்..." என்று குந்தவை பதில் சொன்னாள்.

"திடீரென்று இந்தக் கேள்வியை எழுப்ப வேண்டிய அவசியமென்ன. இப்பொழுது அரசுக் கட்டில் பற்றிய கேள்வி

எதற்காக வந்தது. நான் நன்றாகத்தானே இருக்கிறேன். நலமாகத்தானே வாழ்கிறேன். தெளிவாகத்தானே அரசாட்சி நடத்துகிறேன். ஏன் இந்தக் கேள்வியை எழுப்பினீர்கள் தாயே..." என்று சுந்தரசோழர் கேட்க...

"நான்தான் சொல்லிவிட்டேனே - இன்று நான் எழுப்பா விட்டால் நாளை காலம் எழுப்பும் என்று. மனிதர்கள் அநித்திய மானவர்கள். சுந்தர சோழருக்குப் பிறகு இங்கு பட்டமேற்கப் போவது யார் என்பது தெளிவாக வேண்டிய நேரம் வந்து விட்டது என்று நினைத்தேன். கேள்வி கேட்கிறேன்."

"என் ஆட்சிக்காலம் முடிந்து விட்டது என்று நினைக்கிறீர் களா."

"எது தொடங்கியதோ - அது அழியும். எது ஆரம்பித்ததோ - அது முடியும். உன் ஆட்சிக்காலம் என்று ஒன்று ஆரம்பித்தால் அதற்கு ஒரு முடிவும் இருக்குமல்லவா. அந்த முடிவை நோக்கி நாம் நகர்ந்து கொண்டிருக்கும்பொழுது, அடுத்தபடி என்ன என்று நாம் சிந்திக்க வேண்டாமா..."

"என் முடிவு நோக்கி எது நகர்ந்து கொண்டிருக்கிறது..." சுந்தர சோழர் சற்று கோபமாகக் கேட்டார்.

"ஏன் கோபப்படுகிறாய் சுந்தரசோழா. வாரிசுப் பிரச்சினை ஒன்று இருக்கிறது என்பதை வசதியாக மறந்துவிட்டு, ஆதித்த கரிகாலனை மட்டும் நான்கு திசைகளிலும் போருக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறாய். ஆதித்த கரிகாலன் ஒவ்வொரு முறையும், ஒவ்வொரு இடத்திலும் வெற்றிவாகை சூடிக்கொண்டு ஊருக்கு வந்து மாலை சூட்டிக் கொண்டிருக்கிறான்.

எல்லாப் போர்களிலும் வெற்றி பெற்றதாலேயே, பாண்டியர்களை அடக்கி விட்டதாலேயே, மக்களுக்கு நடுவே கம்பீரமாகி விட்டதாலேயே ஆதித்த கரிகாலன் அரசனாகிவிட முடியாது. ஆதித்த கரிகாலனுக்கு முன் மதுராந்தகன் இருக்கின்றான் என்பதை நீ மறந்துவிடக் கூடாது. மதுராந்தகன் போர்களில் கலந்து கொள்ளாததாலேயே அவன் ஆட்சிக்குத் தகுதியற்றவன் என்று எவரும் முடிவு செய்துவிடக் கூடாது.

சிவநெறிச் செல்வர்கள் பல பேர் இங்கு ஆண்டிருக்கிறார் கள். மதுராந்தகனின் தந்தை கண்டராதித்தரைவிட ஒரு சிவநெறிச் செல்வர் இங்கு உண்டா.

போரில் ஜெயித்து வருவது என்பது அரசரின் தகுதியால் மட்டுமல்ல. தனிமனிதனின் உரத்தால் மட்டுமல்ல. நல்ல படை வீரர்கள், நல்ல மந்திரிகள் உடன் போனால் வெற்றி நிச்சயம். அது ஆதித்த கரிகாலன் போனாலும் சரி, மதுராந்தகன் போனாலும் சரி, இனி இளைஞனாக இருக்கின்ற அருண்மொழி போனாலும் சரி... சோழர்களின் வெற்றிமாலை என்பது சோழ வீரர்களின் கையில் இருக்கிறது. தளபதிகளின் திறமையில் இருக்கிறது. எனவே, தளபதிகளின் திறமையெல்லாம் ஆதித்த கரிகாலனின் தலையில் ஏற்றி, அவனே அரசன் என்று வேறு யாரேனும் முடிவு செய்து விடலாம். நீ செய்து விடலாகாது என்பதற்காகத்தான் இந்தச் சபையிலே எழுந்து நின்று பேசுகிறேன்..."

"தாயே... நீங்கள் அவசரப்படுகிறீர்கள்..." கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் எழுந்து நின்று சமாதானப்படுத்தினார்.

"நீங்கள் அவசரப்படுகிறீர்கள் என்று நான் நினைக்கிறேன். ஆதித்த கரிகாலனை இளவரசன் என்று அறிவிக்க வேண்டுமென்று உங்களுக்குள் பேசிக்கொண்டதாக எனக்குச் செய்தி வந்தது. அது உண்மையெனில், உடனடியாக அதைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்ற எண்ணத்தோடுதான் இப்போது நான் பேசுகிறேன்..."

கேரளாந்தகப் பழுவேட்டரையர் தன் ஆசனத்தில் இருந்து எழுந்தார். செம்பியன்மாதேவியை நோக்கி நடந்தார்.

"சோழ தேசத்திற்கு எதிரிகள் அதிகமிருக்கிறார்கள் தாயே. சமீபத்திய வெற்றிகளால் நாம் எதுவும் அடைந்து விடவில்லை. மாறாய், அதிகம் எதிரிகளைச் சம்பாதித்துக் கொண்டிருக் கிறோம். எந்த நேரமும், எந்த இடத்திலும் தாக்கப்படலாம் என்கிற பதட்டமான நிலைதான் இப்போது இருக்கிறது. சோழ தேசத்தின் வளர்ச்சிக்குத் தளபதிகள் மட்டும் இருந்தால் போதாது. மிகமிகத் திறமையான ஒரு அரசர் தேவை."

பழுவேட்டரையர் தொடர்ந்தார்.

"ஒரு தேசம் தளபதிகளால் நடத்தப்படுவதில்லை. தளபதி கள் செயலாற்றுகிறார்கள். என்ன செய்ய வேண்டும். எப்பொழுது செய்யவேண்டும். எப்படிச் செய்ய வேண்டும் என்பதை ஓர் அரசர் தீர்மானிக்க வேண்டும். அந்த அரசர் தன் தீர்மானத்திற்கு முன்பு அவையின ரோடு கலந்து பேசுவது

வழக்கம். ஆனாலும் முழு முதற் பொறுப்பும் அரசருக்கே சேருகின்றன. எனவே, சோழ சிம்மாசனத்தை அலங்கரிக்கப் போகிறவர், அறிவுள்ளவராகவும், ஆற்றலுள்ளவராகவும், அதிர்ஷ்டம் உள்ளவராகவும் இருக்க வேண்டும்."

"என் மகனுக்கு இவை எதுவும் இல்லை என்று நினைக்கிறீர்களா விழுப்பரையரே... அவன் போருக்குப் போகாததை வைத்து ஆட்சிக்கு லாயக்கு இல்லாதவன் என்று முடிவு கட்டிவிட்டீர்களா..."

"தாயே, நான் மதுராந்தகனைப் பற்றி நெல் முனையளவும் இழிவாக நினைக்கவில்லை. நீங்களாகப் பேசி, நான் எதுவோ பேசி, நான் ஏதோ சொன்னதாக சபைக்கு நடுவே கற்பிதம் செய்து விடவேண்டாம். யார் ஆட்சிக்குத் தகுதியானவர் என்று ஒரு பேச்சு வருமல்லவா. மக்களால் எடை போடப்படுவார்கள் அல்லவா..."

"எடை போடுவது மக்களா. அல்லது தளபதிகளாகிய நீங்களா..."

"அம்மா. நாங்கள் ஏவல் தொழில் செய்பவர்கள்..."

"இல்லை. சோழ தேசத்தின் தலையெழுத்தை நீங்கள்தான் மாற்றி அமைக்கிறீர்கள் என்று எனக்கு நன்றாகத் தெரியும். இங்கு உட்கார்ந்திருக்கிற பிரம்மராயரும், ஆறு பெருத்த அதிகாரிகளும் சோழ தேசத்தின் தலையெழுத்தை எழுதிக் கொண்டிருக் கிறீர்கள். சுந்தர சோழர் உட்காரவும், நிற்கவும், நகரவும் நீங்கள்தான் கட்டளையிடுகிறீர்கள். இதுவும் எனக்குத் தெரியும்.."

குந்தவை திரும்பி அருண்மொழியைப் பார்த்தாள். அருண் மொழி குந்தவையை என்ன என்று விசாரித்தார்.

"பெரிய பாட்டி பேச்சை முட்டாள்தனம் என்று நாம் ஒதுக்கி விடலாகாது. சில உண்மைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. உற்றுக் கவனி..."

"இதில் எவை உண்மைகள்" என்று இளைஞனான இராஜ ராஜர் குந்தவையைக் கேட்க, "நாம் அதுபற்றி பிற்பாடு பேசுவோம். சகலமும் ஞாபகம் வைத்துக் கொள்..." என்று காதோரம் கிசுகிசுத்தாள்.

"இது என்ன அபாண்டப்பழி. நான் என்ன தலையெழுத்து எழுதுகிற பிரம்மனா. நான் இங்கே ஒரு சாதாரண சேனாதிபதி. எனக்குச் சில சேவகர்கள். ஒரு ஒற்றர்படை. இவ்வளவுதான்

வைத்திருக்கிறேன். சோழ தேசத்தின் நலன் தவிர வேறு எதுவும், எந்த நாளும் நான் சிந்தித்ததேயில்லை என்பதை நீங்கள் தயவு செய்து உணர வேண்டும்."

"சோழ தேசத்தின் நலன் என்பது உங்கள் கைகளில்தானே இருக்கிறது பிரம்மராயரே..."

"ஏனம்மா திரும்பத் திரும்ப அடாது பேசுகிறீர்கள். நான் உங்களுக்கு என்ன தீமை செய்தேன். மதுராந்தகர் அரசராக வரக் கூடாது என்று நான் ஒரு நாளும் நினைத்ததில்லை. இதை முடிவு செய்ய வேண்டியவர் ஒருவரே. அவர் அரசர். மாமன்னர் சுந்தர சோழர். அவர் தீர்மானித்து, இவர்தான் அடுத்தபடி இளவரசர் என்று சொன்னால், பணிந்து ஏற்க நாங்கள் தயாராக இருக்கிறோம்."

"இது சபைக்காகப் பேசுகிற பேச்சு. உண்மையில் உங்கள் மனதிலே வேறொரு எண்ணம் இருக்கிறது என்பதை நான் அறிவேன். என்ன எண்ணம் என்பதைத் தயவுசெய்து நீங்கள் சொல்லி விடுங்கள். சபை அதையும் கேட்கட்டும். உங்களுக்கெல் லாம் ஆதித்த கரிகாலன் இளவரசராக வந்து, பிறகு மன்னராகப் பட்டமும் ஏற்றால் மிகுந்த சௌகரியம்..."

"என்ன சௌகரியம் அம்மா வந்துவிடப் போகிறது..." விழுப்பரையர் கோபமாகக் கேட்டார்.

"போர்.. போர் என்று போர் வெறிகொண்டு அந்த இளைஞன் அலைந்து கொண்டிருக்கிறான். அவனை முன்னிறுத்தி நீங்கள் போரில் ஈடுபடுவீர்கள். சுற்றியுள்ள எல்லா தேசங்களுக்கும் போய் போர் செய்வீர்கள். வீரர்கள் அனுப்பி நாசமாக்குவீர்கள். எரியூட்டுவீர்கள். கொள்ளையடிப்பீர்கள். கொள்ளை அடித்த பணத்தில் கணிசமாய் நீங்கள் உங்கள் சொத்தாக ஒதுக்கிக் கொள்வீர்கள்.

உங்கள் படை வீரர்களுக்கென்று நீங்கள் தனியாகக் கூலி தருவீர்கள். கனமான ஆட்களை உங்களைச் சுற்றி உட்கார வைத்துக் கொள்வீர்கள். ஒரு பெரும்படையோடும், அதிகாரத் தோடும், மன்னருக்கே சவால் விடுகின்ற ஒரு அமைச்சராக நீங்கள் மாறிவிடுவீர்கள். உங்களைப் பலப்படுத்திக் கொள்ளத் தான் இளவரசனான, முரடனான, வேகமிகுந்த இளைஞனான ஆதித்த கரிகாலனைத் தூண்டிவிட்டுப் போகிறீர்கள்.

சோழ தேசம் கடந்த இருபத்தைந்து வருடங்களாக இடைவிடாத யுத்தம்தான் பார்த்துக் கொண்டிருக்கிறது. இந்த நிலை மாற வேண்டுமென்று கண்டராதித்தர் விரும்பினார். நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே அவரைத் துரத்தியனுப்பி விட்டு அருஞ்செழியரை நீங்கள் அரசராக்கினீர்கள்...”

“அம்மா. யார் கண்டராதித்தரைத் துரத்தியது. மீண்டும் மீண்டும் அபாண்டம் பேசுகிறீர்கள்...”

“கண்டராதித்தர் தன் பதவியை விட்டுவிட்டு மேற்கு நோக்கி நடக்க வேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது. அவர் மனம் வெறுத்துப் போகும்படி நீங்கள் போரில் ஈடுபட்டீர்கள் என்பதும்தான் உண்மை...”

“அம்மா, நாங்கள் வேறு விதமாகக் கேட்கிறோம். நீங்கள் இவ்வளவு பேசுவதால் நாங்களும் பேச வேண்டியதாகி விட்டது...”

“என்ன பேசுவீர்கள்...” செம்பியன்மாதேவி உரத்த குரலில் கேட்டாள். சபை அதிர்ச்சியில் ஆழ்ந்திருந்தது.

“உங்கள் மீது வெறுப்பு கொண்டு, உங்கள் மீது ஆத்திரம் கொண்டு, உங்களை அடக்கமுடியாமல் கண்டராதித்தர் மேற்கு நோக்கிப் போய்விட்டார். துறவியாகப் போய்விட்டார். ‘இந்த தேசத்திற்கும் எனக்கும் எந்த சம்பந்தமுமில்லை. இந்த வாழ்க்கை எனக்குத் தேவையில்லை’ என்று உதறிவிட்டுப் போய்விட்டார். அவர் போனதற்கு நீங்கள்தான் காரணம்.” பிரம்மராயர் எழுந்து நின்று கோபத்தோடு கர்ஜிக்க, சபை சலசலத்தது.

தமக்கை குந்தவையின் உடம்பு நடுங்குவதை அருண்மொழி உணர்ந்தார்.

மெல்ல குந்தவையின் கை மீது கை வைத்தார். “ஏனக்கா பதறுகிறீர்கள்...”

“கடவுளே, கடவுளே... அருண்மொழி, வாழ்க்கையின் மிக முக்கியமான கட்டத்தில் நீ இருக்கிறாய். சோழ தேசத்தின் சரித்திரம் இங்கு மறுபடியும் திசை மாறிக் கொண்டிருக்கிறது. நீயா, மதுராந்தகனா என இப்போது முடிவு செய்யும் நேரம் ஏற்பட்டுவிட்டது.”

“ஏனக்கா... எதற்கு என் பெயரைச் சொல்லுகிறீர்கள்... மதுராந்தகரா, ஆதித்த கரிகாலரா என்பதுதானே...”

"இல்லை. ஆதித்த கரிகாலன் இல்லையென்று குடந்தை ஜோசியர் சொல்லியிருக்கிறார்..."

"ஏனக்கா திடீரென்று நீங்கள் ஏதோ ஒரு கல்லைத் தூக்கிப் போடுகிறீர்கள்..."

"ஆமாம். இன்று மாலை நான் உன்னை குடந்தை ஜோசியரிடம் அழைத்துப் போகிறேன்..."

"அக்கா, ஜோசியரை நம்பியா அரசியல் செய்கிறீர்கள்..."

"ஜோசியமும் அரசியல் செய்யத் துணை புரியும். அவ்விதமாகவும் யோசித்துப் பார்ப்பதில் தவறு ஏதும் வந்து விடாது. ஆதித்த கரிகாலனுக்குப் பிறகு நீதான்..."

"ஆதித்த கரிகாலனுக்குப் பிறகு என்றால் எப்படி. அவர் இளையவர்தானே இளைஞர்தானே..."

"இல்லை. ஆதித்த கரிகாலன் ஆயுசு பற்றி குடந்தை ஜோசியர் அச்சத்துடன் பேசியிருக்கிறார்..."

"அக்கா... தயவுசெய்து இப்படிப் பேசாதீர்கள். அண்ணாவுக்கு ஒரு தீங்கெனில் என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது..."

"அருண்மொழி, நீ பொறுத்துக் கொள்ள வேண்டிய பல கொடுமைகள் இன்னும் வர இருக்கின்றன. எனவே, அமைதியாக இருக்கப் பழகிக் கொள்." பேசிய தமக்கை குந்தவையை அருண் மொழி வியப்போடு பார்த்தார்.

## 50

"அருண்மொழி... உடைவாளின் மீது அடிக்கடி கை வைப்பவன் முட்டாள். இந்தச் சபைக்கு வரும்போது உடைவாள் இல்லாமல் வருவதற்கே நீ கற்றுக்கொள்ள வேண்டும்." குந்தவையின் பேச்சு திடமாய் இருந்தது.

"ஏனக்கா..."

"இங்கே வாக்கு சாதுர்யமும், தந்திரமும், அறிவும், சூட்சமும்தான் சோழ தேசத்தை ஆட்சி செய்கின்றன. உடை வாளுக்கு ஒரு மரியாதையும் இல்லை. ஒற்றர்கள், ஒற்றர்கள், ஒற்றர்கள் என்று இரவு முழுவதும் சோழ தேசத்தில் ஒற்றர்கள்

அலைகிறார்கள். யார் எங்கு போகிறார்கள். என்ன பேசுகிறார் கள் என்ற செய்தி பரிமாறிக் கொண்டேயிருக்கப்படுகிறது. எவரையும் நம்ப முடியவில்லை."

"அரசியலில் இது சகஜம்தானே அக்கா..."

"ஆனால், இது அளவுக்கு அதிகமாகிப் போய்விட்டது தம்பி..."

பிரம்மராயரின் உரத்த குரல் குற்றச்சாட்டிற்குப் பிறகு செம்பியன்மாதேவி அமைதியாக இருந்தார்.

"ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து பிரம்மராயரே... கடைசியில் என் தலையிலேயே நீங்கள் கை வைத்து விட்டீர்களா... கண்டராதித்தர் நாடுவிட்டுக் காடு போனதற்குக் காரணம் நான்தான் என்று நீங்கள் சபையில் பேசிவிட்டீர்கள் அல்லவா. சரி; இதைக் கேட்கிறேன். இதை நான் ஏற்பதற்கும், மதுராந்தகருக்கு இளவரசர் பட்டம் கட்டுவதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. என் கேள்விக்குப் பதிலளிக்கப்படவில்லை. சுந்தரசோழருக்குப் பிறகு இளவரசர் பட்டம் கட்டி பட்டத்திற்கு வரவேண்டிய நபர் யார். மதுராந்தகனா, ஆதித்த கரிகாலனா..."

"ஆதித்த கரிகாலன்தான் என்று சொல்லிவிட்டால் என்ன செய்வீர்கள்..." என்று விழுப்பரையர் கேட்க...

"இந்த சபையிலிருந்து வெளியேறுவேன். பிறகு சோழ தேசத்திலிருந்தும் வெளியேறுவேன்..."

"என்ன... என்ன பேசுகிறீர்கள் நீங்கள்..."

"நீ என்ன பேசுகிறாய் என்று புரிந்து கொண்டிருக்கிறாயா விழுப்பரையா. இந்த வம்சம் எப்படி வளரவேண்டும் என்று நீ தீர்மானிக்கும்படியான ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிட்டதே. ஆதித்த கரிகாலன்தான் அரசன் என்று தீர்மானித்து விட்டால் சோழதேசம் துவம்சப்படும். அமைதி கெடும். சோழ தேசம் விட்டுப் போவேன் என்றவுடன் பதறினீர்களே... நான் எங்கு போவேன் என்று சொன்னால் என்ன செய்வீர்கள்..."

"அதையும் சொல்லித் தொலைத்து விடுங்கள்..." பிரம்மராயர் எழுந்து நின்று கேட்டார்.

"பாண்டிய தேசம் போவேன்..."

சகலரும் தலையிலடித்துக் கொண்டார்கள். கண் மூடிக் கொண்டார்கள். உடம்பு முறுக்கினார்கள். பெருமூச்சுவிட்டார் கள். பல் கடித்தார்கள். தொடையிலடித்துக் கொண்டார்கள்.

"உங்களுக்கென்ன பைத்தியமா பிடித்து விட்டது. ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்..."

"மதுராந்தகனுக்கு இளவரசர் பட்டம் கட்ட வேண்டும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன் என்பதை உங்களுக்கு வேறு எந்த வழியிலும் தெரிவிக்க என்னால் இயலவில்லை. எனவே, அதை இவ்விதமாகத் தெரிவிக்கவே நான் முயன்றேன். நான் இன்னும் எந்த இடத்திற்கும் போய்விடவில்லை. போக நீங்கள் நிர்ப்பந்திக்காத பட்சத்தில் நான் இங்கேயே இருந்து இந்தச் சோழ வளநாட்டை மேம்படுத்துவேன் என்று இந்தச் சபையிலே உறுதி கூறுகிறேன்." சொல்லிவிட்டு, செம்பியன் மாதேவி லேசாகச் சிரித்தார்.

சபை அவரை வெறுப்போடு பார்த்தது.

அரசபை அரியாசனத்தில் அமர்ந்து சகலரும் பேசுவதைக் கவனித்துக் கொண்டிருந்த சுந்தரசோழர் மெல்ல கண்களை மூடிக் கொண்டார். சற்று இடப்பாகம் சரிந்து உட்கார்ந்து கொண்டார். சேடிப்பெண்கள் அருகே ஓடி வந்தார்கள்.

வயது முதிர்ந்த ஒரு தாதி மன்னருக்கு அருகே வ்ந்து, 'என்ன செய்கிறது' என்று கேட்க, மன்னர் மயக்கம் வருவதாகக் கூறினார்.

அந்த வயது முதிர்ந்த தாதி திரும்பி பிரம்மராயரைப் பார்த்து, அரசருக்கு உடல்நிலை சரியில்லை என்பதை சைகையில் சொல்ல, அரசரை அழைத்துப் போகுமாறு பிரம்மராயர் அதே விதமாய் சைகையில் கட்டளையிட்டார். திரும்பி கேரளாந்தக விழுப்பரையரைப் பார்த்தார். விழுப்பரை யரும் அவருடைய கட்டளையை ஆமோதித்தார்.

இதையும் கூர்மையாகப் பார்த்த செம்பியன் மாதேவி கண்களை மூடி பல் கடித்தார்.

இவையனைத்தையும் அருண்மொழியும், குந்தவையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"கடவுளே, பாட்டிக்கு ஏன் இவ்வளவு கோபம் வருகிறது. அதுவும் பிரம்மராயரைக் கண்டால் அவரால் சகித்துக் கொள்ளவே முடியவில்லையே... ஏன்..."

“பாட்டிக்கு ஆட்சி செய்யும் ஆசை வந்துவிட்டது. தனக்குக் கீழே புவனம் முழுவதும் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார். வேறு எவரும் தன்னை எதிர்த்துப் பேசிவிடக் கூடாது என்பதில் விருப்பமாக இருக்கிறார். பேசினால் தண்டனை தரவேண்டுமென்று ஆத்திரப்படுகிறார்... பாட்டிதான் பேசுகிறாரா... அல்லது பாட்டிக்குப் பின்னால் வேறு யாரேனும் நின்று பாட்டியைப் பேச வைக்கிறார்களா என்று எனக்குத் தெரியவில்லை...”

“அக்கா... அப்படியும் இருக்குமா. பாட்டியைப் பேச வைக்கிறவர்கள் யாராக இருக்கும்...”

“அருண்மொழி, வெறும் கேள்விகளை மட்டுமே கேட்பது உன்னுடைய தொழில் என்று தயவுசெய்து எண்ணிக் கொள்ளாதே. எல்லாக் கேள்விகளுக்கும் பதில் என்னிடம் இருக்கிறது என்னும் நீ நினைத்துக் கொள்ள வேண்டாம்...”

“நான் கேள்வி கேட்டேன். அதற்கு அர்த்தம் எனக்குப் பதில் தெரியும் என்று அல்ல. அது என்ன என்று கண்டுபிடிக்க வேண்டும் என்பதற்காகக் கேட்டேன்...”

“பேசுகிறபொழுது எந்த அவசரமும் இல்லாமல் என்ன பேசுகிறோம் என்று தெரிந்து கொண்டு பேசு.” சுள்ளென்று குந்தவை சொல்ல, அருண்மொழி முகம் சுருங்கிப் போயிற்று...

“அருண்மொழி.. தயவுசெய்து...” என்று குந்தவை அருண் மொழியின் தோளில் கை வைக்க, “எனக்குப் புரிகிறது அக்கா. நீ அருமையாக சொல்லிக் கொடுத்தாய் இனிமேல் அவசிய மில்லாமல் ஒரு வார்த்தை கூட நான் பேச மாட்டேன். தயவு செய்து நீ மன்னிப்புக் கேட்க வேண்டாம். உன்னிடமிருந்து நான் பல விஷயங்கள் கற்றுக் கொள்கிறேன் அக்கா.

உன்னைப்போல் பொறுமையாகவும், அழகாகவும், திறமை யாகவும் சொல்லிக் கொடுக்க வேறு எவரும் எனக்கில்லை. இவையெல்லாம் நான் அப்பாவிடம் கற்றுக்கொள்ள வேண்டும். ஆனால் அப்பாவை நெருங்கக்கூட முடியவில்லை. எந்நேரமும் மருத்துவர்களும் தாதிகளும் சூழ்ந்து கொண்டிருக்கும்போது, நான் என்னவென்று தொந்தரவு செய்வது. எப்படிப்போய் கேட்பது. உன்னருகே உட்கார்ந்து உன்னை இம்சைப் படுத்திக் கொண்டிருக்கிறேன்.”

"அடடா... இதைவிட சந்தோஷமான இம்சை ஏதேனும் உண்டா அருண்மொழி. உனக்குச் சொல்லிக் கொடுக்கிற பொழுது எனக்கும் பரவசம் ஏற்படுகிறது. ஆனால் கற்றுக் கொடுக்கும்போது, சில சமயம் கண்டிப்புகள் முக்கியம் என்பதையும் புரிந்து கொள். நான் கோபப்பட்டு உன்னிடம் பேசவில்லை. கண்டிப்பாகப் பேசுகிறேன். கட்டாயம் நீ கற்க வேண்டும் என்கிற விஷயத்தை இப்படிக் கோபமாக வெளிப்படுத்துகிறேன்..."

"புரிகிறது அக்கா. நீ என்னிடம் கோபமாகப் பேசலாம்..."

"அதற்கில்லை அருண்மொழி. எதிர்கால சோழ மன்னனிடம் நான் கோபமாகப் பேசுகிறேனே என்கிற கவலையும் வருகிறது..."

"அக்கா, நான் இன்னும் இளவரசன் கூட இல்லை. எனக்கெதற்கு நீ தேவையில்லாமல் அரசுப் பட்டம் கட்டி ஒரு மரியாதையும் தருகிறாய்."

"ஹ.. இளவரசுப் பட்டம் உன்னைத் தேடி வரும். அரசுப் பதவியும் உன் காலடியில் நின்று கதறும். எடுத்துக்கொள், எடுத்துக் கொள் என்று மொத்த சோழ தேசமும் கதறிய பிறகு அதைத் தூக்கி உன் தோளில் வைத்துக் கொண்டு உலகம் முழுவதும் பவனி வரப்போகிறாய்..."

"என்ன அக்கா... மறுபடியும் ஜோஸ்யமா. ஜோஸ்யம பார்க்க வேண்டியதுதான். ஆனால் இவ்வளவு திடமான நம்பிக்கைதான் அதில் வைப்பது நல்லதல்லவே..."

"ஏன் வைக்கக்கூடாது அருண்மொழி. என்ன நடக்கு மென்று சொல்லியிருக்கிறார்கள். அதன்படி நடந்திருக்கிறது. சொன்னபடி நடந்திருப்பதால் சொல்வதும் நடக்கும் என்று தோன்றுகிறது..."

"வேறு என்னக்கா சொல்லியிருக்கிறார்கள்..."

"செயற்கரிய செயலை நீ செய்வாய். உன்னுடைய புகழ் சந்திர, சூரியர்கள் இருக்கும் வரை நிற்கும். இப்படி ஒரு ஜாதகம் ஆயிரம் வருடமாய் வந்ததே இல்லை. இது புதுமையாய் விஷ்ணுவின் ஜாதகம்போல இருக்கிறது. உன்னுடைய அம்சங்களில் சில ரேகைகள் இருக்கும். சில மச்சங்கள் இருக்கும். அவையெல்லாம் திருமாலின் அம்சத்தை நிரூபிப்பவை. எனவே,

உன்னைக் கடவுளாக மக்கள் தொழுவதும், நீ அவர்களைக் காப்பதும் நிச்சயம் நடக்கும்..."

"ஏனக்கா, என்னைப் பற்றி மட்டுமேதான் ஜோஸ்யம் கேட்டுக் கொண்டு வருகிறாயா. உன்னைப் பற்றி எதுவும் கேட்க வில்லையா. உனக்கு எப்பொழுது திருமணமாகும். திருமணத்திற் குண்டான பருவத்தைத் தாண்டி ஆறேழு வருடங்களாயிற்று. நீ இன்னும் அசையாமல் அப்படியே கன்னியாக உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்..."

"அருண்மொழி... இதென்ன அதிகப்பிரசங்கித் தனமான பேச்சு. யார் இப்படி உனக்குப் பேசக் கற்றுக் கொடுத்தது..."

"பிரம்மராயர் வீட்டிற்குப் போயிருந்தேன். பிரம்மராயர் வீட்டில் அவர் துணைவியார் இப்படிப் பேசினார். அந்தப் பேச்சு வழக்கு நன்றாக இருந்தது. அதையே நான் உன்னிடமும் பிரயோகித்தேன்..."

"அந்தணர்கள் எப்போதும் அலுப்பாகத்தான் பேசுவார் கள். நாம் அப்படிப் பேசலாகாது. எனக்குத் திருமணம் முக்கியமில்லை. சோழதேசத்தின் நலன் முக்கியம். சோழ தேசத்தின் நலனைக் காக்க எவர் முன் வருகிறாரோ அவரைத்தான் நான் திருமணம் செய்துகொள்ள முடியுமே தவிர, ஏதோ ஒரு தேசத்தின் இளவரசனைத் திருமணம் செய்து கொண்டு, ஏதோ ஒரு தேசத்தில் எந்தப் பிடிப்புமில்லாமல் குடித்தனம் பண்ண என்னால் ஆகாது. அப்படிக் குடித்தனம் செய்பவர்களால் குழப்பங்கள்தான் ஏற்படும்..."

"செம்பியன்மாதேவி அப்படிப்பட்டவர் என்கிறாயா..."

"இல்லை. மதுராந்தகருக்கு ஒரு மனைவி வந்து வாய்த்திருக் கிறார் பார். வெறும் அந்தப்புரப் பதுமையாகவே இருக்கிறார். இந்த தேசம் பற்றியும், இங்குள்ள மக்கள் பற்றியும், கலாசாரம் பற்றியும் அவருக்கு எந்தக் கவலையும் இல்லை. அப்படி வாழ என்னால் முடியாது..."

"சரி. எனக்குப் புரிகிறது. ஆனால் எப்பொழுது வாழப் போகிறாய். எவரோடு வாழப்போகிறாய் என்று ஜோஸ்யரிடம் கேட்டுக் கொண்டு வரக்கூடாதா..."

"கேட்கவில்லை தம்பி. உண்மையாகவே கேட்கவில்லை. ஆனால் அவராகவே ஒரு விஷயம் சொன்னார்..."

"அப்படியா... என்ன அது..."

மெல்லியதாய் ஒரு வெட்கம் குந்தவையின் முகத்தில் படர்ந்து அடங்கியது. அக்காவின் வெட்கத்தை அருண்மொழி வியப்போடு பார்த்தார்.

"உனக்குப் புருஷன் வந்து கொண்டேயிருக்கிறான். குரு பலன் வந்துவிட்டது. இன்னும் மூன்று மாதங்களில் நிச்சயம் திருமணம் ஆகும். உனக்குப் பிடித்தவரே வருவார்' என்று அவராகவே சொன்னார்..."

"இது சொல்லி எத்தனை நாளாயிற்று..."

"ம்ம்... மூன்று மாதங்கள் முடிந்துவிட்டன..."

"ஆஹா... ஆஹா... அப்படியானால் மிகச் சமீபமாய் எங்கேயோ என் அக்காவின் புருஷன் இருக்கிறார். அவரை நான் பார்க்க வேண்டுமே..." என்று அருண்மொழி நாடகமாய்ப் பரபரக்க, குந்தவை வாய்விட்டுச் சிரித்தாள். அவளுக்குள் ஒரு குதூகலம் எகிறிற்று.

"அருண்மொழி... நான் திருமணம் செய்து கொண்டு என் புருஷனோடு வெளியூர் போய்விட்டால் நீ என்ன செய்வாய்..."

"அக்கா, சிறிது நாள் ஏங்குவேன். வருத்தப்படுவேன். ஆனால் எப்படியாவது சமாளித்துக் கொள்வேன். நீ சுகமாக இருப்பதற்கே போயிருக்கிறாய் என்று தெரிய, மிகுந்த ஆனந்தத்தோடு நீ இல்லாத தனிமையை அனுபவிப்பேன். நீ எப்படி இருக்கிறாய் என்று ஒற்றர்களையோ, தூதுவர்களையோ அனுப்பி விசாரித்துக் கொண்டிருப்பேன். நாள் கிழமைகளில் உன்னை வந்து பார்த்து, நமஸ்கரித்து உன்னுடைய உறவைப் பலப்படுத்திக் கொள்வேன்..'' என்ற அருண்மொழி தொடர்ந்தான்.

"அக்கா, அப்பாவிற்கு என்ன ஆயிற்று என்று பார்க்க வேண்டாமா... மயக்கம் வருகிறது என்று போயிருக்கிறாரே..."

"அரசருக்கு அந்தப் பேச்சு பிடிக்கவில்லை. செம்பியன் மாதேவி பேச்சை நிறுத்த வேறு வழி தெரியவில்லை. சபை கலையட்டும் என்று நடுவே சொல்வதற்குப் பதில், மயக்கம் வந்து விட்டது என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். உண்மையில் அவருக்கு மயக்கம் ஏதும் இல்லை. அரண்மனையில் அந்தப்புரத்து உப்பரிகையில் தனியே உட்கார்ந்து, வானத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பார்..."

"அப்பா வேகமான முடிவு ஏன் எடுக்கமாட்டேன் என்கிறார்..."

"ஒரு விஷயம் புரிந்துகொள். உண்மையில் ஆதித்த கரிகாலனுக்குச் சோழ சாம்ராஜ்யத்தில் எந்த உரிமையும் இல்லை. அப்படி உரிமை வேண்டுமென்று கேட்டால், சோழ சாம்ராஜ்யத்தை வடக்கு - தெற்காகப் பிரித்து, அல்லது கிழக்கு மேற்காகப் பிரித்து பாதிப்பதியாய் கொடுத்து அரசாள வேண்டியிருக்கும். இதைவிடக் கேவலம் வேறெதுவும் இல்லை. எப்பொழுது இப்படிக் கோடு போட்டுப் பிரிக்கப்பட்டதோ அப்பொழுது மக்கள் பிரிந்து போவார்கள். மக்கள் பிரிந்து போனால் வர்லாறு காணாத வகையில் பெரிய சண்டை மூளும். பரஸ்பரம் அடித்துக் கொள்வார்கள். ஒரு கோடு தாண்டி இவன் வந்துவிட்டான் என்றும், அவன் வநதுவிட்டான் என்றும் ரணகளம் ஏற்படும். சோழ மண்ணிலேயே சோழ மக்களே ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளும் கேவலம் ஏற்படும்.

தமிழ் பேசுகின்ற இனமான சேரர்களும் பாண்டியர்களும் பிரிந்திருப்பது போதாதா. நாம் வேறு பிரிந்திருக்க வேண்டுமா. எனவேதான் சோழ தேசத்தைப் பிரிக்கக்கூடாது என்பதில் சுந்தரசோழர் மிக மிக கவனமாக இருக்கிறார். அதேசமயம் மது ராந்தகனுக்குப் பட்டம் கொடுக்க வேண்டிய அவசியத்தையும் உணர்ந்திருக்கிறார்.

மதுராந்தகனுக்குப் பட்டம் கொடுக்காவிட்டால், மக்களிடையே செய்தி பரவி சுந்தரசோழர் செய்த அநியாயம் என்று தனியே ஒரு கதையும் கட்டுவார்கள். வரலாற்றில் அழிக்க முடியாத ஒரு அவமானமாக இது போய்விடும் என்றும் சுந்தர சோழர் அஞ்சுகிறார்."

"மதுராந்தகருக்குப் பட்டம் கொடுத்துவிட்டுப் போகட்டுமே... நானும், அண்ணாவும் எல்லைப் புறத்தில் வீடுகளில் அமர்ந்து கொண்டு வீரர்களோடு சந்தோஷமாக இருக்கலாமே..."

"இல்லை. எந்த வீரனாலும் எல்லைப் புறத்தில் மட்டும் சந்தோஷமாக இருந்துவிட முடியாது. தான் உயிர் கொடுத்துக் காப்பாற்றுகின்ற எல்லையை எவனோ சம்பந்தமில்லாமல் ஒருவன் ஆட்சி செய்கிறான் என்று நினைப்பு வந்துவிட்டால் உன்னால் அங்கு உட்கார முடியாது...

அங்கு உட்கார்ந்திருக்கிற நீ வீரம் செறிந்த உன்னுடைய போர்களினால் மக்களின் மனதைப் பிரித்துவிட்டு, ஊர்வலமாக தலைநகர் நோக்கி வந்தால் மக்கள் ஆரவாரிப்பார்கள். குதூகலிப்பார்கள். மாலை போடுவார்கள். கொண்டாடுவார் கள். அதை இங்கே உட்கார்ந்து ஆட்சி செய்பவர்களால் பொறுத்துக் கொள்ள முடியாது...”

“எனவே, இந்தப் பிரச்சினை தீர்வதற்கு வேறு என்ன வழி...” - அருண்மொழி குறுக்கே புகுந்து வேகமாகக் கேட்டார்.

“இதற்கொரு தீர்வு உண்டு...”

“சொல்லுங்கள் அக்கா...”

“சோழ தேசத்தை மதுராந்தகனுக்குக் கொடுத்து அரசனாக்கிவிட வேண்டியது...”

“ஆஹா... செய்து விடலாம்...”

“பாண்டிய தேசத்தை ஆதித்த கரிகாலனுக்குக் கொடுத்து அங்கே அவனை அரசனாக்கி விடவேண்டியது...”

“ஆஹா... அதுவும் எளிது...”

“நீ சேரதேசத்தை ஆட்சி செய்ய வேண்டும் என்பது என் விருப்பம். நிலமும், நீர் வளமும், கடுமையாய் உழைக்கும் மக்களும் கொண்ட அந்த தேசத்தை நீ பராமரித்தால், மிக உன்னதமான ஒரு நிலைக்குச் சேரதேசம் வந்துவிடும். பரத கண்டத்தில் தென்மேற்கு மூலையிலிருக்கிற அந்த அற்புதமான பிரதேசம் உன்னுடைய ஆட்சியில் சிறந்த முறையில் வளர்ந்து, நல்ல விஷயங்களைக் கற்று, சரித்திரத்தில் அழியா இடம் பெறும்...”

“அக்கா, சேரர்களுக்கு என்று மன்னர் இருப்பாரே. நம்முடைய வலிமையால் நாம் அங்கு போய் அமர்ந்து சேரனாக மாறிவிட வேண்டுமே. எப்படி அக்கா. என்னை சோழ தேசத்தான் என்றுதானே பார்ப்பாய்...”

“இல்லை. ஒரு மக்களை அவர்களோடு கலந்து மாற்றுவது எளிது. வேற்று மொழி பேசுகிறவர்கள் இங்கு வந்து தமிழ் மொழியைத் தெரிந்து கொண்டு, முற்றிலும் தமிழ் மக்களோடு கலந்து பழகி, தமிழ் மக்களின் இதயத்தைப் பிடித்தவர்கள் பல பேர் இருக்கிறார்கள்...”

“யாரக்கா...”

"பிரம்மராயர். அவருடைய இடம் சோழ தேசமல்ல. அவருடைய மூதாதையர்கள் வடக்கே ஜகந்நாதபுரத்திலிருந்து வந்தவர்கள். ஜகந்நாதர் என்கிற மரத்தாலான தெய்வத்தை வழி படுகிறவர்கள். அங்கு வலிமை மிக்க அந்தணர் கூட்டம் ஒன்று இருக்கிறது. அங்கிருந்து வந்த பரம்பரையினர் கிருஷ்ணன் ராமனான பிரம்மராயர் இங்கு வந்து இந்த மக்களோடு கலந்து பேசி, இங்கு சேனாபதியாக அமர்ந்து விடவில்லையா. வீட்டிற்குள் மட்டும் ஜகந்நாத வழிபாடு வைத்துக் கொண்டு வெளியே எல்லாக் கோயில்களுக்கும் போய் வரவில்லையா. சிவனுக்குக் கோயில் எழுப்பவில்லையா. அப்படி நீயும் செய்து விடலாம்... ஏன், பழுவேட்டரையர் தஞ்சையைச் சேர்ந்தவரா. இல்லையே. பழுவூரில் குறுநில மன்னராக இருந்த பழுவேட்டரையர், இங்கு வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும், முற்றிலும் தன் குடும்பத்தை இங்கே கொண்டு வந்து விடவில்லையா...

"அக்கா, இப்படி நடக்குமென்று குடந்தை ஜோஸ்யர் சொன்னாரா..."

"இல்லை. ஜோஸ்யம் இல்லை. இது என் கனவு..."

"ஆனால் எனக்குப் பிடிக்கவில்லையே. இந்த மண்ணை விட்டு, இந்தக் காவிரிக் கரையை விட்டு, இந்த வளமான பூமியை விட்டு, இந்த மக்களைவிட்டு என்னால் எங்கும் போக முடியாது. ஒரு சாதாரண உபசேனாதிபதியாய் பழையாறையில் இருப்பேனே தவிர, மதுராந்தகருக்கு ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்துவிட்டு தஞ்சையில் அவர் ஆட்சி செய்ய, அவருக்குச் சிறிதளவும் என் மீது சந்தேகம் ஏற்படாத வண்ணம் ஒதுக்குப் புறமாய் உடையார் குடியில் வாழ்வேனே தவிர ஒரு நாளும் சேர தேசம் போகமாட்டேன். அங்கு போய் அமர்ந்துவிட மாட்டேன்.

இது என்னுடைய இடம். இது என்னுடைய பூமி. இங்கே அரசராக வேண்டுமென்று அவசியமில்லை. ஆனால் இதற்கு அன்னியனாக வேண்டுமென்று யாரேனும் நினைத்தால் நான் மிகப் பொல்லாதவனாக இருப்பேன். அருண்மொழியை நாடு கடத்த வேண்டுமென்று யாரேனும் திட்டமிட்டால் அவர்களை அழித்துவிட்டுத்தான் வேறு வேலை பார்ப்பேன். என்னையும் என் தமக்கையையும் கூடப் பிரித்து விடலாம். என்னையும் என் தஞ்சை மண்ணையும் எவராலும் பிரிக்க முடியாது" கடும்

குரலில் கோபமாக விழிகள் சிவக்க அருண்மொழி சொல்ல, புன்சிரிப்புடன் குந்தவை அருண்மொழியைப் பார்த்தாள். எழுந்து வந்து அவன் தலையில் கை வைத்தாள்.

"உத்தமனே... வாழ்க நீ. உன்னுடைய வீரம் என்னை நிறைவடையச் செய்கிறது. நிம்மதியைத் தருகிறது. என் தம்பி சாதாரணமானவன் இல்லை என்று ஜோஸ்யர் சொல்வதை நம்பினாலும், கண்ணெதிரே கண் சிவக்க 'என்னையும் என் மண்ணையும் பிரிக்க முடியாது' என்று வீராவேசமாய்ச் சொல்கிற உன்னைப் பார்க்கிறபொழுது, சோழ தேசத்தின் பெருமையெல்லாம் என் கண்முன்னே பவனி வருகின்றன. இப்பொழுது சொல்கிறேன் – உன்னையும், சோழ அரண் மனையையும், சோழ அரியணையையும் எவரும் பிரிக்க முடியாது. அவை உனக்கே..."

தமக்கையும், தம்பியும் பேசிக் கொண்டே அரண் மனைக்குள் நுழைய, பழையாறையின் ஒற்றர் தலைவர் அருகே ஓடி வந்தார். கையில் சிறு ஈட்டி இருந்தது. வணங்கினார்.

"அம்மா, பிரம்மராயர் உடனே சந்திக்க வேண்டுமென்று விரும்புகின்றார். இந்தச் சந்திப்பு அரசியல் சந்திப்பாக இல்லாமல் ஆலயத்தைப் பற்றிப் பேசுகிற சந்திப்பாக இருக்க வேண்டுமென்று கருதுகிறார். எனவே கையோடு ஒரு சிலையையும், சிற்பியையும் கொண்டு வருகிறார். அந்தச் சிலையையும், சிற்பியையும் நீங்கள் பார்வையிட வேண்டும். அருகே அருண்மொழியும் இருக்க வேண்டும்."

"அதைப் பற்றிப் பேசுவதற்கு நாங்கள் காத்திருக்கிறோம் என்று சொல்..."

அரண்மனைக்குள் நுழைந்த குந்தவை, பிரம்மராயருக்கு ஆசனம் போடவும், கீழே பெரிய கம்பளம் விரிக்கவும் ஏற்பாடு செய்தாள். கம்பளத்தின் மீது பெரிய மணைப் பலகையை வைக்கச் சொன்னாள். மணைப்பலகையில் கோலம் போடச் சொன்னாள். அருண்மொழியை எதிரிலுள்ள ஆசனத்தில் அமர வைத்தாள். கை தட்டி சில வீரர்களை அழைத்தாள்.

"யாரும் அருகே நெருங்காத வண்ணமும், எவரும் ஒற்றறியாத வண்ணமும் கவனமாக இருங்கள். சந்தேகமாக இருப்பவர்களை மிக வேகமாக அப்புறப்படுத்துங்கள்..." என்று

கட்டளையிட்டாள். சேடிகள் எவரும் அருகே வரவேண்டாம் என்று கடுமையாக கட்டளையிட்டாள்.

பிரம்மராயர் அரண்மனைக்குள் நுழைந்தார். அவருக்குப் பின்னால் ஒரு சிறிய பல்லக்கில் படுக்க வைக்கப்பட்ட சிலை துணி மூடப்பட்டு எடுத்து வரப்பட்டது. பல்லக்கு இறக்கப்பட்டது. சிலை அள்ளி எடுக்கப்பட்டது. கம்பளத்திற்கு நடுவே உள்ள மனைப்பலகையில் நிற்க வைக்கப்பட்டது.

வெள்ளை வெளேரென்று ஒரு புது மாதிரி கல்லாலான விநாயகர் சிலை அது. இரண்டு முழத்துக்கும் அதிகமான உயரம் இருந்தது. மிகக் களையாக இருந்தது. மிக கம்பீரமாக இருந்தது. இடுப்பைச் சுற்றி ஒரு துணி சுற்றப்பட்டிருந்தது.

பிரம்மராயர் தேரிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்தார். குந்தவைக்கு வணக்கம் சொன்னார். 'அருண் மொழி' என்று கை நீட்டினார். அருண்மொழி அருகே வர, அணைத்துக் கொண்டார்.

"குந்தவை... இந்தச் சிலையைப் பார்த்தாயா. மிக அற்புதமான ஒரு கல்லினால் செய்யப்பட்டிருக்கிறது. வெயில் ஏற ஏற சிலை வெண்மையாகிறது. வெயில் குறையக் குறைய சிலை கருமையடைகிறது. மழைக்காலங்களில் சிலை மிகக் கருப்பாக இருக்கிறது. நிறம் மாறும் சிலையை நீ பார்த்திருக்கிறாயா. பார்க்க வேண்டும் என்பதற்காகக் கொண்டு வந்தேன்..."

"அடடே... யாரது... வெள்ளைத் துணியாலும், கண்ணாடி யாலும் இந்தப் பிம்பத்திற்கு வெளிச்சம் கொடுங்கள்." என்று சொல்ல, பல்லக்கு தூக்கி வந்தவர்கள் அவ்விதம் செய்தார்கள்.

பிள்ளையார் மீது வெளிச்சம் சிதறடிக்கப்பட்டது. பிள்ளையார் இன்னும் வெள்ளையாவதை அவர்கள் தெளிவாக உணர்ந்தார்கள்.

"இப்பொழுது வெளிச்சத்தை நீக்கி விடுவோம். சுற்றி திரைச்சீலை போட்டு இருட்டாக்கி விடுவோம்."

பளிச்சென்று அரண்மனையில் உள்ள திரைச்சீலைகள் இழுக்கப்பட்டன. கதவுகள் சார்த்தப்பட்டன. ஜன்னல்கள் மூடப்பட்டன. எங்கிருந்தெல்லாம் ஒளி வந்ததோ அந்த ஒளியெல்லாம் நிறுத்தப்பட்டு, இரண்டு மூன்று அகல் விளக்குகள் ஏற்றப்பட்டன.

பிள்ளையார் கன்னங்கரேல் என்று காட்சியளித்தார்.

"என்ன ஆச்சரியம்..." அருண்மொழியும், குந்தவையும் வியந்தார்கள்.

"அம்மா, இந்த ஆச்சரியத்தைக் காட்ட மட்டும் நான் இங்கு வரவில்லை. உங்களோடு பேச வேண்டுமென்று வந்திருக்கிறேன்." என்று சொன்ன பிரம்மராயரை அவர்கள் இருவரும் உற்றுக் கவனிக்கத் துவங்கினார்கள்.

## 51

விநாயகரின் உருவம் ஒளி குறைந்ததும் கருப்பாயிற்று. அகல் விளக்கு ஒளியில் சற்று முன் வெள்ளை வெளேரென்றிருந்த விநாயகர் நீலக் கருப்பாய் மாறினார். முன்னிலும் அதிகக் களையாகத் தெரிந்தார். அருண்மொழியும், குந்தவையும் வியப்போடு கல்லைத் தொட்டுத் தொட்டுப பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இது எங்கு கிடைத்தது..." குந்தவை வியந்தாள்.

"இது வேங்கி நாட்டிலிருந்து கொண்டு வந்த கல்... பெரும்பானப் பாடியிலிருந்து சிற்பி ஒருவனை வரவழைத்து இந்தக் கல்லின் தன்மை என்ன என்பதை ஆராய்ந்து, அவனுடைய விருப்பப்படி இதிலே விநாயகர்சிலை வடித்து வைக்கப்பட்டது.

இது ரசவாதக்கல் என்று சொல்லுகிறார்கள். பாதி ஓடுகின்ற நீரிலும், பாதி கடும் வெயிலிலும் நிற்கும் பொழுதும் கல்லுக்கு இம்மாதிரி இரண்டு குணங்கள் ஏற்பட்டு விடுகின்றன என்று சொல்கிறார்கள். எங்கோ ஒரு மலை முகட்டில் அருவிக்கு நடுவே இடையறாது நீரும், பிறகு கடும் வெயிலும் தாக்கப்பட்டு இந்தக் கல் இருந்திருக்க வேண்டும். கிருஷ்ணா நதிக்கரையில் இது கிடைத்தது என்று சொல்கிறார்கள். இந்தக் கல்லை எடுத்து வந்து என்ன செய்வதென்று தெரியாமல் இருக்கும் பொழுது, பெரும்பானப்பாடி சிற்பி ஒருவன் இதை விநாயகர் உருவம் தவிர வேறு செதுக்க வேண்டாம் என்று சொல்லி விட்டான். அவனே பதினைந்து நாட்களுக்குள் செதுக்கியும் கொடுத்தான்.

வெகுநாட்களாய் என் வீட்டுக் கொல்லைப்புறத்திலே நான் வைத்து பூஜை செய்து கொண்டிருந்தேன். யாருக்காவது

பரிசளிக்கலாமா. இல்லை நாமே வைத்துக் கோயில் கட்டலாமா என்று தவித்துக் கொண்டிருந்தேன். இதற்கு இப்போது ஒரு விடிமோட்சம் கிடைத்திருக்கிறது.

இதை உன்னிடம் காட்டுவது போல் இங்கு கொண்டு வந்துவிட்டு, என் ஊரான அமண்குடிக்கு அனுப்பி விடுவேன். அமண்குடியில் இந்த விநாயகரை வைத்துக் கோயில் கட்டலாம் என்று என் மனைவி சொல்கிறாள். இந்த விநாயகரைப் பார்க்க பார்க்க ஒரு ஆச்சரியம் ஏற்படுகிறது." வேகமாகப் பேசினார் பிரம்மராயர்.

"என்ன ஆச்சரியம் பிள்ளையாரே..."

"வெறும் கல்லாக இருந்தது. இப்பொழுது சிலையாகி விட்டது. சிலையாக இருப்பது வெகு விரைவில் தெய்வமாக மாறும். வெறும் மனிதராக இருந்தவர்கள் பிறகு இளவரசர் களாக இருப்பார்கள் பிற்பாடு எல்லோரும் கொண்டாடும் பேரரசராக மாறுவார்கள். இப்பொழுது அருண்மொழி எனப்படும் இளைஞன் இளவரசன் கூட இல்லை. சாதாரண போர்வீரன், அரச குலத்து இளைஞன் அவ்வளவே. ஆனால் பார் புகழும் மன்னனாக மிகப் பெரிய மாளிகையிலே அரச சபையில் கொலு வீற்றிருக்கும் நாள் வரத்தான் போகிறது."

"இதைச் சொல்லவா இந்த விநாயகரை எடுத்துக் கொண்டு வந்தீர்கள்..." அருண்மொழி கேலியோடு பிரம்மராயரை நோக்கிக் கேட்டான்.

"இல்லையே அருண்மொழி, சுந்தரசோழர் பல்வேறு மனவேதனையினாலும், உடல் வேதனையினாலும் தளர்வுற்றுக் கிடக்க, அரசன் இல்லாத இந்த சோழ தேசத்தைக் கபளீகரம் செய்ய பல பேர் முயற்சி செய்து வருகிறார்கள். எப்படியாவது சோழ தேசத்தைக் குருவிக் கூடு போல கலைத்து விட வேண்டும் என்று திட்டமிடுகிறார்கள். மறுபடியும் பாண்டிய சாம்ராஜ்யம் ஏற்படும் என்று கனவு காண்கிறார்கள்.

தொலைதூரத்திலுள்ள சேர மன்னனுக்குச் சோழ தேசத்தைப் பிய்த்துப் போட்டுப் பார்ப்பதில் மிகப்பெரிய ஆர்வம் வந்திருக்கிறது. அவன் தேசத்து அந்தணர்களை இங்கே அனுப்பி, என்ன ஆட்டமெல்லாம் ஆடமுடியுமோ அத்தனையும் ஆடுமாறு சொல்லியனுப்பியிருக்கிறான். மிகப்பெரிய பொருள் கொடுத்தனுப்பியிருக்கிறான். நமது அரச சபையில் செம்பியன்

மாதேவியார் அப்படிப் பேசுவதற்கு அந்த சேரப்படை வீரர்கள்தான் காரணம்..."

"எங்கிருக்கிறார்கள் அந்தப் படை வீரர்கள்..." அருண்மொழி மிகுந்த கோபத்தோடு தொடை தட்டி எழுந்தான். குந்தவை அவன் விரல் பிடித்து உட்கார வைத்தாள்.

"அருண்மொழி இதுதான் கடைசி முறை. நான் உனக்கு எச்சரிப்பது. இனி மேல் எச்சரிக்க மாட்டேன். ஆதித்த கரிகாலன் என்ன தவறு செய்கிறானோ அதே தவறை நீயும் செய்கிறாய். அவனை விடவும் சில சமயம் படபடப்பாகவும் போய் விடுகிறாய். அரசனாகப் போகும் உனக்கு இத்தனை ஆத்திரம் கூடாது. கோபத்தைச் சரியான வழியில் செலுத்த முடியாதவன் ஆட்சி செய்ய முடியாது.

நீ செய்வதில் சிறிய ஒரு நாடகத்தன்மை இருக்கிறது. நானும் பிரம்மராயரும் உன்னைப் பாராட்ட வேண்டு மென்பதற்காக நீ துள்ளிக் குதித்து எழுந்திருக்கிறாயோ என்று தோன்றுகிறது. தயவுசெய்து இந்த நாடகத்தன்மையை நிறுத்து. ஆதித்த கரிகாலன் அதிகமாகப் பேசிப் பேசி அதிகமாக ஆர்ப்பரித்து, அதிகமாகக் கொக்கரித்து, அதிகமாக வாள் உருவி, தன்னை அதிகமாக நினைத்துக் கொண்டு அலைய ஆரம்பித்துவிட்டான். இது அவனுக்கு நல்லதில்லை என்று நான் பலமுறை, எச்சரித்தும் அவன் கேட்கவில்லை.

தம்பி, செய்தியை முழுவதும் கேள். பிறகு என்ன செய்வது என்பதைத் தீர்மானம் செய். அந்தத் தீர்மானம் முடிவானதும், முழுமையானதுமாய் இருக்கட்டும். மறந்துபோயும் மற்றவருக் காக எந்தக் காரணம் கொண்டும் எந்த நேரமும் நாடக மாடாதே..." குந்தவை கூர்மையாகப் பேசினாள்.

"அக்கா... நான் பேசுவதில் உண்மையில்லை என்று கருதுகிறாயா..."

"இருக்கிறது. உண்மையைவிட உன்னுடைய பேச்சு அதிகமாக இருக்கிறது. எவ்வளவு உண்மை. எவ்வளவு வேகம் இருக்கிறதோ அதைவிட அதிகமாக வெளிக்காட்ட முயற்சி செய்கிறாய். இயல்பாக இரு அருண்மொழி. இயல்பாக இருக்கக் கற்றுக்கொள். நான் சொல்வதை இப்பொழுது யோசிக்காதே. இரவு தனித்துப் படுத்துக் கொண்டிருக்கும்போது அக்கா என்ன சொன்னாள் என்று யோசி. அப்பொழுது வெகு நிச்சயமாய் நான் சொல்லுகின்ற விஷயத்தின் சூட்சுமம் புரியும்."

குந்தவை பேசுவதைப் பார்த்து பிரம்மராயர் பலமாகத் தலையாட்டினார். ஆஹா, ஆஹா என்று கூவினார். கைகூப்பினார்.

"ஆதித்த கரிகாலனுக்கு இல்லாத ஒரு பாக்கியம் உனக்குக் கிடைத்திருக்கிறது. அருண்மொழி, மிகச் சரியான நேரத்தில் முரட்டுக் குதிரையின் லகானை இழுத்துத் திசை திருப்புவது போல் குந்தவையார் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். தயவு செய்து... தயவுசெய்து உன் தமக்கையார் என்ன சொல்கிறார்கள் என்பதை முற்றிலும் புரிந்து கொள். ஒரு பெண் சொல்லி, நான் கேட்பதா என்று ஒரு நாளும் எண்ணிவிடாதே.

குந்தவையினுடைய புத்திக் கூர்மை என்னை வியக்க வைக்கிறது. எதை, எவ்வளவு, எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படிச் சொல்ல இந்தப் பெண்மணிக்குத் தெரிந்திருக்றது. இளவரசே... இது சோழ தேசம் செய்த பாக்கியம்.

குந்தவையாரே... ஒரு நல்ல தேசம் உருவாக மன்னனைச் சுற்றி ஆறேழு பேர்களாவது இருக்க வேண்டும் என்று நான் அர்த்த சாஸ்திரத்தில் படித்திருக்கிறேன். நல்ல தந்தை, அருமையான தாய், திறமையான மந்திரி, உண்மையான நண்பன், இனிமையான தோழி, இதமான வேலைக்காரன் என்று ஆறு பேர் இருக்க வேண்டும். எனக்கென்னவோ நீங்கள் ஒருவரே அத்தகைய விஷயத்தையும் செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று படுகிறது. அருண்மொழியை மிக அழகாகத் தயார் செய்து கொண்டு வருகிறீர்கள்.

அருண்மொழி, குந்தவை சொல்லியவுடன் சட்டென்று உட்கார்ந்தாயே... இந்தக் குணத்தை ஒரு போதும் கைவிட்டு விடாதே. இது மிக நல்ல குணம். உன் தமக்கையார் சொன்னது போல ஆதித்த கரிகாலனிடம் இந்தக் குணம் இல்லை. சகலரையும் உதறிவிட்டு, தான் என்ன நினைத்தானோ அதை வெகு வேகமாக செயலாற்ற முற்படுகிறான். இதுவரை செய்திருக்கிறான். இனி எப்படி என்று புரியவில்லை."

"சரி, பிரம்மராயரே... நீங்கள் என்ன பேச வந்தீர்கள். அதைத் தொடர்ந்து பேசுங்கள்..."

பிரம்மராயர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"முன் குடுமிச் சோழியர்கள் என்று சொல்லப்படுகின்ற அந்த சேர தேசத்து அந்தணர்கள் வெறுமே மறை ஓதுபவர்கள் மட்டுமல்லர். வைதீகங்களில் ஈடுபடுபவர்கள் மட்டுமல்லர்

அவர்கள் ஆயுதங்களைத் தயார் செய்வதில் வல்லவர்கள், குறிப்பாய் சேர தேசத்து வில்லாளிகளுக்கு இந்த அந்தணர்கள் பயிற்சி கொடுக்கிறார்கள். கூர்மையான கண் பார்வையும், கடுமையான சகிப்புத் தன்மையும், மனதை ஒருங்கிணைக்கின்ற வேகமும் கொண்டவர்கள்.

சேரதேசத்து வில்லாளிகளக்குக் கடும் பயிற்சி கொடுக்க அங்குள்ள பாடசாலைகளில் இந்த அந்தணர்கள் ஆசிரியர் களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த அந்தணர்களைக் கண்டால் சேர தேசம் நடுங்கும். மெல்லிய பிரம்பைக் கையில் வைத்திருப்பார்கள். அவர்களுக்கு எதிராக எவர் பேசினாலும் அதே இடத்தில் மிக மோசமாய் அந்தப் பிரம்பால் தண்டிப்பார்கள்.

உடல் வலிமை, புத்திக்கூர்மை, செயல் திறன், பேச்சு சாமர்த்தியம் போன்றவைகள் இருப்பதால், அவர்களை எவராலும் வெல்ல முடியவில்லை. குறிப்பாய் நான்காவது வர்ணத்தினர் சேர தேசத்தில் இவர்களிடம் சிக்கிக் கொண்டு படாத பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

போர் வீரர்களின் குடும்பத்தினரும் அந்த சேர அந்தண வீரர்களின் பேரரசருக்கு மிகுந்த பயம் உடையவர்களாய் இருக்கிறார்கள். மன்னர்களும் எதிர்த்துப் பேசுவதில்லை. அரச குடும்பத்தினர்களும் அதட்டுவதில்லை. அந்தணர் என்கிற மரியாதையைத் தாண்டி இவர்களுடைய துன்புறுத்தல்களுக் காகவும், கடுந்தண்டனைகளுக்காகவும், சேர தேசம் பயந்து கொண்டிருக்கிறது" – பிரம்மராயர் நீண்ட பெருமூச்சு விட்டார்.

"உலகத்தின் அமைதியை நாடுபவன்தான் அந்தணன். உலகத்தின் அமைதியைக் காப்பவன்தான் அந்தணன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இவர்கள் நேர்மாறானவர் களாய் இருக்கிறார்களே...

'இதற்கு ஏதேனும் காரணம் சொல்கிறார்களா பிரம்மராயரே..."

"ஆஹா, அருமையான காரணங்கள் சொல்கிறார்கள். 'பசு மாட்டிற்குக் கொம்பு இருப்பது போல ஆபத்துக் காலத்தில் அந்தணன் வாள் எடுக்கலாம். எதிர்த்துத் தாக்கலாம்' என்று சொல்கிறார்கள்.

"ஆபத்துக் காலம் என்பதை யார் முடிவு செய்வது..."

"அவர்களே முடிவு செய்கிறார்கள். பரசுராமரை உதாரணம் காட்டுகிறார்கள். அந்தணரான பரசுராமர் ஆயுதம் எடுத்து சகல அரசுகளையும் அடக்கி ஆளவில்லையா. நாங்கள் அந்த க்ஷேத்திரத்திலிருந்து வருகிறோம். பரசுராமருடைய பரம்பரை, எங்களுக்கு ஆயுதம் எடுக்கவும் தெரியும். அந்தணனாக இருக்கவும் தெரியும். எங்களுக்குக் கீழ்தான் அரசர்கள் இருக்க வேண்டுமே தவிர, ஒரு நாளும் எங்களை மீறி நடந்து விடக்கூடாது. அரசர்களே அடங்கியிருக்கும்போது, மற்ற ஜாதியைப் பற்றி நாங்கள் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

நாங்கள் நடந்து போகும் பொழுது, எதிரே எவரும் எதிர்படலாகாது. ஓரமாக நின்று கைகட்டி நிற்க வேண்டும். நாங்கள் நடந்து வரும் பொழுதும் அரசர்கள் மேல் துணியை எடுத்து இடுப்பிலே கட்டிக் கொள்ள வேண்டும். அரசவைப் பெண்கள் உட்பட மற்ற எல்லா பெண்களும் மார்புத் துணியை விலக்கி நின்றுவிட வேண்டும். காலில் செருப்புப் போட்டுக் கொண்டு போகுதல் கூடாது. மக்கள் எதிரே பல்லக்குகள் வரக்கூடாது. நாங்கள் நிற்கச் சொன்னால் எந்தப் பட்டாளமும் நின்றுதான் ஆக வேண்டும். எங்களுக்கு வணக்கம் செய்த பிறகுதான் எந்தப் படையும் நகர்ந்து போக வேண்டும் என்றெல்லாம் கட்டளை போட்டிருக்கிறார்கள்.

எந்தக் கோயிலிலும் இவர்களுக்குத்தான் முதல் மரியாதை. இவர்கள் உணவருந்திய பிறகுதான் மற்றவர்கள் உணவருந்த வேண்டிய சம்பிரதாயம். சில சமயம் கிராமத்துத் தலைவர்களை நோக்கி, 'நாங்கள் சாப்பிட்ட இலையில் நீ சாப்பிடு' என்று சொல்வார்கள். அவர்கள் நிச்சயம் சாப்பிட்டாக வேண்டும். சாப்பிட்டுவிட்டு மிகப் புண்ணியம் என்று சொல்ல வேண்டும் என்றெல்லாம் பேசுகிறார்கள்.

"என்ன... அநாகரிகமாக இருக்கிறதே மனிதர், மனிதர் எச்சிலை உண்ண வேண்டிய அவசியமென்ன..."

"அவர்கள் உணவு தெய்வப் பிரசாதமாம். அதற்காகத்தான் இப்படிக் கட்டளை இடுகிறார்களாம்..."

"அவர்கள் என்ன சித்த புருஷர்களா..."

"இல்லை ஆனால் சித்த புருஷர்களாக வேடம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். சில வித்தைகளைச் செய்து கொண்டிருக் கிறார்கள்."

"என்ன மாதிரி வித்தை..."

"ஏதோ ஒரு பச்சை மூலிகை கசக்கி ஓலைக்கூரை மீது எரிகிறார்கள். உடனே வீடு பற்றிக் கொள்கிறது. வாழை மரத்தை வெட்டி, அதன் அடிப்பாகத்தில் மூன்று கோணங்களில் குச்சிகளை நட்டு அந்த அடிமரத்தின் மீது ஏறி நிற்கிறார்கள். வாழை மரம் ஆற்றோடு அடித்துக் கொண்டு போகும்போது அவர்கள் தண்ணீரின் மீது நடந்து போவதுபோல் ஒரு தோற்றம் ஏற்படுகிறது. ஜனங்கள் பயந்து கைகூப்புகிறார்கள்.

"என்ன செப்படி வித்தையா."

"இல்லை. வெறும் பயிற்சி, வாழைமரம் புரளாமல் இருப்பதற்கு மூன்று கோணங்களில் சரியானபடி கணக்கிட்டு குச்சியை வைத்து, அந்தக் குச்சியின் மீது வாழை மட்டைகளை அடுக்கி விட்டால் அவை அசையாமல் போகின்றன. அவைகளின் மீது இவர்கள் சாமர்த்தியமாகப் பயணம் செய்கிறார்கள். அப்படிப் பயணம் செய்வதற்குப் பயிற்சி எடுத்துக் கொள்கிறார்கள். பாமர மக்கள் இதைக் கண்டு ஏமாறுகிறார்கள்."

"பிறகு..."

"வைத்தியத்தில் மிகவும் கைதேர்ந்தவர்கள். பாம்புக்கடிக்கு வைத்தியம் பண்ணத் தெரிந்தவர்கள். மந்திரம் ஜபிக்கத் தெரிந்தவர்கள். இன்று இரவு மழை பெய்யும் என்று அவர்கள் சொன்னால் மழை பெய்யும். இனி மேல் மழை பெய்யாது என்று அவர்கள் சொன்னால் மழை பெய்யாதிருக்கும்."

"இது எப்படி நடக்கிறது..."

"வான சாஸ்திரம் படித்தவர்கள். மிகுந்த கெட்டிக் காரர்கள். அந்தக் கெட்டிக்காரத்தனத்தினுடைய உச்சியில்தான் கர்வம் கொப்பளித்து ஆடுகிறார்கள்."

"அப்படியானால் அவர்கள் கடுமையாக உழைக்கிறார்கள் என்று சொல்லுங்கள்..." என்று குந்தவை அவரைப் பார்த்துச் சொல்ல.

"ஆமாம் அம்மா... ஒவ்வொரு தலைமுறையும் புதிது புதிதாய் விஷயத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்றும் சங்கல்பம் கொண்டிருக்கிறார்கள். என் தாத்தா இதைக் கண்டு பிடித்தார். நான் இதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறேன் என்று சொல்கிறார்கள்."

"புரியும்படியாய் சொல்லுங்கள் பிரம்மராயரே..." அருண்மொழியும் ஆவலோடு கேட்டான்.

“போரில் காயம் ஏற்பட்டால் ரத்தப் பெருக்கை உடனே நிறுத்தி, ரணத்தை மூன்று நாளில் ஆற்றுவதற்கு அவர்களிடம் மருந்து இருக்கிறது.”

“அடடே, அப்படியா...”

“ஆனால், அந்த ரகசியத்தை அவர்கள் கொன்றாலும் சொல்ல மாட்டார்கள். சேர மன்னனுக்கு இப்படி வைத்தியம் செய்து அவனைக் கைக்குள் போட்டுக் கொண்டார்கள்.”

“பிறகு வேறென்ன தெரியும் அவர்களுக்கு” குந்தவை ஆவலோடு விசாரித்தாள்.

“அரசியல் சாணக்கியம் தெரிந்தவர்கள். யாரிடம் எப்படிப் பேச வேண்டும் என்று தெரிந்தவர்கள். பிரித்தாளும் சூட்சி உடையவர்கள். இரண்டு ஜாதிக்காரர்களை மோதவிட்டு வேடிக்கை பார்க்கிறவர்கள். இதைத்தவிர அவர்கள் பில்லி, சூனியம் ஏவலையும் செய்கிறார்கள்...”

“இது உண்மையா பிரம்மராயரே... இப்படிச் செய்ய முடியுமா...” அருண்மொழி ஆவலாகக் கேட்டான்.

## 52

**சே**ர தேசத்தில் பிறந்து, பாண்டியர்களுக்கு ஒற்றர்களாக வளர்ந்து வரும் முன்குடுமி அந்தணர்களைப் பற்றி தொடர்ந்து பிரம்மராயர் பேசினார்.

“முடியும் அருண்மொழி... வேதனைப்பட்டு இறந்தவர் களின் ஆவிகள் பூமியில்தான் சுற்றிக் கொண்டிருக்கும். அவர்கள் மறுபடியும் வாழவேண்டும் என்கிற ஆசையோடு அலைவார்கள் என்று சொல்கிறார்கள். அப்படிப்பட்டவர்களோடு மானசீக மாய், நைச்சியமாய்ப் பேசி அவர்கள் விருப்பப்படுவதைக் கொடுத்து அவர்களைத் தங்கள் வசம் செய்து கொள்கின்ற ஒரு வித்தை உண்டு...”

“அப்படிப்பட்டவர்கள் என்ன விருப்பப்படுவார்கள்”

“அநேகமாய் நரபலிதான் அவர்களுடைய விருப்பமாக இருக்கும்.”

“கடவுளே... என்ன கொடுமை இது...”

"ஆமாம். இளம் பிள்ளைகளை அரிந்து அந்த ரத்தத்தை பூமியில் தெளிக்கும்போது, அந்த ரத்தத்தை பைசாசங்கள் விரும்பிக் குடிக்கின்றன என்று சொல்வார்கள். இந்தச் சேர தேசத்து முன் குடுமிச் சோழியர்கள் இம்மாதிரி பல நரபலி களைக் காட்டுக்கு நடுவே கொடுத்து தங்களை வலுப்படுத்தி யிருக்கிறார்கள் என்று சொல்லப்படுகின்றன. ஆனால் இதை நான் நம்பவில்லை. நம்புவதா வேண்டாமா என்று தெரிய வில்லை..." பிரம்மராயர் தொலைதூரம் பார்த்தபடி யோசித்தார்.

"சரி விடுங்கள். வேறென்ன..."

"சிறிதும் நேர்மையற்றவர்கள். மிகுந்த பொறாமை கொண்டவர்கள். யார் அவர்களுக்கு எதிராக கம்பீரமாக நடந்து போனாலும் துடித்துப் போனார்கள். தன் எதிரே நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு போகிறானா. யார் அவன்... அவனை என்ன செய்தால் அலறுவான் என்று உடனே யோசிக்கத் துவங்கி விடுவார்கள்.

அவர்கள் மட்டுமல்ல, அவர்கள் வீட்டுப் பெண்களும் கொடுமைக்காரிகள்தான். நகைகளுக்குப் பெரிய ஆசை உள்ளவர்கள். வணிகப் பெண்களை ஏமாற்றி நகைகளைப் பிடுங்கிக் கொண்டு, அவர்களைப் பைத்தியம் பிடிக்க வைக்குமாறு முன்குடுமிச் சோழியப் பெண்கள்/செய்வார்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்."

"ஆக, சேரதேசம் இவர்கள் கையில் சிக்கியிருக்கிறதா..."

"சேரதேசம் மட்டுமில்லை அருண்மொழி சேரதேசத்தில் இனி ஜெயிக்க ஒன்றுமில்லை என்று அந்தணர்கள் தெரிந்து கொண்டு, பாண்டிய தேசத்துப் பக்கம் திரும்பி விட்டார்கள். மலையேறி இறங்கி பாண்டிய தேச எல்லைகளை வசப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். மதுரையில் பல குடும்பங்கள் வந்து தங்கிவிட்டன. மதுரையிலுள்ள செல்வாக்குள்ள குடும்பங்களில் இவர்கள் போய் பூஜை செய்து, அந்தக் குடும்பங்களை வளைத்துக் கொண்டிருக்கிறார்கள்."

"பாண்டிய தேசம் நம் வசமல்லவா இருக்கிறது."

"பாண்டியர்களை அவ்வப்போது தாக்கி அவர்களுடைய திறமையை, வல்லமையைக் குறைத்துக் கொண்டிருக் கிறோமேயொழிய, முற்றிலும் ஆட்சியை அகற்றி விடவில்லை.

நாம் கலைத்துப் போட்ட பாண்டிய தேசத்தின் படை வீரர்களை இவர்கள் ஒன்று சேர்த்து தூண்டிக் கொண்டிருக்

கிறார்கள். விற்பயிற்சியைக் கொடுப்பதற்காகப் பெருந் தொகையை வாங்கியிருக்கிறார்கள். பாண்டியர்களுடைய முரட்டு வெறியைத் தூண்டி சோழர்களைக் கொல்ல வேண்டாமா, சோழ தேசத்தைக் கைப்பற்ற வேண்டாமா என்று அவர்களிடம் பேசி, அவர்களிடமிருந்தும் காசு பறித்து, அவர்களைத் தங்களுக்குக் கீழே ஏவல் தொழில் செய்ய வைத்திருக்கிறார்கள்.

பாண்டியர்களுக்கு வில்வித்தை கற்றுக் கொடுப்பதற்காக, மிகப்பெரிய கடிகை ஒன்று நிறுத்துவதற்கு அரசரிடம் காசு கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். பாண்டிய மக்களிடம் நன்செகடை வசூலிக்கிறார்கள். ஏற்கெனவே மழையின்றியும், சரியான சாகுபடி இன்றியும் தவித்துக் கொண்டிருக்கிற பாண்டிய தேசம் இவர்களால் இன்னும் கலங்கிப் போய் இருக்கிறது.

இவர்கள் வாலிபர்களைத் தேர்ந்தெடுப்பதே இல்லை. பத்திலிருந்து பதின்மூன்று வயது வரையுள்ள சிறுவர்களைத் தான் தேர்ந்தெடுக்கிறார்கள். தங்களுக்கு அடிமையாக இருக்க வேண்டும் என்று ஓலைச்சீட்டில் எழுதி வைத்துக் கொள்கிறார்கள். அடிமையாகவே நடத்தப்படுகிறார்கள்.

அவ்வப்போது சிறிய வித்தைகளைச் சொல்லித் தருகிறார்கள். அதில் வலிவுள்ளவனைத் தேர்ந்தெடுத்து அவனுக்கு வர்ம அடியும், மர்ம அடியும் சொல்லிக் கொடுக்கிறார்கள். கம்பு சுற்றவும், ஈட்டி எறியவும் கற்றுக் கொடுக்கிறார்கள். வில் செய்வதற்குப் பயிற்றுவித்திருக்கிறார்கள். விற்கள் அதிக அளவில் தயாரானதும், அம்புகள் அதிக அளவில் தயாரானதும், பயிற்சியை ஆரம்பிப்போம் என்று சொல் கிறார்கள்.

அந்தச் சிறுவர்களை ஆடு, மாடு மேய்ப்பவர்கள்போல சோழ தேசத்தின் எல்லைக்கு அனுப்பி, சோழ தேசத்திலுள்ள வயசாளிகளை, வாலிபர்களை, பெண்களை மறைந்திருந்து அம்படித்துக் கொல்வது அவர்களுடைய திட்டம். இவை ஆறேழு முறை நிறைவேறியும் இருக்கிறது."

"உண்மையாகவா..."

"ஆமாம். இதைக் கண்ணெதிரே ஒருமுறை ஆதித்த கரிகாலன் பார்த்து விட்டுத்தான் மிகக் கோபமாக பாண்டிய தேசத்தின் எல்லையைத் தாக்கினான் அந்த வீரர்களைக்

கொடுமைப்படுத்தி கதறடித்தான். என்னோடு சண்டைக்கு வ.ர ஏன் பெண் மீது அம்பெய்கிறாய் என்று கடுமையாக சவுக்கால் அடித்தான். ஆதித்த கரிகாலன் ஆத்திரப்படுவதிலும் ஓர் அர்த்தம் இருக்கிறது.”

“ஏன் ?”

“அவர்கள் ஆத்திரப்படும்படியாகவே, ஆத்திரமூட்டுவதற் காகவே சில காரியங்கள் செய்கிறார்கள்.”

“என்ன மாதிரியான காரியங்கள் ?”

“பசுவும் கன்றும் இருந்தால் கன்றைக் கொன்று விடுவார்கள். சில இடங்களில் பசுவைக் கொன்றுவிடுவார்கள். தூக்கிக் கொண்டு போய் காடுகளில் போட்டு விடுவார்கள். பெண்களை அழைத்துக் கொண்டு போய் பிரம்பால் அடித்து நிர்வாணப்படுத்தி, அவர்கள் மூர்ச்சையாகும்படி தாக்கி, பிறகு ஆறேழு பேர் அவளை அனுபவித்துவிட்டு அப்படியே விட்டுவிட்டுப் போய் விடுகிறார்கள். ஊர் கிணற்றில் விஷம் கலக்கிறார்கள்.”

“எப்படி இதெல்லாம் தெரியாமல் போயிற்று எனக்கு?”

“அருண்மொழி, மறுபடியும் ஆத்திரப்படாதே என்று கேட்டுக் கொள்கிறேன்...” குந்தவை மெல்ல அதட்டினாள்.

“ஆதித்த கரிகாலன் இதற்குக் கடும் தண்டனைகள் கொடுத்துக் கொண்டிருக்கிறான். ஆடு மேய்க்கின்ற, மாடு மேய்க்கின்ற அந்தச் சிறுவர்களைப் பிடித்து சிரச்சேதம் செய்து விட்டான். பலபேரைக் கழுவில் ஏற்றி விட்டான். வேண்டு மென்றே பாண்டிய தேசத்தின் எல்லையைத் தாண்டி ஊர்களுக்குப் போய், அங்குள்ள வயசாளிகளைக் கொண்டு வந்து பட்டியல் போட்டுக் சாகடித்திருக்கிறான். பாண்டியர்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள். இதை ஆதித்த கரிகாலன் செய்யாமல் இருந்திருக்கலாம்.

“ஏன், அவர்கள் செய்கிறபோது நாம் செய்தால் என்ன”.

“தவறு அருண்மொழி, இவைகளில் என்ன திட்டம் வைத்திருக்கிறார்களோ அங்கே போய் நாம் சிக்கிக் கொள்ளக் கூடாது. நம்மை ஆத்திரமூட்டுவதற்காக அவர்கள் காரியம் செய்கிறார்கள். நாம் ஆத்திரப்பட்டுக் காரியம் செய்தால் பாண்டிய மக்களுடைய மிகப் பெரிய கோபத்தைச் சம்பாதித்துக் கொள்வோம். நமக்கும் பாண்டியர்களுக்குமிடையே மிகப்பெரிய பிளவை ஏற்படுத்த வேண்டுமென்பதுதான் அந்த அந்தணர்

களுடைய நோக்கமாக இருக்கிறது. அந்த வலையில் நாம் விழுந்துவிடக்கூடாது.”

“என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்கள்...”

“அந்த ஆடு மேய்க்கும் இளைஞர்கள், பாண்டிய தேசத்து வாலிபர்கள் செய்யும் காரியங்கள் தடுக்கப்பட வேண்டும். அதே சமயம் சேர தேசத்து அந்தணர்களை ஒற்றறிந்து கொல்ல வேண்டும். இதை நான் ஆதித்த கரிகாலனிடம் சொல்லி யிருக்கிறேன். பல முறை பலவிதமாக விளக்கமாகப் பேசி யிருக்கிறேன்.

ஆதித்த கரிகாலனுக்குப் புரிந்திருக்கிறது. வெறுமே எல்லைப்பக்கம் நின்று, ஆடு மாடு மேய்ப்பவர்களைத் தண்டிப்பதைவிட பெரும் படையெடுத்து பாண்டிய தேசத்து மையப்பகுதிக்குப் போய், அங்கிருந்து சேர தேசத்தின் எல்லைக்குப் போய், எவரேல்லாம் முன் குடுமிச் சோழியர் களாக இருக்கிறார்களோ அத்தனை பேரையும் கைது செய்து கொன்று போட வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறான். மிகப்பெரிய படையெடுப்பு ஆதித்த கரிகாலன் நடத்தப் போகிறான்.”

பிரம்மராயர் அன்று திரைச் சீலைகளுக்கு நடுவே உட்கார்ந்து விநாயகர் சிலையைத் தொட்டபடி பேசியது இப்போது நடந்ததுபோல் உடையார் ஸ்ரீ ராஜராஜத் தேவருக்கு நினைவுக்கு வந்தது.

அவர் ஆதித்த கரிகாலனின் மதுரைப் படையெடுப்பைப் பற்றித் தொடர்ந்து யோசிக்கத் துவங்கினார்.

அதர்மத்தின் எல்லை என்று சொல்லும்படியான கலவரங்கள்; எந்தப் பாவமும் அறியாத மக்களை இம்சித்து சந்தோஷம் காணுகின்ற அயோக்கியத் தனங்கள் இடைவிடாது சோழ தேசத்து எல்லையில் நடந்து வந்தன.

சேரதேசத்துப் பார்ப்பனர்களால் மதுரையிலுள்ள வாலிபப் படை ஒன்று போருக்கு பயிற்றுவிக்கப்பட்டிருந்தது. அந்தப் போர் புது வகையானது என்று சொல்லப்பட்டது.

விடியற்காலை வேளை அல்லது இருள் பரவும் நேரம் ஓடிவந்து தாக்கிவிட்டு மறைந்து கொள்வார்கள். வீடுகளுக்கு நெருப்பு வைத்துவிட்டுக் கொள்ளையடிப்பார்கள். மூன்று நான்கு குழந்தைகளாய் கயிற்றில் கட்டி, கொத்தாய் குதிரில்

போட்டு தூக்கிக் கொண்டு போய் விடுவார்கள். மாடு கன்றுகளோடு ஊரை விட்டுக் காலி செய்து போனால்தான் குழந்தைகளைத் திருப்பித் தருவோம் என்பார்கள்.

வாளின் உறைக்குள்ளே விஷப் பொடிகளைப் போட்டு வைத்திருப்பார்கள். உருவி எடுக்கும்போது, வாளில் இருந்து பொடியை எதிரே இருப்பவர்கள் மீது வீசுவார்கள். அவர்கள் உடம்பரிப்பால், கண்ணெரிச்சலால்… அவஸ்தைப்பட, சரமாரி யாக வெட்டுவார்கள். மிகப்பெரிய படைகளோடு அவர்களைத் தேடி வரும் போது காணாமல் போவார்கள். மலை முகடுகளில் பதுங்கிக் கொள்வார்கள்.

சோழப்படை விடவில்லை. அவர்களில் ஆறேழு பேரைக் கைது செய்தது. ஆதித்த கரிகாலனிடம் கொண்டு வந்த நிறுத்தியது.

அவர்களில் ஒருவன், ஆதித்த கரிகாலனுடைய இடுப்புக் கத்தியை உருவி நெஞ்சில் சொருகிக் கொண்டு, 'பாண்டிய தேசம் வாழ்க, சோழ தேசம் ஒழிக' என்று சொல்லிக் கொண்டு உயிர் நீத்தான்.

மீதமுள்ளவர்களைத் தீர விசாரித்த பொழுது அவர்கள் தற்கொலைப் படை என்றும், அவர்களுடைய தாயாரும், தந்தை மாரும், உறவினர்களும் சோழ தேசத்தால் அநியாயமாக வெட்டிக் கொல்லப்பட்டார்கள் என்றும், அதற்குப் பழிவாங்குவதற்கே சேர தேசத்து அந்தணர்களால் அவர்கள் தயார் செய்யப்பட்டார்கள் என்றும், ஆறு மாதத்தில் யுத்த பயிற்சி கொடுக்கப்பட்டது என்றும், அவர்கள் குடும்பத்திற்கு நிவந்தங்கள் விடப்பட்டதென்றும், மரணத்திற்கு முன்பு எவ்வளவு தொந்தரவு கொடுக்க முடியுமோ – சோழ தேசத்திற்கு அத்தனை தொந்தரவு கொடுக்கப்பட வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டதாகவும் தெரிவித்தார்கள்.

இது போல் இன்னும் ஏழாயிரம் வாலிபர்களை சேரதேசத்து அந்தணர்கள் தயார் செய்து கொண்டிருக்கிறார்கள் என்றும் சொன்னார்கள்.

பாண்டிய தேசத்து, சேர தேசத்து எல்லையில் மலைப்பகுதியில் இந்தப் பயிற்சிகள் நடைபெறுவதாகக் காட்டினார்கள். முதுகு முழுவதும் வரிவரியாய் பிரம்படி இருந்தது. என்ன என்று கேட்ட பொழுது, மலையேற முடியாமல்

தவித்தபொழுது ஏறித்தான் ஆக வேண்டும் என்று ஒரு அந்தணர் அடித்ததாகச் சொன்னான் ஒருவன்.

ஏறினாயா என்று கேட்டபொழுது, "இல்லை. மலையிலிருந்து விழுந்து தற்கொலை செய்து கொள்ள முயற்சித்தேன். அடிதாங்காமல் இறந்துவிட முடிவு செய்தேன். அவர் தடுத்து, 'ஏன் இங்கு சாகிறாய். போய் சோழ தேசத்து எல்லையில் செத்துப்போ' என்று அனுப்பினார்." என்று சொன்னான்.

அப்படி சோழ தேசத்தின் எல்லைக்கு அனுப்பும் முன்பு நிறைய மது கொடுத்தும், விலை மாதர்களோடு பழகவிட்டும், குடும்பத்தோடு ஒரு நாள் இருக்கச் செய்தும் பல வசதிகள் செய்து கொடுத்து, பிறகு இங்கே அனுப்பியதாகச் சொன்னார்கள்.

சுந்தரசோழருக்குத் தகவல் தெரிவிக்க, வீரபாண்டியன் நேரடியாக மோதாமல், இப்படிப் பலபேர் துணையோடு மோதுகிறான் என்று கவலைப்பட்டார். அவனுக்கு ஈழ மன்னரின் உதவிகள் வேறு இருப்பதாகத் தெரிய வந்தது.

பாண்டியர்களுக்குப் படைக்கலன்கள் கொடுத்தும், பண உதவி செய்தும், ஈழத்தில் விளைகின்ற தானியங்களை இலவசமாகக் கொடுத்தும், உற்சாகப்படுத்திக் கொண்டிருப்பதும் தெரிய வந்தது.

எனவே, இப்பொழுது படையெடுப்பு என்பது வெறும் பாண்டிய தேசத்துப் படையெடுப்பாக இல்லாமல், சேர தேசத்துப் படையெடுப்பாக, ஈழப் படையெடுப்பாக இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

பாண்டியனின் வலது கையாக, அவன் உற்சாகத்திற்கு ஆணிவேராக விளங்குகின்ற ஈழத்தைத் தண்டிக்க வேண்டுமென்று முதலில் நினைத்தார்கள்.

ஆதித்த கரிகாலன், 'வேண்டாம். பாண்டியனை அடித்தால் போதும். மற்ற இரண்டு பேர்களும் சோர்ந்து போவார்கள். அவர்களைப் பிற்பாடு கவனித்துக் கொள்ளலாம் என்று சொல்ல, அவனுடைய பேச்சு மறுக்கப்பட்டது.

சுந்தர சோழர் ஒரு படையை ஈழம் நோக்கி அனுப்ப, அந்தப் படை சிங்கள வீரர்களால் கடுமையாகத் தாக்கப்பட்டது. அவர்கள் படையெடுத்து வந்ததற்கு மன்னிப்புக் கேட்டு ஓலை எழுதிக் கொடுத்தார்கள். ஆயுதங்கள் பறிக்கப்பட்டு, வெறுங்கையோடு திருப்பி அனுப்பப்பட்டார்கள்.

ஆதித்த கரிகாலன் கொதித்தான். தந்தையை ஏசினான். மந்திரிகளைத் திட்டினான். போர் வீரர்களைக் கடிந்து கொண்டான். தளபதிகளைப் பலபேர் முன்னால் பிரம்பால் அடித்தான். வெறும் திண்ணைத் தூங்கிகள் என்றும் தண்டச் சோறுகள் என்றும் ஏசினான். படையில் சலசலப்பு அதிகமாயிற்று.

பிரம்மராயர் ஆதித்த கரிகாலனோடு மன்றாடினார்.

"இப்படிப் பேசக்கூடாது. இப்படி தளர்த்தக்கூடாது. படைவீரர்களை இப்படி இழிவுபடுத்தினால் படை பிளவுபடும். அது தேசத்திற்கு நல்லதல்ல..." என்று பலமுறை எடுத்துச் சொன்னார்.

"தந்தையினுடைய கட்டளை தவறானது. அதற்கு தளபதிகள் எப்படிப் பொறுப்பேற்பார்கள்" என்று வாதம் செய்தார்.

"தந்தை செய்தது தவறு என்பதை நீ போய் பாண்டியனைப் படையெடுத்து வென்று நிரூபித்து வா, மற்றபடி வேறு வழியில்லை" என்று சொன்னார்.

ஆதித்த கரிகாலன் வெறியோடு கிளம்பினான். சோழ எல்லைப் பகுதியை அடைந்தான். அங்குள்ள பெண்களும், கிழவர்களும், கிழவிகளும் அவன் காலைப் பிடித்துக் கொண்டு கதறினார்கள்.

முப்பது பெண்களுடைய மூக்குகளும், முலைகளும் அரியப்பட்டிருந்தன. பெண்கள் தங்களைத் துணிகளால் சுற்றிக் கொண்டு ஒரு ஓரமாக நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் போய் பார்த்துப் பேசியதும் அவர்கள் துக்கம் தாங்காமல் வாய் விட்டு அலறினார்கள்.

"எங்கள் வாழ்க்கையே பாழாகி விட்டதே... எங்களைக் காப்பாற்ற எவருமே இல்லையே... சோழ தேசத்தில் நாங்கள் எலிகளைப் போல் வாழ்கிறோமே. இங்கு ஆண் பிள்ளையே இல்லையா. இந்தப் பழியைத் தீர்ப்பதற்கு எவருமே முன் வரமாட்டீர்களா..." என்றெல்லாம் கதறினார்கள்.

"பாண்டிய தேசம் கொழுந்து விட்டு எரிந்தால்தான் என் வயிற்றெரிச்சல் அடங்கும். என் நெஞ்செரிச்சல் அடங்கும்" என்று கூச்சலிட்டார்கள்.

ஆதித்த கரிகாலன் வெறியானான். இன்னும் படைகள் வேண்டுமென்று பழையாறைக்குச் செய்திகள் அனுப்பினான்.

அங்கிருந்து மிகப்பெரிய படை வந்து சேர்ந்தது. கொடும்பாளூர் சிற்றரசு வந்து சேர்ந்து கொண்டதும் சாளுக்கிய தேசத்தில் நண்பர்களாக இருந்த இளவரசர்கள் தங்களுடைய படைகளோடு வந்ததும், சகலரையும் ஒன்றாக்கி மிகத் தெளிவாய் கட்டளைகள் பிறப்பித்து பாண்டிய தேசத்திற்குள் நுழைந்தான். அவன் வருகை நன்கு அறியப்பட்டிருந்ததால், பாண்டிய தேசம் வெறிச்சோடிக் கிடந்தது.

## 53

ஒவ்வொரு கிராமமாக சூறையாடிக் கொண்டு, நெருப்பு வைத்துக் கொண்டு, ஒரு கல்லும் நிற்கவொட்டாது எல்லா வற்றையும் இடித்துத் தரைமட்டமாக்கிக் கொண்டு சோழப் படை மதுரையை நோக்கி முன்னேறியது.

பாண்டிய மன்னன் அங்கு இல்லை. போர் செய்ய ஆண்களும் இல்லை. மதுரையைத் தாண்டி சேர தேசத்திற்குப் போகும் மலைப்பாதைக் காடுகளில் பாண்டியன் ஒளிந்து கிடக்கின்றான் என்று தகவல் வர, சோழப் படை அங்கு போயிற்று.

"எங்கு போனாலும், பூமியில் எந்த மூலையில் இருந்தாலும் உன்னைக் கொல்லாமல் நான் தஞ்சை திரும்ப மாட்டேன்..." என்று ஆதித்த கரிகாலன் மதுரை வாசலில் சபதம் செய்தான்.

அதன்படியே காடுகளில் வீரபாண்டியனைத் தேட உத்தர விட்டான். காடுகளில் உள்ள மிருகங்களால் தாக்கப்பட்டு, குற்றுயிரும் குலை உயிருமாய் இருந்த வீரபாண்டியனை ஆதித்த கரிகாலன் வளைத்துப் பிடித்தான்.

தூங்கிக் கொண்டிருந்தவனை எழுப்பினான். அவன் நோய் வாய்ப்பட்டிருப்பது தெரிந்தது. ஜுரத்தில் அனத்துவது புரிந்தது- அங்கேயே சபை கூட்டி விசாரித்தான்.

"நீ தான் வீரபாண்டியனா" என்று கேட்டதற்கு ஆமென்று ஒபபுக் கொண்டான். "சோழ தேசத்து எல்லையில் படைகளை, கேவலமான படைகளை அனுப்பி, பொதுமக்களைத் தொந்தரவு செய்தது நீதானா?" என்று விசாரிக்க, "அதுதான்இனி போர்முறை" என்று வீரபாண்டியன் சொல்லிச் சிரித்தான்.

கையிலிருந்து வாளை உருவி நான்கு அடி எட்டி வைத்து, சிரிக்கின்ற வீரபாண்டியனின் தலையை ஆதித்த கரிகாலன் வேகமாக வெட்டி வீழ்த்தினான். சபை மிரண்டது. சுதாரித்துக் கொண்டு ஆதித்த கரிகாலன் வாழ்க' என்று சொன்னது. 'வீரபாண்டியன் தலை கொண்ட ஆதித்த கரிகாலன் வாழ்க' என்று மீண்டும் கத்தியது.

வீரபாண்டியன் தலை தஞ்சாவூர் கோட்டைக்கு வெளியே வெகுநாள் அழுகிக் கிடந்தது.

பிரம்மராயர் இந்தக் கதைகள் மொத்தமும் சொல்ல, அருண்மொழி இந்த விஷயம் தவறு என்று மெல்ல முணுமுணுத்தான்.

"ஆமாம் தவறுதான். பாண்டிய தேசத்தில் நெஞ்சில் அடித்துக் கொண்டு அழுகிறார்கள். ஒப்பாரிப் பாட்டாக இதைப் பாடுகிறார்கள். கைகளைக் கட்டிப்போட்டு கழுத்தை வெட்டிப் போட்டானே ஆதித்த கரிகாலன் என்று சொல்கிறார்கள். அவர்கள் செய்யும் அநியாயங்களை மறந்துவிட்டு, நாம் அநியாயம் செய்பவர்களாக ஜனங்களிடம் கவிதைகள் எழுதி கொடுக்கிறார்கள். காலா காலத்துப் பகையாக இருக்கிறது. எப்பொழுது தீரும் என்று தெரியவில்லை." பிரம்மராயர் கவலைப்பட்டார்.

"மதுரை என்கிற நகரம் தவிர மற்ற எல்லா ஊரும் நாசமாக்கப்பட்டன. எல்லா விளைநிலங்களும் நாசமாக்கப் பட்டன. எல்லா கால்வாய்களும் உடைத்து மண்போட்டு மூடப்பட்டன. கட்டாந்தரையில் ஆறுகள் திருப்பிவிடப்பட்டன. பாண்டிய தேசம் மறுபடியும் பழைய நிலைக்கு வர இன்னும் பத்துவருடங்கள் ஆகும்.

பாண்டிய மக்கள் பல பேர் சேரதேசத்திற்கு ஓடி விட்டார்கள். பலபேர் ஈழ தேசத்திற்குப் போய் விட்டார்கள். இன்னும் பலபேர் காடுகளில் ஒளிந்து வாழ்கிறார்கள். சோழர்கள் போனதும் மறுபடியும் பாண்டிய தேசம் வரவேண்டும் என்று அவர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள். வருடம் ஒன்றாகியும் வரவில்லை. பாண்டியதேசம் ஒரு சுடுகாடு போலக் காட்சியளிக்கிறது. சேரர்களின் கொட்டத்தை அடக்கி பாண்டிய மக்களைச் சமாதானப் படுத்தி மறுபடியும் ஊருக்கு வரவழைத்தால்தான் நல்லது. இல்லையெனில் இந்தத் தேசம்

பாழ்பட்டுப் போகும்.” என்று அரசு சபையில் எடுத்துச் சொன்னார்.

ஆதித்த கரிகாலன், “சேரர்களையும் பழிவாங்குவேன். முன்குடுமிச் சோழியர்களை இந்த சபையில் நிறுத்தி பிரம்பால் அடிப்பேன்...” என்று மறுபடியும் சபதம் செய்தான்.

மதுராந்தகருக்கு அந்த சபையில் எந்த மரியாதையும் இல்லாது போயிற்று. செம்பியன் மாதேவியும், மதுராந்தகரும் கூடிக்கூடிப் பேசுவது அரண்மனையிலுள்ள எல்லோருக்கும் தெரிந்தது.

சுந்தரசோழரை செம்பியன் மாதேவி சந்தித்துப் பேசினாள். “ஆதித்த கரிகாலனை அடக்கி வையுங்கள். ஒரு அரச சபையில் எல்லாமும் அவன்தான் தீர்மானம் செய்வதா? நீங்கள் எதுவும் பேசமாட்டீர்களா? பாண்டியனின் தலை கொண்டு வந்துவிட்டால் சோழ தேசத்தின் அரசனாகி விட்டோம் என்று நினைத்துக் கொள்வதா? யார் வாரிசுக்கு உண்மையான உரிமை என்பதை அவனுக்குத் தெரிவித்து விடுங்கள். திரும்பத் திரும்ப இது பற்றி நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்க மாட்டேன். வேறு விதமான நடவடிக்கைகள் எடுத்து விடுவேன்...” என்று எச்சரித்தாள்.

இதுவும் அரண்மனையில் உள்ள எல்லோருக்கும் ரகசியமாய் தெரிய வந்தது.

பழையாறை அரண்மனை கவலையில் மூழ்கியது. யாரும் யாரோடும் வாய்திறந்து பேசப் பயந்தார்கள்.

குந்தவையும், அருண்மொழியும் காவிரிக்கரை ஓரமுள்ள அரண்மனையில் தங்கி மக்களோடு பேசிப் பழகி, இரவு நேரங்களில் என்ன செய்வது என்று தனியே விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

“ஆதித்த கரிகாலருக்கு அமைச்சராகவோ சேனாதிபதியாகவோ என்னால் இருக்க முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை...” பிரம்மராயர் குந்தவையிடம் வருத்தத்தோடு பேசினார்.

“அவருடைய படபடப்பு நல்லதல்ல. அவருக்கு அது கெடுதலைத் தரும். அவருக்குக் கெடுதல் வந்தால் சோழ தேசத்திற்குக் கெடுதல் வந்தது போல, ஆனால் அவரிடம் கூட எப்படியாவது சமாளித்து சேனாதிபதியாக இருந்துவிடுவேன்.

மதுராந்தகரிடம் சேனாதிபதியாக இருப்பது என்பதை நினைக்கவே பயமாக இருக்கிறது.”

“ஏன்...”

“மதுராந்தகர் எதுவும் புரியாத, எது பற்றியும் தெரியாத ஒரு மனிதராக இருக்கிறார். எல்லாவற்றிற்கும் ‘அம்மாவைக் கேட்க வேண்டும். அம்மாவைக் கேட்க வேண்டும்’ என்று பதில் சொல்கிறார்.

அந்த அம்மாவுக்கு எல்லாம் புரிந்ததுபோல ஒரு நினைப்பு சகலமும் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார். நான் என்ன சொல்கிறேனோ அதற்கு எதிர்பதமாகப் பேசுகிறார். சிவன் கோவிலுக்குத் திருப்பணி செய்ய சிற்பிகள் வந்து பொற்காசுகள் இருந்தால் நல்லது என்கிறார்கள்.

அவ்வளவு தேவையில்லையே என்று நான் சொன்னதும், சட்டென்று, ‘அதெப்படி தேவையில்லை என்று சொல்கிறீர்கள். ஆயிரம் பொற்காசுகள் போறாது. நான் இரண்டாயிரம் தருகிறேன். நல்லமுறையில் செய்யுங்கள் என்று என் கண் முன்னே என்னை அவமானப்படுத்த இரண்டாயிரம் பொற்காசுகள் தூக்கிக் கொடுக்கிறார்கள். பிறகு தாயும் மகனும் என்னைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். இதனால் எனக்கொன்றும் அவமானமில்லை. சோழதேசம் இவர்களால் சின்னாபின்னப் பட்டுப் போகுமென்று தான் எனக்குத் தோன்றுகிறது.

மதுராந்தகனுக்கு இளவரசுப் பட்டம் கிடைக்க வேண்டுமென்பதற்காக செம்பியன் மாதேவி தன்னுடைய அரண்மனையில் சாக்த உபாசகர்களைக் கொண்டு சக்தி பூஜை செய்கிறார். மிகப்பெரிய காளிபூஜை நடத்துகிறார். எதிரிகளைக் கொல்வதற்காக எதிரிகளின் பிரதிமைகளை வைத்து பூஜை செய்கிறார். அதில் ஒரு பிரதிமை சுந்தரசோழரைப் போல இருக்கிறதென்று ஒற்றர்கள் சொன்னார்கள். நான் ஆடிப்போய் விட்டேன்.

ஒரு பிரதிமை ஆதித்த கரிகாலனைப் போல் இருக்கிறது. இன்னுமொரு பிரதிமை என்னைப் போல் இருக்கிறது. இன்னுமொரு பிரதிமை...” சொல்லிவிட்டு அமைதியாக தரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

“சொல்லுங்கள் பிரம்மராயரே. இன்னொரு பிரதிமை யாரைப் போல் இருந்தது. என்னைப் போலவா...?” குந்தவை ஆவலுடன் விசாரித்தாள்.

"இல்லையம்மா. அருண் மொழியைப் போல் இருந்தது என்று சொல்லியிருக்கிறார்கள். கிரீடம் இல்லாமல் தலைப் பாகை இல்லாமல் மேலே துணியைப் போர்த்திக் கொண்டு வருகிற அரச குடும்பத்தினர் இவர் மட்டும்தானே. அப்படியே இவர் போல தத்ரூபமாக ஒரு பிரதிமை வைக்கப்பட்டிருக் கிறதாம்."

அருண்மொழி இதைக் கேட்டதும் வாய்விட்டுச் சிரித்தான். குந்தவை முகம் வெளிறினாள்.

'வாள் எடுத்துப் போரிட முடியாத மதுராந்தகன் இப்படி ஒரு வழிக்குப் போகிறானா? அவன் என்ன செய்வான். அவன் வளர்ந்த விதம் அப்படி. அவன் தாயாருடைய புத்தி அப்படி, இதற்கெல்லாம் பயந்தால் வாழ்க்கை நடத்த முடியாது. அரசியல் செய்ய முடியாது. மனிதர்கள் நாலாவிதமாகத்தான் இருப்பார்கள். வெற்றி பெற நான்கு விதமாக முயற்சிப்பார்கள். சகலமும் சமாளித்துத்தான் ஆக வேண்டும்."

"நேரே வந்து சண்டை போட்டால் சமாளிப்பாய் அருண்மொழி. ஆனால் இதை எப்படிச் சமாளிக்க முடியும்." குந்தவை குமுறினாள்.

"நாம் கருவூர்த்தேவரிடம் போய் ஆலோசனை கேட்போம் அக்கா. கருவூர்த்தேவர் என்ன சொல்கிறாரோ அது போல நடந்து கொள்வோம். அவரை மீறி இந்த தேசத்தில் யார் என்ன செய்யமுடியும்..." என்று அருண்மொழி சொல்ல, குந்தவையும் பிரம்மராயரும் உடனே கிளம்பினார்கள்.

கருவூர்த்தேவர் அவர்களை வரவேற்றார். விஷயம் கேட்டார். கண்களை மூடிக்கொண்டார்.

"அருண்மொழி... கை, கால் அலம்பிக் கொள். தர்ப்பை ஆசனத்தில் அமர்ந்து கொள். நான் சொல்கிற மந்திரங்களைத் திரும்பச் சொல். எல்லா தேவதைகளையும் இங்கு வரவழைத்து ஆசனம் கொடு. அர்க்யம் கொடு."

அருண்மொழி அவர் சொன்னது போல் செய்தான்.

"இவர்களுக்கு முன்பு நீ ஒரு சத்தியம் செய்து தரவேண்டும். இவர்களைச் சாட்சியாக வைத்து நீ ஒரு வாக்குறுதி தரவேண்டும்."

"என்ன" என்று அருண்மொழி கேட்டான்.

"மிகப் பெரிய சிவன்கோவில் ஒன்று என்னுடைய ஆட்சிக்காலத்திலே நான் எழுப்புவேன் என்று சத்தியம் செய்."

"செய்தால்..." அருண்மொழி கூர்மையாக அவரைப் பார்த்துக் கேட்டான்.

"உனக்கருகே எந்த தீய சக்தியும் வராது. எந்த எதிரியும் உன் எதிரே வாள் உருவி நிற்கமாட்டான். உன்னை அழிக்கின்ற அத்தனை முயற்சிகளும் எதிராக மாறும். எந்த ஆயுதமும் உனக்கு முன்பு பயனற்றுப் போகும்.

அருண்மொழி அக்காவைப் பார்த்தான். அக்கா சரி என்று தலையசைத்தான்.

"என் வாழ்நாளில் என்னால் முடிந்த அளவு மிகப்பெரிய கோயில் ஒன்று எம்பெருமான் ஈஸ்வரன் சிவனுக்கு நிச்சயம் கட்டுவேன். இது சத்தியம்" என்று ஆவாஹனம் செய்த தேவதைகள் முன்பு கைதூக்கி பூமியில் வைத்துச் சத்தியம் செய்தான். சடசடவென்று அந்த வெயில் தேசத்தில் ஒரு மழை பெய்து ஓய்ந்தது.

கருவூர்த்தேவர் சந்தோஷமனார். குந்தவைக்கு நன்றி சொன்னார்.

"நீ இவனை இங்கு அழைத்து வந்தது அரசியலில் மிகப்பெரிய திருப்பம், சோழ சரித்திரம் மறுபடியும் நேர் செய்யப்பட்டுவிட்டது. இதை நான் நன்கு உணருகிறேன். இன்னும் சிறிது காலத்திற்கு நீயும், அருண்மொழியும் அமைதியாக இருங்கள். இன்னும் சிறிதுகாலம் என்றால் பதினாறு வருடங்கள். சனி தசை முடியும் வரை மக்களோடு மக்களாகக் கலந்திருக்கட்டும். மக்களுக்கு நடுவே படுத்துறங்கட்டும். அந்தணர்களோடு அன்பொழுகப் பேசட்டும். வேளாளர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து தரட்டும். தான் என்கிற அலட்டல் சிறிதுமின்றி மக்களோடு மக்களாக அருண்மொழி கலந்து கொள்ளட்டும். இது அருண்மொழியை பலப்படுத்தும், அருண்மொழியை பலப்படுத்தினால் சோழ தேசத்தை பலப்படுத்துவதுபோல் ஆகும்.

மதுராந்தகன்தான் உணமையில் ஆட்சி செய்ய வேண்டும். ஆட்சிக்கு வாரிசு அவன்தான், அந்த விஷயத்தையும் விட்டுக் கொடுத்து விடுவோம். மதுராந்தகனை ஆட்சியிலிருந்து அப்புறப்படுத்தினால் செம்பியன் மாதேவியின் வயிற்றெரிச்சல், மதுராந்தகனின் வயிற்றிறெரிச்சல் நம்மைத் தொந்தரவு செய்யும். அவர்கள் ஆட்சிப்பீடம் ஏறி இந்த அவஸ்தையைத் தாங்காது இது வேண்டாம் என்று உதறிவிடட்டும். பிறகு அருண்மொழி

உள்ளே வரட்டும். இந்த வகையான மாற்றம் தான் சேரர்களை, பாண்டியர்களை, ஈழ தேசத்தவர்களை மண்டிபோட வைக்கும்.

அருண்மொழி உன்னுடைய அடுத்த படையெடுப்பு ஈழதேசத்தை நோக்கி இருக்கவேண்டுமே தவிர, பாண்டிய தேசத்தை நோக்கிப் போகாதே. ஆதித்த கரிகாலன் அங்கு செய்திருக்கிற கலவரங்களால், அந்த மக்கள் வெறுத்துப் போயிருக்கிறார்கள். இன்னும் பத்துப் பன்னிரெண்டு வருடங்களுக்குப் பிறகு அவர்களுடைய மனம் சமாதானமாகும். அடுத்த தலைமுறை வருகிறபொழுதுதான் இந்த வேகம் சற்றுமட்டுப்படும். இப்பொழுது அவர்களுக்கு வேண்டியன கொடுத்து நமது சகோதரர் ஆக்கிக் கொள்ளலாம். அவர்கள் செய்தார்கள் என்பதற்காக நாமும் அவர்களை பதிலுக்குத் தண்டித்து கெட்ட பெயர் வாங்கிக் கொடுத்துவிட்டோம். நீ அங்கு போகாமல் இருப்பதே நல்லது.

சேரர்களை இப்போது தாக்க வேண்டிய அவசியமில்லை. சேர மன்னன் அந்தணர்களிடம் சிக்கிக் கொண்டு அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறான். சேர தேசத்தில் கசப்பு மண்டிக் கிடக்கிறது. இப்போது நாம் போய் அங்கு படையெடுப்பு நடத்தினால் அவர்கள் தங்களுடைய கசப்புகளை மறந்து ஒன்றாவார்கள். அப்படி ஒன்றாவதில் அவர்களைப் பலப்படுத்துவது போலாகும். இன்னும் பத்துவருடம் சேர தேசத்துப் பக்கம் போகாமல் இருந்தால் அங்கு வெகு நிச்சயமாக உள்நாட்டுக் கலகம் ஏற்படும்.

தாழ்த்தப்பட்ட நான்காவது வருணத்தினர் கிளர்ச்சி செய்து அந்தணர்களைப் பழிவாங்க எழுந்திருப்பார்கள். அது சேரதேசத்தின் அடிப்படை விஷயத்தையே மாற்றிவிடும். அப்போது படையெடுப்பை மேற்கொள்வது நல்லது. இதற்குக் கிட்டத்தட்ட பதினாறு வருடங்கள் ஆகும். பதினாறு வருடங்களுக்குப் பிறகு நீ அரியணையில் ஏறி அமர்ந்ததும், முதல் வேலையாக காந்தளூர் சாலையை நோக்கி உன்னுடைய படையை நடத்தி அங்கிருக்கின்ற கடிகைகளை அடித்துத் துவைத்து அந்த சேர தேசத்து அந்தணர்களைக் கடுமையாகத் தண்டித்து விடு. அதுவரை அவர்களுக்கு நல்ல காலம். வாழ்ந்துவிட்டுப் போகட்டும்.

நானா, அரியணையிலா. அய்யோ என் தமையனார்... ஆதித்த கரிகாலர்... அருண்மொழி நெற்றியைச் சுருக்கினார்.

அதற்கு முன்னால் ஈழத்தின் மீது ஒரு படையெடுப்பு நடத்தி அந்த மன்னர்களுக்கு ஒரு பயமுறுத்தலை ஏற்படுத்தியது.

பிரம்மராயரே... உங்களுக்கும் கூட இது மிகவும் பொருந்தும். அருண்மொழி வெற்றி பெற வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொள்ளலாம். அந்தணராகிய நீங்கள் சேனாதிபதி பதவியைத் துறந்துவிட்டு அல்லது வெறுமே ஒப்புக்குச் சேனாதிபதியாக இருந்து உங்கள் ஊருக்குப் போய் காளி உபாசனை செய்து கொண்டிருக்கலாம். அங்கே செம்பியன்மாதேவி செய்யும் காளி உபாசனைக்கு எதிரான ஒரு காளி உபாசனை இங்கே உங்களுடைய ஊரில் நடத்தலாம்.

எட்டு கரங்கள் கொண்ட அழகிய காளி பொம்மையை உங்கள் ஊரிலேயே குளக்கரைக்கு அருகே நிர்மாணம் செய்து இடையறாது காலையும், மாலையும் பூஜை செய்து சாத்வீகமான நைவேத்யங்கள் செய்து அவளுக்குண்டான பீஜாட்சர மந்திரங்களை அந்தணர்களை விட்டும், பெண்களை விட்டும் செய்யச் சொல்லுங்கள். சோழ தேசத்திற்காக அந்த மந்திர ஜபத்தை தத்தம் செய்யச் சொல்லுங்கள். அது நல்ல பலனைக் கொடுக்கும்.

குந்தவை நீ திருமணம் செய்து கொள்ளவேண்டிய தருணம் வந்து விட்டது. உன்னைத் தேடி உன் புருஷன் வந்து கொண்டிருக்கிறான். உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டு தனக்கு அப்படிப்பட்ட ஒரு மனைவி வேண்டும் என்று ஆசைப்பட்டு தஞ்சையை நோக்கி வந்து கொண்டிருக்கிறான். அழகன், அறிவுள்ளவன், அமைதியானவன், அவனால் உன் தம்பிக்கு மிகப் பெரிய நன்மைகள் ஏற்படப் போகின்றன.

விவகாரங்களில் மனம் விட்டுப் பேச அருண்மொழிக்கு ஆளில்லை. அவன் உன்னோடுதான் பேசிக்கொண்டிருக்கிறான். இது போதாது. நாளாக நாளாக அனுபவம் வாய்ந்த போர்த்திறன் கொண்ட ஒரு நபரோடு இது பற்றிப் பேசுவது அருண் மொழிக்கு நல்லது. அப்படிப்பட்ட நபராக உன் புருஷன் விளங்குவான்.

நீ சந்திக்க நேரும்போது அவனுக்கு வயிறார உணவு கொடுத்து, தூங்குவதற்கு இருப்பிடமும் ஏற்பாடு செய். உன்னுடைய கனவில் அவனுடைய காரியங்கள் அவனுக்குத் தெளிவாக்கப்படும். அவன் சோழர்களைப் பற்றிய தன்னுடைய எதிர் கொள்கைகளை விட்டுவிட்டு முற்றிலும் உங்களுக்கு ஆதரவாகத் திரும்புவான்.

எதற்கும் எவரும் பயப்பட வேண்டாத, இது சோதனைக் காலம். வண்ணத்துப்பூச்சிகள் கூடுகட்டி உறங்குவதில்லையா?

அதுபோல அமைதியாய் உங்கள் மனம் உறங்க வேண்டிய காலம். எது நடந்தாலும் பதட்டப்படாமல் இறைவன் வகுத்த வழி என்று நீங்கள் நினைக்க வேண்டிய காலம். ஆதித்த கரிகாலனைப் போல் படபடப்பு அடையாமல் பத்து விதமான கட்டளைகள் ஒரே நேரத்தில் பிறப்பிக்காமல், தெளிவாகச் சிந்திக்க வேண்டிய காலம்.

அருண்மொழி... கோயில் கட்டுகிறேன் என்று சொல்லி விட்டு தினந்தோறும் நீ நினைவுபடுத்திக் கொள்ள வேண்டு மென்பதற்காக மூன்று காரியங்கள் செய்ய வேண்டும். தினமும் திருநீறு பூசவேண்டும். தினமும் ஏதாவது ஒரு சிவனடியார்க்கு உணவு கொடுக்க வேண்டும். மண்ணிலோ, கல்லிலோ சிவலிங்கம் பார்த்தால் கண்மூடி நின்று ஒரு முறையேனும் நீண்டு நெடுஞ்சாண்கிடையாக விழுந்து நமஸ்கரிக்க வேண்டும். இந்த மூன்று விஷயங்களைச் செய்கிற போதெல்லாம் 'ஐயனே, உனக்காக மிகப்பெரிய கோவில் ஒன்று கட்டுவேன்' என்ற சங்கல்பத்தை நீ சொல்லிக் கொள்ள வேண்டும்."

அருண்மொழி சரி என்று உறுதி கொடுத்தான். தன்னுடைய சங்கல்பம் நிறைவேற ஆசீர்வதிக்குமாறு கருவூர்த் தேவர் காலில் விழுந்து நமஸ்கரித்தான்.

பிரம்மராயரின் காலில் விழுந்ததும் வணங்கினான். பிரம்மராயர் எழுந்து அருண்மொழியைத் தழுவிக் கொண்டார்.

## 54

பிரம்மராயர் நிலை கொள்ளாது முன்னும் பின்னும் அலைந்தார். சட்டென்று நின்று உரக்கப் பேசினார்.

கருவூர்த்தேவரே... இப்படிப்பட்டவனைத்தான் அரசனாக்க வேண்டும் என்று அலறிக் கொண்டிருக்கிறேன். என் பேச்சு சபையேறவில்லை. இப்போது இருக்கிற சுந்தரசோழரும் சரியில்லை. ஆதித்த கரிகாலனும் சரியில்லை. மதுராந்தகனும் சரியில்லை. அருண்மொழி மட்டுமே சரி. கருவூர்தேவரே... உடனடியாக அருண்மொழியை அரசனாகிவிட்டால் பல பிரச்சனைகள் தீருமே..."

"இல்லை. சோழதேசம் சிதறுண்டு போகும்." அடிக்குரலில் அந்த சித்தப் புருஷன் பதில் சொன்னார்.

"அப்படியானால் கருவூர்த் தேவரே இவர்களை எங்கு குடியமர்த்துவது?"

"நீங்கள் சொல்வது புரிகிறது."

"குந்தவையும், அருண்மொழியும் உடையார்குடிக்குப் போய்விடட்டும். குந்தவை உடையார்குடியிலிருந்து இன்னும் வடக்கே போய் காஞ்சிபுரமோ அல்லது மேல்பாடியோ போய் தங்கிக் கொள்ளட்டும்."

"அவளுக்குத் திருமணம் ஆகி விட்டால் அவளுடைய கணவன் வீட்டிற்குத்தானே போக வேண்டும். எனவே இதைப் பற்றி நாம் அதிகம் அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அருண்மொழிதான் முக்கியம்."

"உடையார்குடி ஒரு நல்ல இடம். அங்குள்ள மக்கள் சோழதேசத்தின் விசுவாசிகள். வடக்கே ஒரு நாள் பயணம். நடுநாடு போய்விடலாம். அருண்மொழியைப் போல அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த இளைஞனுக்கு உடையார்குடி ஒரு சரியான பிரதேசம்.

ஏரிப்பாசனத்தால் மக்கள் வாழ்க்கை செழிப்பாக இருக்கிறது. சந்தோஷமாக இருக்கிறது. அந்தச் சந்தோஷத்திற்கு நடுவே வாழ்க்கையை அருண்மொழி நன்கு அனுபவிக்கட்டும்."

"பழையாறையில் என்ன நடக்கிறது என்பதை நீங்கள் அவ்வப்போது தூதுவர்கள் மூலம் செசல்லியனுப்புங்கள். ஒரு நல்ல ஒற்றர் படையை நீங்கள் தயார்செய்து கொள்ளுங்கள். அமண்குடியிலிருந்து பழையாறைக்குத் தினம் போய்விட்டு வாருங்கள். இங்கு இரண்டு நாட்களுக்கு ஒரு முறை வந்து போனால் போதுமானது. பழையாறையில் ஆட்சி செய்ய அவர்களுக்கு உதவி செய்ய பலபேர் இருக்கிறார்கள். உங்களின் முக்கியத்துவம் சற்று மட்டாகப் போகும் காலம் இது. நீங்கள் தாராளமாக உங்கள் ஜபதபங்களில் ஈடுபாடு கொள்ளலாம். பிரம்மராயரே... எப்படி ரகசியமாக வந்தீர்களோ அப்படியே ரகசியமாகப் போய்வாருங்கள்."

கருவூர்தேவர் விடை கொடுத்தார். குந்தவையும், அருண்மொழியும், பிரம்மராயரும் வீட்டை விட்டு வெளியே போகும்போது அவர்களை உற்றுப் பார்த்தார்.

"இன்னும் சில தினங்களில் மோசமான நிகழ்ச்சிகள் ஏதேனும் நடக்கலாம். அதற்கு மனதைத் தயாராக்கிக்

கொள்ளுங்கள். பதட்டமில்லாமல் இருக்க ஒவ்வொரு வினாடியும் பழகுங்கள்."

"அப்பாவிற்கு ஆபத்து ஏதும் வருமா?"

"வரலாம்"

கருவூர்தேவர் மெல்லச் சொன்னார். அவர்கள மூவரும் குதிரை ஏறி மௌனமாக பழையாறை நோக்கிப் புறப்பட்டார்கள்.

மறுநாள் பிற்பகலில் உடையார் குடி நோக்கி தங்களுடைய உடைமைகளுடன் அருண்மொழியும் குந்தவையும் நகர்ந்தார்கள்.

"உடையார் குடி சிவன் கோயிலில் ஒரு பிரார்த்தனை இருக்கிறது.'' என்று குந்தவை சொல்ல, அக்காவிற்குத் துணையாகப் போவதாய் அருண்மொழி சொன்னான்.

அரச குடும்பத்தினர் யாரும் நம்பவில்லை. ஆனால் சந்தோஷப்பட்டார்கள்.

செம்பியன்மாதேவியின் அரண்மனை பூஜை மணி ஓசை கேட்டுக் கொண்டே இருந்தது. மந்திர சப்தங்கள் ஒலித்து கொண்டே இருந்தன. பூரணாஹுதி நடந்து முடிந்ததும் ஒரு துணி மூட்டை அவளிடம் கொடுக்கப்பட்டது.

"துணி மூட்டையில் பல வேர்கள் இருக்கின்றன. அந்த வேர்களுக்குள் பல சக்திகள் அமர்ந்திருகின்றன. நீங்கள் யாரை நோக்கி ஏவ வேண்டுமோ அவர் பெயரைச் சொல்லி இந்த துணி மூட்டையைப் பிரித்தால் போதும் - க்ஷணநேரத்தில் இதிலுள்ள சக்திகள். நீங்கள் தாக்கச் சொன்னவரைத் தாக்கி விட்டு வரும். அவர் வலிவு மிகுந்தவராக இருந்தால் அவருக்குப் பல்வேறு விதமான மயக்கமான நிலையைக் கொடுத்து, அவரை உளற வைத்து மடங்க வைத்து விடும்.

சம்பந்தப்பட்டவரை உச்சியிலிருந்து கீழே தள்ளியோ, ஆற்றில் தள்ளியோ அல்லது சரியான இடத்தில் இடரவிட்டோ பழி தீர்த்துவிடும். சிறிதளவு ரத்தம் சிந்தினால் கூடப் போதும். அந்த ரத்தத்தை உறிஞ்சிக் கொண்டு அவர்களுக்குள் நோயைக் கொண்டு வந்துவிடும். சித்தபிரமை ஏற்பட்டுவிடும். எப்படி யாவது, எங்கேயாவது இடித்துக் கொண்டு அவன் சிறிதளவு ரத்தம் சிந்த வேண்டும் என்பதே முக்கிய நோக்கம்.

அப்படி ரத்தம் சிந்தவைக்க ஒரு சக்தி ஏற்பாடு செய்கிறபோது மற்ற சக்திகள்அந்த ரத்தத்தைக் குடிப்பதற்கு

ஆவலாகப் பின்தொடர்ந்து அலையும். அவர் மரணம் மிகக் கோரமாக இருக்கும்."

நிதானமாக விவரித்தபடியே சேரதேசத்து அந்தணர்களான ரவிதாசனும், பரமேஸ்வரனும் ஒரு மூட்டையை மரியாதையுடன் செம்பியன் மாதேவியிடம் கொடுக்க, செம்பியன் மாதேவி அதை வாங்கிக் கொண்டாள்.

தரையில் வைத்தாள். உட்கார்ந்து கொண்டாள். கைகூப்பினாள். மூட்டையைப் பிரித்தாள்.

"என் பிள்ளைக்கு எதிராக தன்னை நிலைநிறுத்திக் கொண்டிருக்கின்ற ஆதித்த கரிகாலன் அடியோடு ஒழிய வேண்டும்."

முடிச்சை அவிழ்த்தாள். உள்ளுக்குள் இருந்த வேர்கள் புரண்டு விழுந்தன. ஏதோ நகர்ந்து போனதுபோல எல்லோரும் உணர்ந்தார்கள்.

ஆறாவது கோப்பை மதுவைக் குடிக்க முடியாமல் கீழே போட்டு விட்டு படுக்கையில் சாய்ந்த ஆதித்த கரிகாலன், தன்மீது ஆறேழு பேர் ஏறி உட்கார்ந்து கொள்வதை உணர்ந்தான்.

"யாரது" என்று உதறி எழுந்தான். மறுபடியும் தரையில் விழுந்தான்.

ஒரு மனிதன் எதிரிகளோடு சண்டையிட்டு இறந்து போகலாம். காட்டு மிருகங்களால் சூழப்பட்டு அவைகளால் தாக்கப்பட்டும் மரணமடையலாம். நோயுற்று வீழலாம். கல் தடுக்கி இறப்பு வரலாம். ஆனால் யாரோடு சண்டை போடுகிறோம். எவரால் தாக்கப்படுகிறோம். எதனால் தம்மை மரணம் நெருங்குகிறது என்று தெரியாமல் சூட்சும சக்திகளால் சிறிதுசிறிதாகக் கொல்லப்படுவதைவிட மிகக்கொடுமையான விஷயம் இந்த உலகத்தில் வேறு எதுவும் இல்லை. இதனாலேயே ஏவலும், பில்லி சூன்யமும் இழிவான விஷயங்களாகக் கருதப் படுகின்றன. ஆண்மையற்ற பேடித்தனமாய் வர்ணிக்கப் படுகின்றன.

நல்லவர்கள் இம்மாதிரியான வேலைகளைச் செய்ய மாட்டார்கள். மனிதர்களிலே கேவலமானவர்கள்தான் சூட்சும சக்திகளைத் தங்கள் வசத்திற்குக் கொண்டு வந்து இந்த

சக்திகளின் மூலம் தங்களின் எதிரிகளை அழிக்க முற்படுகிறார்கள்.

ஆதித்த கரிகாலன் தவித்தான். முன்னும், பின்னும் அலைந்தான். படுக்கையை விட்டு வெளியே வந்தான். அவனைத் தொடர்ந்து பல பேர் வருவது போல ஒரு பிரமை இருந்தது. யாரோ கைகளையும், கால்களையும் பிடித்து இழுத்து இடற வைப்பது போல ஒரு நினைப்பு எழுந்தது.

தப்பு மதுவின் மீதா தன் உடம்பின் மீதா - மனோ நிலையின் மீதா அல்லது இந்த இடத்தின் மீதா என்று புரியாமல் தவித்தான்.

யாரையேனும் உதவிக்குக் கூப்பிட வேண்டும் என்று வாய் திறந்து போது வாயும் அடைக்கப்பட்டது. தொண்டையிலிருந்து மூச்சு மட்டுமே வெளியே வந்தது. குரல் வெளியே வரவில்லை. பலமுறை முயற்சி செய்தும் தொண்டையில் இருக்கின்ற நாளங்கள் அசையவில்லை. அந்தக் குரல் நாளங்களையும் யாரோ இறுக்கிப் பிடித்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது வெறும் கர்ர்... என்று அடிச்சத்தமாக ஒன்று வெளி வந்தது.

தான் குடித்த மது மிக மோசமானது; இனி குடிக்கவே கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டான். இப்படியொரு நிலைமை தனக்கு வந்ததே இல்லையே. இதற்கு முன் பலமுறை மது குடித்தும் இந்தவொரு அனுபவத்தை பெற்றதேயில்லையே... ஏன் இப்படி... ஏன் இப்படி... என்று புரியாமல் தவித்தான்.

மூச்சுத் திணறியது. நல்ல காற்று வேண்டுமென்று தோன்றியது. உடம்பெல்லாம் எரிந்தது. அரிந்தது. வியர்வை பொங்கியது. துர்நாற்றம் அவனைச் சுற்றி இருந்தது. தன் உடம்பில் இருந்து வருகிறதா. வாயில் இருந்து வருகிறதா அல்லது இந்த மாடிப்படியில் இருந்து வருகிறதா என்று தெரியாமல் தவித்தான். வேகமாகப் படியேறி மாளிகையின் மேல்மாடிக்குப் போனான்.

அது கடம்பூர் அரண்மனை சோழ எல்லைகளை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு இரவு அங்கு தங்க நேர்ந்தது. தஞ்சாவூர் அரண்மனையோடு ஒப்பிடும்போது இந்தக் கோட்டை மிகச்சிறியது. மண்சுவர் எழுப்பப்பட்டது. அதேபோல உள்ளுக்குள் இருக்கின்ற அரண்மனையும் விசாலமானது இல்லை. அவ்வப்போது பல அரசர்களால்

பல்வேறு கோணங்களில் கட்டப்பட்டு விசித்திரமான உருவத்தில் இருப்பது. மனம் போனபடி பல தலைமுறையில் பலபேர் கைவைத்துக் கட்டியதால் இடதும், வலதுமாகத் திரும்பியிருந்தது. எந்த அமைப்பும் இல்லாமல் இருந்தது. மேல் மாடத்திற்கு ஏறி சில்லென்று காற்றுப் பட, ஆதித்த கரிகாலன் மெல்ல சுதாரித்துக் கொண்டான்.

அரண்மனை உச்சியிலிருந்து பார்க்கும்பொழுது கோட்டைச்சுவரில் யாரோ இரண்டு பேர் ஏறி நிற்பது தெரிந்தது. கோட்டைக்குக் காவல்கள் என்று எவரையும் காணோம். அல்லது காவலிருப்பவர்கள் முறை வைத்து தூங்கப் போய் விட்டார்கள் என்று தோன்றியது. ஒருவர் தூங்கினால் போதும். பட்டாளமே இரவு நேரத்தில் தூங்கப் போகும்.

தஞ்சாவூர் அரண்மனையில் இரவுக் காவல், பகல் காவல் என்று தெளிவான பிரிவுகள் உண்டு. காவலில் தூங்கியவருக்குக் கசையடி உண்டு. ஆனால் இங்கே அடிப்பவர்களும் இல்லை. அணைப்பவர்களும் இல்லை. கொடும்பாளூர் அரண்மனை வெறும் சோம்பேறிக் கும்பலாக இருந்தது.

இப்பொழுது மட்டும் கையில் ஒரு வில்லிருந்தால், இரண்டு அம்புகள் இருந்தால் கோட்டை ஏறி நிற்பவர்கள் இரண்டு பேரையும் தொலைத்து விடலாம்.

இருட்டில் நிழலாக அந்த உருவங்கள் தெரிந்தன. சுவரில் ஒன்றன்பின் ஒன்றாக நகர்ந்தன. மிக எளிதாய் மரத்தில் தாவி, அங்கிருந்து தரையில் இறங்கின.

"டேய் யாரது" என்று ஆதித்த கரிகாலன் மறுபடியும் உரக்கக் கத்தினான். ஆனால் சப்தமெழவில்லை.

மதில்சுவரைப் பிடித்துக் கொண்டு எங்கே என்று பார்த்தான். தலை சுற்றியது. யாரோ தள்ளிவிடுவது போல் தோன்றியது. யாரோ காலைவாரி, உச்சியிலிருந்து தரையில் வீச முயற்சிப்பதுபோல் இருந்தது. வேறு யாரோ தோளில் அமர்வதுபோல் இருந்தது. இன்னொருவர் வயிற்றுக்குள் புகுந்து கெடுதல் பண்ணுவது போல் இருந்தது.

ஆதித்த கரிகாலனால் இந்த இம்சையைத் தாங்க முடியவில்லை. சட்டென்று அவன் இறைவனை நினைவு கூர்ந்தான். ஆதித்த கரிகாலன் இறைவனை நினைவு கூர்ந்து பல வருடங்கள் ஆகிவிட்டன.

"இறையே, இறையே, தஞ்சை தளிக்குளத்தார் ஈஸ்வரனே... வந்தனம்... எனக்கேன் இந்த வேதனை எனக்கெதற்காக இந்த இம்சை, என்னை யார் என்ன செய்கிறார்கள். மதுவின் மயக்கமா. வேறு ஏதேனும் விஷம் கலந்து விட்டார்களா. என்ன நடக்கிறது என்னைச் சுற்றி இதுவரை அனுபவித்திராத ஒரு இம்சையை நான் அனுபவிக்கிறேன். இறையே, இறையே, என் சிவபெருமானே..." ஆதித்த கரிகாலன் கைகூப்பினான்.

சட்டென்று சகலமும் விலகியது போல் ஒரு விடுதலை உணர்வு ஏற்பட்டது. காற்றின் குளுமை அதிகரித்தது. மனம் தெம்படைந்தது போல் தெரிந்தது. அவன் சுற்றும் முற்றும் பார்த்தான்.

இப்பொழுது அவனுக்கு இருபது முழ தூரத்தில் சிலபேர் கும்பலாய் நின்றிருந்தார்கள். அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு சிரிப்பொலி அங்கிருந்து வந்தது.

ஆதித்த கரிகாலன் பயந்தான். பயத்தைத் துடைத்து மறுபடியும் அவர்களை உற்றுப்பார்த்தான். அவர்கள் மீண்டும் சிரித்தார்கள். ஆதித்த கரிகாலன் மறுபடியும் பயந்தான்.

மேல் தளத்திலிருந்து கீழே இறங்கினான். அவர்கள் அவனைத் தாண்டிக் கொண்டு முன்னே போனார்கள். முன்னேயும் இருந்தார்கள். பின்னேயும் இருந்தார்கள். எங்கு திரும்பினாலும் அங்கு நின்றார்கள். ஆதித்த கரிகாலன் மாடிவளைவில் நின்று கொண்டான். என்ன செய்வது என்று யோசித்தான்.

எங்கோ ஆட்கள் நகருகிற அரவம் கேட்டது. மறுபடியும் குரல் கொடுக்க முயற்சித்தான். குரல் எழும்பவில்லை. மெல்ல தடவி இருட்டில் தரையிறங்கினான். படிகள் போய்க் கொண்டே இருந்தன. எந்த இடத்திலும் ஏறும்பொழுது சில படிகளே இருந்தது போல தோன்றியது. ஆனால் இறங்கும்போது படிகள் அதிகம் இருந்தன. எங்கே இருக்கிறோம் என்று தெரியவில்லை. ஆதித்த கரிகாலன் திணறினான். மறுபடியும் மூச்சு முட்டியது. துர்நாற்றம் வீசியது. கண்களில் வலி ஏற்பட்டது. காதுகளில் ரீங்காரம் அதிகரித்தது. நெஞ்சில் பாறாங்கல்லை வைத்தது போல் கனத்தது.

உடம்பில் ஏதோ தவறு. மிகப் பெரிய தவறு. மரணம்போல் வருகின்ற தவறு. ஆதித்த கரிகாலன் கைகளையும், கால்களையும் உதறி நோக்கிக் கொண்டான். மறுபடியும் கைகூப்ப

முயற்சித்தபோது, அந்தக் கைகள் தட்டிவிடப்பட்டன. இருட்டில் கைகூப்பு பலமாக இருந்தது. எதையேனும் பிடித்து நிற்கும்படி தோன்றியது.

ஆதித்த கரிகாலன் துழாவினான். ஏதோ தட்டுப்பட்டது. மிருகத்தின் உடம்புபோல் தோன்றியது. வேகமாகத் தடவ, அது ஏதோ ஒரு மிருக பொம்மை என்று தோன்றியது. ஆதித்த கரிகாலன் அந்த மிருகத்தைக் கட்டிக்கொண்டான். நன்கு மேலும், கீழும் தடவிப் பார்க்கும்போது ஒரு புலி, வைக்கோல் அடைக்கப்பட்ட புலி என்று தோன்றியது.

உறுதியாய் பூமியில் நிற்க ஆதித்த கரிகாலன் அதைக் கட்டிக் கொள்ள, ஒரு சாளரம் திறந்தது. சாளரத்தின் வழியே வெளியே இருக்கின்ற இருட்டு உள்ளே வந்தது. உள்ளே இருக்கும் இருட்டுக்கு வெளியே இருக்கும் இருட்டு மெல்லியதாக இருந்ததால், அந்த மெல்லிய இருட்டின் வழியே யாரோ உள்ளே வருவது தெரிந்தது.

கற்கள் தட்டும் ஓசை கேட்டது. பஞ்சுகள் பற்றிக் கொண்டன. பஞ்சிலிருந்து பந்தம் பற்றவைக்கப்பட்டது. ஆதித்த கரிகாலன் தனக்கு உதவிக்கு ஆள் வந்துவிட்டதாக நினைத்தான்.

“இத்தனை நேரம் எங்கேயடா போயிருந்தீர்கள்” என்று சினந்து கொண்டான்.

“என்ன கோட்டை இது. என்ன காவல். யார் எங்கிருக் கிறார்கள் என்று எவருக்கும் தெரியவில்லை. எல்லோருமே உறங்குகின்ற கோட்டை கொடும்பாளூர் கோட்டையாகத் தானடா இருக்கும். யார் நீ” என்று அதட்ட, எதிரேயுள்ளவன் மௌனமாக எழுந்திருந்தான்.

அவன் கடம்பூர் ஆளாகத் தெரியவில்லை. அவன் அகலமும் உயரமும் நடுநாட்டு வீரர்களை விட அதிகமிருந்தது. அவன் சிகை அலங்காரம் வேறுவிதமாக இருந்தது. அவன் குடுமி முன்னே தொங்கியது. ஆதித்த கரிகாலனுக்கு சரேரென்று ஒரு பயம் கவ்வியது. சூழ்ந்து ஆதித்த கரிகாலன் முகத்துக்கு நேரே வந்தது. ஆதித்த கரிகாலன் பயந்தான்.

வேற்று மனிதர்கள் உள்ளே புகுந்து விட்டார்களா. இந்த இடத்தில் தங்கியதே தவறா, கடம்பூர் அரண்மனையில் இவ்வளவு எளிதாக ஆட்கள் உள்ளே நுழைகிறார்கள் என்றால் தவறு கடம்பூர் அரண்மனையின் மீதா... அல்லது இது தெரியாத தன் மீதா என்று கலவரமானான்.

சுளுந்து வந்த மனிதர்களுக்குப் பொதுவாக நகர்த்தப் பட்டது. அவர்கள் முகம் வெளிச்சத்தில் நன்கு தெரிந்தது.

ரவிதாசன், இன்னொருவன் பரமேஸ்வரன். இவர்கள் அந்தணர்கள், மதுராந்தகனின் ஆட்கள். செம்பியன் மாதேவி ஓலை கொடுத்து அழைத்து வந்து பதவி கொடுத்துப் பாராட்டப்பட்ட முன்குடுமிச் சோழியர்கள். அதாவது எதிரியின் கையாட்கள்.

அவர்களுக்கு இங்கென்ன வேலை... எதற்காக என்னைத் தேடி வந்திருக்கிறார்கள். ஏன் சாளரத்தின் வழியாகக் குதித்தார்கள். சுற்றும் முற்றும் ஆதித்த கரிகாலன் பார்த்தான். ஏதேனும் ஆயுதம் கையிலிருந்தால் நல்லது என்று தோன்றியது.

செத்தபுலியின் கழுத்தில் ஒரு சங்கிலி கட்டப்பட்டிருந்தது. சங்கிலி கோட்டைச் சுவர் வரை போயிற்று. இதில் அலங்காரமாக இருந்தாலும் இப்போதைக்கு உதவும். முழு பலத்தோடு புலியின் கழுத்தில் இருந்த சங்கிலியை பளிச்சென்று அறுத்தான். புலி கழுத்து துண்டாக விழுந்தது. மறுமுனையில் சுவரில் பதிக்கப்பட்டிருந்ததையும் இழுத்தான். சுவரில் இருந்த கல்லோடு சங்கிலி பெயர்ந்து வந்தது.

சட்டென்று எதிரே இருப்பவரின் மீது வீச, சுளுந்து எகிறி வேறொரு பொம்மையின் மீது விழுந்தது. அவர்கள் நகர்ந்து கொண்டார்கள். வாட்கள் உருவும் ஓசை தெளிவாகக் கேட்டது. ஆதித்த கரிகாலன் வயிற்றில் மறுபடியும் ஒரு பயம் உணர்ந்தான்.

## 55

புஜவலிவும், மனத்திண்மையும் உள்ள ஒரு க்ஷத்திரியனுக்கு போர்க்களம் நோக்கிப் போவது போல சந்தோஷம் உலகத்தில் வேறு எதுவும் இல்லை.

ஒருவன் தன்னை, தன் இருப்பை நிரூபிப்பதற்கு எந்த இடம் உகந்ததோ– அந்த இடத்தை மிகுந்த காதலோடு அணுகுகிறான்.

அரசவித்தான ஆதித்த கரிகாலன் சிறு வயது முதற் கொண்டே தன்னைப் பல்வேறுவிதமாக போர்க்களத்திற்காகத் தயார் செய்து கொண்டு, போரை விரும்பிப் பார்த்து, விரும்பி ஈடுபட்டு அதில் வெற்றியும் பெற்றான். ஒருவேளை வெற்றி

பெறாமல் தோல்வியுற்றிருந்தால் போர் எதற்கு? பூமி சமாதானமாக இருக்க வேண்டுமென்று ஏதேனும் பொய்யாய் மற்றவர்கள் கூறியிருக்கலாம். ஆனால் முழு ஈடுபாட்டோடு போர்ப் பயிற்சியில் ஈடுபட்டதால், போரை விரும்பி நேசித்துக் கவனித்ததால் வெற்றிகள் எளிதில் வந்தன. அதுவும் தவிர, பாட்டனார் இடங்களை தந்தையார் இழந்துவிட, அதை மீட்கின்ற மிகப் பெரிய பொறுப்பு பேரனுக்கு வந்து சேர்ந்தது. முதல் வெற்றி அடுத்த வெற்றி, அதற்கடுத்த வெற்றி என்கிற பல போர் வெற்றிகள் ஆதித்த கரிகாலனைப் போர் வெறியனாக மாறச் செய்தன.

குமரி முதல் இமயம் வரை சோழ தேசம் பரந்திருக்க வேண்டும். அதை நின்று ஆளுமை செய்ய வேண்டுமென்ற பேரவா ஏற்பட்டது. கங்கை வரை போக வேண்டும் என்றும், கடல் கடந்து புலிக்கொடி பறக்க வேண்டும் என்றும் அவன் மனதார விரும்பினான்.

என்ன செய்வது என்று தெரியாமல் வேகம் மட்டுமே தன்னிடம் வைத்திருந்தான். அவனை வழிப்படுத்த சரியான உதவி அவனுக்குக் கிடைக்கவில்லை. கிடைத்த பிரம்ம ராயரையும் அவன் முற்றிலுமாய் பயன்படுத்திக் கொள்ள வில்லை.

அந்தணர்களோடு நான் பேசுவதில்லையென்று எடுத்த எடுப்பிலேயே அவன் சொல்ல, அவர் அவனிடமிருந்து பின் வாங்கினார். தன்னால் சண்டையிட முடியும் என்று அவர் நிரூபித்தும் கூட, அவருடைய ஈவு இரக்கங்களை, 'இப்போது போர் வேண்டாம் பிற்பாடு செய்து கொள்ளலாம்' என்ற ஒத்திப் போடல்களை ஆதித்த கரிகாலன் அறவே வெறுத்தான்.

மதுரையை ஜெயித்தாகிவிட்டதென்றால் ஈழத்திற்குப் போக வேண்டும்: ஈழம் ஜெயித்தாகி விட்டதென்றால் கடாரத்திற்குப் போக வேண்டும்; இடையறாது எல்லா நாட்களும் போரில் ஈடுபட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஆதித்த கரிகாலனுடைய அவஸ்தையை அவர் கடுமையாக மறுத்தார்.

"நீ மட்டுமே போர் செய்யவில்லை. உன் பின்னால் பல லட்சம் வீரர்கள் வருகிறார்கள். தங்கள் குழந்தையை விட்டு, குடும்பத்தை விட்டு உனக்காக வருகிறார்கள். அவர்களுக்கு ஓய்வு தேவை. படையை இடையறாது போரில் ஈடுபடுத்திக்

கொண்டால் நிச்சயம் தோல்வி கிடைக்கும்...” என்று அவர் சொன்னதை அவன் நம்பத் தயாராக இல்லை.

அவனுடைய தகப்பனார் சுந்தர சோழரின் மனச் சோர்வும் அவனுக்கு வெறுப்பாக இருந்தது.

“இவர் ஒரு சிவனடியார். இவருக்கு நீ மரியாதை செய்ய வேண்டும்” என்று தாயோ, பாட்டியோ கட்டளையிடும்போது, “இதையெல்லாம் நீங்கள் செய்து கொள்ளுங்கள். என்னைக் கூப்பிடாதீர்கள்” என்று ஒரே வார்த்தையில் மறுத்து விடுவான்.

“குறைந்த பட்சம் எழுந்து நின்று கைகூப்பக்கூடாதா” என்று குடும்பத்தார்கள் கேட்க, மிகுந்த அலுப்போடு எழுந்து நிற்பான். சீக்கிரம் முடியுங்கள் என்று சிவனடியார் முன்பே சீறுவான்.

சோழர் குலத்தில் முற்றிலும் வேறான ஒரு பிள்ளை பிறந்திருப்பதைக் கண்டு அரச குடும்பத்தினர் மனம் மருகினார்கள்.

இளவரசனாய் இருக்கும்பொழுதே இத்தனை வேகமாய் இருக்கிறானே... இவன் அரசனானால் இந்த பூமி தாங்குமா என்று கவலைப்பட்டார்கள்.

‘நல்லவர்களின் நட்பை உதறி விட்டு எப்பொழுதும் யுத்தம் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவனால் தேசம் சுபிட்சமாய் விளங்காதே... பாழடைந்து போகுமே’ என்று பேசிக் கொண்டார்கள். தெளிவுமிக்க படை வீரர்களுக்கும் அவனுடைய போக்கு பிடிக்கவில்லை.

இரவு நேரத்தில் பாண்டியர்கள் உள்ளே புகுந்து கிராமங்களைச் சூறையாடுகிறார்கள் என்று கேள்விப்பட்டதும், அதேவிதமாய் மதுரையைச் சூறையாட வேண்டும் என்றும் அவன் விரும்பினான்.

படைத்தலைவர்கள் தேவையில்லை. அவர்கள் பத்து பேரும், இருபது பேருமாக வந்து கொள்ளையடிக்கிறார்கள். இரவு நேரம் வருகிறார்கள். நம்மிடம் ஒரு லட்சம் வீரர்கள் உண்டு. வெறுமே விடியற்காலையில் உள்ளே நடந்து போனால், மொத்த மதுரை நகரும் வசப்படும் என்று சொன்னாலும், அவன் மதுரை வசப்படுவதைவிட, அழிக்கப்படுவதையே அதிகம் விரும்பினான்.

“என் குடிபடைகளையும், வீரர்களையும் அடித்துக் கொன்றாய் அல்லவா. அதேவிதமாக நானும் ஈடுபட

விரும்புகின்றேன். இதைவிட பல மடங்கு மோசமாக நான் உனக்குப் பாடம் கற்பிக்க விரும்புகின்றேன். அடிப்பதின் வேதனை தெரிந்ததால்தான் அடித்தால் வலிக்கும் என்று உணர்ந்தால்தான் அடுத்த முறை அடிக்காதிருப்பாய்" என்று சொல்லி இரவு நேரத்தில் படையெடுப்பை நடத்தினான்.

கதறக் கதற அடித்தான். பகல் நேரத்தில் மிக கொடூரமான தண்டனைகள் நிறைவேற்றப்பட்டன. அந்த குடும்பத்தைச் சேர்ந்த எவராயினும் ஆறு வயதிலிருந்து அறுபது வயது வரை உள்ளவர்கள் சவுக்கால் விளாசப்பட்டார்கள், உடையின்றி தரையில் உட்கார வைக்கப்பட்டார்கள்.

ஆதித்த கரிகாலனின் வேகம் சோழப்படைகளுக்குக் கலவரம் கொடுத்தது. பிரம்மராயரிடம் வந்து முறையிட்டார்கள்.

"இவர்தான் இனி படைக்குத் தலைமை தாங்க வேண்டுமா. இவர்தான் அரசராக வருவாரா. இது நல்லதல்ல. இவர் தன் வேகத்தைக் குறைத்துக் கொண்டால் ஒழிய படைகள் நிம்மதியாக இருக்காது. படைகள் நிம்மதியாக இல்லை யென்றால் போரில் ஏதேனும் ஒரு நாள் தோல்வி நிச்சயம். புறங்காட்டி ஓடுகின்ற ஒரு நேரம் வந்தால், நமது படைகள் சோழ தேசத்திற்கே வராமல் வெகுதூரம் வேறு தேசத்திற்குப் போய் சேர்ந்து கொள்வார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது.

"இடையறாது பதினாறு கல் தொலைவு நடத்தி அழைத்துக் கொண்டு போகிறார். பல வீரர்கள் சுருண்டு விழுகிறார்கள். நடக்காது போனால் கடுமையாக ஏசுகிறார். அவரால் பதினாறு கல் நடக்க முடிகிறது. அவர் வயது வேறு எங்கள் வயது வேறு" பிரம்மராயரிடம் அடிக்குரலில் முறையிட்டார்கள்.

"கொள்ளையடித்த பணத்தைப் பதுக்கி வைத்திருக் கிறோமோ என்று சந்தேகப்படுகிறார். எல்லோரையும் ஆற்றில் குளிக்கச் சொல்லிவிட்டு, எங்கள் உடைகளைச் சோதனை போடுகிறார். அது எங்களுக்கு அவமானமாக இருக்கிறது. ஒரு வெறுப்பை உண்டு பண்ணுகிறது" என்று சொன்னார்கள்.

பிரம்மராயர் கவலையானார். ஆதித்த கரிகாலனிடம் பேசினார். ஆதித்த கரிகாலன் சீறி எழுந்தான். வாள் உருவி, "எவன் சொன்னவன் அவன் பெயரைச் சொல்லுங்கள்" என்று பிரம்மராயரின் தோளைப் பிடித்து உலுக்கினான்.

பிரம்மராயர் சபையைவிட்டு எழுந்து போய்விட்டார். அவர் சபையைவிட்டு போன வேகம் இனி திரும்ப இங்கு வரமாட்டேன் என்பது போலிருந்தது. 'உன்னோடு எனக்கு எந்த சம்பந்தமுமில்லை' என்று சொல்வதுபோல் இருந்தது. அந்த நேரம், அவர் எழுந்த அந்த நேரம் ஆதித்த கரிகாலன் ஒரு பயத்தை உணர்ந்தான். அதே பயம் இப்போதும் ஏற்பட்டது.

இருட்டு பயமில்லை, பல்வேறு நேரங்களில் ஆதித்த கரிகாலன் கடும் இருட்டில் எதிரிக்காகக் காத்திருந்திருக்கிறான். எதிரிகளை நோக்கி நடந்திருக்கிறான். எதிரிகளைக் கண்டும் பயமில்லை. வாட்கள் உருவும் சத்தம் கேட்டும் கலவரமில்லை. பலநூறு வாட்கள் பளிச்சென்று உருவி, தன் எதிரே பளபளத்துக் காட்ட முடிந்தபோது ஆனந்தத்தால் கொக்கரித்திருக்கிறான். அத்தனை பேரையும் வெட்டி வீழ்த்துவேன். முழு பலத்தோடு அடித்துக் கொல்லுவேன்' என்று ஆரவாரித்திருக்கிறான்.

'எவனெல்லாம் வாள் உயர்த்தினானோ அவனுக்கு வலது கை இல்லையென்று வைத்துக் கொள்ளுங்கள்' என்று கட்டளையிட்டிருக்கிறான். அப்படியும் செய்திருக்கிறான்.

புதர்களிலிருந்தும், பாறைகளிலிருந்தும் பலநூறு அம்புகள் பாய்ந்து வருகிறபொழுது, சட்டென்று சமாளித்துப் பதுக்கிக் கொண்டு, அம்பு எங்கிருந்து வருகிறதென்பதை எழுந்திருந்து ஆராய்ந்து, இருட்டும் வரை காத்திருந்து, இருட்டிய பிறகு புலிகளைப் போல பாய்ந்து, அந்தக் கடும் இருட்டில் எதிரிகளைத் துவம்சம் செய்து யார் அவர்கள் என்று கண்டுபிடித்து மூலத்தையே அறுத்து எறிந்தவன் ஆதித்த கரிகாலன்.

அவனுக்கு இப்பொழுது உடம்பு நடுங்கியது.

யார் யாரோ, யார் யாரோ தன்னைத் தாக்குகிறார்கள் என்று பயந்தான். ஆயுதமின்றி மாட்டிக் கொண்டோம் எனறு நடுங்கினான். படிகள் எப்படிப் போகிறதென்பதை எகிறி விழுந்த சுளுந்தின் வெளிச்சத்தின் வழியே உற்றுப் பார்த்து அந்தப் பக்கம் நகர முயற்சித்தபோது தரையில் ஏதோ எட்டித் தள்ளப்பட்டது. மரக்கட்டை நகருவது போல இருந்தது. கால்களை மிக ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டு அவன் நடக்க, ஒரு கட்டை இடறியது. தடுமாறி அருகில் இருக்கின்ற பெரும் பித்தளைப் பாத்திரத்தைப் பிடிக்க, அது உருண்டு விழுந்தது. ஆதித்த கரிகாலனும் நிலை குலைந்து வலப்பக்கம் சாய்ந்தான்.

சுருக்கென்று உடம்பு முழுவதும் ஒரு வலி ஏற்பட்டது. உதறி எழுந்தபோது இடுப்பு முழுவதும் ரத்தம் வழிந்தது. உட்கார்ந்து தடவிப் பார்த்தபோது, பலகையில் ஆணி கூர்மையாக அடிக்கப்பட்டிருந்தது தெரிந்தது. ஆதித்த கரிகாலன் திடுக்கிட்டான். தான் எங்கும் நகர்ந்து விடக்கூடாது என்பதற்காக ஆணியில் அறையப்பட்ட பலகை பலதிக்குகளில் தகர்ந்திருப்பது தெரிந்தது. கையில் ஆயுதமில்லை. இடுப்பில் ரத்தம் வழிகிறது. நாலாபக்கம் பலகையைத் தள்ளிக் கொண்டேயிருப்பதை அவன் உணர்ந்தான். மறுபடியும் சுளுந்து கொளுத்தப்பட்டது.

எதிரே இருந்த அந்த அந்தணர்கள் இவனை முறைத்துப் பார்த்தார்கள். கண்களில் வெறி தோன்ற அவனையே கவனித்தார்கள். அவன் அடித் தொண்டையிலிருந்து உரக்கத் கத்தினான். அவன் அவர்கள் மீது ஒரு பழைய மரத்தை வீசினான். கந்தைத் துணியை வீசி அடித்தார்கள்.

ஆதித்த கரிகாலன் அருவருப்பானான். "என்ன இது, யாரை அவமானப்படுத்துகிறீர்கள். யார் இங்கே" என்று மறுபடியும் உரக்கக் கத்த, இந்த முறை ஒரு இரும்புத் துண்டை எடுத்து அவன் மீது வீசி அடித்தார்கள். இரும்புத் துண்டு தோளில் பட்டு விழுந்தது.

ஆதித்த கரிகாலன் கையில் இருக்கிற சங்கிலியால் அவர்களை நோக்கி அடித்தான். அவர்கள் நகர்ந்து கொண்டார்கள்.

சட்டென்று இடுப்பில் ஒரு வலி ஏற்பட்டது. இடுப்பை யாரோ இழுத்து முறுக்குவதுபோல் தோன்றியது. உடம்பிலுள்ள சக்தி வேகமாகக் குறைவதை உணர்ந்தான். அவன் தோளில் யாரோ அமர்ந்து கொண்டார்கள். தலையைப் பலமாக யாரோ தட்டினார்கள். கழுத்தைப் பிடித்து இழுத்தார்கள். வயிற்றில் ஓங்கிக் குத்தினார்கள். நாலாபக்கமும் இழுத்தார்கள்.

அவன் குடித்ததுபோல் தள்ளாடினான். நாலாபக்கமும் நடந்தான். இரண்டு மூன்று முறை ஆணிப் பலகையை மிதித்தான். உள்ளங் கால்களில் ஆணிகள் குத்தி ரத்தம் வந்தது. குத்தப்பட்ட எல்லா இடத்திலும் யாரோ வாய் வைத்து உறிஞ்சியது போல தோன்றியது. பலம் கொண்ட மட்டும் ஆதித்த கரிகாலன் கத்தினான். தொலைவே யாரோ நகருகிற சத்தம் கேட்டது. யாரது என்று கேட்கிற சத்தம் கேட்டது.

வந்தவர்கள் ஆதித்த கரிகாலனை நோக்கி வாள் உருவினார்கள். அவன் கால் வைத்து பலகையைத் தாண்டி வந்ததும் நீண்ட வாளால் அவனைப் புறங்கையில் ஓங்கி அடித்தார்கள். அவன் துடித்து உட்கார்ந்தபொழுது, புஜத்தில் மறுபடியும் தாக்கினார்கள்.

"ஏதேனும் ஒரு வாள் கொடுத்து விட்டுப் பேசடா. பேடியே, பேடி அந்தணனே" என்று ஆதித்த கரிகாலன் சொல்ல, பின்புறம் யாரோ நகருவது தெரிந்தது. யார் என்று திரும்பிப் பார்க்க, முன் பக்கம் இருந்தவன் மறுபடியும் இரும்புத் துண்டால் அவன் பிடரியைத் தாக்கினான். அவன் அடித்தவன் பக்கம் திரும்ப, பின் பக்கம் ஈட்டியோடு இருந்தவன் முழு பலத்தோடு ஆதித்த கரிகாலன் மீது எறிந்தான். ஈட்டி ஆதித்த கரிகாலனின் முதுகைக் குத்திஎலும்பை உடைத்தது.

ஆதித்த கரிகாலன் திரும்பி அவனைப் பார்த்து, குத்திய ஈட்டியோடு அவனிடம் தள்ளாடிப் போக, இந்தப் பக்கம் உள்ளவர்கள் சுளுந்து வைத்துக் கொண்டு, ஜாக்கிரதையாய் பலகைகளை அப்புறப்படுத்திக் கொண்டு, கத்தியை எடுத்து ஆதித்த கரிகாலன் பின்பக்கம் நின்று அவனுடைய முதுகை வெட்டினார்கள். தோளை வெட்டினார்கள். புஜத்தைத் தாக்கினார்கள்.

இரும்புச் சங்கிலியை நாலா பக்கமும் வீசி எதிரிகளைத் தாக்க முயன்று தோற்றுப்போய், வெட்டுக் காயங்களின் வலியால் தவித்து பயத்தில் அலறித் திரும்பியபோது, ரவிதாசன் அருகே வந்து, அவன் இடக்கையால் ஆதித்த கரிகாலனின் வலக்கையைப் பிடித்து இடுப்பிலிருந்து கட்டாரியை உருவி, ஆதித்த கரிகாலன் கண்களை உற்றுப் பார்த்து எதுவும் சொல்லாமல் சரக்னென்று மார்பில் குத்தினான். கட்டாரி ஆதித்த கரிகாலன் உடம்பைத் துளைத்துக் கொண்டு மறுபக்கம் வந்தது.

ஆதித்த கரிகாலன் வலியால் ஏற்பட்ட பெருங்குரலோடு தரையில் சாய்ந்தான். அவன் துடித்து ஓயும் வரை ரவிதாசனும், பரமேஸ்வரனும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மெல்ல அந்த இடம் விட்டு அகன்றார்கள்.

சோழ சரித்திரத்தில் மிகப்பெரிய வேதனை. மிகப்பெரிய வஞ்சனை ஒன்று அங்கு நிகழ்ந்தேறியது. காலா காலத்துக்கும் பேசக்கூடிய ஒரு காரியமாய் அது மாறிவிட்டது.

பழைய நினைவுகள் அனைத்தையும் உதறித்தள்ளி உடையார் ஸ்ரீ இராஜ ராஜத்தேவர் குதிரையேறினார். துக்கச் செய்தி கொண்டு வந்த வீரர்கள் எங்கே என்று தேடினார். அவர்கள் வந்து நின்று வணங்க, அவர்களுக்கும் குதிரைகள் கொடுக்கச் சொன்னார்.

செம்பியன்மாதேவி இறந்த இடம் நோக்கி அந்தக் குதிரைகள் மெல்ல ஓடத் துவங்கின. நாளை காலைதான் அந்த இடம் போய்ச் சேரமுடியும்.

'செம்பியன் மாதேவியின் சடலத்தை தஞ்சைக்குக் கொண்டு வருவதா, பழையாறைக்கு எடுத்துப் போவதா அல்லது எங்கு இறந்தார்களோ அங்கேயே புதைத்து விடுவதா' உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் யோசித்த வண்ணமே தன் குதிரையைச் செலுத்தினார்.

அவருடைய அதிகாரிகள் சகலருக்கும் ஓலை மூலம் இந்த துக்கச் செய்தியைத் தெரிவித்தார்கள்.

தஞ்சையின் எல்லையைத் தாண்டும்போது, ஒரு குதிரையில் பெருந்தச்சர் அருகே வந்து வருத்தம் தெரிவித்தார் இன்னும் அருகே நெருங்கி அடிக்குரலில் பேசினார்.

"கோயில் அஸ்திவார வேலையை நிறுத்தட்டுமா... அல்லது தொடர்ந்து நடத்தட்டுமா" என்று கேட்டார்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் குதிரையை இழுத்துப் பிடித்து நடத்தினார். யோசித்தார். 'தொடர்ந்து நடத்துங்கள்' என்றார்.

ராஜராஜப் பெருந்தச்சர் மெல்ல விலகி வேறு பக்கம் திரும்பி, குதிரையை வேகமாக தஞ்சையை நோக்கிச் செலுத்தினார். அந்த ஓட்டத்தில் ஒரு சந்தோஷம் இருந்தது.

## 56

"செம்பியன்மாதேவியின் திருவுடல் தகனம் செய்யப் பட்டுவிட்டதாம். அருண்மொழியே நேரில் வந்து தன் கையாலேயே கொள்ளி வைத்து அந்தணர்களுக்கும், இன்னும் பலருக்கும் செம்பியன் மாதேவியின் மனக்கேதம் தீர விதம் விதமான தானங்கள் செய்தானாம். ஆயிரம் பசுக்களுக்கும் மேல்

தானம் செய்யப்பட்டிருப்பதாகக் கேள்வி. அருண்மொழி மிகமிகத் தந்திரசாலியாக நடந்து கொண்டிருக்கிறான்."

மலையனூரான் சாம்பான் சம்மணமிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து தலையசைக்காமல் உதடு மட்டும் பிரித்துப் பேசினான்.

கொல்லிமலையின் உச்சியில், அடர்ந்த காடுகளுக்கு நடுவே உண்டான ஒரு திட்டில் நான்கு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

செம்பியன் மாதேவியைப் பல்லக்கில் தூக்கி இங்கு கொண்டு வந்துவிட வேண்டும் என்று முயற்சி செய்து, அந்த முயற்சி தோற்றுப் போனதால் மிகப் பெரிய வருத்தத்தில் இருந்தார்கள்.

சாம்பானுக்கு எதிரே ரவிதாஸனுடைய மூன்றாவது மகன் துர்க்கசரவணன் சாம்பானைப் போலவே விறைப்பாக உட்கார்ந்திருந்தான். வலப்பக்கம் சாயாகுமாரனும், காளிதாசனும் அமர்ந்திருந்தார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் பதவியேறியதும் மறு வருடமே இவர்கள் குடும்பம் பழி வாங்கப்பட்டது. இவர்களது குடும்பங்கள் மட்டுமல்லாமல், இவர்களைச் சார்ந்த உறவினர் களும் உடையார்குடியிலிருந்து துரத்தி அனுப்பப்பட்டார்கள்.

அனாதைகளாய் கட்டிய துணிகளோடு குழந்தைகளும், கிழவர்களுமாய் இந்தக் கூட்டம் சேரதேசத்தை அடைந்து அருண்மொழி என்கிற இராஜராஜனை அழிப்போம் என்று சேர தேச எல்லையில் சத்தியம் செய்து, சோழ குடும்பத்தை பூண்டோடு அழிப்பதே எங்கள் வேலை என்று உரக்கக் கூறி முழக்கமிட்டு, அதைத் தவிரவேறு எதுவும் செய்வதற்கில்லை என்று சூளுரைத்தது. தொடர்ந்து செய்தும் வந்தது.

திருவக்கரையிலுள்ள வக்கிர காளி கோயிலிருந்து செம்பியன் மாதேவியைப் பல்லக்கில் சுமந்து வந்து, செம்பியன் மாதேவிக்கு அந்தப் பல்லக்குப் பயணம் சரிவராததால், உடல் அதிகம் குலுங்கியதால், மாரடைப்பு ஏற்பட்டு முக்கூடல் என்ற ஊரிலே மரணமடைய அங்கேயே போட்டுவிட்டு, அந்த ஊரில் குதிரையைப் பிடுங்கி கொண்டு கொல்லிமலை அடிவாரம் வந்து சேர்ந்துவிட்டார்கள்.

கொல்லிமலைக்கு வந்து ஏழு நாட்களாகிவிட்டன. செம்பியன்மாதேவி இறந்த மூன்றாம் நாள் அவர் உடல்

இராஜராஜ சோழனால் தகனம் செய்யப்பட்டது. அடுத்த மூன்றாம் நாள் இவர்களுக்குத் தெரிய வந்தது.

தினம் தினம் செம்பியன்மாதேவியின் பெயரால் தானங்கள் நடைபெறுவதாகவும், மிகப்பெரிய மண்டபம் ஒன்றும், பள்ளிப்படை கோயில் ஒன்றும் கட்டபபடும் என்று இராஜராஜ சோழன் அறிவித்ததாகவும், அதற்குண்டான ஆரம்பகட்ட வேலைகள் துவங்கிவிட்டன என்றும், செம்பியன் மாதேவியின் ஆசீர்வாதம் சோழ தேசத்திற்கு உண்டு என்று இராஜராஜ சோழன் பேசியதாகவும், மக்கள் அதை ஆரவாரம் செய்து வரவேற்றதாகவும், இராஜராஜன் எங்கு போனாலும் மக்கள் அவனைச் சுற்றிக் கொண்டு வணங்கியதாகவும் அவனுக்குத் துணை நிற்பதாய் உறுதி கூறியதாகவும் செய்திகள் வந்த வண்ணம் இருந்தன.

சோழ தேசத்தைத் தாண்டி நடுநாட்டிலும், தொண்டை நாட்டிலும் இராஜராஜனை மக்கள் மனதார நேசித்தார்கள். இவனல்லவோ அரசன் என்று வியப்பதும் கொல்லிமலைக்குச் செய்தியாக வந்தது.

மக்கள் என்ன செய்தாலும் திசைமாறி ஒவ்வொரு நாளும் இராஜராஜன் புகழ் மேலே போய்க் கொண்டிருப்பதைப் பார்த்து மலையூனூரரான் சாம்பான் கண்ணீர் உகுத்தான்.

“என் குடும்பத்திற்கு ஏற்பட்ட அவமானத்தை என்னால் துடைக்கவே முடியாதா. என் தகப்பனுக்கு ஏற்பட்ட இந்த வேதனையை என்னால் நீக்கவே முடியாதா...”

போருக்கு கிளம்புகின்ற நாளின் விடியற்காலையில் ரவிதாஸன் மலையனூர் சாம்பானை அருகில் அழைத்து, “குழந்தாய்... நான் போருக்குப் போகிறேன். என்னுடைய கடைசி முயற்சி இது என்று என் மனதிற்குப் படுகிறது. இந்த முயற்சியில் நான் வெற்றி பெறப் போவதில்லை என்ட்தும் எனக்குத் தெரிந்து விட்டது. ஆனாலும் என்னுடைய ஆத்மா சாந்தியடைவதற்காக முழு முயற்சியாய் மிக வேகத்தோடு நான் இந்தப் போரில் ஈடுபடப் போகிறேன். நான் கற்ற அத்தனை திறமைகளையும் இந்தப் போரில் காட்டப் போகிறேன். இராஜராஜனைக் குறி வைத்து நகரப் போகிறேன். விதம் விதமாகத் தாக்கப் போகிறேன். இதில் மரணம் உறுதி.

என் மரணத்திற்குப் பிறகு ஒரு வேளை அருண்மொழி உயிரோடு இருந்தால் அவனைக் கொல்ல வேண்டியது உன்

பொறுப்பு. சோழர் குலத்தைப் பூண்டோடு அறுக்க வேண்டியது உன் வேலை. உன் மகன் வேலை. உன் பேரன் வேலை. பரம்பரை பரம்பரையாக நாம் சோழர்களுக்கு எதிரிகள் என்று தீர்மானித்து, என்றேனும் ஒரு நாள் இந்தச் சோழ குலத்தைப் பூண்டோடு அறுக்க நாம் சபதம் மேற்கொள்ள வேண்டும்.

சத்தியம் செய். சத்தியம் செய். சோழர் குலத்தைப் பூண்டோடு அறுப்பேன் என்று சத்தியம் செய். இதைத் தவிர வேறு எந்த வேலையும் எனக்கு இல்லையென்று சத்தியம் செய்.

உனக்கு ஞாபகம் இருக்கிறதா குழர்தாய். நீ சிறு பையன், எண்பது வயதான கிழவனையும் எழுபது வயதான கிழவியையும் இவர்கள் பிரம்பால் அடித்துத் துரத்தினார்களே... வழியெங்கும் காறி உமிழ்ந்தார்களே... மண் வாரித் தூற்றினார்களே. ஞாபகம் இருக்கிறதா.

இருநூற்று ஐம்பத்தேழுபேர் நாம் மெல்ல மெல்ல, மெல்ல மெல்ல சோழ தேசத்தை விட்டுப் போனோமே... எல்லா இடத்திலும் ஏதேதோ கரைத்து தலையில் ஊற்றி சபித்தார்களே... ஞாபகம் இருக்கிறதா.

என் வாழ்நாளில் என் மனக்கேதம் தீராமல், என் சபதத்தை முடிக்காமல் நான் இருக்கிறேனே என்று வருத்த மிருக்கிறது. ஆனால் நீ இருக்கிறாய் என்று சந்தோஷமாக இருக்கிறது."

"ரவிதாஸன் இடுப்பு வேட்டியை இறுக்கக் கட்டிக் கொண்டு வேட்டிக்கு மேல் பட்டுத் துணியைப் பட்டையாக்கி மெல்ல சுற்றிக் கொண்டு பட்டுத் துணிக்கு மேல் தர்பைக் கயிறால் இறுக்கக் கட்டிக் கொ.'ண்டு அந்த தர்பைக் கயிறிலிருந்து உடைவாள் தொங்க முதுகில் குத்தீட்டிகளைச் சுமந்து கொண்டு கைகூப்பி கிழக்கு பார்த்து நின்றபடியே பேசினான்.

"நல்லது. நான் போய் வருகிறேன் சாம்பான். நேற்று இரவுகூட ஆதித்த கரிகாலன் என்னைப் பார்த்துச் சிரிப்பது போல, நான் சாகவில்லையடா என்று சொல்வது போல ஒரு கனவு வந்தது. கைப்படக் கொன்றாலும் ஆதித்த கரிகாலனை நான் கொல்லவில்லையோ, இன்னும் எங்கேனும் உயிரோடு ஒளிந்து கொண்டிருக்கிறானோ என்கிற பயம் எனக்குள் நிரந்தரமாக இருக்கிறது. இந்தக் கனவு பலநூறுமுறை வந்து விட்டது. அருண்மொழி காந்தளூர் சாலைக்குப் படையெடுத்து வருகிறான். பல லட்சம் வீரர்களோடு வருகிறான். அவனை

வெல்வது என்பது இயலாத காரியம். காந்தளூர் சாலை எரிபடப் போகிறது. தூள் தூளாகப் போகிறது.

அந்தக் கடிகை (கல்லூரி)யை அடித்து உடைத்து அங்குள்ள அத்தனை பேரையும் விரட்டப் போகிறான். கடிகை இருந்த இடத்தை மண்மேடாக மாற்றப் போகிறான். இந்தக் கடிகை யிலிருந்துதானே நீங்கள் சோழதேசம் நோக்கி வருகிறீர்கள் என்று அந்தக் கடிகையைப் பழிவாங்கப் போகிறான். எங்கேயேனும் காட்டுக்குள் இந்தக் கடிகையைத் தொடர்ந்து நடந்த வேண்டும். சபதத்தை நிறைவேற்ற வேண்டும்.

ஜெயவிஜயீபவ. மரணமே நிச்சயம். மரணமே சாஸ்வதம். மரணம் என்பது சக்தியின் வேறு ரூபம். சக்தியே எங்கும் நிறைந்தவள். சக்தியே துணை” என்று கூறிவிட்டு வெளியேறி னான். அந்தக் காட்சி சாம்பானுக்கு இப்பொழுதும் நினைவில் வந்தது.

சாயாகுமாரனால் பொறுமையாக உட்கார்ந்து கொண்டிருக்க முடியவில்லை. உடம்பு கொதித்தது. மனம் அலைபாய்ந்தது. அவன் அசைவுகள் வேகமாக இருந்தன. சம்மணமிட்டு உட்கார்ந்திருந்தாலும், உட்கார வேண்டும் என்று அவன் கட்டாயப்படுத்தப்பட்டாலும் அவனுடைய நகர்வுகள் துரிதமாக இருந்தன.

“ஏன் நம்மால் அருண்மொழியை வெல்ல முடியவில்லை. குறை நம்மிடமா, நம்முடைய தத்துவத்திடமா... மந்திர, எந்திர தந்திரங்கள் நிச்சயமாக ஒருவரைக் கொல்லும் என்று சொன்னால் நாம் பழிவாங்க முடியாமல் தடுமாறுகிறோம். எதிரே நம் எதிரி நம்மைவிட பலமாக மாறிக் கொண்டிருக் கிறான். யாரை நாம் சுவீகரித்து நம்பக்கம் இழுத்து அவர்கள் மூலம் அருண்மொழியை வெல்ல வேண்டுமென்று நினைத்தோமோ... அந்த அருண்மொழி அவர்கள் இறந்து போன பிறகு அவர்களுடைய புகழை தன் புகழாக மாற்றிக் கொண்டிருக்கிறானே... இந்த அநியாயம் வேறு எங்கு நடக்கும். அருண்மொழிக்கும் செம்பியன் மாதேவிக்கும் ஆகாது. அருண்மொழி செம்பியன் மாதேவியை வெறுக்கிறான். செம்பியன்மாதேவி அருண்மொழியை சபிக்கிறாள்’ என்று நாம் பரப்பிய செய்திகள் எல்லாம் இப்பொழுது காணாமல் போய்விட்டன.

ஒரு நாளைக்கு ஆயிரம் பசுக்கள் தானங்கள் கொடுக்கிறான் என்றால், செம்பியன் மாதேவியின் மீது எத்தனை பிரியம் என்று மக்கள் பேச ஆரம்பித்து விடுவார்கள்

செம்பியன் மாதேவிக்காக முக்கூடலில் மணிமண்டபம் கட்டுகிறான். பள்ளிப்படை கோயில் எழுப்புகிறான் என்றால் ஜனங்கள் அங்கு உட்கார்ந்து இராஜராஜன் புகழை நாடகமாகவும், பாடலாகவும் பாட ஆரம்பித்து விடுவார்கள். நம் முயற்சிகள் மண்ணுக்குக் கீழே போய்விட்டன.

எனக்கு என் மீதும் உங்கள் மீதும் சந்தேகமேயில்லை, நமது தத்துவத்தின் மீது சந்தேகம். இனிமேல் மந்திர, எந்திர தந்திரங்களை நான் பிரயோகப்படுத்தப் போவதில்லை. விஷம் தயார் செய்யப் போகிறேன். வில் அம்புகளை உருவாக்கப் போகிறேன். எங்கேனும் அருண்மொழி ஊர்வலமாக வருகிறபொழுது, மறைந்திருந்து கொன்றுவிடப் போகிறேன்.

சோழ அரண்மனையில் சாதாரண வேலைக்காரனாகச் சேரப் போகிறேன். பூணூலை அறுத்து முன் குடுமியைச் சிரைத்துவிட்டு மொட்டையடித்துக் கொண்டு வேளாளனாய் போய்விடப் போகிறேன். வேளாளனுக்கு உண்டான வேலையைச் செய்யப் போகிறேன். எதற்காக இந்த சக்திக் கூத்து. எனக்குப் புரியவில்லை. எனக்கு நம்பிக்கை இல்லை..."

சாயாகுமாரன் துடுக்குத்தனமாகப் பேசியது அங்குள்ளவர்களுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. குறிப்பாய் மலையனூர் சாம்பான் விசும்பத் துவங்கினான்.

"நீ பேசியது ஆயிரம் ஈட்டிகளை நெஞ்சில் சொருகியது போல் இருக்கிறது. ஆனாலும் உன் மீது கோபம் வரவில்லை. நீ கேட்பது நியாயம்தானே. இந்த உபாசனையை நான் சரியாக கைக்கொள்ளாமல் தகப்பனாரைப் போல் தெளிவாகவும் உறுதியாகவும் இல்லாமல் நொந்து மோசமாக குடும்பம் விட்டு இந்தக் காட்டுக்குள் பைசாசமாகத் திரிந்து கொண்டிருக்கிறேன். உன் கேள்விகள் அனைத்தும் உண்மை. ஆனால் என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. நாம் மறுபடியும் அடியிலிருந்து ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. வேறொரு முயற்சியைச் செய்ய வேண்டியிருக்கிறது.

ஒன்று தோற்றுப் போனதாலேயே நம்முடைய விஷயங்கள் அபத்தமானவை என்று நான் சொல்லமாட்டேன். நீ இளைஞன். வெற்றியின்மையால், தோல்வியின் ருசியால் தடுமாறிப் பேசுகிறாய். இது அவமானம் என்று கருதுகிறாய். இதைவிட மிகப் பெரிய அவமானங்கள் பட்டதால் எனக்கு இதைத் தீர்க்கின்ற ஆத்திரம் தான் எழுகிறதே தவிர, நான் இப்போது

அவமானப்பட்டு விட்டேனே என்ற எண்ணம் வரவில்லை" என்று பேசிவிட்டு மௌனமானான்.

தொலைவில் சலசலப்பு கேட்டது. சாயாகுமாரன் துள்ளியெழுந்தான். காளிதாசனும் சரக்கென்று எழுந்து புதர் மறைவில் நின்றான். சாம்பான், துர்க்க சரவணன் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள்.

"நம் மாணவன் எவனோ ஒருவன் ஓடி வருகிறான்" சாயா குமாரன் சொல்ல, அவர்கள் சற்று தளர்வானார்கள். ஓடி வந்தவன் சாம்பானுக்கு அருகே வந்து மண்டியிட்டான்.

"ஆட்கள் வருகிறார்கள் பதினாறு பதினேழு பேர்கள் மலையேறி வருகிறார்கள்."

சாம்பான் திகைத்தான். "அத்தனை பேரும் பெண்கள்" என்று வந்தவன் தொடர்ந்து சொன்னான்.

சாம்பான் கைப்பிரம்பு எடுத்து பளீரென்று அவன் புஜத்தில் அடித்தான். வந்தவன் துடித்துப் போனான்.

"ஒரு விஷயத்தை எப்படிச் சொல்வதென்று புரிந்துகொள். பெண்கள் வருகிறார்கள் என்று சொன்னால் அது எவ்வளவு அழகாக இருந்திருக்கும். ஆட்கள் வருகிறார்கள்; அத்தனை பேரும் பெண்கள் என்று சொல்கிறாயே. நீ இங்கு உள்ளவர் களைக் கலவரப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில்தானே இருக்கிறாய். பரபரப்பாய் ஏதோ சொல்ல வேண்டும் என்றுதானே ஆசைப்படுகிறாய். ஏதேனும் இடையறாது நாடகம் நடந்து கொண்டிருக்க வேண்டுமா. நீ இங்கு வேலை செய்ய லாயக்கில்லாதவன். இன்னொருமுறை இப்படிச் சொன்னால் உன்னைப் பயிற்சியிலிருந்து வெளியேற்றி விடுவேன். விஷயத்தைச் சுருக்கமாகவும் நேரடியாகவும் சொல்லக் கற்றுக் கொள்" என்று கர்ஜித்தான். வந்தவன் மறுபடியும் விழுந்து வணங்கி நகர, அவர்கள் யோசித்தார்கள்.

'எதற்குப் பெண்கள் வருகிறார்கள். எந்த இடத்திலிருந்து வருகிறார்கள். இந்தக் காட்டுக்குள் பெண்கள் நுழைய வேண்டிய அவசியமென்ன' காளிதாசன் வியந்தான்.

"பாண்டிய தேசத்துப் பெண்களாக இருக்கும் காளிதாசா..." சாம்பான் பதில் சொன்னான்.

"ஏன் ஐயா... ஏன் அப்படி. பாண்டிய தேசத்துப் பெண்கள் நமக்குப் பல உதவிகள் செய்திருக்கிறார்கள். கழுத்தில்

அணிந்திருந்த நகைகளை விற்று நமக்கு உதவி செய்திருக் கிறார்கள். உணவு அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள்."

"எதற்காக என்று உனக்குத் தெரியுமா. அவர்கள் கணவர்களை நாம் மீட்டுத்தர வேண்டும் என்று நமக்கு உதவி செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கணவர்கள் சோழப்படையால் கைது செய்யப்பட்டு அடிமைகளாக இருக்கிறார்கள்.

'எங்கள் கணவர்களை எப்படியாவது வீட்டிற்கு அனுப்பி விடுங்கள்' என்று இந்தப் பெண்கள் கதறிக் கொண்டிருக் கிறார்கள். நாம் இதுவரை அந்தக் கணவர்களைத் தொடர்பு கொள்ளக்கூடயில்லை. இது தெரிந்தால் அவர்கள் சீற்றமடைவார்கள். இந்தப் பெண்கள் நம்மை ஏசுவார்கள். பொறுத்துப் பொறுத்துப் பார்த்து முடியாமல், ரவிதாஸன் உறவுகள் கொல்லிமலைக்குள்தானே இருக்கிறார்கள். காடு என்ன செய்துவிடும் என்று வந்திருக்கிறார்கள். ஆண்கள் இருக்கிறார்களா என்று பார்."

காளிதாசன் முன்னேறி பாறை உச்சியில் நின்று பார்த்துவிட்டு 'இல்லை, பெண்கள் மட்டுமே வருகிறார்கள்' என்று சொன்னான்.

"காளிதாசா... நீ முன்னேறி அவர்களை வழிமறித்து சுனைக்கு அழைத்து வா. அவர்கள் கோபத்தைக் குறைத்துக் கூட்டிவா. சாயா பெண்கள் போன பிறகு அந்த வழியில் வேறு யாரேனும் தொடர்கிறார்களா என்று நீ பார். அந்தப் பெண்கள் போகும் வரை மறைந்திரு. அவர்கள் போன பிறகு அந்த வழியை மறித்துவிடு. கருவேல முட்களை வெட்டிப் போட்டுவிடு.

அதை, எவரேனும் தாண்டி வர முயற்சி செய்தால் அடித்துக் காயப்படுத்து. எதிர்த்தால் கொன்று விடு."

சாம்பான் வேகமாகக் கட்டளைகள் பிறப்பித்தான்.

பச்சையும், சிகப்பும் நீலமுமாய் அழுத்தமான கெட்டியான பாண்டிய தேசத்துப் புடவைகள் அணிந்து, காதிலே மிகப்பெரிய பாம்படம் அணிந்து, காலிலே தண்டைகள் அணிந்து, குழந்தைகளோடு பதினாறு பெண்கள் காட்டுக்குள் நுழையும் போது, காளிதாசன் அவர்களை எதிர்கொண்டான். பெண்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு கூச்சலிட ஆரம்பித்தார்கள். காளிதாசன் மௌனமாக அவர்கள் சொல்லுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

"எங்கே அந்த மலையனூரான். காட்டு, அவனைக் கொன்று போடுகிறேன்" என்று ஒரு பெண் சொல்ல, அவன், "இப்படிப் பேசுவது தவறு... அவர் மிகப்பெரியவர். சகல வித்தைகளும் தெரிந்தவர். ஒரு சொல்லால் உங்களை எரித்துவிடக் கூடியவர். தயவு செய்து தொடர்ந்து இவ்விதம் பேசாதீர்கள். உங்கள் கோபம் என்ன. என்னிடம் சொல்லுங்கள். நான் அவரிடம் உங்களை அழைத்துப் போகிறேன். காட்டுக்குள் வெகுதூரம் போக வேண்டும். குழந்தைகளை வேறு வைத்திருக் கிறீர்கள். முதலில் ஒரு சுனைக்குப் போவோம். சுனையிலிருந்து அந்த இடத்திற்குப் போவோம்." என்று அவர்களை வேறு திசைக்கு அழைத்துப் போனான். சுனை காட்டினான்.

## 57

அவர்கள் சுனைக்கருகே உட்கார்ந்தார்கள். முகம் துடைத்துக் கொண்டார்கள். நீர் குடித்தார்கள். காடுகளுக்கு உள்ளே போய், கொய்யாப் பழங்கள் பறித்து வந்து, மேல்துண்டால் மூட்டையாகக் கட்டி காளிதாசன் அங்கு கொண்டு வந்து கொட்ட அவர்கள் ஆவலோடு பழங்களை எடுத்துக் கொண்டார்கள். குழந்தைகளுக்கு வேகமாக நறுக்கி காளிதாசன் கொடுக்க, அவர்கள் சந்தோஷமாய் உண்ணத் துவங்கினார்கள். பசி குறைந்து, தாகம் குறைந்து, முகத்தில் நீர் பட்டு சற்று ஓய்வெடுத்தவுடன் அவர்கள் கோபம் குறைந்தது.

"ஐயாவைப் பார்க்க முடியாதா" என்று கேட்டார்கள்.

"நிச்சயம் பார்க்கலாம். உங்களைவிட உங்களைப் பார்க்க அவர் ஆவலாக இருக்கிறார்."

"எந்த முயற்சியும் நடக்கவே இல்லையா" என்று இன்னொரு பெண் கேட்கும் பொழுது, அவள் கண்ணிலிருந்து கண்ணீர் வழிந்தது.

"பல வருடங்கள் ஆகி விட்டதய்யா என் புருஷன் முகத்தைப் பார்த்து... திருமணமான பதினைந்தாம் நாள் போருக்குப் போனார். அவர் எப்படி இருப்பார் என்பதே எனக்கு மறந்துவிட்டதய்யா. இன்னும் ஒரு மாதத்திற்குள் என் புருஷனை நான் பார்க்கவிட்டால் நான் தற்கொலை செய்து கொள்வேன்."

அந்தப் பெண் சொல்ல, காளி கண் மூடிக்கொண்டான். அவள் பாதத்திற்கருகே கையை வைத்தான்.

“சத்தியமாகச் சொல்கிறேன். உன் பாதம்பட்ட தூசியின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். இதைத் தவிர வேறு எந்த சிந்தனையும் எங்களுக்கு இல்லை. நாங்கள் இந்தக் காட்டில் உல்லாசமாக வாழவில்லை. எங்கள் குடும்பங்களை உதறிவிட்டு இங்கு துறவிகளைப்போல் அலைகிறோம். காட்டுவாசிகளைப் போல் வாழ்ந்து கொண்டு வருகிறோம்.

காரணம், எப்படியாவது அருண்மொழியை அழித்து, சோழதேசத்திலிருந்து பாண்டிய வீரர்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும் என்கிற எண்ணம்தான். தயவுசெய்து இதைப் புரிந்து கொள்ளுங்கள்.

சோழர்கள் பலமாகிக் கொண்டிருக்கிறார்கள். சாம்பான், அவர்களை எதிர்க்க மிக ரகசியமாக பெரும்படை திரட்டிக் கொண்டிருக்கிறார். படை வீரர்கள் அங்கங்கே தயாராக இருக்கிறார்கள். திருவொற்றியூரிலிருந்து போரில் சிறைப்பட்ட பல்வேறு தேசத்து வீரர்கள் அடிமைகளாக தஞ்சையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்திற்காகத்தான் நாங்கள் காத்துக் கொண்டிருந்தோம். திருவொற்றியூரிலிருந்து மதுரை வருவதைவிட தஞ்சையிலிருந்து மதுரை வருவது எளிது. திருச்சீரபுரம் நோக்கி வந்து, காவிரி தாண்டி அங்கிருந்து மதுரைக்குப் புகுந்து வரலாம். எனவே, உங்கள் கணவன்மார்கள் தஞ்சைக்கு வந்துவிட வேண்டும் என்று தயவு செய்து வேண்டிக் கொள்ளுங்கள்.”

“தஞ்சையிலே என்ன வேலை” என்று ஒரு பெண் கேட்டாள்.

“தெரியவில்லை. பல்லாயிரக்கணக்கான வீரர்கள் தஞ்சை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விப் படுகிறோம். மதுரையிலிருந்தும் பெண்கள் தஞ்சை நோக்கி வருகிறார்கள்.”

“தஞ்சையில் மிகப் பெரிய கோயில் கட்டுகிறாராமே. இதுவரை இல்லாத ஒரு வடிவத்தில் கட்டுகிறாராமே... அந்தக் கோயில் கட்டி முடித்துவிட்டால், இராஜராஜசோழனுக்கு மரணமே இல்லாத பெருவாழ்வு கிடைக்குமாமே...” என்று ஒரு முதிய பெண்மணி உரக்கச் சொன்னாள்.

“யார் சொன்னார்கள்.”

"ஊரில் அப்படித்தான் பேசிக் கொள்கிறார்கள். ஒரு மனிதருக்கு மரணம் ஏற்படக்கூடாது என்றால், ஒரு குறிப்பிட்ட விதத்தில் கோயில் கட்டினால் போதும். மரணம் நிகழவே நிகழாது என்று சொல்கிறார்கள்."

"இல்லை... அப்படி ஒரு போதும் இந்த உலகத்தில் நடந்தது இல்லை. பிறந்தவர் இறப்பது உறுதி. மரணமில்லாப் பெருவாழ்வு என்பது உடம்பைக் குறித்தலல. புகழைக் குறித்தது. அதைத்தான் அவ்விதம் சொல்கிறார்கள். எனவே, அருண்மொழிக்கு மரணமே இல்லையென்று நீங்கள் எவரும் அச்சப்பட்டுவிட வேண்டாம். அவர் மரணம் நமது கைகளிலே இருக்கிறது என்று என்பதுதான் பிரச்சினை."

"நாங்கள் மலையனூரான் சாம்பானைப் பார்க்க முடியாதா..."

"நிச்சயம் இவ்வளவு தொலைவு காட்டிலே நடந்து வந்திருக்கிறீர்கள். நீங்கள் அவரிடம் போவதைவிட அவரை இங்கே வரவழைக்கிறேன்" என்று சொல்லி காளிதாசன் தொலைதூரமுள்ள திட்டு நோக்கி 'ஊ' என்று குரல் கொடுத்தான். பதிலுக்கு அங்கிருந்து குரல் வந்தது.

காளிதாசன் அவர்களுக்கு அருகே போய் அமர்ந்து கொண்டான். பெண்கள் அவனைச் சுற்றி வட்டமாக உட்கார்ந்து கொண்டார்கள்.

"அந்தணரே... நம்மால் அருண்மொழியை வெல்ல முடியும் என்று நினைக்கிறீர்களா பாண்டியர்களுடைய ஆட்சிக் காலம் என்றேனும் மலருமா" ஒரு முதிய பெண் கேட்டாள்.

"ஏன் தாயே... எதற்காக அவ்விதம் கேட்கிறீர்கள்..."

"பாண்டியதேசம் காலம் காலமாக சோழனுக்கு அடிமைப் பட்டுத்தான் கிடக்குமோ, மகிழ்ச்சி என்பதும், மலர்ச்சி என்பதும் இனி பாண்டிய தேசத்திற்கு வரவே வராதோ, சங்கம் வளர்த்த மதுரை இனி வெறும் சுடுகாடாகத்தான் நிற்குமோ என்று பயம் ஏற்படுகிறது."

"சுடுகாடா? அங்குள்ள சோழ பரம்பரையினர் மதுரையை நன்றாகத்தானே ஆட்சி செய்கிறார்கள்..."

"யார் இனி மதுரையை ஆட்சி செய்தால் என்ன, பாண்டியர்கள் ஆட்சி செய்யாதவரை இந்த மதுரை சுடுகாடுதான். எப்பொழுது மதுரையிலே பிறந்த ஒரு மண்ணின் மைந்தன் மதுரையை ஆட்சி செய்கிறானோ – அப்பொழுதுதான்

மதுரை நகரமாக விளங்கும். சோழருடைய கால்பட்டு, சோழருடைய அதிகாரத்தில் ஈடுபட்ட இடத்தை நாங்கள் மதிப்பதே இல்லை. நாங்கள் மதுரையில் வாழ்வதும் இல்லை. மதுரையைச் சுற்றியுள்ள மலைகளில்தான் ஒளிந்து கொண்டிருக்கிறோம்."

"ஏன், ஏதேனும் தொந்திரவா..."

"இல்லை. மலைகளிலிருந்து வந்து விடுங்கள் என்று ஓலைகள்கூட அனுப்புகிறார்கள். தின்பண்டங்கள் அனுப்பு கிறார்கள். புடவைகள் தருகிறார்கள். ஆனாலும், நாங்கள் போவதாக இல்லை. போய் என்ன செய்வது..."

"நீங்கள் சொல்வது புரியவில்லையே..."

"புருஷன் இருந்தால் மதுரைக்குப் போய் குடித்தனம் நடத்தலாம். புருஷன் இல்லாத ஊரில் நாங்கள் என்ன குடித்தனம் செய்வது. புருஷன் இல்லை என்பதால், சோழ வீரர்கள் எங்களை ஏதேனும் செய்யமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம். அதற்குக் காடுகளில் விலங்குகள்போல் திரிவது உத்தமம்..." அந்த முதிய பெண்மணி சொல்ல, மற்றவர்களும் ஆமோதித்தார்கள்.

காளிதாசனுக்கு வயிறு கலங்கியது.

ஒரு பதினாறு வயதுப் பெண் தொலைதுரத்தில் வட்டம் விட்டு விலகி காளிதாசனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"ஏன் தாயே... ஏன் வட்டம்விட்டு விலகி உட்கார்ந்திருக் கிறாய். உள்ளே வா அருகே உட்கார்" என்று காளிதாசன் மிக பவ்யமாகக் கைகூப்பினான்.

அந்த மறக்குலப் பெண்மணி அவனை உற்றுப் பார்த்துவிட்டு, முகம் திருப்பிக் கொணடாள்.

"இவளுக்காகத்தான் நாங்கள் வந்தோம். இவள் கதறித்தான் நாங்கள் பயணப்படுவது என்று தீர்மானித்தோம். இவளை உற்சாகப்படுத்தத்தான் காட்டுக்குள் போவது என்ற முடிவுக்கு வந்தோம்.

இவளுக்குத்தான் தன் புருஷனைப் பார்க்க வேண்டும் என்று பேராசை இருக்கிறது. எங்களுக்கு இல்லை என்று அர்த்தமில்லை. இவள் துடித்துக் கொண்டிருக்கிறாள். திருமணமான மறுநாள், இவள் புருஷன் இவளை விட்டுவிட்டு போருக்குப் போய்விட்டான். அவன் முகம்கூட இவளுக்குத் தெரியாது. அவனால் இவள் தீண்டப்படக்கூட இல்லை.

போகும்போது கன்னத்தைத் தடவிவிட்டுப் போனானாம். அந்த ஒரேயொரு தீண்டல்தான் இவள் அனுபவித்தது. நிச்சயம் திரும்பி வருகிறேன் என்று சொல்லிவிட்டுப் போனானாம். அது ஒரேயொரு வார்த்தைதான் இவள் கேட்டது. அதற்குப் பிறகு அவனைப் பற்றி எந்தச் செய்தியும் இல்லை.

அவன் இளைஞன். மிக அழகன். அவன் இவளுக்குக் கிடைத்தது பற்றி ஊரில் பலபேர் பொறாமைப்பட்டார்கள். 'அந்தப் பொறாமையெல்லாம் சேர்த்துத்தான் எங்களைப் பிரித்துவிட்டது' என்று இவள் அழுது கொண்டிருக்கிறாள்.

என்ன செய்தால் என் கணவன் திரும்பி வருவான் என்று இல்லாத நோன்பெல்லாம் நோற்றுக் கொண்டிருக்கிறாள். நாளாக நாளாக மனம் தளர்ந்துவிட்டாள். இரண்டு வருடமாயிற்று. இன்னும் ஒரு செய்திகூட இல்லையே என்று புலம்புகிறாள்.

நேற்றைக்கு பௌர்ணமியின்போது, இவள் வழிபட்ட கொற்றவையை உலக்கை எடுத்து அடித்து உடைத்துவிட்டாள். இரண்டு வருடம் நோன்பு நோற்றும் ஒரு செய்தியும் 'என் புருஷனைப் பற்றிச் சொல்லவில்லையென்றால் நீ தெய்வ மில்லை' என்று தூக்கி அடித்துவிட்டாள். கொல்லிமலைக்குப் போகிறேன் என்று கிளம்பி விட்டாள்.

இவளுக்காக இவர்களைச் சமாதானப்படுத்தி நாங்களும் பின் தொடர்ந்திருக்கிறோம். எங்கள் கணவர்களைப் பற்றி ஏதேனும் செய்து சொல்வீர்கள் என்று உங்களைச் சந்தித்து கேட்பதற்காக வந்திருக்கிறோம். நீங்கள் இன்னும் உற்சாகமாக இந்தத் தொழிலிலே, இந்த விஷயத்தில் ஈடுபட வேண்டும். மனம் சோர்ந்து விடலாகாது என்று கேட்டுக் கொள்வதற்காக வந்திருக்கிறோம்." என்று முதியவள் சொல்ல, மற்றவர்கள் ஆமென்று தலையசைத்தார்கள்.

அந்தப் பெண்ணை காளிதாசன் உற்றுப் பார்த்தான். அவள் முகம் சாம்பற்பூத்துக் கிடந்தது. கண்களில் ஆழ்ந்த கவலை இருந்தது. அவள் இந்த பூமியில் இருக்க விரும்பவில்லை என்று அவள் ஒவ்வொரு அசைவும் காட்டியது. காளிதாசன் கவலையானான்.

"பம்பம் மஹாதேவ்" என்று உரக்கக் குரல் கேட்டது. துர்க்கசரவணனும், சாம்பானும் இறங்கி வந்தார்கள். பெண்களுக்கு நடுவே போனார்கள்.

பெண்கள் எழுந்து தரையில் நிலம்பட வணங்கினார்கள். அந்தப்பெண் மட்டும் வேறெங்கோ பார்த்தபடி உட்கார்ந் திருந்தாள். அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டு சாம்பான், காளிதாசனைப் பார்த்தான். காளிதாசன் அவளை நான் பார்த்துவிட்டேன் என்று தலையசைத்தான்.

துர்க்க சரவணன் மேலே பார்த்தான். மேலே ஆறேழு பருந்துகள் வட்டமிடத் துவங்கின. ஆந்தைகள் குறுக்கும், வலதும் அலைந்தன. தொலைதூரத்தில் ஒரு நரி ஊளையிடும் சப்தம் கேட்டது. ஒரு கிளியை காக்கைக் கூட்டம் துரத்தித் துரத்தி, மடக்கி கொத்தத் துவங்கியது. கிளி கதறிக் கதறிச் சுற்றி வந்தது. அந்தக் கதறல் சக்லரையும் தைத்தது.

சகுனங்கள் சரியில்லையென்று துர்க சரவணன் சொன்னான். காளிதாசன் ஆமோதித்தான். கண்மூடி சாம்பான் மந்திரம் ஜெபிக்கத் துவங்கினான்.

சாயாகுமாரன் முள்வேலி போடுவதை புதரில் மறைந்து கொண்டு பிரம்மராயரின் ஆள் ஒருவன் வேடிக்கை பார்த்தான். சிரித்தான். முள்வேலி அடைக்கப்பட்ட இடத்தைத் தாண்டி சுற்றிக் கொண்டு சுனை நோக்கி நகர்ந்தான். அவன் நகர்ந்தது சாயாகுமாரனுக்குத் தெரியவில்லை.

மலையனூரான் சாம்பான் கையில் ஒரு சிறிய மூட்டை இருந்தது. அந்த மூட்டையை காளிதாசனிடம் கொடுக்க, காளிதாசன் அதை தரையில் வைத்தான். முடிச்சை அவிழ்த்துப் பரப்பினான். கேயூரங்களும், காப்புகளும், மோதிரங்களுமாய் சில நகைகள் இருந்தன.

"மறக்குல மாதர்களே... பாண்டிய தேசத்தின் கற்பக விருட்சங்களே... இந்த சாம்பான் எதுவுமே செய்யவில்லை என்று நீங்கள் நினைக்க வேண்டாம். திருவொற்றியூரில் அமர்ந்திருக்கும் பாடிவீட்டில், மேல்பாடி என்கிற இன்னொரு பாடி வீட்டில் சிறை வைக்கப்பட்டிருந்த பாண்டிய வீரர்களுக்கு நடுவே போய் அவர்களுக்கு உற்சாகமூட்டி, 'உங்கள் வீடுகளுக்கு நீங்கள் நன்றாக இருக்கிறீர்கள் என்ற செய்தியைச் சொல்லப் போகிறோம். அவர்கள் அடையாளம் கேட்பார்கள். உங்களிடமிருந்து அடையாளம் வாங்கிப்போக வந்திருக்கிறோம்' என்று சொல்லி, அவர்களிடம் பேசி, அடையாளம் வாங்கி வந்திருக்கிறோம். ஓலை நறுக்குகளில் சிலர் தங்களைப் பற்றிய குறிப்புகளை எழுதி இந்த வளையல்களோடும், காப்புகளோடும்,

மோதிரங்களோடும் பிணைத்திருக்கிறார்கள். துர்க்க சரவணன் ஒவ்வொன்றாகப் படிப்பான்.

உங்களைச் சார்ந்தவர். உங்களுக்குத் தெரிந்தவர் எவரேனும் இருந்தால் அந்த நகைகளை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். சம்பந்தப்பட்டவருக்குக் கொண்டு போய்க் கொடுக்கலாம். இந்த வேலை நடக்கட்டும். துர்க்கசரவணா. துவங்கு" என்று சாம்பான் கட்டளையிட மூட்டையிலிருந்து நாற்பது, நாற்பத்தேழு நகைகள் பிணைக்கப்பட்டிருந்த ஓலைகளை அடிக்குரலில் துர்க்கசரவணன் படிக்க, பெண்கள் கவனமாகக் கேட்டார்கள்.

ஒரு பெயர் படித்ததும், ஆவலாக ஒரு பெண்மணி எழுந்து, அந்த நகையை வாங்கி கண்ணில் ஒற்றிக் கொண்டாள்.

"இதுதான்... இதுதான்... இது அவருடைய நகைதான். என்னவருடைய கைக்காப்புதான். என் தாயார் அவருக்கு அணிவித்ததுதான். இதோ - இதில் அவர் பெயர் பொறிக்கப் பட்டிருக்கிறது. எங்கள் வீட்டு இலச்சினை இருக்கிறது. ஆஹா... ஆஹா... ஐயா, இதைப் பார்க்கிறபோது அவரைப் பார்ப்பது போலவே இருக்கிறது. இவரை யார் பார்த்தார்கள்... அவர் நலமாக இருக்கிறாரா. என்ன செய்து கொண்டிருக்கிறார். அவரை அடிக்கிறார்களா... துன்புறுத்துகிறார்களா... கடின உழைப்புக்குப் பயன்படுத்துகிறார்களா... அவர் உற்சாகமாக இருக்கிறாரா. எங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறாரா போரில் தோற்றது பற்றி புலம்பிக் கொண்டிருக்கிறாரா. அவரைப் பற்றிச் சொல்லுங்கள்..." என்று சொல்ல, துர்க்க சரவணனும், காளிதாசனும் அவனைப் பற்றி பேசி நினைவு கூர்ந்தார்கள்.

## 58

அந்தப் பெண்கள் நகைக் குவியலைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள். ஏக்கத்தோடு புரட்டிப் பார்த்தார்கள்.

"நாங்கள் வைத்தியர்கள்போல் வேடமிட்டுப் போனோம். இரண்டு நாட்கள் அந்தப் பாடி வீடுகளில் தங்கியிருந்தோம். இது மேல் பாடியில் வாங்கி வந்தது. ஓலைகள் இதில் இணைக்கப்பட்டிருக்கின்றன. இதில் சம்பந்தப்பட்டவர்

உயரமாக மெல்லிய உடம்போடு இருப்பார். அவருக்கு ஆறு விரல்கள் உண்டு. கூரிய மூக்கு, வளைந்த கால்கள். சரிதானா...” -ஆமென்று அவள் தலையசைக்க, “அவர் ஆரோக்கியமாக இருக்கிறார் அம்மா. மறுபடியும் போர் எப்போது என்று ஆவேசத்தோடு இருக்கிறார். இப்படி பாண்டிய தேசத்திற்குப் போய் செய்திகள் சொல்லப் போகிறோம் என்று சொன்னதும், முதன் முதலில் நகையைக் கழட்டிக் கொடுத்து தன்னைப் பற்றி ஓலையில் குறிப்பெழுதிக் கொடுத்ததும் அவரே. இவரைத் தொடர்ந்து மற்றவர்களும் செய்தார்கள்.

அவரைப் பற்றி நீங்கள் எந்தக் கவலையும் பட வேண்டாம். அவர் தஞ்சையை நோக்கி வருகின்ற குழுவில் தானாகச் சேர்ந்து கொண்டார். சோழப்படை வீரர்களோடு சகஜமாகப் பேசுகிறார். ஆரோக்கியமாக இருக்கிறார்...” என்று மாற்றி மாற்றி மலையனூரானும் காளிதாசனும் சொன்னார்கள்.

அந்தப் பெண்மணி சந்தோஷமானாள். நகையை கண்ணில் ஒற்றிக் கொண்டு விம்மத் தொடங்கினாள்.

நகைகள் தொடர்ந்து எடுத்துப் பரிசோதிக்கப்பட்டன. ஓலை நறுக்குகள் படிக்கப்பட்டன. இன்னும் இரண்டு பேருடைய உறவினர்கள் நகைகள் கிடைத்தன. அவர்கள் சந்தோஷமானார்கள்.

வட்டம் விட்டு விலகி உட்கார்ந்திருந்த பெண்மணியின் முகத்தில் ஏமாற்றம் அதிகம் கவிந்தது.

“என் புருஷனைப் பார்க்கவில்லையா. அவர் எங்கிருக் கிறார் என்று நீங்கள் விசாரிக்கவில்லையா” எழுந்து நின்று அந்த இளம்பெண் கேட்டாள்.

“உன் புருஷன் யாரம்மா...”

“எனக்குத் தெரியாதே. யார் என் புருஷன் என்று எனக்குத் தெரியவில்லை. புருஷனைப் பெற்றவர்கள் போர் என்றதும் சிதறி ஓடிவிட்டார்கள். அவர்கள் தாயும், தந்தையும் வேறு திக்குக்கு நகர்ந்து விட்டார்கள். நான் அவர்களையும் அறியவில்லை. என் புருஷனும் யாரென்று எனக்குத் தெரியவில்லை. சொல்லித் தருவாரும் இல்லை. இந்த ஊரில் இருந்து வருகிறார்கள் என்று எனக்கு ஒரு தகவல் வந்தது. ஆனால் அந்த ஊரில் எந்தக் குடும்பம், என்ன பெயர் எதுவும் எனக்குத் தெரியாது.

எளிமையான முறையில் திருமணம் நடக்க வேண்டு மென்று எழுபது பேர்கள் திருமணம் செய்து வைத்தார்கள்.

போர்க்காலம் எல்லோருக்கும் உணவிட முடியாது. எனவே, திருமணத்தை ஒட்டுமொத்தமாக நடத்த வேண்டும் என்று சொல்லி ஊர்த்தீர்மானம் செய்து என் திருமணம் நடத்தப் பட்டது. இப்படி ஒரு திருமணம் அவசியம்தானா என்று என் தாய் கேட்டாள். அவசியம் என்று என் தந்தை சொன்னதால் எனக்குத் திருமணம் நடந்தது.

அவர் போருக்குப் போகும்போது நான் பூப்படைய வில்லை. போருக்குப் போன ஏழாம்நாள் நான் பூப்படைந்தேன். எல்லோரும் சபித்தார்கள். என்னைவிட கேவலமான பெண் யாரும் இல்லையென்று நான் நினைக்கிறேன். நான் என்ன அடையாளம் காட்டுவேன். என்ன பெயர் சொல்லுவேன். அவராக வந்து என்னைத் தேடி, 'நான்தான் உன் புருஷன்' என்று சொன்னாலொழிய எனக்குத் தெரியாது. வேறு எவரும் வந்து நான்தான் உன் புருஷன் என்று சொன்னாலும் நான் விழித்துக் கொண்டுதான் நிற்பேன்.

என்னைவிட இழிவான பிறவி இந்த உலகத்தில் வேறு யாருமில்லை ஐயா. என் வாழ்க்கையில் விதி ஏன் இப்படி விளையாடி விட்டதென்று தெரியவில்லை. யாரைச் சந்தித்தாலும் பயமாக இருக்கிறது. என் புருஷன் வரவில்லையே என்று கவலையாக இருக்கிறது. வந்தால் இவன் என் புருஷனா என்ற சந்தேகம் வந்து, என்னைக் கொன்று விடுமோ என்று கலவரமாகவும் இருக்கிறது. இப்படி ஒரு அவலநிலை உலகத்தில் எந்தப் பெண்ணுக்கும் வரக்கூடாது."

"அம்மா, கவலைப்படாதீர்கள். இறைவன் வழிக் காட்டுவார்..."

"இல்லை. இறைவன் முற்றிலுமாக என்னைக் கைவிட்டு விட்டது எனக்குப் புரிகிறது. இப்படி நீங்கள் முயற்சிகளைச் செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் உயிரைப் பணயம் வைத்து அடையாளம் வாங்கி வந்து பல பேரைச் சந்தோஷப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். இதோ இந்த மூட்டையிலுள்ள அத்தனை நகைகளும் உரியவர் இடத்தில் போய்ச் சேர்ந்து அவர்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்க வேண்டும் என்று நான் பிரார்த்தித்துக் கொள்கிறேன். ஆனால் இப்படி ஒரு நகை எனக்குக் கொடுக்கப்பட்டால் நான் என்ன செய்வேன். எப்படி அடையாளம் காட்டுவேன்...

என் நிலை மிகப் பரிதாபமானது. அவரை எனக்கு அடையாளம் தெரியாது. அவர்தான் என் புருஷன் என்று

அடையாளம் காட்டும் ஆட்களும் கிடையாது. எனவே, நான் உயிரோடு வாழ்வதில் எந்த அர்த்தமும் இல்லை" இதைச் சொல்லி மலையனூரான் சாம்பானை உற்றுப் பார்த்தான்.

சாம்பான் இரண்டு அடி எடுத்து வைத்து அவளை நோக்கி ஆசீர்வதிப்பதுபோல கை உயர்த்த, அவள் எழுந்து நின்றாள்.

"போதும். இந்த வேதனை போதும். சோழர்களால் பாண்டிய நாடு பட்ட இம்சை போதும். போரினால் பெண்கள் படுகின்ற அவஸ்தையை ஆண்கள் உணருவதே இல்லை. போரினால் பெண்களுக்கு ஏற்படும் இழப்பை ஆண்கள் அறிவதே இல்லை. என் வேதனை உலகத்தில் எந்தப் பெண்ணுக்கும் ·வரக்கூடாது. ஐயா... நாம் பலி கொடுப்பது எதற்காக. நல்லது நடக்க வேண்டும் என்றுதானே. நான் என்னை பலி கொடுத்துக் கொள்ளப் போகிறேன். இந்த மூட்டையிலுள்ள அத்தனை நகைகளும் அர்த்தமாக வேண்டும். அத்தனை பேரும் அடையாளம் காணப்பட வேண்டும். காணப்பட்டு அவரவர் குடும்பத்தோடு இணைய வேண்டும் என்று நான் என்னைப் பலி கொடுக்கப் போகிறேன்...

நான் இறந்த இடத்தில் ஒரு நடுகல் நட்டு அதில் திரிசூலம் பொருத்தி விடுங்கள். நான் வனதேவதையாக இருந்து பாண்டிய தேசத்தை ஆசீர்வதிப்பேன். இந்தக் கொல்லிமலையில் அலைந்து திரிந்து, எவர் வந்தாலும் அவருக்கு உதவி செய்வேன். உயிரோடு மனுஷியாக இருக்கிற பொழுது எனக்கு யாரும் உதவி செய்ய வில்லை. நான் யாருக்கும் உதவவும் முடியவில்லை. இறந்துபோய் உதவினால் என்ன என்று தோன்றுகிறது. எனவே நான் வருகிறேன்" சொல்லிவிட்டு, சுனை நோக்கி அவள் ஓடத் துவங்கினாள்.

மலையேறினாள். காளிதாசன் பின்னால் ஓடினான். மலையனூரான் சாம்பான் தரையில் பிரம்பால் அடித்து காளிதாசனை நிற்கச் சொன்னான். காளிதாசன் பதைத்து நிற்க, அவள் வெகுவேகமாக மலையேறினாள். எல்லோரும் பார்க்க கொஞ்சம் கொஞ்சமாக உச்சிக்குப்போனாள். உச்சியிலிருந்து ஊ... என்று குரல் கொடுத்தாள்.

கீழே உள்ளவர்கள் பதறினார்கள். வேண்டாம் வேண்டாம் என்று கையசைத்தார்கள். 'அவள் பெயர்கூட தெரியவில்லையே' என்று ஒரு முது கிழவி கதறினாள். அடியே, அடியே என்று அலறினாள்.

"பலமுறை பெயர் கேட்டும் அவள் சொல்லவில்லை. நாங்கள்தான் அவளுக்கு பொம்மி என்று பெயர் வைத்தோம். பொம்மைபோல் அசையாது அமர்ந்திருப்பாள். அவள் பெயரும், ஊரும் எங்களுக்குத் தெரியாது" என்று பதைத்துச் சொன்னாள்.

மேலிருந்து அவள் பல திக்குகளையும் நமஸ்கரித்தாள். கண் மூடி கைகூப்பி நின்றிருந்தாள். பளிச்சென்று பின் பக்கம் நகர்ந்தாள். தன் உடம்பை வீசி காற்றில் போட்டாள். அவள் உடம்பு பறந்து, புடவைகள் நாலாபக்கமும் அலைந்து, தலைகுப்புற மூன்று, நான்கு முறை புரண்டு, அருவி வழியும் பெரிய பாறையில் நச்சென்று மோதினாள்.

மலையனூரான் சாம்பான் கண் மூடிக் கொண்டான்

மலையனூரானும் காளிதாசனும் மடமடவென்று ஆறு நோக்கி கீழிறங்கினார்கள். அருவி ஆறாக வழியும் இடத்திற்குப் போனார்கள். அங்கு போய் நின்று ஆயுதங்களைக் கீழே போட்டார்கள்.

ஆற்றில் இறங்கி முங்கிக் குளித்தார்கள். மலையின் உச்சியைப் பார்த்து மந்திரங்கள் ஜபித்தார்கள். ஒரு ரத்தக் கோடு ஆற்றில் கலந்து நகர்ந்து வந்து, மலையனூரான் சாம்பானை மெல்ல சுற்றிக் கொண்டது. சாம்பான் தன் அருகே அந்தப் பெண் இருப்பதை உணர்ந்தான்.

"எனக்குக் கட்டுப்படு, நான் உதவுகிறேன். எனக்குக் கட்டுப்படு. நான் உதவுகிறேன். எனக்குக் கட்டுப்படு. நான் உதவுகிறேன்" என்று இடையறாது சொன்னான். அந்தப் பெண் சூட்சுமமாய் அவன் அருகே நின்று சிரித்தாள். சரி என்றாள்.

மலையனூரான் சாம்பான் மிகப் பெரிய கர்ஜனை செய்தான். "கிழிப்பேன், அழிப்பேன். சோழ குலத்தை பூண்டோடு அழிப்பேன். சோழனுடைய ஒவ்வொரு காரியத்தையும் எதிர்ப்பேன்" என்று தண்ணீரில் அறைந்து சபதம் செய்தான்.

அருவி வழிந்து ஆறாகப் போகும் நீரை அள்ளி உயரத் தூக்கி வார்த்தான். அந்தப் பெண் அந்த நீரை ஆசையோடு குடித்தாள். வலது கை ஆள்காட்டி விரலைப் பற்களால் கடித்து காயம் ஏற்படுத்தி, அந்த உதிரத்தை உயரத் தூக்கி சொட்டினான். அந்தப் பெண் அவன் உதிரத்தையும் குடித்தாள். மலையனூரான் சாம்பான் மிகக் கம்பீரத்தோடு கரையேறினான்.

அந்தக் கூட்டம் நோக்கி நடந்தான். "வெகு விரைவில் இந்த மூட்டையிலுள்ள பாண்டிய வீரர்கள் உங்களிடம் வருவார்கள். இது உறுதி, இதற்குக் காரணம் நானில்லை. நீங்கள் அழைத்து வந்த அந்தப் பொம்மி. அந்தப் பெண். அவள் அருள் உங்களுக்கும், எனக்கும் இருக்கிறது.

பாண்டிய தேசத்தின் மறக்குலப்பெண்களால் பாண்டிய தேசத்தின் மானம் காப்பாற்றப்படும். பாண்டிய தேசத்தின் மறவர்கள் சோழர்களை ஜெயிக்கப் போவதில்லை. மறக்குலப் பெண்களின் அறச் செயலினால் ஜெயிக்கப் போகிறோம். நிச்சயம் மிகப்பெரிய வெற்றி நமக்குக் கிடைக்கப் போகிறது. எனவே, வந்த சுவடு தெரியாமல் மறுபடியும் நீங்கள் உங்கள் இடத்திற்குப் போய் விடுங்கள். மலைகளில் இருக்காதீர்கள். மதுரை நகரிலே இருங்கள். எங்கள் வருகை உங்களுக்குத் தெரிவிக்கப்படும். நாங்கள் உங்களை வந்து தேடிக் கொண்டிருக்க முடியாது. நாங்கள் எங்கிருக்கிறோமோ அங்கு வந்து எங்களைச் சந்தியுங்கள். உங்கள் அனைவரையும் நான் அடையாளம் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்லி அவர்களை நிற்க வைத்துச் சுற்றிச் சுற்றி அவர்களை வந்து உச்சதலையில் கை வைத்து ஆசீர்வதித்து அவர்கள் முகங்களை மனதில் தேக்கிக் கொண்டான்.

அவர்கள் அவன் பாதம் பணிந்து வணங்கினார்கள்

அங்கிருந்த அந்தப் பெண்கள் காடுவிட்டு வெளி யேறினார்கள்.

புதருக்கு அருகேயிருந்த பிரம்மராயரின் ஆள் காரிகுளிப்பாகை திகைப்போடு சகலமும் பார்த்துக் கொண்டிருந்தான் இருட்டும்வரை அங்கேயே அமர்ந்துவிட்டு, கொல்லிமலை அடிவாரத்திற்கு வந்தான். அங்கு பொற்காசுகள் கொடுத்து குதிரை வாங்கிக் கொண்டான். சோழ தேசத்தை நோக்கி வேகமாக குதிரையைச் செலுத்தினான்.

உடையார் ஸ்ரீராஜராஜத்தேவர் செம்பியன்மாதேவியின் சடங்குகளை முடித்து விட்டுத் திரும்பும் பொழுது. அவரோடு கிருஷ்ணன்ராமனான பிரம்மராயர் சேர்ந்து கொண்டார். பிரம்மராயரோடு அவரது மகன் அருண்மொழியும் சேர்ந்து கொண்டான். இன்னும் பல சேனாதிபதிகளும், தளபதிகளும் உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவருக்குப் பாதுகாப்பாக வர,

அவர்கள் பல விஷயங்கள் பேசியபடி தஞ்சையை அடைந்தார்கள்.

தஞ்சையின் எல்லையில் கொல்லிமலையில் வேவு பார்த்த ஒற்றன் பிரம்மராயரைப் பார்த்து வணங்கினான். பிரம்மராயர் அவனைத் தனியே சந்தித்தார். விவரம் கேட்டார். அவனை அழைத்துக் கொண்டுபோய் உடையார் ஸ்ரீ ராஜராஜத்தேவருக்கு அறிமுகப்படுத்தினார். அவரிடமும் செய்தியைச் சொன்னான் அந்த ஒற்றன்.

“நல்லது. இராஜேந்திரன் அனுப்புகின்ற பல்லாயிரக்கணக் கான வீரர்களின் பாண்டிய தேசத்து வீரர்களும் இருக்கிறார்கள் அல்லவா. அவர்களைத் தூண்டத்தான் இந்தக் கொல்லிமலை அந்தணர்கள் முயற்சி செய்கிறார்களா. நான் அதை எதிர்கொள்வேன். என்ன செய்வது என்று எனக்குத் தெரியும். பிரம்மராயரே... இது குறித்து சிறிதும் கவலைப்பட வேண்டாம். நமக்குத் துணையாக சிவபெருமான் இருக்கிறார்.

நம்முடைய முழு கவனத்தையும் கோயில் கட்டுவதில் ஈடுபடுத்தலாம். வந்தவர்களில் முரட்டுத்தனமாக இருக்கிறவர் களையெல்லாம் இராஜேந்திர சோழன் அப்புறப்படுத்திவிட்டு, நடக்கிறவர்களையே நம்மிடம் அனுப்பி வைக்கிறான்.

நம்மால் கைது செய்யப்பட்ட பாண்டிய வீரர்கள் நம்மிடம் இருந்து விலகி, அவர்கள் தேசத்திற்குப் போக வேண்டும் என்று ஆசைப்பட்டால் தாராளமாகப் போய்க் கொள்ளலாம். அவர்கள் ஒரு போதும் கைதிகள் அல்ல என்று நான் இராஜேந்திரனிடம் சொல்லியிருக்கிறேன். மறுபடியும் சொல்லுவேன்.

அந்த வீரர்கள் வரட்டும். அவர்கள் வந்தால் தங்குவதற்குண்டான ஏற்பாடுகளை நாம் செய்தாக வேண்டும். அவர்களுக்குத் தாக சாந்திக்கும், நல்ல உணவிற்கும், ஆழ்ந்து உறங்குவதற்கும் தகுந்த மரியாதையான ஏற்பாடுகள் செய்தாக வேண்டும். ஏனெனில், அவர்களை நம்பித்தான் இந்தப் பெரும்பணியை நான் துவங்கியிருக்கிறேன்.

மனிதர்களுடைய உதவியல்லாது இந்த இறை பணி முடியாது. எனவே எது குறித்தும் கவலைப்படாது இந்த ஆலயம் கட்டுகிற விஷயத்தில் மனதைச் செலுத்துங்கள்.

கொல்லிமலையிலுள்ள நான்கு அந்தணர்கள் இந்த சோழ தேசத்தைக் கவிழ்த்துவிட முடியாது. ஆயுதங்களைக் கீழே

போட்டு தங்களை ஒப்புக் கொடுத்த பாண்டிய வீரர்களால், சாளுக்கியர்களால் இந்தச் சோழ தேசம் ஆட்டம் கண்டுவிடாது. அப்படி மறுபடி வாள் உருவினால் என்ன நடக்கும் என்பதை நீங்கள் அறிவீர்கள். எனவே, எது குறித்தும் கலவரப்படாமல், நெல்முனையளவும் அச்சபடாமல் முழு வேகத்தோடு, முழு பலத்தோடும் நம் சிந்தனை அனைத்தையும் சேர்த்துக் கோயில் கட்டுகிற பணியிலே நம்மை ஈடுபடுத்திக் கொள்வோம்."

உடையார் ஸ்ரீஇராஜராஜத்தேவர் உரத்து, நம்பிக்கையோடு சொல்ல, 'சோழம் சோழம் சோழம்' என்று உற்சாகக் குரலை அருகே உள்ள வீரர்கள் எழுப்பினார்கள்.

## 59

"பிரம்மராயரே... உங்கள் முகத்திலுள்ள கவலை எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கிறது. நீங்களே பொறுப்புகளை அடுத்தபடி அருண்மொழிக்குக் கொடுத்து விட்டு சற்று ஓய்வாக இருப்பது நல்லதோ என்று நான் சிந்திக்க ஆரம்பித்து விட்டேன். நீங்கள் எனக்கு உதவியாக இருந்தால் அருண்மொழி உங்கள் பதவியை திறம்பட வகிப்பதற்கு நன்றாக இருக்கும். அவனுக்கு நீங்கள் அவ்வப்போது ஆலோசனையும் செய்துவிடக்கூடும். எனவே நானும், நீங்களும் முற்றிலுமாய் கோயில் கட்டும் பணியில் ஈடுபடுத்திக் கொண்டு இராஜேந்திரனையும், அருண்மொழியையும் தேசம் காக்கின்ற, சோழ தேசம் காக்கின்ற பணியிலே ஈடுபடுத்தி விட்டால் நல்லது என்று தோன்றுகிறது. நான் சொல்வது தவறா..."

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் பிரம்மராயர் அருகே போய் கேட்க, பிரம்மராயர் எழுந்து நின்று கைகூப்பினார்.

"இது ஆலோசனையாகக் கேட்டாலும் சரி. ஆணையாகச் சொன்னாலும் சரி, நான் மறுக்கின்ற விஷயம் அல்ல. இதைவிட சந்தோஷமான ஒரு செய்தி எனக்கு எதுவும் இல்லை. ஆனாலும் பல பேர் உயிரை ஈந்து சம்பாதித்த சோழ தேசத்தின் பெரும் பரப்பின் ஒரு சாண்கூட விட்டுக் கொடுக்க நான் தயாராக இல்லை.

அரசே, என் மகன் அருண்மொழிப் பட்டனுக்கு நீங்கள் கொடுத்திருக்கிற அங்கீகாரம் மிகப் பெரியது. அவன் இளைஞன். அவனைப் பற்றி பல கவலைகள் எனக்கு இருக்கின்றன.

அவனிடம் இந்தப் பொறுப்பை சட்டென்று தூக்கிக் கொடுப்பதை விட மெல்ல மெல்ல ஈடுபடுத்தலாம் என்பது என் உத்தேசம். அவனுக்குப் பட்டத்தைக் கொடுப்பதைவிட பதவியின் சுமையைச் சுமத்தலாம் என்பது என் உத்தேசம்.

வெறும் போர் வீரனாகவே நிற்க வைத்து அவனுக்குத் தேசத்தைக் காக்கின்ற பொறுப்பைக் கொடுத்தால் அவன் இன்னும் அமைதியாகச் செய்வானோ என்று நான் நினைக்கிறேன். பட்டங்கள் சில சமயம் தலையைக் கிறுகிறுக்க வைத்து விடும்.

முப்பத்து மூன்று வயதான பிறகும் இளவரசர் இராஜேந்திரன் இளவரசராகவே இருக்கிறார். அரசராவதை பற்றிச் சிறிதும் சிந்திக்காதிருக்கிறார். இந்த நேரத்தில் அவரை விட வயதில் மிகச் சிறிய என் மகனுக்கு எதற்குப் பட்டம், எதற்குப் பதவி. எனவே வெறும் உபதளபதியாகவே என் மகன் இருக்கட்டும். அதே சமயம் தஞ்சையைக் காக்கின்ற பொறுப்பு உனக்கு இருக்கிறது என்று அவனிடம் நீங்கள் அழைத்துச் சொல்லி விடுங்கள். அவன் மிகுந்த உற்சாகத்தோடு அதில் ஈடுபடுவான். தயவுசெய்து அவனுக்கு இப்போது எந்தப் பதவியும் வேண்டாம்.”

பிரம்மராயர் பணிவாகக் கேட்டுக் கொண்டார். உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வாய்விட்டுச் சிரித்தார்.

“நல்லது மகனுக்குப் பதவி கொடுத்தால் தன் பதவி ஆட்டங்கண்டு விடுமோ என்று பயப்படுகிறார் பிரம்மராயர். எனக்குப் புரிகிறது” என்று கேலி செய்தார்.

அந்த கேலியைப் புரிந்துகொண்டு பிரம்மராயரும் பதிலுக்குச் சிரிக்க அந்தப் பெரும்படை குடந்தைக்கு அருகே போகும் காவிரிக்கரைக்கு வந்து சேர்ந்தது.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் உடைகளைக் களைந்துக் விட்டு இடுப்புத் துண்டோடு முங்கிக் குளித்து நீந்தி நீராடினார். மற்ற வீரர்களும் குளித்தார்கள். மறுகரைக்கு நீந்திப் போய் கரையேறினார். மற்றவர்களும் பின் தொடர்ந்தார்கள்.

குதிரைகள் அழைத்து வரப்பட்டன. அங்குள்ள சிறிய ஆலயத்தில் சிவ பூஜையை முடித்து திருநீறு அணிந்து உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் அவர்களுடைய மாளிகையான பழையாறை நோக்கி நகர்ந்தார்.

பழையாறை மக்கள் கொம்புகள் ஊதியும், முரசுகள் முழங்கியும் அவரை வரவேற்றார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவரின் குதிரை பழையாறைக்குள் காலடி வைத்த நேரத்தை பண்டிதர்கள் சரியாகக் கணக்கிட்டு குறித்துக் கொண்டார்கள். ஓலை நறுக்குகளில் அந்த நேரத்தின் பலனை எழுதத் துவங்கினார்கள்.

உலகெலாம் பிரமிக்கத் தகுந்த வகையில் மிகப்பெரிய கோயில் ஒன்று உருவாகும். இது நிச்சயம். இது சத்தியம். ஜோசியர் எழுந்து நின்று உரக்கக் கூவினார்.

அந்த ஜோசியருக்கு பிரம்மராயர் தங்க நாணயங்களைப் பரிசாக அளித்தார். பல ஜோசியர்கள் முன்வந்து தங்களுடைய ஓலைகளிலிருந்து பலன்கள் படிக்க ஆரம்பித்தார்கள்.

உடையார் ஸ்ரீ இராஜராஜத்தேவர் வெறுமே கேட்டுக் கொண்டிருந்தார். அவர் மனம் கோயிலைப் பற்றிச் சிந்திக்கத் துவங்கியது.

ஒரு லட்சம் பேர் கொண்ட அந்த மிக நீண்ட ஊர்வலத்தில் முதல் குழுவாக ஆயிரத்து ஐநூறு பேர் கொண்ட அந்தச் சிறிய கும்பல் சோழ தேசத்தின் எல்லைக்குள் நுழைந்தது. கொள்ளிடக் கரையின் விளிம்பில் நின்றது. கொள்ளிடக் கரையின் எதிர்க்கரை பசேல் என்று இருப்பதை குணசீலன் வியப்போடு பார்த்தான். அங்கிருந்துதான் உண்மையான சோழதேசம் ஆரம்பிக்கிறது என்று தெரிந்தது.

அவன் சிறு வயதில் சோழதேசத்திற்கு வந்திருக்கிறான். சோழதேசத்தைச் சுற்றிப் பார்த்திருக்கிறான். அந்த வளம் கண்டு, நாகரீகம் கண்டு திகைத்துப் போய் நின்றிருக்கிறான். மறுபடியும் திகைத்துப் போய் நிற்க, இன்னொரு சந்தர்ப்பம் கிடைத்தது. அப்பொழுது ஒரு சிறுவனாக எங்கு வேண்டுமானாலும் போகக்கூடிய சுதந்திரமுள்ள குழுவாக இருந்தவன் இப்போழுது அடிமையாக, கைதியாக சோழ தேசத்திற்குள் நுழையப்போகின்றான்.

குணசீலன் என்கிற அவன் பெயரைக் கேட்டதும் பாண்டிய தேசத்தவன் என்று எல்லோரும் கூப்பிடுவார்கள். அது தவிர அவன் உயரமும், கருப்பும், வெள்ளைப் பற்களும், சிவந்த உதடும், செம்பட்டைத் தலையும் அவனை மலைப்பக்கத்துப்

பாண்டியன் என்பதைத் தெளிவாகக் காட்டிக் கொடுத்து விடும். அவன் வாய் திறந்து பேசினால் அது உறுதியாகிவிடும்.

மதுரையை சோழர்கள் தாக்கிய பொழுது அவன் கோட்டைக் காவலில் இருந்தான். மதுரை முழுவதும் வசப்பட்டு ஆறு நாட்கள் கோட்டை முற்றுகையிடப்பட்டு அரசர் தப்பித்துப் போனதும் கோட்டை திறந்து விடப்பட்டது. முதலில் எதிர்ப்பட்ட குணசீலனை போர்வீரர்கள் இழுத்துக் கொண்டு போய் இராஜேந்திர சோழனின் முன்னால் நிறுத்தினார்கள்.

“எங்கே பாண்டிய மன்னன் எங்கே...” என்று இராஜேந்திர சோழன் பிரம்பால் அவனை நெஞ்சில் அடித்தான்.

குணசீலன் வாய்விட்டுச் சிரித்தான்.

“ஒருவேளை நீ கைது செய்யப்பட்டு நான் இந்த இடத்தில் நின்று, எங்கே சோழ மன்னன் எங்கே என்று கேட்டால் நீ பதில் சொல்வாயா? அதே விதமாகத்தான் என்னைக் கொன்றாலும் எந்தப் பதிலும் வராது. எங்கள் மன்னர் பலமான படைகளோடு, நலமான விதத்தில் பாண்டிய தேசம் விட்டு வெகுதூரம் போய்விட்டார். ஆறு நாள் முற்றுகையில் முதல் நாளே அவரை நாங்கள் அனுப்பிவிட்டோம். ஐந்து நாள் பயணம் மேற்கொண்டு அவர் இந்நேரம் சேரதேசத்தின் அடர்ந்த காடுகளுக்குள் போயிருப்பார். எனவே இங்குள்ள மக்களைத் துன்புறுத்துவதை விட்டுவிட்டு, வீரர்களை இழிவுபடுத்துவதை விட்டுவிட்டு அடுத்தபடி ஆக வேண்டிய காரியத்தைப் பார். மதுரை உன் வசமாயிற்று. மதுரையிலுள்ள படை வீரர்கள் உன்னை எதிர்த்தார்களே தவிர, மக்கள் எதிர்க்கவில்லை. எனவே தயவுசெய்து இங்குள்ள பெண்டுகளுக்கும், சாதாரண மக்களுக்கும் எந்த இம்சையும் ஏற்படுத்தாமல் மதுரையை வசப்படுத்திக் கொள்ளுங்கள்..” என்று கைகூப்பிக் கேட்க, குணசீலனை இராஜேந்திர சோழன் உற்றுப் பார்த்தான்.

“நீ யார்... உன்னுடைய பதவி என்ன” என்று கேட்டான்.

“நான் கோட்டைக் காவலன்”

“பொய் சொல்லாதே. வெறும் கோட்டைக் காவலன் இவ்வளவு பேச முடியாது. இத்தனை தெளிவாக இருக்க முடியாது.”

“நான் வெறும் கோட்டைக் காவலன்தான். எனக்கு எந்தப் பதவியும் இல்லை. ஆனால் என் தந்தையார் பாண்டிய

மன்னனின் மகாமந்திரியாக இருக்கிறார். அவரை சிவநேசன் என்று அழைப்பார்கள். பாண்டிய மன்னருக்குப் பல மகா மந்திரிகள் உண்டு. இவர் பதினோறாவது மகாமந்திரி. இவர் கோயில்களையும், குளங்களையும், மடங்களையும் கவனித்து வருகிறார். எனவே எனக்கு அவர் மூலம் பேசவும், பழகவும், விஷயங்களை அணுகவும் தெரிந்திருக்கிறது. அவ்வளவே. மற்றபடி நான் எந்தப் பதவியும் வகிப்பவனல்ல..."

"நல்லது. பாண்டிய தேசத்திலுள்ள கோயில்கள் எப்படிப் பராமரிக்கப்பட்டு வருகின்றன...."

"இன்று காலை வரை மிக அற்புதமாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றன. நீங்க்ள் உள்ளே நுழைந்து விட்டீர்கள். மதிய பூஜை உண்டா, இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை. எல்லா சிவன் கோயில்களிலும் காலை நேர பூஜ்ஜ முடிந்து பிரசாதம் விநியோகமும் ஆகிவிட்டன. உச்சிவேளை பூஜை நடப்பது உங்கள் கையில் இருக்கிறது."

"எத்தனை கோயில்கள் மதுரை நகரிலே இருக்கும்."

"நாற்பது கோயில்கள் இருக்கும்."

"யார் அங்கே. இந்த இளைஞனுக்கு ஒரு குதிரை கொடு..." என்று சொல்ல, ஒரு பெண் குதிரை அவனுக்குக் கொடுக்கப் பட்டது.

"உன் பெயரென்ன..." ராஜேந்திரசோழன் அவனை உற்றுப் பார்த்து விசாரித்தான்.

"குணசீலன்..."

"குணசீலன்... குதிரையில் ஏறிக் கொள். நாம் கோயிலுக்குப் போவோம். மதுரைக்குள் நுழைந்ததும் சிவபூஜை செய்ய வேண்டும் என்று எனக்கு ஆசையாக இருக்கிறது. சோம சுந்தரரையும், மீனாட்சி அம்மனையும் தரிசிக்க வேண்டும். என்னைக் கோயிலுக்கு அழைத்துப் போ" என்று சொல்ல, இராஜேந்திர சோழனின் மெய்க்காவல்படை குணசீலனை அருகேவிட்டு அவன் உடம்பைச் சோதித்து இடுப்பில் கத்தி ஏதும் இருக்கிறதா என்பதைக் கவனித்து குதிரையில் ஏற்றியது. அவனுக்கு நெருக்கமாய் ஒரு படைவீரன் வந்தான்.

இராஜேந்திர சோழனையும், குணசீலனையும் சோழ மெய்க்காவல்படை சுற்றிக் கொண்டது.

# 60

தஞ்சாவூர் வீரர்களின் சிரிப்பை, எள்ளலை குணசீலன் முதன் முதலாக அனுபவித்தான். கூர்மையாய் கேலி செய்ய பாண்டியர்களுக்குத் தெரியாது. பழக்கமில்லை. ஆனால் சோழ வீரர்கள் வாய் திறந்தால் கேலிதான் பொங்கி வழிகிறது. அது குணசீலனை வருத்தப்படுத்தியது. கொள்ளிடக்கரையில் நிற்கும்பொழுதும் குணசீலன் அந்த கேலி வார்த்தைகளைத்தான் ஞாபகம் வைத்துக் கொண்டான். தஞ்சை என்று சொன்னதும் அந்த மக்களின் அலட்சியம்தான் ஞாபகம் வந்தது.

“அடர்ந்த காட்டில், கடும் இருட்டில் நாங்களெல்லாம் உட்கார்ந்திருந்தோம்” – ஒரு சோழவீரன் ஆரம்பித்தான்.

“என்ன அதற்கு” இன்னொரு சோழவீரன் கேட்டான்.

“அப்பொழுது புலி வந்துவிட்டது...”

“அடடே... என்ன செய்தீர்கள்...”

“பரண் ஏறி தப்பித்துவிட்டோம். இவன் மட்டும் தரையில் படுத்தவன் படுத்துக் கொண்டே இருந்தான்.” ஒரு சோழவீரன் குணசீலனைக் காண்பித்தான்.

“ஏன், புலி இவனை எதுவும் செய்யவில்லையா. இவன் பரணில் ஏறவில்லையா...”

“இல்லை. இவன் இடுப்பில் இருக்கிற கோமணத்தையும் அவிழ்த்து அக்குளில் வைத்துக் கொண்டு படுத்ததனால் புலி எதுவும் செய்யவில்லை...”

“அது எப்படி ஐயா. புலிக்கு இருட்டில் கண் தெரியுமே...”

“இல்லை இவன் நிறத்திற்கு இருட்டு மிகவும் ஒத்துப் போகும். இருட்டோடு இருட்டாக இவன் கலந்ததால், புலிக்குக்கூட கண்தெரியாமல் வெறுமே தரையோடு தரையாகக் கிடந்தான்...”

சோழவீரர்கள் வாய்விட்டுத் சிரித்தார்கள்.

“புலிக்கு மோப்ப சக்தி உண்டே... அது வைத்து கண்டு பிடிக்காதா...”

“ஆமாம். புலி முகர்ந்து பார்த்து இவனருகே வந்தது...”

“பிறகு, அடித்துக் கொன்றிருக்குமே...”

“இல்லை, சுருண்டு விழுந்து செத்துப் போய்விட்டது...”

“ஏன்...”

"இருபது நாளாய் இவன் குளிக்கவே இல்லை. இவன் உடம்பு வாசனை தாங்காமல் புலி முகர்ந்து உடனே மரண மடைந்து விட்டது..."

சோழவீரர்கள் பேய் பிடித்தது போல் சிரித்தார்கள்.

குணசீலன் பல் கடித்தான். பல் கடித்தவனை ஒரு சோழ வீரன் பாய்ந்து பிரம்பால் அடித்தான்.

"நாங்கள் கேலி செய்வோம். நீ பொறுத்துக் கொள்ள வேண்டும். முறைத்தால் உதை விழும்" என்று எச்சரித்தான். வேறு வழியில்லாமல் தென் திசை பார்த்து வெறுத்துப் போய் குணசீலன் அமர்ந்திருந்தான்.

இதுபோல் பல ஆயிரம் கேலிகள், பல ஆயிரம் பாண்டிய வீரர்களை சோழ வீரர்கள் இடைவிடாது செய்து கொண்டிருந் தார்கள்..

"குணசீலனுக்குப் பாண்டிய தேசத்தில் இன்னொரு பெயர் உண்டு. தெரியுமா." ஒரு சோழப்படைத் தளபதி மற்ற சோழ வீரனைக் கேட்க, இது என்ன புதிய கேலி என்பது போல் அந்த சோழவீரன் பல் தெரிய அவனைப் பார்த்துச் சிரித்தான்.

"குணசீலனுடைய பெயர் திருமந்திர ஓலை..."

"ஆச்சரியமாக இருக்கிறதே... அரசர் அனுப்புகின்ற ஓலைக்குப் பெயர்தான் திருமந்திர ஓலை. ஒரு மனிதருக்குப் போய் எப்படி திருமந்திர ஓலை என்று பெயர் வைக்க முடியும். பனை ஓலையில் எழுதி வெள்ளிக் குழலில் சொருகி அனுப்புவார்கள். இவரை எந்தக் குழலில் சொருகுவது..." என்று அந்த சோழவீரன் கேட்க, சுற்றியுள்ள சோழப்படைக் கும்பல் சிரித்தது.

"பாண்டிய மன்னர் தோற்றுப் போய்க் கொண்டிருப்ப தால், சேர மன்னருக்குப் படை உதவி கேட்க ரகசியமாக ஒரு ஓலை எழுத விரும்பினார்..."

"சரி..."

"பனை ஓலையில் எழுதினால் சோழப் படை வீரர்கள் மடக்கிப் பிடித்து விடுவார்கள் என்று பயந்தார்கள்..."

"புரிகிறது..."

"குணசீலனை அழைத்து அவன் முதுகிலே என்ன வேண்டும் என்பதை பச்சை குத்தச் சொன்னார். பாண்டிய தேசத்து மலையகப் பெண்கள் குணசீலனின் முதுகில்,

சுண்ணாம்புக் கட்டியால் எழுதப்பட்ட எழுத்துக்கள் மீது பச்சை குத்தினார்கள். இரண்டு சொம்பு தலையில் தண்ணீர் விட்டு சுண்ணாம்புக் கட்டியை அலம்பிவிட்டு, இவனை சேர எல்லைக்கு அனுப்பி விட்டார்கள். இவனைச் சோதித்து நமது படை வீரர்கள் சேர தேசத்திற்கு அனுப்பி விட்டார்கள். சேர தேசத்தில் போய் அரசரின் காலில் நெடுஞ்சாண் கிடையாய் விழுந்து, 'படித்துக் கொள்ளுங்கள்" என்று இவன் கேட்டானாம். இவன் முதுகில் எழுதப்பட்ட விஷயத்தைப் படித்துக் கொண்டு, சேர மன்னர் படை திரட்டி வந்து பாண்டியனுக்கு உதவி செய்தாராம். அதனால் குணசீலனுக்குத் திருமந்திர ஓலை என்று பெயர்."

"அப்படியா, இன்னும் எழுத்துக்கள் இருக்கின்றனவா..." கொத்து முடியைப் பிடித்து குணசீலனை ஒரு போர்வீரன் குவிய வைத்தான்.

"இல்லை, நமது வீரர்கள் சவுக்கால் விளாறியதில் எல்லா எழுத்துக்களும் உதிர்ந்து போய் விட்டன" என்று தளபதி சொல்ல, மறுபடியும் சிரித்தார்கள்.

குணசீலன் நல்ல கறுப்பு. அந்தக் கறுப்பை சோழவீரர்கள் இடையறாது கேலி செய்தார்கள். சோழ வீரர்கள் ஒன்றும் சிகப்பானவர்கள் அல்ல. கோதுமை நிறமல்ல. எல்லா சோழ வீரர்களும் மாநிறம். ஆனால் பாண்டிய தேசத்துக் கரிக்கட்டை நிறத்தைப் பார்த்தால் அவர்கள் குதூகலமடைந்து கேலி செய்கிறார்கள். குறிப்பாய் – பெண்களை மிக மோசமாய் கேலி செய்கிறார்கள். ஒவ்வொருமுறை கேலி செய்த போதும், குணசீலன் கோபப்பட்டு பல் கடித்து அடி வாங்கியிருக்கிறான். இதுவரை வாங்கிய அடிகளுக்குக் கணக்கே இல்லை. ஆனால் கடந்த மூன்று மாதமாக சோழ வீரர்கள் யாரையும் கேலி செய்வதில்லை. அடிப்பதும் இல்லை. இராஜேந்திர சோழர் மிகத் தெளிவாகக் கட்டளை போட்டிருக்கிறார். எந்தக் கைதியையும் எந்தச் சோழப் படை வீரரும் துன்புறுத்தலாகாது என்று உத்தரவிட்டிருக்கிறார்.

நல்ல உணவு, நல்ல உடை, இதமான பேச்சு என்று மூன்று மாதத்திற்குப் பிறகு வாழ்க்கை திசை மாறிவிட்டது. கைதான பாண்டிய வீரர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆனால் சோழியன் குடுமி சும்மா ஆடவில்லை. அதற்கு மிகப்பெரிய காரணம் இருந்தது.

குறிப்பிட்ட நூறு வீரர்களை பாண்டிய தேசத்துப் போர்க் கைதிகளை சோழப் படைத் தளபதிகள் தேர்ந்தெடுத்து, இராஜேந்திர சோழனின் அரண்மனைக்கு அழைத்துப் போனார்கள்.

திருவொற்றியூரில் கடற்கரைப் பக்கம் மிகப்பெரிய சவுக்கு வேலி போட்டு, அதற்குள்ளே பாண்டிய வீரர்களை அடைத்திருந்தார்கள். சதுரம் சதுரமாக வேலிகளைக் கட்டியிருந்தார்கள். உணவுக்காக ஒரு சதுரம். உறங்குவதற்காக ஒரு சதுரம் என்று பிரித்திருந்தார்கள். மூன்று பக்கமும் மணலில் நட்டு, நான்காவது பக்கம் பெரிய பனைகளை நெருக்கமாய் கடலில் நட்டிருந்தார்கள்.

அந்தப் பனைகளைத் தாண்டி மறுபக்கம் போவது கடினம். அதே சமயம் பனைகளுக்கு இடையே நீர் வந்து கடற்கரையை நனைக்கும். இயற்கை உபாதைகளை அந்தத் தண்ணீரில் அமர்ந்து தீர்த்துக் கழுவிக் கொள்ள வேண்டும். பிறகு கரையேறி, வேறொரு வேலியின் வழியாக நுழைந்து, மந்தாரை இலைகளை எடுத்துக் கொண்டு அவர்கள் போடுகின்ற உணவை வாங்கிக் கொள்ள வேண்டும். பிறகு இன்னொரு வேலியின் பக்கமாகப் போய், அங்கு போடப் பட்டிருக்கும் மிகப் பெரிய கூரையின் கீழ் உட்கார்ந்து கொண்டு உணவு உண்ண வேண்டும்.

கடற்கரையிலிருந்து அரண்மனைக்குப் போகவும், ஒரு வேலி இருந்தது. அந்த வேலியின் ஊடே அரண்மனைக்கு அழைத்துப் போனார்கள். இராஜேந்திரருக்கு குணசீலனைத் தெரியும். போர் நடந்த அன்று கோட்டைக் கதவைத் திறந்து விட்டது குணசீலன்தான் என்பதை ஞாபகம் வைத்திருந்தார்.

“எதற்காக கோட்டைக் கதவைத் திறந்து வைத்தாய்” என்று ராஜேந்திரன் அதட்டிக் கேட்டார். “இதற்கு மேலும் தாக்குப் பிடிக்க முடியாது என்று தெரிந்ததனால்தான் கோட்டைக் கதவைத் திறந்து வைத்தேன்...”

“இதற்கு மேல் கோட்டைக் கதவு திறக்காமல் இருந்தால் என்ன ஆகியிருக்கும்...”

“கோட்டைக்குள் இருந்த அரண்மனை மீது நீங்கள் தீப்பந்தங்கள் வீச ஆரம்பித்து விட்டீர்கள். அரண்மனைக்குள் பெண்டுகளும், குழந்தைகளும் இருந்தார்கள். குறிப்பாக, இருநூற்றுச் சொச்சம், குழந்தைகள் அலறியபடி இருந்தார்கள்.

அவர்கள் மீது தீக்கங்குகள் விழுந்தன. எனவேதான் கோட்டைக் கவைத் திறந்து விட்டேன்…”

“குழந்தைகள் மீது அத்தனை பாசமா…”

“இது பாசத்தினால் நான் திறக்கவில்லை…”

“பிறகு…”

“அடுத்த தலைமுறையாவது சோழர்களைப் பழி வாங்காதா… அதற்கு அவர்கள் உயிரோடு இருக்க வேண்டுமே. இப்பொழுதே தீக்கங்குகள் பட்டு இறந்து போனால் பழிவாங்கவே முடியாதே. நம்மால்தான் சோழர்களை எதிர்க்க முடியவில்லை. இவர்களாவது எதிர்க்கட்டும் என்று கோட்டைக் கதவைத் திறந்து வைத்தேன். அவர்கள் வாழ்வதற்காக நான் சரணடைந்தேன்.”

சுற்றியுள்ள தளபதிகள் திகைத்துப் போனார்கள். இராஜேந்திர சோழன் ஊடுருவி குணசீலனைப் பார்த்தார்.

“நீ படைத்தளபதியா?”

“இல்லை, வெறும் படைவீரன். வேண்டுமானால் முதன்மை வீரன் என்று சொல்லிக் கொள்ளலாம்.”

“எத்தனை வருடமாக படையில் இருக்கிறாய்…”

“நினைவு தெரிந்த நாளிலிருந்தே நான் பாண்டியப் படையில் இருக்கிறேன். பதினோரு வயதில் வேல் கம்பு கொடுத்து என் தாயார், கிராமத்திலிருந்து என்னை மதுரை நகருக்கு அனுப்பி வைத்தார். அன்றிலிருந்து இதோ– இந்த முப்பத்து மூன்று வயது வரை நான் படைவீரன்தான்…”

“எத்தனை போர்களில் பங்கெடுத்துக் கொண்டிருப்பாய்…”

“கணக்கு வைத்துக் கொள்ளவில்லை. வருடா வருடம் இரண்டு மூன்று முறை போர் வரும்…”

“எந்தப் போரிலும் நீ காயமடைந்தது இல்லையா…”

“பல வெட்டுகள் உடம்பில் இருக்கின்றன. ஒரு ஈட்டிக் குத்து இடது தோளில் இருக்கிறது. எல்லாம் பச்சிலையால் ஆறிவிட்டன…”

“நீ ஜெயித்த போர் எது…”

“எதுவுமில்லை. அங்கங்கே கலவரங்கள் செய்து சோழ மக்களை அச்ச மூட்டியிருக்கிறோமே தவிர, போர் என்று உள்ளுக்குள் வந்து நாங்கள் கொடி பறக்கவிட்டதேயில்லை…”

"நல்லது. உங்களை சோழப்படை வீரர்கள் எப்படி நடத்துகிறார்கள்..."

குணசீலன் அதற்குப் பதில் சொல்லாமல் இருந்தான்.

"சொல். சோழப்படை வீரர்கள் உங்களைப் போன்றவரை எப்படி நடத்துகிறார்கள்."

மறுபடியும் குணசீலன் பதில் பேசாது முகம் திருப்பிக் கொண்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. இராஜேந்திர சோழர் சிம்மாசனம் விட்டு எழுந்தார். அவனுக்கருகே வந்தார். அவன் தோளில் கை வைத்தார்.

"ஏன் கண் கலங்குகிறீர்கள். உங்களை அடித்து இம்சை செய்கிறார்களா" என்று லேசாய் தோளை உலுக்கிக் கேட்டார். இல்லை என்று தலையசைத்தான்.

"உணவு தர மறுக்கிறார்களா? பட்டினி போடு கிறார்களா..."

"இல்லை நல்ல உணவு கிடைக்கிறதா."

"கேலியும், குத்தலும் அதிகமாக இருக்கிறதா..."

"சில சமயம் செய்கிறார்கள். ஆனால் அதில் வருத்த மடைவதில்லை.

"பிறகு ஏன் கண்களில் கண்ணீர். எதற்கு அழுகிறீர்கள்..."

"என்னை சோழ வீரர்கள் கைதியாகத்தான் நடத்து கிறார்கள். நான் சுதந்திரன் இல்லை. சவுக்கு வேலிக்குள் அடைபட்ட ஒரு மிருகம். நான் வைஷ்ணவன். துளசி வளர்ந்து தினமும் துளசியால் எம்பெருமானுக்கு பூஜை செய்கிறவன். நாராயணக் கவசம் படிப்பவன். ஆனால் கைதான தினத்திலிருந்து இதைச் செய்ய முடிவதில்லை. சோழ தேசத்தில் என்னால் துளசியே பார்க்க முடியவில்லை. ஒரு கைதிக்குப் பூஜை எதற்கு என்றுதான் எனக்கும் தோன்றுகிறது. எனவே கேட்கவில்லை. பூஜை செய்யாத நாட்களெல்லாம் இப்படிக் கைதியாக இருக்கிறேனே என்கிற துக்கம்தான் அதிகமாக இருக்கிது."

இராஜேந்திர சோழர் சரக்கென்று பின் வாங்கி துடித்துப் போவதை குணசீலன் உணர்ந்தான்.

"இதைச் சொல்லியிருக்கலாமே. யார் படைத் தளபதி இங்கே. கைதிகளின் காவலர்கள் யார். இவர் இப்படி ஆசைப்படுகிறார் என்பது உங்களுக்கு ஏன் தெரியவில்லை.

குணசீலனுக்கும், குணசீலனைப் போன்றவர்களுக்கும் வழிபாடு செய்வதற்கு முழு உரிமை உண்டு. வீரனே, எல்லோரையும் விடுவிக்க முடியாது. எனவே, நீங்கள் ஒரு பத்து பாண்டிய வீரர்களை அழைத்துக் கொண்டு போய், துளசி எங்கிருக்கிறது என்று தேடி வேரோடு பறித்துக் கொண்டு வந்து, இங்கு நல்லதொரு இடத்திலே பதியம் போட்டு, அவைகள் வளரத் துவங்கியதும் இதே திருவொற்றியூரிலுள்ள பெருமாள் கோயிலுக்குப் போய் பூஜை செய்யுங்கள். இதற்கான உரிமையை உங்களுக்குத் தருகிறேன். நீங்கள் துளசிச் செடியைத் தேடிப் போய் வரலாம்" என்று இராஜேந்திர சோழன் தோள் தொட்டு குணசீலனைத் திருப்பி அனுப்பினார்.

குணசீலன் பத்து வீரர்களைத் தேர்ந்தெடுக்க முயற்சிக்கிற பொழுது, நான், நீ என்று பாண்டிய வீரர்கள் கைதூக்கினார்கள். அதில் நல்லவர்களாக ஐந்து பேர்களையும், தப்பிக்கும் ஆத்திரமுள்ளவர்களாக ஐந்து பேர்களையும் குணசீலன் தேர்ந்தெடுத்தான். பதினோரு பேரும் திருவொற்றியூர் சுற்றியுள்ள பகுதியில் துளசிச் செடிகளைத் தேடினார்கள். வைணவர்களைச் சந்தித்து, மதுரைப் படை வீரர்கள் கைதிகளாக இருக்கிறோம். துளசி எங்கிருக்கும். நாமக்கட்டி எங்கிருக்கும் என்றெல்லாம் விசாரித்தார்கள்.

வைணவர்கள் ஒரு பெட்டி நிறைய நாமக்கட்டி கொடுத்தார்கள். இறுகிய செம்மண் குழம்பு கொடுத்தார்கள். துளசிவனத்திற்கு அழைத்துப் போய் கன்றுகள் கொடுத்தார்கள்.

திருவொற்றியூரில் அவைகளை நட்டுத் திரும்பியபொழுது, கூட வந்த பாண்டிய வீரர்கள் ஐந்து பேரும் காணாமல் போனார்கள்.

இராஜேந்திரனுக்குப் பாண்டிய வீரர்கள் தப்பித்துப் போனது சொல்லப்பட்டது. குணசீலன் தரதரவென்று இராஜேந்திரன் முன்பு இழுத்து நிறுத்தப்பட்டான்.

"நான் உங்களுக்கு உதவி செய்ய நீங்கள் எனக்குச் செய்த கைம்மாறு பார்த்தீர்களா?" என்று இராஜேந்திர சோழன் வினவினார்.

"இல்லை. ஐந்து பேர்தான் தப்பித்திருக்கிறார்கள். ஐந்து பேர் உங்கள் முன்னால் நிற்கிறோம்..."

"எதற்காக அவர்கள் தப்பித்துப் போனார்கள்..."

"இங்குள்ள நிலைமையை பாண்டிய தேசத்தில் சொல்லியே ஆக வேண்டும். யார் யார் உயிரோடு இருக்கிறார்கள். யார் யார் உயிரோடு இல்லை என்று பாண்டிய தேசத்துப் பெண்களுக்குத் தெரிந்தாக வேண்டும். புருஷன் இறந்த பிறகும் தன் புருஷன் இறக்கவில்லை என்ற நினைப்போடு இருக்கின்ற பெண்மணிக்கு அவள் புருஷன் இறந்தது தெரிய வேண்டும். தன் புருஷன் இறந்து விட்டாரோ என்று பதைபதைத்து, தினமும் உணவு உண்ணாமல் நோன்பு நோற்று ஒடுங்கிக் கிடக்கிற பெண்ணுக்கு மனம் தேற்றி, உன் புருஷன் உயிரோடு இருக்கிறான்; கவலைப்பட வேண்டாம் என்று சொல்ல வேண்டும். தாய்க்கு மகனைப் பற்றிய செய்தியும், தங்கைக்கு அண்ணனைப் பற்றிய செய்தியும் சொல்ல வேண்டும். எனவே, நான் வேண்டுமென்றே தப்பித்துப் போகும் ஆவலுள்ள ஐந்து பேரையும், தப்பித்துப் போக ஆவலில்லாத ஐந்து பேரையும் தேர்ந்தெடுத்தேன். ஆவலுள்ளவர்கள் தப்பித்துப் போனார்கள் அவ்வளவே..."

மறுபடியும் இராஜேந்திர சோழர் வாயடைந்துப் போனார்.

"சரி, போய் வாருங்கள். உங்கள் பூஜைக்கு எந்தக் குந்தகமும் வராது..." என்று மறுபடியும் சொன்னார்.

தப்பித்துப் போக விருப்பமில்லாத அந்த ஐந்து வீரர்கள் பெரிய நந்தவனம் அமைத்து, துளசிச் செடிகள் வளர்த்து நந்தவனத்துக்கு நடுவேயே மண்ணால் செய்த நாராயணன் சிலை அமைத்து, சங்கும், சக்கரமும் எழுதினார்கள்.

ஒரு நாள் குந்தவைப் பிராட்டியும் அந்த பூஜையில் கலந்து கொண்டார். பாண்டிய வீரர்களோடு சரிசமமாய் அமர்ந்து பேசினார்.

## உடையார் முதல் பாகம் முற்றிற்று

